




ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாள் அருளிச்செய்த

# ஸௌந்தர்யலஹரீ



சாஸ்த்ர ரத்னாகரம் ப்ரும்மஸ்ரீ
தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரியள்
அவர்களால் எழுதப்பட்டது.

கிரி ப்ரஸ், பப்ளிஷர்ஸ், திருவல்லிக்கேணி.

3-4

உ

# பதிப்புரை

---

ஆஸ்திகர்களுக்குப் பயன்படும்படி அத்யாத்ம தத்துவங்களை விளக்கி எழுதப்படும் நூல்கள் எல்லாம் சாதாரணமாக முதல் பதிப்புடனேயே நின்று விடுவது வழக்கம். ஆசார்ய சங்கரர் அருளியதும் தேதியூர் ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளின் விளக்கவுரையுடன் கூடியதுமான இந்த ஸௌந்தர்யலஹரியின் முதற் பதிப்பு ஒருவருஷத்திற்கு முன்பே முழுதும் தீர்ந்துவிட்டது தமிழ்நாட்டு மக்களுக்கு இந்த நூலில் உள்ள ஆர்வத்தையும் பக்தி சிரத்தையையுமே காட்டுகின்றது. இம்மாதிரி நல்ல காரியங்களுக்கு இடையூறுகள் ஏற்படுவது சகஜம் என்று விக்னங்களைப் பாராமல் எப்படியோ கஷ்டப்பட்டு இந்த இரண்டாவது பதிப்பைக்கொண்டு வந்திருக்கின்றேன். இவ்வளவு நாட்கள் புத்தகம் கிடைக்காததால் பொது மக்களுக்கு ஏற்பட்ட சிரமத்திற்கு வருந்தி மன்னிப்புக்கோருகின்றேன். இப்பதிப்பும் சீக்கிரம் தீர்ந்து போய் தமிழ் நாட்

டிலுள்ள மக்கள் ஒவ்வொருவரிடமும் வாழ்க்கை க்கு ஓர் பொக்கிஷமான இந்தப் புத்தகம் இருக்க வேண்டி மேலும் மேலும் பதிப்புகள் வெளிவர அன்னை ஆதி பராசக்தி அருள்புரிவாளாக.

திருவல்லிக்கேணி 15-6-49. }

K. கைலாஸமய்யர்.
பதிப்பாளர்.

# முதற்பதிப்பின் பதிப்புரை

அகிலலோக ஜனனியான ஆதிபராசக்தியின் அருமை பெருமைகளை அறியாதவர் இப்பாரத பூமியில் இரார். அப்பரதேவதையின் பெருமையை நன்கு அறிந்திருந்தும், அன்னையை அனுதினமும் அன்புடன் விதிவழியே பூஜை செய்பவர்கள் ஒரு சிலர்தான் என்றே சொல்லவேண்டும். ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாசார்யார் அவர்கள் ஸௌந்தர்யலஹரீ என்னும் ஸ்தோத்ரத்திலடங்கிய நூறு ச்லோகங்களில், ஸ்ரீவித்யா உபாஸனுக்ரமங்களை ஆஸ்திகர்களிடத்துள்ள கருணையால் வெளியிட்டிருக்கிறார். ஒவ்வொரு ச்லோகமும் அம்பிகையின் பெருமையைப் பலவிதமாக வர்ணித்து, அவளைப் பூஜிக்க வேண்டிய முறைகளையும் ஸூசிப்பித்து, விதிப்படி பூஜிப்பவருக்கு ஏற்படும் லாபத்தையும் நன்கு ப்ரகாசப்படுத்துகின்றது. ஆயினும், அந்த ச்லோகங்களின் உட்கருத்தை அறிந்துகொள்வது பல்லாண்டுகள் வடமொழி பயின்று பாண்டித்யம் பெற்றவர்களாயும், ஸ்ரீவித்யோபாஸகர்களாயும் உள்ளவர்களுக்கு மாத்திரமே கூடுமன்றி, ஏனையோருக்கு ஸாத்யமில்லை. என்போன்ற பாமரஜனங்கள், இந்த ஸ்தோத்ரத்தை ஸாதாரணமாக உட்கருத்தை யறிந்து கொள்ளாமலேயே பலர் வாக்யாலங்காரத்திலீடுபட்டுப் பாராய

ணம் செய்துவருவதை நான் நன்கு அறிவேன். அத
ஞல் பண்டிதர் பாமரராகிய அனைவருக்கும்பயன்படு
மாறு, இந்தச் சிறந்த க்ரந்தத்தை, மூலமும், விசேஷ
உரையுமாக வெளியிடவேண்டுமென்ற பேரவா என்
னுள்ளத்தே வெகு நாட்களாக ஊறிக்கொண்டிருந்
தது. அன்னையின் அருங்கருணையால், எனக்கு வேத
வேதாந்த க்ரந்தங்கள் எழுதிக்கொடுத்துப் பேருப
காரம் செய்துவரும் சாஸ்திர ரத்னம் ப்ரும்மஸ்ரீ தேதியூர்
ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் அவர்களிடம் இதைப்பற்றி
ப்ரஸ்தாபித்தேன். சாஸ்திரி அவர்களை தமிழுலகம்
நன்கறியும். அவர்கள் கற்ருேர்க்குத் திலகமாக
விளங்குபவர்; ஆஸ்திகர்களுக்கோராபரணம் போன்ற
வர். சாஸ்திர ஞானமுள்ளவர்கள் சாஸ்திரிகள்
அவர்களை சாஸ்திர ரத்னமென்று மட்டில் பாராட்டு
வதில் திருப்தியடைவதில்லை மிகச்சிரந்த ஸூக்ஷ
மார்த்தங்களை எளிதில் மற்றவர் அறிந்து கொள்ள
எடுத்து விளக்கும் ஆற்றல் சாஸ்திரிகளிடம் மிக
அதிகம் என்பது யாவருமறிந்த உண்மையாகும்.
சாஸ்திரிகள் அவர்களே இந்நூலை என் விருப்பப்படி
எழுதித்தரவல்லாரெனத் துணிந்து, என் எண்ணத்
தைப் பூர்த்திசெய்துதரும்படி அவரை வேண்டினேன்.
ஸத்விஷயங்களில் ஈடுபடுவதில் எப்பொழுதுமே பரம
உற்சாகமடையும் சாஸ்திரிகளவர்களும், "நான்
முன்பு வெளியிட்டுவந்த ஸன்மார்க்கப்ரதர்சினியில்
சில ச்லோகங்கள் வெளிவந்திருக்கின்றன ; தாங்கள்
இந்த ஸத்விஷயத்தைப் பூர்த்திசெய்தால், ஸகல
ஜனங்களுக்கும் இஹ பர ஸுகஸாதனத்தைக்
கொடுத்த பரம பாக்யவானுவீர்கள்" என்று என்னைப்

பரிவுடன் ஆசீர்வதித்தார்கள். பொதுஜனங்களின் அன்பினுலும் ஆதரவினுலும் என் அச்சியந்திரசாலே நடந்துவருகிறது. ஜனங்களுக்குப் பரமஸாதனமான நூலே, வித்யா விற்பன்னரும், லோகப்ரஸித்தருமான பெரியாரின் மொழிபெயர்ப்புடன் வெளியிடுவதை விட வேறு வேலே அவ்வளவு முக்யமேயில்லே என்று தீர்மானித்தேன். அதன்படி சென்ற சிலமாதங்களாக இந்த நூல் அச்சிலிருந்துவந்தது. இதன் ஆசிரியர் தனக்கு நேத்ர உபாதை இருந்த காலத்திலும்கூட, இதைப் பெரிய கைங்கர்யமாகக் கருதி விஷயதானம் செய்துவந்தனர். மேலும், இந்நூலுக்கென்றே ப்ரத்யேகமாய்ப் பூஜாவிதானங்களுக்குச் சக்ரங்கள் முதலியன அளித்துள்ளார்கள். இவ்வாறு சாஸ்திரிகளவர்கள் செய்துவரும் பேருதவிக்கு வையகமும் வானகமும் தகுந்த கைம்மாருகாது.

இந்நாட்களில், புஸ்தக வெளியீட்டுக்குள்ள காகிதப் பஞ்சம் யாவரும் அறிந்ததே. அவ்வாறிருந்தும், பராசக்தியின் அநுக்ரஹத்தால், சீக்கிரத்தில் இதை வெளியிட வேண்டுமென்ற ஊக்கம் மேலிட்டதின் பயனுய் நூலும் பூர்ணமாய் வெளிவந்துள்ளது. கற்ருேரும் மற்ருேரும் இதனுல் பயன்பெறவேண்டுமென்று ஜகன்மாதாவை ப்ரார்த்திக்கின்றேன்.

புஸ்தகத்தின் கடைசியில் பிழைதிருத்தம் சேர்க்க வேண்டிவந்ததைப்பற்றி வருந்துகின்றேன். நூலிலுள்ள பரமதத்துவத்தை க்ரஹித்துக்கொண்டு,பிழைகளேப் புறக்கணிக்குமாறு வேண்டுகிறேன். அடுத்த

வெளியீட்டில் பிழையின்றிப் ப்ரசுரம்செய்ய முயல்கின்றேன். சீக்கிரத்தில் இதை வெளியிடவேண்டுமென்று என்னைத் தூண்டி அன்புடன் கடிதங்கள் பல எழுதிய என் நண்பர் பலருக்கும், மற்றுமுள்ளோருக்கும் இவ்வெளியீடு பெரு மகிழ்ச்சியைத் தருமென்று நம்புகின்றேன்.

திருவல்லிக்கேணி
24—3—1944

K. கைலாஸம் அய்யர்,
பதிப்பாளர்.



தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரியள்



## भूमिका

शिवः शक्त्या यया युक्तः प्रभुर्भवति नान्यथा ।
तामाराध्यां शिवादीनां देवानां प्रणमाम्यहम् ॥

विदितचरमेवेदं खलु भवतां यच्छिवाच्छक्तेः पारम्यमिति । यच्च, यत्र यत्र पदार्थत्वं तत्र तत्र शक्तिमत्त्वमिति साहचर्यनियमेन विष्णवादीनामपि देवानां सर्वलोकाराध्यत्वे परिपालनादिशक्तिमत्त्वमेव प्रयोजकं, न विष्णुत्वादिकमिति । यच्चापि, सैव पराशक्तिः, या अन्तर्मुखा ब्रह्मान्याऽविषया, ब्रह्मप्रतिबिम्बिता, तत्त्वमस्यादिवाक्योत्था, अविद्यातत्कार्य अधिकरणक्षणपूर्वत्वाभावनियमसिद्धा, चरमधीरित्यभिहिता, विद्यातत्त्वरूपिणी, अखण्डाकारवृत्तिः इति चोक्ता तदभिन्नेति "सर्वचैतन्यरूपां तां आद्यां विद्यां च धीमहि" इत्यादि शास्त्रप्रतिपादितेति ।

सैव शक्तिः दुर्गा, लक्ष्मी, सरस्वती, सावित्री, राधा इत्येवं पञ्चधा सर्वलोकमातृत्वेन पूज्यतमा विराजते । दुर्गाम्बिकायाः समाराधनेन मनोनिग्रहः, तथैव महालक्ष्म्याः सपर्यया अष्टलक्ष्मीकटाक्षः, सरस्वत्याः परिचर्यया वाग्देवतावल्लभत्वं, सावित्र्याः जपमहिमा सुखजीविका, राधायाः भजनेन चिरजीविका इत्येवं क्रमेण फलानि च

तत्तदुपासनेन साधकतमैः सम्प्राप्यन्ते इत्येतदपि सार्वजनीनमेव । "यया तदक्षरं अधिगम्यते सा परा" इति श्रुत्या च अस्याः पराविद्यात्वात् चित्सदानन्दाद्वितीयब्रह्मविषयकमूलाज्ञानात्मकावरणनिवृत्तौ समर्था सती सर्वदृश्योच्छेदोपलक्षितपूर्णानन्दबोधपरब्रह्मावस्थानलक्षणमोक्षप्रापयित्री साधकानां । तत्र तत्र राजविद्या, आत्मविद्या, महाविद्या, श्रीविद्या इति च, सर्वोपनिषदुद्घुष्ठा सती प्रकाशते इत्येतदपि विदुषामनुभवस्थानं संप्राप्तं इत्यतः न किञ्चिदत्र वक्तव्यं अवशिष्यते । इत्थं महाभागा इयं ब्रह्मविद्या स्वोपासकानां ऐहिकामुष्मिकसुखप्रदात्री, विपदां नाशयित्री, संपदां जनयित्री, लक्ष्मीसरस्वतीकटाक्षामृतैः अवसिक्तं स्वभक्तं कुर्वाणा, सर्वलोकजननी हरिहरब्रह्मदिभिरपि सुरैः अभिवन्द्यमाना देवो मर्त्यैः कथं वा प्रतिदिनं अप्रणता, अस्तुता, अनभिध्याता वा भवेत् ।

इयं हि सुरेन्द्रराज्यापहर्तुः सज्जनपीडाकर्तुश्च मधुकैटभादेः असुरकुलस्य निश्शङ्कं विनाशयित्री सती सज्जनानामभयप्रदा ।

पुरा खलु सर्वमपीदं जगत् योगमायायां प्रविलाप्य तया निद्रावस्थापन्नया आक्रान्तदेहः सन् समुद्रजले आदिशेषभोगे श्रीमान्नारायणः सुखमुवास । ततः परं सृष्ट्यादिकार्याभिमुखे प्राणिनां कर्मविपाके सति तस्य महाविष्णोः नाभिसरोजात् चतुर्मुखः ब्रह्मा आविर्बभूव । तदानीं महाविष्णोः कर्णमलाभ्यां समुद्भूतौ कौचिदसुरौ मधुकैटभाख्यौ बभूवतुः । ताभ्यां असुराभ्यां युद्धाय आहूतः ब्रह्मापि विष्णोः नाभिसरोजं स्वस्थानं त्यक्त्वा, भीत्या सरोजनालमार्गेण भोगिभोगशयनं

विष्णुमेव शरणं जगाम, तुष्टाव च मधुसूदनं। अस्तौत् तच्छरीरे व्याप्तां निद्रावस्थापन्नां योगमायां पराम्बिकां च। तदनन्तरं तया विमुक्तदेहः विष्णुः प्रबुद्धस्सन् मधुकैटभाभ्यां ब्रह्मणः हृदये संजातां भीतिं अवधार्य, ब्रह्मणे अभयं च दत्वा, ताभ्यामसुराभ्यां देवमानरीत्या पञ्चवर्षसहस्राणि समरञ्चाकरोत्। तावसुरौ च द्वौ, विष्णुस्त्वेकः। असुरयोः एकस्य युद्धकाले अन्यस्य विरामः, अन्यस्य युद्धकाले अपरस्य विरामः, इत्येवं एकस्य विरामकालोप्यभूत्। विष्णोस्तु एकत्वात् समरोपरमकालः नैव घटेत। ततस्ततः विष्णोस्तु महान्परिश्रमः अभूत्। तदानीं अनयैव एतत्सौन्दर्यलहरीग्रन्थप्रतिपाद्यया देव्या विष्णोः सहायः कृतः। इयं देवी अष्टादशवयस्का दिव्याभरणभूषिता, अपरिच्छिन्न-सौन्दर्यसौकुमार्यलावण्यवती, मन्दस्मिता, अन्तरिक्षे सञ्चरन्ती, कोकिल-स्वना, हंसगमना विष्णुना ताभ्यामसुराभ्यां च दृष्टाऽभवत्। विष्णुस्तु तां दृष्ट्वा देवत्वात् प्रणनाम—न मुमोह। असुरौ तु आसुरसंपन्नत्वात् तां दृष्ट्वा न प्रणेमतुः—मुमुहतुः। तां उद्वाह्य तया वैषयिकसुखमनुभवितुं इच्छन्तौ च अभूतां। इदं खलु आसुरीं संपदं अभिजातस्य लक्षणम्। इत्थं देव्या मायया मोहितवन्तौ तौ असुरौ दृष्ट्वा, विष्णुः "युवयोः पराक्रमेण सन्तुष्टोहं, अभीष्टं वरं वृणीथा" इत्युक्तवान्। तच्छ्रुत्वा तावपि असुरौ अस्याः नार्याः पुरतः अस्य विष्णोः वरदानसामर्थ्ये आवयोः वरप्रतिगृहीतृत्वे च आवयोः दुर्बलत्वं सूचितं भवेत्, अतः नेयं आवां भर्तृत्वेन स्वीकरिष्यति इति मूढबुद्ध्या निश्चित्य, विष्णुं दृष्ट्वा "कस्त्वं आवयोः वरदाता? त्वमेव आवाभ्यां वरं वृणु" इत्युक्तवन्तौ।

तच्छ्रुत्वा महाविष्णुः आकाशसंस्थितया देव्या कृतसंज्ञस्सन् "युवामेव मम वध्यौ भवथः" इत्यवोचत् । तावप्यसुरौ प्रतिज्ञापाशबद्धतया इतस्ततः चलितुं अशक्नुवन्तौ सन्तौ विष्णुना हतौ अभूतां । इत्येवंरूपाख्यायिका देवीमाहात्म्ये प्रस्तूयते । अनया च आख्यायिकया देव्याः पारम्यं प्रतीयते । यस्मात् आदिकर्त्रा ब्रह्मणापि अजेयौ मधुकैटभनामानौ असुरौ विष्णुकर्णमलोद्भूतौ विष्णुना देव्याः प्रसादमहिम्ना हतौ स्यातां, तस्मात् देवी सा इत्थंप्रभावा, अतः सर्वजनैः उपास्या इति स्पष्टतरं देव्याः आराधनं अलौकिकश्रेयस्साधनमिति प्रकाशते ।

अपि च, मधुकैटभनामानौ च असुरौ न केवलं प्राकृतौ । परन्तु, विराड्रूपस्य विष्णोः दिक्श्रोत्रत्वेन तत्र तत्र दिक्षु अवभास्यमानतया संस्थितशब्दादिविषयमलोद्भूतौ कामक्रोधावेव इति विद्वद्भिः विज्ञेयौ तावप्यसुरौ । विषयध्यानादेव खलु कामक्रोधादयः उत्पद्यन्ते इति "ध्यायतो विषयान्पुंसः" इत्यादि भगवद्वाक्यात् निर्णीयते । कामक्रोधयोश्च अज्ञानमूलकत्वेन, ज्ञानेन अज्ञाननिवृत्तौ सत्यामेव तयोः आत्यन्तिकनाशः उपपद्यते । प्रकृतकथाप्रतिपाद्या हि पराशक्तिः ब्रह्मविद्येति तत्र तत्र प्रतिपादिता । तस्याः प्रसादमहिम्ना अज्ञाने नष्टे सति तन्मूलकानां शब्दादिविषयाणामपि सत्त्वाभावात् तदुद्भवयोः कामक्रोधयोः अपायः इत्यतः मुमुक्षुणापि मोक्षमार्गपरिपन्थिनां कामादीनां विनाशार्थं ब्रह्मविद्यारूपिणी पराशक्तिः अवश्यं समाराधनीया इत्यपि देव्याः प्रथमचरित्रकथाप्रबन्धेन संसूच्यते ।

तथैव अनया देव्या महिषो नाम कश्चन असुरः अमितपराक्रमः कामरूपी, सुरेन्द्रशत्रुः हतः इति च स्मर्यते। हरिहरादिसर्वदेव-कोपाग्निसंभूता, तेजःपुञ्जा अनेकदिव्यायुधालङ्कृता रक्तबीजप्रमुखान् बहून्राक्षसान् अवधीत्। तथैव कौशिक्याः तीरे स्वतस्समुत्पन्ना दिव्यसुन्दरी शुंभनिशुंभाभ्यां कृतावज्ञा तावपि लीलया हत्वा जगतः सौख्यमकरोत्। इत्थं बहून् चण्डमुण्डप्रभृतीन् दुर्वृत्तान् सज्जनपीडा-करान् लोकशत्रून् मारयित्वा सर्वलोकसौभाग्यजननी, भक्ताभीष्टप्रदायिनी, सर्वलोकसुखावहा, सर्वापद्विनिवारिणी, सर्वव्याधिप्रशमनी, सर्वसंपत्प्रदा-यिनी च भूत्वा पर्वतराजाय हिमवते कृतपुण्याय साधनचतुष्टयसंपन्नाय स्वयं आचार्यपीठं अधिरुह्य दक्षिणामूर्तिरूपिणी, सनकादिसमाराध्य-पादाम्बुजा सती, महावाक्योपदेशं च कृतवती इति च आख्यायिका देवीभागवते सप्तमस्कन्धे परिदृश्यते। तत्सारभूतोऽयमंशः अधो निर्दिष्ट मार्गेण विद्वद्भिः अवलोकनीयः। तथा हि, "अहं देवी न चान्योऽस्मि ब्रह्मैवाहं न शोकभाक्" इत्येवमादिः उपदेशसारः। 'अहं' पदलक्ष्यतया अनुभवसिद्धः प्रत्यगात्मा पराशक्तिरेव इति शक्त्यात्मनोः ऐक्यं निर्धार-णीयं। "तत्त्वमसी" त्यादि महावाक्यार्थ एव "अहं देवी" इत्यादिवाक्येन प्रतिपादितः। तत्र 'तत्त्वमसि' इति वाक्ये 'त्वं' इति सम्बोध्यचेतनवाचक-पदेन लक्षणया शुद्धजीवः, सर्वजगत्कारणभूत ईश्वरकारणवाचक "तत्" पदेन लक्षणया कूटस्थं ब्रह्म, 'असि' पदेन तयोः स्वतस्सिद्धमपूर्वं ऐक्यं च प्रतिपाद्यते। तथैव "अहं देवी" इति वाक्येऽपि 'अह' मिति पदेन लक्षणया शुद्धजीवः, 'देवी' इति पदेन लक्षणया कूटस्थं ब्रह्म, 'अस्मि' इति

पदेन तयोः ऐक्यं, 'न च अन्यः' इति वाक्येन भेददर्शनापवादश्च उपदिश्यते। 'तत्त्वमसि' इति वाक्ये तु ब्रह्मात्मनोः ऐक्यं परं उपदिश्यते। 'अहं देवी न चान्योऽस्मि' इत्यत्र तु ब्रह्मात्मनोः भेददर्शनापवादपूर्वकं ऐक्यं दृढीक्रियते। अत एव अस्य देवीभागवतवचनस्य 'तत्त्वमसि इति वेदवाक्यार्थनिर्णयोपब्रह्मणत्वं निश्चीयते। न चात्र देव्यात्मनोः ऐक्यमुपदिश्यते, तत्र तु ब्रह्मात्मनोः ऐक्यमिति शङ्कनीयं। देवी ब्रह्मणोः एकरूपत्वात्। न चेयं देवी ब्रह्मणोऽन्या, नेदं ब्रह्म देव्याः अन्यत्। शक्तिशक्तिमतोः अभेदात्। अपि च, यदिदं सर्ववेदान्तसंवेद्यं अखण्डं सच्चिदानन्दरूपं ब्रह्म तदेव गुणसाम्यावस्थापन्नमायोपहितं सत् 'देवी' इति पदेन निर्दिश्यते इत्यस्यार्थस्य "सर्वचैतन्यरूपां तां" इत्यत्र निर्धारितत्वात्। अखण्डं ब्रह्म खलु सर्वलोकानुग्रहार्थं स्वां प्रकृतिं अवष्टभ्य देवीरूपेण उपलभ्यते। ततः न देव्याः ब्रह्मणश्च भेदः। ब्रह्मैव देवी, देव्येव ब्रह्म। तस्मात् 'अहं ब्रह्मास्मि' इति अनुसन्धानस्य 'अहं देवी' इत्यनुसन्धानस्य च न कोऽपि भेदः। कथं तर्हि तयोरभेदः? ब्रह्मेत्यत्र जडांशः नास्ति, देवीत्यत्र जडरूपमायाभागः वर्तते इत्यपि न शङ्कनीयम्। ब्रह्मेत्यत्रापि ब्रह्मणः शब्दाभिधेयत्वाङ्गीकारे चैतन्यस्य अवच्छेदकतया जडांशस्य उपाधेः अवश्यं अभ्युपगन्तव्यत्वात्। परमार्थतस्तु उभयत्र तुल्यत्वात् शक्तिशक्तिमतोः अभेदन्यायेन देव्याः ब्रह्मत्व, ब्रह्मणः देवीत्वं इति न कस्यापि दोषलेशगन्धस्याऽवकाशः। तस्मात् निर्दिष्टवाक्येन महावाक्यार्थ एव पर्वतराजाय उपदिष्टः इति निर्णेतव्यः। एवं साक्षात् दक्षिणामूर्तिरूपिणी, परब्रह्मस्वरूपिणी,

दुष्टनिहन्त्रीम्, साधुजनपालयित्रीं, जगन्मातरं, आत्मभावेन अनवरतं ध्यायेत् इत्ययं भावः 'अहं देवी' इति वाक्यसारांशः ।

अन्यच्च श्रीदेव्याः माहात्म्यं ब्रह्मादीनामपि देवानां अत्यन्तं दुर्विज्ञेयं । देव्याः मातृकावर्णात्मिकत्वात् तत्स्वरूपपरिज्ञाने कवयोऽपि अशक्ता एव अभवन्निति सूक्त्या निगद्यते । "यदा यदा हि धर्मस्य" इति स्वप्रतिज्ञानुसारेण स्वेच्छागृहीतशुद्धसत्वमायामयमङ्गल विग्रहेण भूमौ अवतीर्य स्वानुष्ठानद्वारा धर्मप्रतिष्ठां कुर्वतां रामकृष्णादीनामपि विजयावहा स्वचारित्र्यश्रवणद्वारा पराम्बिकेति तत्र तत्र इतिहासपुराणादिषु उद्घुष्यते ।

तथा हि श्रीमद्रामायणप्रबन्धे अनुजभार्याहर्तारं वालिनं हत्वा किष्किन्धायां स्वमित्रं सुग्रीवं राज्ये स्थापयित्वा च कालप्रतीक्षया किष्किन्धोपान्तवर्तिनि प्रस्रवणशैले कालं नयतः सलक्ष्मणस्य श्रीरामचन्द्रस्य कथं सीतापहर्तुः रावणस्य हनने मम शक्तिर्भविष्यतीति चिन्तया व्याकुलीभूतस्य पुरतः भगवान् श्रीनारदः अभ्येत्य "'श्रीदेव्याः प्रसादमहिम्ना' भवतः मङ्गळानि भविष्यन्ति, रावणवधः अतीव सुकरो भविष्यति अतः देवीगाथां श्रुणु" इत्युक्त्वा श्रीमातुः माहात्म्यप्रतिपादकं श्रीदेवीभागवतं नवाहयज्ञविधिना सलक्ष्मणं रामचन्द्रं श्रावयामास । तदानीं नवमदिने साक्षात्पराम्बिका श्रीरामचन्द्रपुरतः आविर्भूय रावण मुखदुष्टदत्यवधे परिपूर्णं प्रसादञ्चाकरोत् । तन्महिम्ना अनायासेन रावणञ्च सपुत्रं सामात्यं हत्वा सीताञ्च गृहीत्वा तया साकं अयोध्यानगरे

साम्राज्यराज्येऽभिषिक्तस्सन् महाराजाधिराजो बभूव इति पुराणादिषु श्रूयते। तथैव श्रीमद्भागवते च स्यमन्तकमण्युपाख्याने आदित्योपासनबलात् आदित्यात्संप्राप्तस्य स्यमन्तकमणेः सत्राजितः भ्रातरि प्रसेनजिति त मणिं कण्ठे धृत्वा अश्वमारुह्य मृगयामधिकृत्य कदाचित् वनं गते सति तत्र केनचित् केसरिणा तस्मिन् हते सोऽयं मणिः तेन मृगराजेन अपहृतः अभूत्। ततः परं सोऽपि मृगराजः केनचित् अमितपराक्रमेण ऋक्षराजेन जाम्बवता हतः असीत्। तमपि स्यमन्तकमणिं ऋक्षराजः गृहीत्वा स्वगुहां प्राविशत्। तदानीं द्वारकायां अपरिमितस्वर्णवर्षी अयं स्यमन्तकमणिः श्रीकृष्णेन प्रसेनजितं हत्वा अपहृतः इत्येवं जनापवादस्समजनि। भगवानपि तच्छ्रुत्वा तमपवादं अपमार्ष्टुं स्वयं पुरात् निर्गत्य प्रसेनजितः अश्वपदमनुसृत्य महावनं प्राप्य तत्र मृतं प्रसेनजितं च दृष्ट्वा, ततः केसरिणः पदं अनुसृत्य किञ्चिद्दूरं गत्वा मृतं केसरिणमपि दृष्ट्वा, ततः परं ऋक्षराजपदवीमनुसृत्य गुहां प्राविशित्। गुहान्तरे ऋक्षराजं तन्निकटे स्यमन्तकमणिं च दृष्ट्वा तद्धरणार्थं ऋक्षराजेन साकं बहूनि दिनानि मुष्टियुद्धञ्चाऽकरोत्। तस्मिन्समये वसुदेवः स्वपुत्रस्य श्रीकृष्णस्य अनागमनकारणात् अपारदुःखाम्बुधौ निममज्ज। यदृच्छया भगवान्नारदोऽपि अभ्यागतः। आगत्य च नारदः वसुदेवस्य मनःकालुष्यमालक्ष्य "राजन्! माकार्षीः शोकं, तव पुत्रः कृष्णः ऋक्षबिले जाम्बवता साकं युद्धमकरोत्। जाम्बवांस्तु अजेयपराक्रमः, ब्रह्मणा अवध्यत्वेन दत्तवरः न देवीप्रसादमन्तरा तं जेतुं तव पुत्रस्य शक्तिर्भविष्यति, अतः पराम्बिकायाः माहात्म्यप्रदिपादकश्रीदेवीभागवतकथां नवाहयज्ञविधिमनुसृत्य

श्रुणु । अहमेव कथयिष्ये । तथा च सति कथासमाप्तिदिने तवपुत्रः श्रीकृष्णः जाम्बवन्तं जित्वा स्यमन्तकमणिंच आदाय जाम्बवत्या तत् कन्ययाच अतिसुन्दर्या समेतस्सन् अवश्यं आगमिष्यति । मद्वाचि विश्वासं कुरु " इत्युक्त्वा वसुदेवेन पूजितस्सन् नारदोऽपि देवीभागवतकथां यथा विधि वसुदेवस्य कथयामास । कथापरिसमाप्तिदिने श्रावणशुक्लपक्ष-नवम्यां भगवान् श्रीकृष्णोऽपि देवीप्रसादमहिम्ना अजेयमपि जाम्बवन्तं जित्वा, तेनैव भक्तिपूर्वं विधिना दत्तां स्वपुत्रीं जाम्बवतीनाम्नीं कन्यां स्यमन्तकमणिं च गृहीत्वा सुरासुरपूजितस्सन् वसुदेवस्य समीपं आजगाम। भगवतः श्री नारदस्य पुरतः कथापरिसमाप्तौ पराम्बिकापि स्वस्वरूपस्य दर्शनं वसुदेवाय दत्वा अन्तर्धिमाप। एवं भगवतः श्रीकृष्णस्यापि अस्याः देव्याः प्रसादेन महिमातिशयः इत्यपिश्रूयते । अतः देवीप्रसाद मन्तरा नकोऽपि देवोवा मनुष्योवा असुरोवा स्वकार्यनिर्वहणे कुशलो भवतीत्यत्र "शिवःशक्तया ' इति सौन्दर्यलहरीनान्दीश्लोक एव प्रमाणम् । अतः सर्वापद्विनिर्मोक्षाय सर्वैरपिजनैः सर्वदा निरुपाधिकमाता श्रीदेवी सर्वप्रकारेण आवरणदेवताभिस्साकं संपूजनीया, नामपारयाणा-दिना, बिन्दुतर्पणादिना, पञ्चदशीमुख्यमहामन्त्रजपहोमतर्पण ब्राह्मण-सन्तर्पणादिनाच सन्तोषयितव्या इत्येतत् सर्वत्र दुन्दुभिस्वनेन प्रसिद्धं भवत्येव । नास्माभिः किञ्चिज्ज्ञैः अत्र वक्तव्यांशोऽस्ति । अस्याः देव्याः माहात्म्यस्य शतावृत्त्या पारायणादिना राष्ट्रक्षोभादि निवृत्तिरिति श्रूयते । मर्त्यानां तदशक्यमिति मन्वानाः जगद्गुरवः भगवत्पादाः देवीमाहत्म्यस्य एकावृत्त्या जपहोमतर्पणब्राह्मणसन्तर्पणादिभिः यत्फलमवाप्तुं शक्यते मर्त्यानां तत्फलावाप्तये एकैकश्लोकपारायणमपि

एकावृत्त्यादेवीमाहात्म्यजपहोमतर्पणब्राह्मणसन्तर्पणादिफलप्रदमिति निर्धार्य देवीमाहात्म्यशतावृत्तिपारायणादिसमानयोगक्षेमां देवीतत्व प्रतिपादिकां पारायणपात्रेण देवीसाक्षात्कारसंपादनक्षमां शतश्लोकीं सौन्दर्यलहरी-नाम्नीं उत्तमां देव्याराधनरूपां स्तुतिं कृतवन्तः। अस्याः भगवत्पादकृतेः गूढार्थप्रकाशनाय देव्यैव कृतानुग्रहास्सन्तः भास्करराया: लक्ष्मीधराः इति च कारणोपनामालङ्कृताः विद्वत्सार्वभौमाः असकृत् देवीदर्शनतः संप्राप्तजन्मसाफल्यकृतकृत्यत्वैहिकामुष्मिकफलभोगसाम्राज्याः व्याख्यानद्वारा देव्याः महत्तत्वं प्रकटीकुर्वन्तः विराजन्ते। केचित् लक्ष्मीधराः अन्ये, भास्कररायाः अन्ये इति यद्यपि वदन्ति। तथापि केषुचित् शक्तग्रन्थेषु लक्ष्मीधरस्यैव शक्तदीक्षानन्तरं भास्करराय इति दीक्षानाम निर्दिश्यत इति श्रुतत्वात् तदवलम्ब्य तयोः ऐक्यविवक्षया अत्र उक्तं लक्ष्मीधर एव भास्करराय:, भास्करराय एव लक्ष्मीधरः इति। तत्वतस्तु तयोः भेदेऽपि, देव्याः एकत्वात् तत्सायुज्यभाजोः तयोः कथं पृथक्त्वं इति धिया तयोः एकत्वं वर्णितमिति अवधारणीयम्। तद्व्याख्या-मनुसृत्य अस्याः सौन्दर्यलहरीनाम्न्याः भगवत्पादीयायाः स्तुतेः पदशः लोकोपकाराय अन्वयानुसारं अर्थं, तात्पर्यसारं, तस्य तस्य श्लोकस्य तस्मिन् तस्मिन् प्रयोगे उपयोगः, उपयोगप्रकारश्च अस्मिन् ग्रन्थे असङ्कीर्णतया संप्रकाश्यन्ते। सर्वलोकजनन्याः परदेवतायाः परमानुग्रह-पात्रता अस्माकं भविष्यतीति मत्वैव द्राविडभाषया एतत् ग्रन्थविवरणं कृतमिति मन्तव्यम्।

प्रातःप्रभृति सायान्तं सायादिप्रातरेवच।
यत्करोमि जगन्मातः तदस्तु तवपूजनम्॥

इत्यादिवचनबलात् मर्त्येन यत् यत् क्रियते तत् तत् देव्याः समाराधनमेव भवति इति निश्चित्य एतादृशचिन्तया कालनयनेनापि देव्याः आराधनमेव फलतीति मयायं यत्नः कृतः। न वैदुष्यप्रकटनाद्वा, अन्यस्मात् कारणाद्वा। "साधुवाऽसाधुवाकर्म यद्यदाचरित मया। तत्सर्वं कृपया देवि गृहाणाराधनं तव" इति वचनात् स्वपुत्रापराधं यथा माता सहते, तथा बालिशस्य मम सर्वापराधमपि सोढ्वा मत्कृतं साधुवा भवतु असाधुवा भवतु, श्रीमाता मत्कृतं स्वाराधनमेवग्रहीत्वा न मां त्यजति अनुगृह्णात्येव, शोकसागरं तारयति, स्वसायुज्यं प्रददात्येव इत्येवं दृढभक्त्यैव अत्र मया अवतरितं इति निश्चित्य सुधियः अनुगृह्णन्तु मां इति शिवम् ॥

# முகவுரை.

ஆஸ்திகர்களே!

இந்த லோகத்தில் ஒவ்வொரு வஸ்துவும், ஒவ்வொருவிதமான சக்தியினுல் நிரம்பியது. ஒருவிதத்திலும் சக்தியில்லாத பொருளை யாரும் விரும்பமாட்டார்கள். கடவுளும் இந்த லோகத்தை, ஸ்ருஷ்டிப்பதிலும், ரக்ஷிப்பதிலும், ஸம்ஹரிப்பதிலும் சக்தியின் ஸம்பந்தத்தைத்தான் எதிர்பார்க்கிருர் என்ற விஷயத்தை யாரும் அறிந்ததே. இவ்விதம் மஹிமை தங்கிய சக்தியானது பலவாருகப் பிரிக்கப்பட்டு வெவ்வேறு பொருள்போல் தோன்றினுலும் எல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து, அகண்டமாகக் கவனித்தால், அந்த சக்தியேதான் எல்லாவற்றிற்கும் மேலான தத்வமென்பதை யாவரும் எளிதில் அறியக்கூடும் எந்த நூல்களிலும், எவ்விதமான கதாஸந்தர்பங்களிலும் அந்தந்த வஸ்துவிலுள்ள சக்தியானது பூஜிக்கப்படுமன்னியில், சக்திக்கு ஆதாரமாகாதவனுன புருஷன் ஒருவராலும் மதிக்கப்படமாட்டான். "நான் ரொம்பவும் அசக்தன், என்னை யார் மதிப்பார்கள்?" என்று அவரவர்களே ஒப்புக்கொள்ளுவார்கள். சக்தியின் மஹிமையைப்பற்றி வர்ணிக்கும் ஸந்தர்பத்தில் இந்த க்ரந்தகர்த்தாவான ஜகத்குரு மஹாஸ்வாமிகளவர்களே, 'புருஷரூபமான தேவதைகளுக்கு புக்தி, முக்திகளைக் கைகளால்தான் கொடுக்க சக்தி உண்டு; சக்தி என்ற பரதேவதைக்கோ, தனது பாதங்களாலேயே பக்தர்கள் விரும்பும் பலத்திற்கு மேலானதாகவே புக்தியையோ முக்தியையோ கொடுக்கும் வல்லமை உண்டு' என்று வர்ணித்திருக்கிருர்கள். கைகளால் அபீஷ்டத்தைக் கொடுக்கும் தேவதைகளும் சக்தி அவர்களிடம் இருந்தால்தான் அதை அளிப்பார்கள் அன்னியில், சக்தி அற்றவர்களானுல் அவர்களால் கைகளால் ஒன்றையும் கொடுக்கமுடியாது. சக்தி

என்ற பரதேவதைக்கோ, பக்தனுடைய அபீஷ்டத்தை தான் அளிக்க மற்றவர்களுடைய உதவி வேண்டாம்; தன்னுடைய ஸ்ரீபாதத்தை தர்சனம் செய்தவர்களுக்கு அந்த பாதகமலங்களிலிருந்தே அதிகமாக புத்தி, முக்திகளை வர்ஷிக்கின்ருள். இதைக்கவனித்தால் சக்தி என்ற பரதேவதையே எல்லாவற்றிற்கும் மேலான தேவதை என்பதை யார்தான் ஒப்புக்கொள்ளமாட்டார்கள்?

தவிர, ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸுக்ரீவனும் ஸ்ரீராமனும் ஸக்யம் செய்துகொண்ட பிறகு, ஸ்ரீராமன் தன் வ்ருத்தாந்தத்தை ஸுக்ரீவனுக்குச் சொல்லவும், ஸுக்ரீவன் தன் வ்ருத்தாந்தத்தை ஸ்ரீராமனுக்குச் சொல்லிவருவதுமான ஸந்தர்பத்தில், ஸுக்ரீவன் ராமனைப் பார்த்து, "ஸ்வாமின்! கொஞ்சகாலத்திற்கு முன்பாக ராவணன் ஓர் உத்தம ஸ்திரியை அபஹரித்துக்கொண்டு புஷ்பகவிமானத்தில் தன் நகரத்திற்குச் சென்றுகொண்டிருந்தான். நாங்கள் இந்த ரிச்யமுக பர்வதத்தினுடைய சிகரத்தில் எப்பொழுதுமே வஸித்துவரும் காரணத்தால், அக்காலத்திலும் நாங்கள் இங்கு இருந்தோம். புஷ்பக விமானத்தையும் கவனித்துப் பார்த்தோம். விமானத்திலிருந்த ஸ்த்ரீயானவள் எங்களை கவனித்ததும், எங்கள் மத்தியில் ஒரு பீதாம்பரத்தில் சில வஸ்துகளைக்கட்டி கீழே போட்டாள். உடன் அதை நாங்கள் அவிழ்த்துப் பார்த்தபொழுது விலைமதிக்க முடியாததான அநேக ஆபரணங்கள் அதில் இருந்தன. உடன் அதை அந்த வஸ்த்ரத்திலேயே முடிந்து மிகவும் பயத்துடன், ரக்ஷித்து வருகிறோம்; இதோ அந்த வஸ்து இருக்கிறது. தாங்கள் அதை அவிழ்த்துப் பார்க்கலாம். அதிலுள்ள ஆபரணங்கள் ஸீதையினுடையதானுல் அன்று ராவணன் புஷ்பக விமானத்தில் அபஹரித்துச் சென்ற ஸ்திரி ஸீதைதான் என்று நிச்சயம் செய்துவிடலாம்" என்று சொல்லிவிட்டு அந்த

பொருள்களை ராமனிடம் காண்பித்தான். ஸ்ரீராமனும் ஆபரணங்கள் ஸீதாதேவியினுடையதுதான் என்று அறிந்தவரானாலும் அதைத் தான் தீர்மானிக்காதவர்போல் நடித்துக்கொண்டு, லக்ஷ்மணஸ்வாமியைப் பார்த்து, “லக்ஷ்மணா! இந்த ஆபரணங்கள் ஸீதையினுடையதுதானா?” என்று கேட்டார். லக்ஷ்மணனோ தேவியின் பாதத்தில் அலங்கரிக்கப்பட்டுவந்த பாதஸரத்தை மாத்ரம் ஸீதையினுடையதுதான் என்றதை நிச்சயமாகச் சொன்னார். முகத்திலோ, கைகளிலோ அலங்கரிக்கப்பட்டுவந்த ஆபரணங்களைப் பற்றித் தனக்குத் தெரியாது என்றும் சொல்லிவிட்டார். இவ்விதம் சொன்ன லக்ஷ்மணனைப் பார்த்து ஸ்ரீராமனும் “லக்ஷ்மணா! பாதஸரத்தை மாத்ரம் நீ அறிந்திருக்கின்றாயே, மற்ற ஆபரணங்களை ஏன் அறிந்துகொள்ளவில்லை? அதன் காரணம் என்ன?” என்று கேட்க, லக்ஷ்மணஸ்வாமியும் ராமனைப் பார்த்து, “ராமா! நான் ஸகலவிதமான புருஷார்த்தங்களையும் அடைய பராசக்தியான தேவியினுடைய பாதாரவிந்தங்களை தர்சனம் செய்யும் வழக்கமாகையால் அங்கு அலங்கரிக்கப்பட்ட பாதஸரத்தை நான் அறிந்தேன். தேவியினுடைய மற்ற ப்ரதேசங்களில் என்னுடைய த்ருஷ்டிக்கு ஸஞ்சாரம் ஏற்பட காரணமில்லாததினால் அந்த ப்ரதேசங்களில் அலங்கரிக்கப்பட்ட ஆபரணங்களைப்பற்றி நான் எவ்விதம் அறியமுடியும்?” என்று சொல்லிவிட்டார். இதனால் தேவியினுடைய சரணாரவிந்தத்தின் மஹிமையானது ஸ்பஷ்டமாகப் ப்ரகாசிக்கின்றதல்லவா! ஸ்ரீமத் ராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் இக்கதையானது ஸ்பஷ்டமாக ப்ரகாசிக்கின்றது. இந்த ஒரு உதாஹரணமே சக்தி தத்வம் மேலானது என்பதற்கு ப்ரமாணமாகப் போதாதா. ஸ்ரீராமசந்த்ரமூர்த்தியே, அயோத்யா நகரத்தில் அச்வமேத மஹாமண்டபத்தில் குசலவாள் திவ்ய வீணையுடன் ஸ்ரீராம கதையை கானரூபமாக

ப்ரவசனம் செய்துகொண்டுவரும் ஸமயத்தில், இந்த சரித்ரம் தனக்கும் ச்ரேயஸ்ஸைக் கொடுக்கக்கூடியது என்பதை பஹிரங்கமாக மஹாஜனங்களுக்கு ப்ரகாசப்படுத்தி இருக்கிறார். ஸ்ரீமத் ராமாயணத்தில் தனக்கு ப்ராதான்யம் இல்லை என்பதை ஸ்ரீராமனே அங்கீகரித்துவிட்டார். தனக்கு அந்த நூலில் ப்ராதான்யம் இருந்தால் தன்னுடைய சரித்ரம், தனக்கு ச்ரேயஸ்ஸைக் கொடுக்கக்கூடியது என்று ராமனே சொல்லுவாரா? அப்படியானால் அது ஆத்மச்லாகையாக ஆகின்றபடியால் சாஸ்த்ர விருத்தமாக ஆகும். ஆகையால் தனக்கு ப்ராதான்யத்தை ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீராமன் ஒப்புக்கொள்ளவில்லை. ஸீதா தேவிக்குத்தான் ப்ராதான்யத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார். ராமாயணம் என்று அந்த நூலுக்குப் பெயர் ஏற்பட்டாலும், ஸீதையினுடைய சரித்ரம் என்றுதான் வால்மீகி மஹர்ஷியும் அந்த நூலுக்கு நாமகரணம் செய்திருக்கிறார். இவ்விதம் ஸ்ரீமத் ராமயணத்தில் முன்பின் கதா ஸந்தர்பங்களை கவனித்துப்பார்த்தால் சக்தியினுடைய மஹிமைதான் விளங்கிவருகிறது. ஸ்ரீமத் ராமாயணம் மாத்ரமல்ல; மற்ற எந்த இதிஹாஸ புராணங்களையும் ஸ்ம்ருதிகளையும், வேதங்களையும், ஆராய்ச்சிசெய்து பார்த்தாலும் ஆங்காங்கு சக்திக்கே ப்ராதான்யமானது ப்ரகாசிக்கின்றது. லோகங்களிலோ, இது ப்ரஸித்தமானதே. ஒரு க்ருஹத்தில் க்ருஹிணீ என்ற ஸ்த்ரீகளுக்கு சாஸ்த்ர விருத்தமில்லாததான அம்சங்களில் ப்ராதான்யத்தைக் கொடுத்தாலொழிய க்ருஹ க்ருத்யம் ஸரிவர நடைபெறாது. அதுபோல் ஜகத்க்ருத்யத்திலும், கடவுளும் சக்தியை ப்ரதானமாக வைத்துத்தான் ஒரு கார்யத்தைச் செய்ய முன்வருகிறார். லோகத்தை ஸ்ருஷ்டிக்கவோ, பரிபாலிக்கவோ, ஸம்ஹரிக்கவோ, பராசக்திக்கு இச்சை ஏற்படும்பொழுது இந்த மூன்று கார்யத்தையும் நிர்வாஹம் செய்ய தேவியே தன் கடாக்ஷத்தால்; ப்ரும்மா, விஷ்ணு,

ருத்ரன் முதலான தேவதைகளை ஸ்ருஷ்டிக்கிருள் என்றும் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக் கிறது.கிறன.

தேவியினுடைய பெருமையைப்பற்றி யாரும் "இவ்வளவுதான்" என்று வர்ணிக்க முடியாது. ஸகல லோகத்திற்கும் சாச்வதமான தாயாராக ஆகிருள் என்பதும் லோகம் வேதம் இவைகளில் ப்ரஸித்தமானது. தாயினிடம் பக்தி இல்லாத ப்ராணிகள், ப்ராணிகளாகவே ஆகமாட்டார்கள். ஆகையால் ஸர்வஜனங்களுக்கும் அழிவற்ற தாயா ரான பராசக்தியினிடம் மேலான பக்தி ஏற்பட வேண்டியது அவச்யமானது என்பதை உத்தேசித்து தேவியினுடைய மஹிமையை ப்ரகாசம் செய்ய ஜகத்குருவான பரமாசார்யாள் இந்த க்ரந்தங்தை இயற்றி ஞர்கள். அவர்கள் செய்த ஸ்தோத்ர க்ரந்தங்களுக் குள் இந்த க்ரந்தமானது மிகவும் மேலானது. இந்த க்ரந்தத்தை படித்துவரும் வழக்கமுள்ளவர்களுக்கு தேவியானவள் ஸகல கல்விகளிலும் அபூர்வமான பயிற்சியையும், தேவர்களாலும் பூஜிக்கக்கூடிய தன் மையையும், தேவியே கொடுத்து அனுக்ரஹம் செய் கிருள். மூகாம்பிகா க்ஷேத்ரத்தில் ஒரு ஊமையும், செவிடும், அஞ்ஜலிபந்தமாத்ரத்தால் மஹாகவிகளாக ஆனுர்கள் என்பதும் ப்ரஸித்தமானது. இத்துடன், தென்மொழியில் மஹாவித்வானுன ஸம்பந்தமூர்த்தியோ வடமொழியில் மஹாவித்வானுன காளிதாஸன் முத லான மஹான்களோ, முக்யமாக இந்த க்ரந்தத்தையே இயற்றிய ஜகத்குருவோ, லோகங்களில் நிகரற்ற மான்யதையை தேவியினுடைய அனுக்ரஹத்தால் அடைந்திருக்கிருர்கள் என்பதும் ப்ரஸித்தமானது.

நமது லோகத்திற்கும் வாழ்க்கைக்கும் இந்த நூலை ஓர் அபூர்வமான கல்பவ்ருக்ஷமாக பூலோகத்தில் ஸ்தாபனம் செய்வதற்காகவே மஹாகைலாஸத்திற்கு அதிபதியான ஸாக்ஷாத்பரமேச்வரனே, கேரள க்ஷேத்

ரத்தில் சிவகுரு ஆர்யாம்பாள் என்ற திவ்ய தம்பதிகளை ஒரு நிமித்தமாக வைத்துக்கொண்டு சங்கர பகவத் பாதாள் என்ற ப்ரஸித்தமான திருநாமத்துடன் அவத ரித்தார்கள் என்பதையும் வித்வான்கள் அறியக் கூடும். அவர்களால் இயற்றப்பட்ட இந்த க்ரந்தத் தைத்தான் கல்பவ்ருக்ஷமாக வைத்துக்கொண்டு மற்ற நூல்களை இந்த வ்ருக்ஷத்தின் பத்ரங்களாகவும், புஷ் பங்களாகவும், காய்களாகவும், கனிகளாகவும், சாகை களாகவும் உபசாகைகளாகவும், பாவிக்கவேண்டும். இவ்விதமிருக்க, இந்த நூலை ஒவ்வொரு ச்லோகமாகப் படித்து தேவியை ஸந்தோஷிக்கச் செய்கிறவர்களுக்கு ஸர்வ ஸௌபாக்யமும் ஏற்படும் என்பதில் கொஞ்ச மேனும் ஸந்தேஹமே இல்லை. ரோக நிவ்ருத்தியிலோ. துர்தேவதைகளை விரட்டுதல்களிலோ, சத்ருக்களை ஜயிப்பதிலோ, கல்விபயிற்சியை அடைவதிலோ, அபம்ருத்யுவை பரிஹாரம் செய்துகொள்வதிலோ, ஸகலவிதமான அரிஷ்டத்தையும் பரிஹாரம் செய்து கொள்வதிலும், ஸகலவிதமான இஷ்டங்களையும் அடைவதிலும் இந்த நூலைப்போல் ஒவ்வொரு க்ருஹத்திலும் இருந்துவர வேண்டிய சிந்தாமணி வேறு ஒன்றுமே இல்லை. ஆகையால் ஸகலஜனங்க ளும் ஸ்தோத்ர க்ரந்த பாராயண மூலமாக ஸகலவித மான அரிஷ்ட நிவ்ருத்தியை ஸம்பாதித்துக்கொண்டு மேன்மேலும் ஸௌபாக்யத்துடன் கூடினவர்களாக ஆளுவார்கள் என்ற விஷயத்தில் தப்தபரசுக்ரஹண மூல மாக சபதம் செய்யலாம்.

ப்ரும்மவித்யாரூபிணியான பராம்பிகையின் பாரதத் வத்தை போதிக்கின்ற இந்த ஸ்தோத்ர க்ரந்தத்தைப் பாராயணம் செய்து அதனால் தேவியை ஸந்தோஷிக் கச் செய்கிறவர்களுக்கு பராசக்தியே நேரில் ஆவிர் பவித்து வித்யாதானம் செய்கிறபடியால், ஸகலவித மான வித்யைக்கும் மூலபூதமான தேவியினுடைய நிலயமான இந்த ஸ்தோத்ர க்ரந்தத்தை கேவலம் மர்த்

யர்களான ஜனங்களுக்கு எதிரில் ப்ரகாசப்படுத்திய ஸ்ரீசங்கர பகவத்பாதாளுடைய திவ்ய பாதபத்மங்களில் பரம பக்தியுடன் இந்த ஸ்தோத்ர க்ரந்தத்தைப் பாரா யணம் செய்து, ப்ரும்மவித்யாரூபிணீயான பராம்பிகையி னுடைய திவ்ய தர்சனத்திற்கு யோக்யமான ஜன் மாவே ஸபல ஜன்மாவாக ஆகும் என்பதை ஸகல புண்ய ஜனங்களும் அறிந்து, பரமாசார்யாளுடைய அனுக்ரஹத்திற்கும் பராம்பிகையினுடைய அனுக்ர ஹத்திற்கும் பாத்ரபூதராவார்களாக.

**தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரியஸ்.**



श्री मीनाक्षि



# ஸௌந்தர்ய லஹரீ

भूमौ स्खलित पादानां भूमिरेवावलम्बनम् ।
त्वयि जातापराधानां त्वमेव शरणं शिवे ॥

𑌭𑍂𑌮𑍌 𑌸𑍍𑌖𑌲𑌿𑌤 𑌪𑌾𑌦𑌾𑌨𑌾𑌂 𑌭𑍂𑌮𑌿𑌰𑍇𑌵𑌾𑌵𑌲𑌮𑍍𑌬𑌨𑌮𑍍 ।
𑌤𑍍𑌵𑌯𑌿 𑌜𑌾𑌤𑌾𑌪𑌰𑌾𑌧𑌾𑌨𑌾𑌂 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌶𑌰𑌣𑌂 𑌶𑌿𑌵𑍇 ॥

பூமௌ ஸ்கலித பாதாநாம் பூமிரேவாவலம்பநம் ।
த்வயி ஜாதாபராதாநாம் த்வமேவ சரணம் சிவே ॥

—:o:—

### பராசக்தியின் உத்கர்ஷம்

शिवः शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुं
न चेदेवं देवो न खलु कुशलः स्पन्दितुमपि ।
अतस्त्वामाराध्यां हरिहरविरिञ्चादिभिरपि
प्रणन्तुं स्तोतुं वा कथं अकृतपुण्यः प्रभवति ॥ १ ॥

𑌶𑌿𑌵𑌃 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑌦𑌿 𑌭𑌵𑌤𑌿 𑌶𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌿𑌤𑍁𑌂
𑌨 𑌚𑍇𑌦𑍇𑌵𑌂 𑌦𑍇𑌵𑍋 𑌨 𑌖𑌲𑍁 𑌕𑍁𑌶𑌲𑌃 𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌿𑌤𑍁𑌮𑌪𑌿 ।
𑌅𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯𑌾𑌂 𑌹𑌰𑌿𑌹𑌰𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑌪𑌿
𑌪𑍍𑌰𑌣𑌨𑍍𑌤𑍁𑌂 𑌸𑍍𑌤𑍋𑌤𑍁𑌂 𑌵𑌾 𑌕𑌥𑌂 𑌅𑌕𑍃𑌤𑌪𑍁𑌣𑍍𑌯𑌃
𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑌿 ॥ ௧ ॥

*சிவ:சக்த்யாயுக்தோ யதி பவதி சக்த:ப்ரபவிதும்*
*நசேதேவம் தேவோ நகலு குசல: ஸ்பந்திதுமபி ।*
*அதஸ்த்வாம் ஆராத்யாம் ஹரிஹரவிரிஞ்சாதிபிரபி*
*ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதம் அக்ருதபுண்ய: ப்ரபவதி*
*॥ 1 ॥*

| | |
|---|---|
| हे ! मातः (ஹெ! ஊாதঃ) (ஹே! மாத:) | = ஹே! தாயே |
| यतः (யதঃ) (யத:) | = எந்தக் காரணத்தினுல் |
| शिवः (ஶிவঃ) (சிவ:) | = பரமசிவனுனவர் |
| (त्वया) शक्त्या (த்வயா) ஶக்த்யா (த்வயா) சக்த்யா | = பராசக்தியாகிற உன்னுடன் |
| युक्तः यदि (யுக்தঃ யதி) (யுக்த: யதி) | = சேர்ந்து கொண்டிருப்பனுனுல் |
| प्रभवितुं (ப்ரஹவிதும்) (ப்ரபவிதும்) | = உலகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலான கார்யத்தைச் செய்வதற்கு |
| शक्तः (ஶக்தঃ) (சக்த:) | = ஸாமர்த்ய முள்ளவராக |
| भवति (ஹவதி) (பவதி) | = ஆகிருரோ |
| देवः (தெவঃ) (தேவ:) | = அந்தப் பரமசிவக்கடவுள் |
| एवं (ஏவம்) (ஏவம்) | = முன் சொன்னபடி பராசக்தியாகிற உன்னேடு கூடினவராக |
| नचेत् (நசெத்) (நசேத் | = இல்லாத ஸமயத்தில் |
| स्पन्दितुं अपि (ஸ்பந்திதும் அபி) (ஸ்பந்திதும் அபி) | = (தான்) அசைவதற்குக் கூட |
| कुशलः (குஶலঃ) (குசல:) | = ஸாமர்த்யமுள்ளவராக |

न खलु भवति (𑌨 𑌖𑌲𑍁 𑌭𑌵𑌤𑌿) = ஆகமாட்டாரல்லவா!
(ந கலு பவதி)

अतः (𑌅𑌤𑌃) (அத:) = அக்காரணத்தினால்

हरिहरविरिञ्चादिभिः अपि (𑌹𑌰𑌿𑌹𑌰𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌅𑌪𑌿) (ஹரிஹரவிரிஞ்சாதிபி: அபி) = விஷ்ணு, ருத்ரன் ப்ரும்மா முதலான தேவர்களாலும்கூட

आराध्यां (𑌆𑌰𑌾𑌧𑍍𑌯𑌾𑌂) (ஆராத்யாம்) = பூஜிக்கத்தகுந்தவளான

त्वां (𑌤𑍍𑌵𑌾𑌂) (த்வாம்) = உன்னை

अकृतपुण्यः (𑌅𑌕𑍃𑌤𑌪𑍁𑌣𑍍𑌯𑌃) (அக்ருதபுண்ய:) = சென்ற ஜன்மாக்களில் (அளவிடக்கூடாத) புண்யத்தைச் செய்யாதவன்

प्रणन्तुं (𑌪𑍍𑌰𑌣𑌨𑍍𑌤𑍁𑌂) (ப்ரணந்தும்) = நமஸ்காரம் செய்வதற்கோ

स्तोतुं वा (𑌸𑍍𑌤𑍋𑌤𑍁𑌂 𑌵𑌾) (ஸ்தோதும் வா) = வாக்கினால் ஸ்துதிப்பதற்கோ

कथं (𑌕𑌥𑌂) (கதம்) = எப்படி

प्रभवति (𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑌿) (ப்ரபவதி) = ஸாமர்த்யமுள்ளவனாக ஆவான்?

தாத்பர்யம் :—இந்த ச்லோகத்தினால் பராசக்தியான ஜகன்மாதா ஸ்ரீ மீனாக்ஷி, பரதேவதை ஸகல தேவதைகளுக்கும் உத்க்ருஷ்டமான தேவதை என்று ஸ்ரீசங்கரபகவத்பாதாளால் புகழப்படுகிறாள்.

அந்த பரதேவதையினுடைய ஸாந்நித்யரூபமான ஸம்பந்தம் இல்லாதபோனால், ஸகல வேதங்களால் சொல்லப்படும் பரமசிவன் என்ற ப்ரும்மத்துக்கும் யாதொருவிதமான கார்யத்தைச் செய்வதிலும்

ஸாமர்த்யம் ஏற்படுகிறதில்லை. பராசக்தியோடு பரம சிவன் கூடியிருக்கும்போதுதான், உலகத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ர ஹம் என்ற ஐந்துவிதமான கார்யங்களையும் செய்து, தன்னிடத்திலுள்ள ஈச்வரத்வம் என்ற தன்மையை (அந்த பரமசிவன்) ப்ரகடனம் செய்துகொள்கிறார். இதனால் எந்த தேவியினுடைய ஸம்பந்தத்தினால்-தான், பரம்பொருளாகிய பரமசிவனுக்குக்கூட ஜகத் காரணத்வம் என்ற தன்மையானது ஸித்திக்கிறதோ, அந்த தேவியானவள் மேலான தெய்வம் என்பதற்கு வேறு காரணத்தையும் நிரூபிக்கவேண்டுமோ!

இதனால் அந்த தேவியானவள் ஸ்ருஷ்டிகர்த்தா வான ப்ரும்மா, ஸ்திதிகர்த்தாவான விஷ்ணு, ஸம்ஹார கர்த்தாவான ருத்ரன், என்ற த்ரிமூர்த்திகளென்ன, இந்த்ரன் முதலான எட்டு திக்பாலகர்களென்ன, மற்று முள்ள தேவர்களென்ன, எல்லா தேவர்களுக்கும்கூட, பூஜிக்கத் தகுந்த தேவதையாக ஆகிறாள். சென்ற அநேக ஜன்மாக்களில் அளவிட முடியாத தவத் தைச் செய்தவர்கள்தான், பராசக்தியான தேவியை காயிகபக்தியாகிற நமஸ்காராதிகளாலோ, வாசிக பக்தியாகிற ஸ்தோத்ரங்களாலோ, மானஸிக பக்தி யாகிற த்யானாதிகளாலோ ஆராதித்து ஜன்ம ஸாபல் யத்தை அடைய முயற்சி செய்வார்கள். ஸுக்ருதம் என்ற தவத்தைச் செய்யாதவர்களுக்கு, இந்த தேவி யினுடைய விஷயத்தில் பூஜிக்கவேண்டுமென்று மனம் வருவது ரொம்பவும் அரிதுதான். ஸாக்ஷாத் பரம சிவனுடைய திரு அவதாரமாகவோ, அல்லது இனி ஜன்மா எடுக்கக்கூடிய கர்மா இல்லாமல், ஸகல கர் மாக்களையும் அனுபவித்து ஒழித்தவனாகவோ இருக் கும் புண்ய ஜனத்துக்குத்தான் பராசக்தியினுடைய பூஜையிலோ அவளுடைய மஹிமையை விளக்கிக் காட்டுகிற மஹாமந்த்ராதிகளை குருமுகமாக உபதே சம் செய்துகொண்டு ஜபம் செய்வதிலோ அதிகாரம் ஏற்படும். அதில்,

यदिवा पश्चिमं जन्म यदिवा शङ्करः स्वयं ।
तेनैव लभ्यते विद्या श्रीमत्पञ्चदशाक्षरी ॥

𑌯𑌦𑌿𑌵𑌾 𑌪𑌶𑍍𑌚𑌿𑌮𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌯𑌦𑌿𑌵𑌾 𑌶𑌙𑍍𑌕𑌰𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂 ।
𑌤𑍇𑌨𑍈𑌵 𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑌾𑌕𑍍𑌷𑌰𑍀 ॥

யதிவா பச்சிமம் ஜந்ம யதிவா சங்கர: ஸ்வயம் ।
தேநைவ லப்யதே வித்யா ஸ்ரீமத்பஞ்சதசாக்ஷரீ ॥

என்ற சாஸ்த்ரமே ப்ரமாணமாகும்.

ஆகையால் ரொம்பவும் அரிதான மானிட ஜன்மாவை அடைந்தவர்கள் உலகத்திற்கு மாதாவான பராசக்தியென்ற பரதேவதையை உபாஸிக்க வேண்டியது ரொம்பவும் அவச்யமாகும் என்பதுதான் மேற்சொன்ன ச்லோகத்தின் மூக்ய தாத்பர்யமாகும்.

---

## 2. பராசக்தியின் பாததூளி மஹிமை

तनीयांसं पांसु तव चरणपङ्केरुहभवं
विरिञ्चिः संचिन्वन् विरचयति लोकान् अविकलं ।
वहत्येनं शौरिः कथमपि सहस्रेण शिरसां
हरः संक्षुद्यैनं भजति भसितोद्धूलनविधिम् ॥ २ ॥

𑌤𑌨𑍀𑌯𑌾𑌂𑌸𑌂 𑌪𑌾𑌂𑌸𑍂𑌂 𑌤𑌵 𑌚𑌰𑌣𑌪𑌙𑍍𑌕𑍇𑌰𑍁𑌹𑌭𑌵𑌂
𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌿𑌸𑍍𑌸𑌂𑌚𑌿𑌨𑍍𑌵𑌨𑍍 𑌵𑌿𑌰𑌚𑌯𑌤𑌿 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌅𑌵𑌿𑌕𑌲𑌂 ।
𑌵𑌹𑌤𑍍𑌯𑍇𑌨𑌂 𑌶𑍌𑌰𑌿𑌃 𑌕𑌥𑌮𑌪𑌿 𑌸𑌹𑌸𑍍𑌰𑍇𑌣 𑌶𑌿𑌰𑌸𑌾𑌂
𑌹𑌰𑌸𑍍𑌸𑌂𑌕𑍍𑌷𑍂𑌦𑍍𑌯𑍈𑌨𑌂 𑌭𑌜𑌤𑌿 𑌭𑌸𑌿𑌤𑍋𑌦𑍍𑌧𑍂𑌲𑌨
𑌵𑌿𑌧𑌿𑌮𑍍 ॥ ௨ ॥

தநீயாம்ஸம் பாம்ஸூம் தவ சரணபங்கேருஹபவம்
விரிஞ்சிஸ்ஸம்சிந்வன் விரசயதி லோகாந் அவிகலம் ।
வஹத்யேநம் சௌரி: கதமபி ஸஹஸ்ரேண சிரஸாம்
ஹரஸ்ஸம்க்ஷூத்யைநம் பஜதி பஸிதோத்தூலநவிதிம் ॥ 2 ॥

हे ! भगवति (𑌹𑍇! 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே! பரதேவதையே!
(ஹே! பகவதி)

विरिञ्चिः (𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌿𑌃)(விரிஞ்சி:) = ப்ரும்மாவானவர்

तव (𑌤𑌵) (தவ = உன்னுடைய

चरणपङ्केरुहभवं = தாமரைப் பூவைப்போ
𑌚𑌰𑌣𑌪𑌙𑍍𑌕𑍇𑌰𑍁𑌹𑌭𑌵𑌂 லொத்த உன் பாதங்களி
(சரணபங்கேருஹபவம்) லிருந்து உண்டானதாயும்

तनीयांसं (𑌤𑌨𑍀𑌯𑌾𑌂𑌸𑌂) = ரொம்பவும் ஸூக்ஷ்ம
(தநீயாம்ஸம்) மாயுமுள்ள

पांसुं (𑌪𑌾𑌂𑌸𑍁𑌂) = (புழுதியை) தூளியை
(பாம்ஸும்)

संचिन्वन् (𑌸𑌂𑌚𑌿𑌨𑍍𑌵𑌨𑍍) = ஸாமக்ரியை ஸம்பாதிக்
(ஸம்சின்வன்) கிறவராய்க்கொண்டு

लोकान् (𑌲𑍋𑌕𑌾𑌨𑍍) = பூராதி ஸப்த லோகங்க
(லோகாந்) ளென்ன, அதலம் முத
லான ஸப்த லோகங்க
ளென்ன, ஆக 14லோகங்
களையும்

अविकलं (𑌅𑌵𑌿𑌕𑌲𑌂) = ஒன்றுக்கொன்று நெருங்
(அவிகலம்) காமல் விசாலமாக இருக்
கும்படி

विरचयति (𑌵𑌿𑌰𑌚𑌯𑌤𑌿) = ஸ்ருஷ்டிக்கிறார்;
(விரசயதி)

तथा (𑌤𑌥𑌾) (ததா) = அப்படியே

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே பரதேவதையே!
(ஹே பகவதி)

शौरिः (ஶௌரி:) (சௌரி:) = ஆதிசேஷனுடைய ரூபமாக விளங்கிவரும் விஷ்ணுவானவர்

एनं (ஏநம்) (ஏநம்) = 14 லோகங்களாக பிரிக்கப்பட்டு வருகிற உன் பாததூளியை

शिरसां सहस्रेण ஶிரஸாம் ஸஹஸ்ரேண) (சிரஸாம் ஸஹஸ்ரேண) = தனது 1000 (ஆயிரம்) தலைகளினாலே

कथमपि (கத²மபி) (கதமபி = மிகவும் ப்ரயாஸத்துடன்

वहति (வஹதி) (வஹதி) = தாங்கிக்கொண்டு ரக்ஷிக்கிறார்;

तथा (தথா) (ததா) = அப்படியே

हे, भगवति (ஹே, ப⁴க³வதி) (ஹே, பகவதி) = ஹே பரதேவதையே!

हरः (ஹர:) (ஹர:) = ப்ரளயகாலத்தில் ஸகல ப்ரபஞ்சத்தையும் ஸம்ஹரிக்கிற ருத்ரனானவர்

एनं (ஏநம்) (ஏநம்) = இந்த லோகமாக விளங்கிவரும் உன் பாததூளியை

संक्षुद्य (ஸம்க்ஷுத்³ய) (ஸம்க்ஷுத்ய) = நன்றாகப் பொடி செய்து

भसितोद्धूलनविधिं (ப⁴ஸிதோத்³தூ⁴லநவிதி⁴ம்) (பஸிதோத்தூலநவிதிம்) = விபூதியினால் செய்து கொள்ளவேண்டிய உத்தூலனம என்ற அனுஷ்டானத்தை

भजति (ப⁴ஜதி) (பஜதி) = ஸேவிக்கிறார்(செய்கிறார்)

தாத்பர்யம் :—இந்த ச்லோகத்தால் ஸாக்ஷாத் ராஜ ராஜேச்வரியான பரதேவதையினுடைய திரு பாத கமலங்களில் ஸம்பந்தப்பட்ட புழுதியாகிற தூளியின் மஹிமையானது சொல்லப்படுகிறது.

அதாவது, ஸர்வேச்வரியான ஜகன்மாதா தனது பொற்பாத கமலங்களால், தனது ஸ்ரீபுரம் என்ற நக ரத்தின் உத்யான வனத்தில் ராஜயோகிகளுடைய ஸங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட திவ்ய பூமியில், மந்த மதியாக நடந்துகொண்டு ஸகிகளுடன் ஆநந்தமாக விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது, சதுர்முக ஞன ப்ரும்மாவானவர், ஒரு ஸமயம் அந்தப் பரதேவ தையை தர்சனம் செய்யும்படியான பாக்யவானுக ஆனுர். அப்படி தேவியினுடைய தர்சனத்தைச் செய்து தனது ஜன்மாவைப் பரிசுத்தமாகவும் செய்து கொண்ட பிற்பாடு, அந்த அம்பாள் நடந்துவந்த ப்ர தேசத்திலுள்ள புழுதித் துளிகளை தான் ஸ்வீகரித்துக் கொண்டு, அதினின்றும் பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜநலோகம், தபோ லோகம், ஸத்யலோகம், என்ற மேல் லோகங்களாகிய 7 லோகங்கள் என்ன, அதல, விதல, ஸுதல, ரஸாதல, தலாதல, மஹாதல, பாதாள என்ற கீழ் லோகங்களா கிய 7 லோகங்கள் என்ன ஆக 14 லோகங்களையும் ஸ்ருஷ்டித்து, லோகத்திற்குத் தான் ஸ்ருஷ்டிகர்த்தா என்ற மேன்மையை அடைந்தார்.

அதுமாத்ரமல்ல. இந்த லோகங்களெல்லாம் ஸ்ரீ வித்யையின் பாததூளியின் அம்சம் என்று அறிந்து அந்த உலகத்தில் ஒரு மான்யதா புத்தியையும் வைத்து, மஹாவிஷ்ணுவானவர் தான் ஆதிசேஷன் என்ற ஸர்ப்ப ராஜாவின் உருவத்தையும் எடுத்துக் கொண்டு தனது ஆயிரம் தலைகளால் மேற்சொன்ன உலகங்களைத் தாங்கிக்கொண்டு ரக்ஷித்து வருகிருர்.

இதை யறிந்த ருத்ரனே, ப்ரும்மாவுக்கும், விஷ்ணு வுக்கும், ஸ்ரீ ராஜராஜேச்வரியினுடைய பாத தூளி

கிடைத்ததே, நாம் அதை அடைய பாக்யமில்லாதவ ளுக ஆகிவிட்டோமே என்று நினைத்து, மஹா ப்ரளய காலத்தில், ஸம்ஹார க்ருத்யத்தில் 'நான் கர்த்தாவாக ஆகிறேன்' என்று தீர்மானித்து அவ்விதமே ப்ரளய காலத்தில், மேலே சொல்லப்பட்ட 14 லோகங்க ளாக விளங்கிவரும் அம்பாளுடைய பாத தூளியை நன்ருக கையிலெடுத்து வைத்துக்கொண்டு "த்ரியம் பக" மந்த்ரத்தால் பொடியாக நொறுக்கி தேவியினு டைய ப்ரஸாதத்தைத் தான் அடைவதற்காக, தன் பாதம் முதல் சிரஸ் வரையிலும் தனது சரீரத்தில் அந்த பஸ்மாவைப் பூசிக்கொண்டு தான் க்ருதார்த்த ளுகி பரதேவதையினுடைய த்யானத்தில் ஈடுபட் டிருந்தார்.

இதனுல் ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற த்ரி மூர்த்திகளும் தேவியினுடைய பாத தூளியைப் பூஜை செய்து அதனுல், தாங்கள் ப்ராபல்யத்தையு மடைந்து, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற தங்க ளுக்குரிய கார்யங்களைச் செய்துவருகிருர்களே தவிர, ஸ்வயமாக அவர்களுக்கு ஏற்பட்ட ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களாகிற அவர்களுடைய கார்யங்களை வஹிக்க அவர்களுக்கு சக்தியில்லையென்று தெரிகிறது. தேவதைகளுக்குக்கூட அம்பாளுடைய பாததூளியின் மஹிமையினுல்தான், ஸகலவிதமான ஸௌபாக்யங் களும் ஏற்படுகிறது என்பது திண்ணம். ஸகலமான குடும்பிகளுக்கும் ஆயுராரோக்ய ஐச்வர்யாபிவ்ருத்திக் கும், சத்ருக்ஷயத்திற்கும், திவ்ய ஞானப்ராப்திக் கும், பரதேவதையினுடைய பாதாரவிந்த தூளியின் பூஜையே மேலானதும் அவச்யமுமென்றும் அறியவும்.

ஆனுல் தேவி நமக்கு அப்ரத்யக்ஷமாயிருக்கும் பொழுது நமக்கு அந்த அம்பாளுடைய பாதகமலம் ஸம்பந்தப்பட்ட ப்ரதேசம் தெரிந்து, அதற்குப் பிறகு நாம் அந்த பாததூளியை அடைந்து நாம் பூஜிப்பது என்பது நமக்கு எப்படி ஸித்திக்கும் என்று எண்ண

லாம். ஆகிலும் அந்த பாத தூளியை அடைவதற்கும் ஒரு ஸுலபமான உபாயம் உண்டு. அதாவது, ஏதாவது ஒரு பௌர்ணமி தினத்தன்று ஒரு ஸுவாஸினீயை, ஸுவாஸினீ பூஜாவிதிக்ரமத்தை யனுஸரித்து, நாம் பூஜிக்கவேண்டும். நமது க்ருஹத்திற்குள் அந்த ஸுவாஸினீயை அழைக்கும்போது, நமது க்ருஹத்தின் வாசலிலிருந்து, ஸுவாஸினீ பூஜைக்காக அமைத்திருக்கும் பீடம் வரையிலும் நதியிலுள்ள மணலைக் கொண்டுவந்து வஸ்த்ரஹாயம் செய்து பூமியில் அதை வாறியிறைத்து, அதன்மேலாக அந்த ஸுவாஸினீயினுடைய பாதங்கள் படும்படியாக அழைத்துப் போகவேண்டும். பூஜாவிதிகள் முடிந்து ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளால் ஸுவாஸினீயை நாம் ஆராதித்து, அவள் அந்த குடும்பத்தார்களுக்கு ஆசீர்வாதம் செய்து வெளியில் போகும்பொழுதும் மூன் போலவே அந்த மணல் பாதைவழியாகவே செல்லும்படி செய்யவேண்டும். அப்படியானால்,

स्त्रियस्समस्ताः तव देवि भेदाः

ஸ்த்ரியஸ்ஸமஸ்தா: தவ தேவி பேதா:

ஸ்த்ரியஸ்ஸமஸ்தா: தவ தேவி பேதா:

என்ற சாஸ்த்ரத்தை யனுஸரித்து, ஸ்த்ரீகள் தேவியினுடைய விபூதியானதினுலும், அதிலும், ப்ரக்ருதமாக, பூஜிக்கப்படும் ஸுவாஸினீயிடத்தில், பூஜகனுக்கு தேவியினுடைய தாதாத்ம்யபாவம் இருப்பதினுலும், அந்த ஸுவாஸினீயினுடைய பாதங்களில் ஸம்பந்தப்பட்ட மணல் தூளிகளை, ஸாக்ஷாத் பரதேவதையினுடைய பாத கமல தூளிகளாகவே பாவிக்கவேண்டும். அந்த பாததூளிகளை ச்ரத்தையுடன் க்ரஹித்து, தன்னுடைய சக்தி அனுஸாரம் சின்னதாக செய்யப்பட்ட பித்தளைப் பெட்டியிலோ, வெள்ளிப்பெட்டியிலோ, தங்கப்பெட்டியிலோ, அதை நிறைத்து வைத்துக் கொண்டு, ஒவ்வொரு தினத்திலும் அந்தப் பெட்டியின்

மீது, தேவியின் பாததூளியை ஆவாஹனம்செய்து, ஷோடாசோபசாராதிகளால் பூஜைசெய்து வரவேண்டும். ஸ்ரீவித்யாபீஜாக்ஷரங்களினுலே, த்யானம், ஆவாஹனம் முதலான பூஜை உபசாரங்களைச் செய்வது அவச்யமாகும். வஸந்த ருதுவிலோ, அல்லது சரத் ருதுவிலோ, ஸ்ரீவித்யா ஸாதகர்கள் ஒரு மண்டலத்திற்குக் குறையாமல் இந்தப் பூஜையைச் செய்து வர வேண்டும். ஸாயங்காலமும், ப்ராதக்காலமும், இரு காலத்திலும் இந்த பூஜையை செய்துவரவேண்டும். ப்ராதக்காலத்தில் பூஜையானவுடன், "तनीयांसं पांसुं" (தநீயாம்ஸம் வாம்ஸூம்) (தநீயாம்ஸம் பாம்ஸூம்) என்ற ச்லோகத்தை ஆயிரம் ஆவர்த்திஜபமும், ஸாயங்கால பூஜை ஆனபிற்பாடு, அடுத்துவரும்,

अविद्यानां अन्तस्तिमिरमिहिरद्वीपनगरी

𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌅𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌿𑌮𑌿𑌰𑌮𑌿𑌹𑌿𑌰𑌦𑍍𑌵𑍀𑌪𑌨𑌗𑌰𑍀

அவித்யாநாம் அந்தஸ்திமிரமிஹிர த்வீபநகரீ

என்ற ச்லோகத்தை ஆயிரம் ஆவர்த்திஜபமும் செய்து பூஜையை விதிவத்தாக முடிக்கவேண்டும். இவ்விதம் ஒரு மண்டலம் பூஜை செய்து பூர்த்தியானவுடன், 9 ஸுவாஸினீகளை அழைத்து ம்ருஷ்டான்ன போஜனம் செய்வித்து, வஸ்த்ரம். ஆபரணம், தக்ஷிணை முதலானதுகளை தன் சக்திக்குக் குறையாமல் கொடுத்து, ஸந்தோஷமாக ஆராதித்தும், வ்ரதத்தை முடிக்கவேண்டியது. வ்ரததினமாகிய ஒவ்வொரு தினத்திலும் ப்ரும்மசர்யம் முதலான நியமங்கள் தவருமல் இருக்கவேண்டும். அப்படியானுல், அந்த பூஜகனுன மஹாபுருஷன், பராம்பிகையினுடைய ப்ரஸாதத்திற்கு முக்யபாத்ரனுக ஆகி, ஸர்வவித்யாபாரங்கதனுயும், அஷ்டைச்வர்யஸம்பன்னனுயும், புத்ரமித்ர களத்ராதி ஸம்பத்தியோடு கூடினவனுயும், அகண்டமான கீர்த்திமாலையினுல் அலங்க்ருதனுயும், சிரஞ்ஜீவியாயுமிருந்து விளங்கிவருவான்.

## 3. மோக்ஷப்ரதமான பாததூளி

अविद्यानां अन्तस्तिमिर मिहिरद्वीपनगरी
जडानां चैतन्यस्तबकमकरन्दस्रुतिझरी ।
दरिद्राणां चिन्तामणिगुणनिका जन्मजलधौ
निमग्नानां दंष्ट्रा मुररिपुवराहस्य भवति ॥ ३ ॥

𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌅𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌿𑌮𑌿𑌰 𑌮𑌿𑌹𑌿𑌰𑌦𑍍𑌵𑍀𑌪𑌨𑌗𑌰𑍀
𑌜𑌡𑌾𑌨𑌾𑌂 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌬𑌕𑌮𑌕𑌰𑌨𑍍𑌦𑌸𑍍𑌰𑍁𑌤𑌿𑌝𑌰𑍀 ।
𑌦𑌰𑌿𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌗𑍁𑌣𑌨𑌿𑌕𑌾 𑌜𑌨𑍍𑌮𑌜𑌲𑌧𑍌
𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌮𑍁𑌰𑌰𑌿𑌪𑍁𑌵𑌰𑌾𑌹𑌸𑍍𑌯 𑌭𑌵𑌤𑌿 ॥ ௩ ॥

அவித்யாநாம் அந்தஸ்திமிர மிஹிரத்வீபநகரீ
ஜடாநாம் சைதந்யஸ்தபக மகரந்தஸ்ருதிஜ்ஜரீ ।
தரித்ராணாம் சிந்தாமணிகுணநிகா ஜன்மஜலதௌ
நிமக்நாநாம் தம்ஷ்ட்ராமுராரிபுவராஹஸ்ய பவதி ॥ 3 ॥

हे ! भगवति (𑌹𑍇! 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே! மஹாசக்தியே
(ஹே! பகவதி)

एष: (𑌏𑌷𑌃) (ஏஷ:) = இந்த

भवत्पादाब्जरेणु: = உன்னுடைய பாததூளியானது
(𑌭𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌬𑍍𑌜𑌰𑍇𑌣𑍁𑌃)
(பவத்பாதாப்ஜரேணு:)

अविद्यानां (𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂) = அக்ஞானிகளுக்கு
(அவித்யாநாம்)

अन्तस्तिमिरमिहिर द्वीपनगरी = ஆத்மஸ்வரூபத்தை மறைக்கிறமூலஅக்ஞானமென்ற இருட்டுக்கு
(𑌅𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌿𑌮𑌿𑌰𑌮𑌿𑌹𑌿𑌰 𑌦𑍍𑌵𑍀𑌪𑌨𑌗𑌰𑍀)

(அந்தஸ்திமிரமிஹிர த்வீபநகரீ) = ஸூர்யன் உதிக்கும் ஸமுத்திரத்தின் நடு ப்ரதேசமாகிய, நகரமாக விளங்கிவருகிறதாயும்,

जडानां (ஜஶாநாஂ) (ஜடாநாம்) = மந்தபுத்தி யுள்ளவர்களுக்கு

चैतन्यस्तबकमकरन्द स्रुतिझरी (ைசதந்யஸ்தபகமகரந்த ஸ்ருதிஜரீ) (சைதந்யஸ்தபகமகரந்த ஸ்ருதிஜரீ) = ஆத்மஞானமாகிய கல்ப வ்ருக்ஷத்தினுடைய பூங்கொத்தின் ரஸத்தினுடைய பெருக்கை ப்ரவாஹிக்கச் செய்கிறதாயும்

दरिद्राणां (உரிஉ்ராணாஂ) (தரித்ராணாம்) = ஏழைகளுக்கு

चिन्तामणिगुणनिका (சிஞாமணிகுணநிகா) (சிந்தாமணிகுணநிகா) = ஸகல ஐச்வர்யத்தையும் கொடுக்கக்கூடிய சிந்தாமணி ரத்னத்தின் ஸமூஹம் போல் விளங்கி வருகிறதாயும்,

जन्मजलधौ (ஜநஜலயௌ) (ஜன்மஜலதௌ) = பிறப்பாகிய ஸமுத்ரத்தில்

निमग्नानां (நிமஂநாநாஂ) (நிமக்நாநாம்) = மேலே வரமுடியாமல் மூழ்கிப் போனவர்களுக்கு

मुररिपुवराहस्य (முரரிபுவராஹஸ்ய) (முராரிபுவராஹஸ்ய) = யக்ஞவராஹ மூர்த்தியாக அவதாரம் செய்த மஹாவிஷ்ணுவினுடைய

दंष्ट्रा (உஂஷ்ரா) (தம்ஷ்ட்ரா) = தெத்திப்பல்போலும்

भवति (ஹவதி) (பவதி) = விளங்குகிறது

தாத்பர்யம் :—இந்த ச்லோகமும் முன் ச்லோகத்துடன் சேர்ந்துதான் ஒரே ப்ரயோகமாக ஆகும். இதனாலும் ஜகன்மாதாவான பரதேவதையினுடைய பாததூளிதான் ஸ்துதிக்கப்படுகிறது. ப்ராணிகளுக்கு ரொம்பவும் அவச்யமாக மானிட ஜன்மாவில் ஸம்பாதித்துக் கொள்ளவேண்டிய புருஷார்த்தங்களிலேயே முக்யமானது மோக்ஷமென்பது தானாகும். அந்த மோக்ஷத்தையோ, பரதேவதையினுடைய பாததூளியானது தன் பக்தர்களுக்கு வெகு ஸுலபமாகக் கொடுத்துவிடும். பிறப்பும் இறப்புமே ஸம்ஸாரம் என்று சொல்லப்படும். அது ஒரு கடலாகவும் வித்வான்களாலும், சாஸ்த்ரங்களாலும் வர்ணிக்கப்பட்டு வருகின்றது. கடலுக்கு எப்படி கரையேயில்லையோ, அதன் ஆழத்தையும் எப்படி ஒருவராலும் கண்டுபிடிக்க முடியாதோ, அதுபோல் இந்த ஸம்ஸாரத்திற்கும், கரையுமில்லை; இதனுடைய காம்பீர்யமும் இவ்வளவுதான் என்று யாராலேயும் அறியவும் முடியாது. அந்த தன்மையை அனுஸரித்து இந்த ஸம்ஸாரத்தையும் ஸமுத்ரமாக வர்ணிக்கப்படுகிறது. அந்த ஸமுத்ரத்திலோ ஸகலமான ஜீவகோடிகளும் முழுகித் தபிக்கிறார்கள். மேல் வந்து மிதக்கமுடியாமலும் முழுகிவிட்டார்கள். பொருளாசை, மண்ணாசை, பெண்ணாசை என்றது முதலான அநேகவிதமான பாசங்களாலும் கட்டப்பட்ட அவயவங்களோடும், மலம், மாயா, பாசம் என்ற மூன்றுவிதமான பெரிய கனமுள்ள கல்லோடுகூட சேர்த்துக் கட்டப்பட்டவர்களாயும் ஸ்வாதந்த்ரியத்தை இழந்து. காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம், என்ற ஆறு திருடர்களால் இந்த ஸம்ஸாரமாகிய ஸமுத்ரத்தில் நன்றாகத் தள்ளி அமுக்கப்பட்டவர்களாக இருந்து கொண்டு ஜீவகோடிகளெல்லாம் கஷ்டப்பட்டு வருகிறார்கள், அவ்விதமான கஷ்டத்திலிருந்தும் ஜீவகோடிகளை விமோசனம் செய்து வைப்பதில் ப்ரக்

ருதத்தில் ஸ்துதிக்கப்படுகிற தேவதையான பராசக்தி யினுடைய பாததூளியைப்போல் ஸாமர்த்தியமுள்ள தான ஸாதனமே வேறொன்றும் லோகத்தில் கிடை யாது. தேவியினுடைய பாததூளியை முன் ச்லோக தாத்பர்யத்தில் கூறப்பட்ட ப்ரகாரம் யார் உபா ஸித்து வருகிறார்களோ, அவர்களுக்கு தேவியே ஸ்வப் னத்தில் ப்ரத்யக்ஷமாக ஆகி, ஞான ஸம்பந்தமூர்த்தி முதலானவர்களுக்கு அருள் செய்ததுபோல், கடாக்ஷ தீக்ஷையினால் மோக்ஷஸாதனமான ஜீவப்ரும்ம ஐக்ய ஞானத்தை அந்த ஜீவர்களுடைய மனதில் உதிக்கும் படி செய்து அது மூலமாக ஜீவகோடிகளை முக்தர்களாகவும் கருணையினால் செய்கிறாள். ஆகையால் தேவியினுடைய பாததூளியின் பூஜை முமுக்ஷுக்களுக்கு ரொம்பவும் அவச்யமானது. அந்த மஹிமையைத் தான், இந்த ச்லோகத்தினால் விஷ்ணு வினுடைய வராஹாவதாரத்தை த்ருஷ்டாந்தமாகக் காட்டிச் சொல்லப்பட்டது.

முன்காலத்தில், ஹிரண்யாக்ஷன் என்ற ஒரு அஸு ரனால் பூமாதேவியானவள் அபஹரிக்கப்பட்டு ஸமுத் ரத்தில் மூழ்கடிக்கப்பட்டு பாதாளலோகம் கொண்டு போகப்பட்டாள். அந்தஸமயத்தில், மஹாவிஷ்ணுவா னவர், ஆதிவராஹாவதாரம் செய்து அந்த ஹிரண்யா க்ஷனையும் த்வம்ஸம் செய்து, தனது தெத்திப்பல்லினால் பூமாதேவியையும் எடுத்துக் தூக்கிக்கொண்டுவந்து, யதாபூர்வமாக ஸ்தாபித்து லோகத்திற்கு உபகாரம் செய்தார். இந்தக் கதையானது ஸ்ரீமத் பாகவதம் முதலான க்ரந்தங்களில் ப்ரஸித்தமாக விளங்கும். அதுபோல் ஜீவஸமூஹமானது காமன் என்ற ஹிரண் யாக்ஷனால் அபஹரிக்கப்பட்டு ஸம்ஸார ஸமுத்ரத்தி னுடைய அடிபாகத்திற்கு கொண்டுபோகப்பட்டிருக் கிறது. அந்த விஷயத்தில் தேவியினுடைய பாத தூளியானது, வராஹாவதாரம் செய்த மஹாவிஷ்ணு வினுடைய தெத்திப்பல்போல் விளங்கிவருகிறது என்று சொல்லப்பட்டபடியால், மோக்ஷத்தை யடை

வதற்கு் முமுக்ஷுக்களுக்கு அம்பாளுடைய பாத தூளியே பரம உபாயமாகும் என்பது வெளியாகிறது.

முமுக்ஷுக்களுக்கு மட்டுமல்ல,புபுக்ஷுக்களுக்கும் (போகத்தை இச்சிக்கிறவர்களுக்கும்) தேவியினு டைய பாததூளியேதான் ஸேவிக்கத் தகுந்ததாக ஆகிறது. ஸ்வர்க்கலோகத்தில் சிந்தாமணி என்ற ஒரு ரத்ன விசேஷம் உண்டு. அது தன்னருகில் வந்தவர்க ளுக்கு அளவற்ற பொருளைக் கொடுப்பதோடும்கூட ஒவ்வொரு தினத்திலும் தான் அளவற்ற பொருளை உண்டுபண்ணி, அவ்விதமான பொருளாலேயே அந்த ஸ்வர்க்கத்தை நிறப்பிவிடும். அந்த சிந்தாமணி ரத் னத்திற்கு அவ்வளவு விசேஷமானது சாஸ்த்ரங்களால் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல்தான் தேவேந்த்ர னுக்கும் விசேஷ பெருமை ஏற்படுகிறது. இந்த பூலோகத்தில்கூட ஒரு ஸமயம் "ஸத்ராஜித்" என்ற ஒரு மஹானுபாவன் ஸூர்யனை உபாஸித்து, அந்த உபாஸனுபலமாக சிந்தாமணி என்ற ரத்னஜாதி யில் சேர்ந்த 'ஸ்யமந்தகமணி" என்ற ஒரு ரத்ன விசே ஷத்தை ஸூர்யன் மூலமாக வாங்கிக்கொண்டு, குபேர னுக்கும் குபேரனுக விளங்கிவந்தான். அவனுடைய ஸம்பத்தைப் பார்த்து, லக்ஷ்மீபதியான மஹாவிஷ்ணு வின் திரு அவதாரமாகிய ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மாவுக் குக்கூட ஒரு பெரிய ஆச்சர்யம் உண்டாயிற்று என்று ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த சிந்தாமணி என்ற ரத்ன விசேஷத்திற்கு அவ்வளவு பெருமை உண்டு. அம்பாளுடைய பாததூளியோ, சிந்தாமணி என்ற ரத்ன விசேஷங்களுடைய கூட்ட மாக விளங்கிவருகிறது. ஒன்று, இரண்டல்ல, அநேக சிந்தாமணி ரத்னங்களுக்கு ஸமானமாகும் அம்பா ளுடைய பாததூளி. அதை உபாஸிக்கிறவர்களுக்கு ஸகல ஸௌபாக்யமும் உண்டாகுமென்பதில் ஆக்ஷே பணையே இல்லை. ரொம்பவும் ஏழையான குடும்பி கள் தனது குடும்ப பரணத்திற்காக வீணுக என்னென் னவோ உபாயங்களைச் செய்கிருர்களே! ஏன் வீண்

அந்த கஷ்டம். அவைகளை நிறுத்திவிட்டு, தேவியி னுடைய பாததூளியை விதிவத்தாக பூஜிக்கிறவர் களுக்கு அஷ்டைச்வர்யமும் பொங்கிவரும். இதனுல் புபுக்ஷுக்களுக்கும் அம்பாளுடைய பாததூளி ஐச் வர்யப்ரதம் என்று நன்ருக வெளியாகிறது.

அத்துடன் ப்ராணிகள் கிஞ்சிக்ஞாளாக விளங்கி வருகிருர்கள். சென்ற விஷயங்களையோ, வரும் விஷ யங்களையோ, அறிய சக்தியே யில்லை. அந்த சக்தி இல்லாத காரணத்தால், தான் ஸுகத்தை அடைந்து கொள்வதற்கு எவ்விதமான உபாயத்தை யனுஷ்டிக்க வேண்டுமென்று தெரியாமலேயேகஷ்டப்படுகிருர்கள். ஸுகஸாதனமென்று ஏதோ ஒரு உபாயத்தை அனுஷ்டித்துவருகிருர்கள். அது ஸுகத்தைக் கொடுக்காதபோனுலும், மஹத்தான துக்கத்தைக் கொடுக்கிறது. நாளை இன்னது வரப்போகிறது என்பதை நன்ருகத் தெரிந்துகொண்டால், ப்ராணி களுக்கு எவ்வளவு ஸௌக்யம் ஏற்படும். ஆகையால் சென்ற விஷயங்களையோ, வரும் விஷயங்களையோ, தூரத்திலுள்ள விஷயங்களையோ, ஸமீபத்திலுள்ள வைகளையோ, ஸ்தூல விஷயங்களையோ, ஸூக்ஷ்ம விஷயங்களையோ எல்லா விஷயங்களையும் அறியக் கூடிய சக்தி தனக்கு ஏற்பட்டு, தான் ஸர்வக்ஞனுக ஆகவேண்டும் என்று நினைப்பவனும், அம்பாளுடைய பாததூளியை நன்ருக கைபிடித்துக்கொள்ளவேண் டும். இதனுல் தேவியினுடைய பாததூளியை உபா ஸிப்பவர்களுக்கு ஸர்வக்ஞத்வமும் ஸித்திக்கிறது. எல்லா விஷயத்தையும் அறியக்கூடிய ஞானத்தை, கல்பவ்ருக்ஷத்தினுடைய பூங்கொத்துகள், தேனை ப்ர வாஹிக்கச் செய்வதுபோல், ஆநந்தத்தை ப்ரவாஹிக் கச் செய்யும்படி அம்பாள் அருள் செய்கிருள்.

அத்துடன் மூலாக்ஞான மென்றும், தமஸ் என்றும், மாயை யென்றும், சொல்லப்படுகிற ஒரு பெரிய இரு ளானது. 'ஆத்மாவென்ருல் யார்? ஈச்வரனென்ருல்

யார்? ஈச்வரனுக்கும் ஆத்மாவுக்கும் என்ன ஸம்பந்தம்?' என்ற தத்வங்களை ஜீவகோடிகளுக்குத் தெரியவிடாமல் மறைத்துக்கொண்டு, ஹிம்ஸித்து வருகிறது என்ற விஷயமும் லோகத்தில் ப்ரஸித்தமானது. அந்த அவிவேகமாகிய இருளைப் போக்கடிப்பதில் அம்பாளுடைய பாததூளியானது ஸூர்யன் உதிக்கின்ற ஸமுத்ரத்தினுடைய மத்யப்ரதேசம் மாதிரியாக இருந்து வருகிறது. அதாவது, அம்பாளுடைய பாத தூளியை கைப்பிடித்தவனுக்கு, மாயையாகிற இருள் விலகிப்போய், ஆத்மதத்வம் நன்ருக ப்ரகாசிக்கிறது என்பது வெளியாகிறது. இந்த ஜீவகோடிகளுடைய ஹ்ருதயத்திலுள்ள இருளைப் போக்கடிக்கிற சக்தி யென்பது அம்பாள் ஒருவளுக்குத்தான் உண்டு. இதைத்தான हार्दसंतमसापहा (ஹாதூஸந்தமஸாபஹா) (ஹார்த்தஸந்தமஸாபஹா) என்ற நாமாவினல் ஸ்ரீலலிதாத்ரிசதியில் ப்ரசுரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் மாயையிலிருந்து விலகவேண்டுமானுலும் தேவியினுடைய பாததூளியை ஆச்ரயித்துத்தான் ஆகவேண்டும்.

இதனுல் தேவியினுடைய பாததூளியை முன் சொன்னபடி ஆராதிக்கிறவர்களை பராசக்தியானவள், மாயா பாசத்திலிருந்தும் விடுவித்து, ஸர்வக்ஞத்வ சக்தியையும் கொடுத்து, அகண்டமான ஐச்வர்யத்தையும் கொடுத்து, அமானுஷ்மான திவ்ய போகங்களையும் அனுபவிக்கும்படி செய்துவிட்டு, க்ரமமாக தனது ஸாயுஜ்யம் என்ற கைவல்யத்தையும் கொடுத்து, அனுக்ரஹம் செய்கிருள் என்பது வெளியாகிறது. ஆகையால் தேவியினுடைய பாததூளியை ச்ரேயஸ்ஸை இச்சிக்கிற ஜனங்கள் அவச்யம் ஆராதிக்கவேண்டும் என்பது ஸித்தமாகிறது.

---

## 4. மோக்ஷப்ரதமான பாதக்கமலங்களின் நிகரற்ற சக்தி.

त्वदन्यः पाणिभ्यामभयवरदो दैवतगणः
त्वमेका नैवासि प्रकटितवराभीत्यभिनया ।
भयात्त्रातुं दातुं फलमपि च वाञ्छासमधिकं
शरण्ये लोकानां तव हि चरणावेव निपुणौ ॥ ४ ॥

ஸ்வத₃ந்ய꞉ வாணிஹ்யா உஹயவரதொ₃ தெ₃வதமண꞉
ஸ்வமெகா நெவாஸி ப்ரகடிதவராஹீத்யஹிநயா ।
ஹயாத்ராதும் தா₃தும் ஃலமபி ச வாஞ்சா₂ஸமயிகம்
ஶரண்யெ லொகாநாம் தவ ஹி சரணாவெவ நிபுணௌ

த்வதந்ய: பாணிப்யா மபயவரதோ தைவதகண:
த்வமேகா நைவாஸி ப்ரகடிதவராபீத்யபிநயா ।
பயாத் த்ராதும் தாதும் பலமபிச வாஞ்சாஸமதிகம்
சரண்யே லோகாநாம் தவ ஹி சரணாவேவநிபுணௌ॥4॥

लोकानां (லொகாநாம்) (லோகாநாம்) = ஸகலமான ப்ராணிகளுக்கும்

शरण्ये (ஶரண்யெ) (சரண்யே) = சரணாகதியடையத் தகுந்தவளான (அதாவது ஸர்வ லோகங்களேயும் ரக்ஷிக்கிறவளான)

हे भगवति (ஹெ ஹமவதி) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே!

त्वदन्यः (ஸ்வத₃ந்ய꞉) (த்வதந்ய:) = உன்னைக் காட்டிலும் வேறான

दैवतगणः (ைதவதமணः) (தைவதகண:) = விஷ்ணு, சிவன், ப்ரும்மா முதலான தேவதைகளினுடைய ஸமூஹமானது

पाणिभ्यां (வாணிஹ்யாம்) (பாணிப்யாம்) = கைகளினாலே

अभयवरदः (அஹயவரதஃ) (அபயவரத:) = அபய முத்ரையினால் அபயம் என்ற மோக்ஷத்தையும், வர முத்ரையினால் வரமாகிய போகத்தையும் கொடுக்கிறதாக

भवति (ஹவதி) (பவதி) = ஆகின்றது.

त्वं (க்ஷம்) (த்வம்) = நீயோ

एकैव (ஏகைவ) (ஏகைவ) = ஒருவள்தான்

पाणिभ्यां (வாணிஹ்யாம்) (பாணிப்யாம்) = கைகளினால்

प्रकटितवराभीत्यभिनया (வூகடிதவராஹீத்ய ஹிநயா) (ப்ரகடித வராபீத்யபிநயா) = மோக்ஷத்தையும், போகத்தையும் கொடுக்கும் சக்தியுள்ள முத்ரையை ப்ரகடனம் செய்கிறவளாக ஆகாமலிருக்கிருய்

इति (ஊதி) (இதி) = என்று ஆலோசித்து

तव (தவ) (தவ) = உன்னுடைய

चरणावेव (அரணாவெவ) (சரணாவேவ) = திருப்பாதக் கமலங்களே

भयात् (ஹயாக்) (பயாத்) = ஜன்ம மரண ரூபமான ஸம்ஸார பயத்திலிருந்தும்

त्रातुं (த்ராதும்) (த்ராதும்) = ரக்ஷிப்பதற்கும்
वाञ्छासमधिकं (வாஞ்சாஸமதிகம்) (வாஞ்சாஸமதிகம்) = பக்தனுடைய அபேக்ஷைக்கு அதிகமான
फलं (பலம்) (பலம்) = லாபத்தையும்
दातुमपि (தாதுமபி) (தாதுமபி) = கொடுக்கிறதற்கும்
निपुणौ हि (நிபுணௌ ஹி) (நிபுணௌ ஹி) = ஸாமர்த்ய முள்ளதாக ஆகிறதுகளல்லவா ?
च (ச) (ச) = இந்த வைபவந்தான் மற்ற தேவதைகளைக் காட்டிலும் உனக்குள்ள மஹிமையைய் வெளிப் படுத்துகிறது

தாத்பர்யம் :—ஸாக்ஷாத் பராசக்தி என்ற தேவதையானவள் ஸகலமான ப்ராணிகளுக்கும் மாதாவானதினால் मातृदेवोभव (மாத்ருதேவோபவ) (மாத்ருதேவோபவ) என்ற ச்ருதியை அனுஸரித்து அந்த பராசக்தி என்ற தேவதையானவள் முக்யமான தேவதையாக ஆகிறாள். மற்ற தேவதைகளுக்கு ஸமமாக இந்த பராசக்தியை நினைக்கக்கூடாது. மற்ற தேவதைகளைப் போலவே இந்த பராசக்தியையும் நினைத்துவிட்டால் ஸகலப்ராணிகளையும் ரக்ஷிக்கிற தேவதைகளுக்குள் இந்த தேவதை முக்யமான தேவதை என்று சொல்கிற சாஸ்த்ரங்களெல்லாம் வீணாக ஆகிவிடும். ஆகையால் இந்த தேவதையை ஒரு விசிஷ்டமான தேவதையாகத்தான் ஸர்வவாதிகளும் ஒப்புக்கொள்ளவேண்டி வரும். அதனாலேயே ‘மற்ற தேவதைகளைப்போல் கைகளாலேயே போக மோக்ஷங்களை, வந்த ஜனங்க

ளுக்கு நாமும் கொடுத்தால், மற்ற தேவதைகளைப் போலவேதான் நாமும் ஒரு தேவதை என்று ஆகிவிடுவோம்' என்ற எண்ணத்துடன் 'அவ்விதம் நாமும்செய்வது ஸரியல்ல' என்று தீர்மானித்து, அஸய் (ஊஹயம்) (அபயம்) என்ற மோக்ஷத்தைத்தரும் அபய முத்ரையை வலது கையிலும், வர் (வஈம்) (வரம்) என்ற போகத்தைக் கொடுக்கும் வரமுத்ரையை இடது கையிலும் தரித்துக் கொள்ளாமலேயே பராசக்தியானவள் விளங்கிவருகிருள். பரதேவதையினுடைய பிம்பத்தில், வர, அபய, முத்ரைகள் கைகளில் இராது என்பதை வித்வான்கள் அறிந்துகொள்ளலாம்.

அப்படியிராததற்கு காரணமும், மற்ற 'தேவதைகளைப்போல் தேவியை நினைக்கக்கூடாது; பராசக்தி பரமோத்க்ருஷ்டமான தேவதை; அந்த தேவதைக்கு ஸமானமாக மற்றொருதேவதையுமில்லை; அந்த தேவதைதான் ஸர்வலோகங்களுக்கும் முக்ய சரண்ய தேவதையாக ஆவாள்' என்ற ஸித்தாந்தந்தான் ஆகும்.

இவ்விதம் பராசக்தியானவள் வராபய முத்ரையை கைகளில் தரித்துக்கொள்ளாமலிருப்பதை சில பக்த ஜனங்கள் பார்த்து நாம் என்ன உபாஸித்தாலும் அபயத்தையும், வரத்தையும், தேவி கொடுக்கப்போகிறதே இல்லை. அதை ஸூசிப்பிக்கிற முத்ரைகளைக் கைகளில் காணோமே. ஆகையால் நாம் வீணுகப் பூஜிப்பதில் என்ன பயன்' என்று நினைத்து, சிவ பக்த ஜனங்கள் பராசக்தியினுடைய ஸமாராதனத்திலிருந்து வைமுக்யத்தை (வெறுப்பை) யடைய யத்னம் செய்துகொண்டிருக்கும்பொழுதும், பராசக்தி உதாஸீனமாகவே இருந்துவிட்டாள். அந்த ஸமயம் தேவியினுடைய திருப்பாதங் கமலங்கள் முன்வந்து 'பக்தகோடிகளுக்கு போகாபவர்க்கங்களை நாங்களே தருகிறோம்' என்று கர்ஜித்துவிட்டு, அவ்விதமே பக்த ஜனங்களுக்கு போக மோக்ஷத்தைக் கொடுத்து,

ஸ்ரீவித்யையாகிற பராம்பிகையினுடைய ஸமர்ச்சனத்தில் ப்ராணிகளை ச்ரத்தாபக்தியோடு கூடினவர்களாகச் செய்தன. இதனுல் தேவியினுடைய சரணங்களே போகாபவர்க்கங்களைக் கொடுக்கக் கூடிய சக்தியுள்ளவைகள்; மற்ற தேவதைகள் கைகளால் கொடுக்கும் போகாபவர்க்கங்களை தேவியானவள் தனது திருப்பாதக் கமலங்களால் கொடுத்துவிடுகிருள் என்பதினுலேயே, தேவிதான் பரமோத்க்ருஷ்ட தேவதை என்பது வெளியாகிறது. முமுக்ஷுக்களுக்கோ, காமிகளுக்கோ, முக்த ஜனங்களுக்கோ, அம்பாளுடைய திருப்பாதக் கமலங்கள் தான், எப்பொழுதும் பஜிக்கத் தகுந்த வஸ்துதத்வம் என்பது இந்த ச்லோகத்தால் வெளியாகிறது. தேவியினுடைய சரணங்களின் மஹிமையானது அளவிட முடியாதது என்பது இந்த ச்லோகத்தின் முக்ய கருத்தாகும்.

ஆகையால் ச்ரேயஸ்ஸை விரும்புகிற ஸகலமான ஜனங்களும் பராசக்தினுடைய ஸ்ரீ பாத கமலங்களை பூஜித்து அதிஸுலபமாக ஸகலவிதமான ஸௌபாக்யத்தையும் அடையலாம்.

தேவியினுடைய சரணங்களின் மஹிமையைச் சொல்லும் இந்த ச்லோகமோ, அமானுஷமான திவ்ய போகங்களையும் கொடுத்து க்ரமமுக்தியைக் கொடுக்கும் வல்லமையுள்ளது. ஸுவர்ணத்திலோ, ரஜதத்திலோ, தாம்ரத்திலோ, பூர்ஜபத்ரத்திலோ† யதாசக்தி, ரொம்பவும் பெரியதில்லாமலும், ரொம்பவும் சிறியதில்லாமலும், ஒரு பிந்துவை எழுதி, அந்த பிந்துவை, மேல்பாகத்தில் அஷ்டதளத்தால் அலங்கரித்து, அந்த பிந்துவினுடைய நடுவில் ஒன்றுக்கொன்று பார்வையாக த்ரிகோணங்கள் போட்டு

---

† 'பூர்ஜய்'—ஹிமயமலையின் தாழ்வரையில் இருக்கக்கூடிய ஒரு வ்ருக்ஷத்தின் இலை.

அதன் நடுவில் ஹ்ரீம் (ஹ்ரீம்) (ஹ்ரீம்) என்ற மாயா பீஜத்தை எழுதி, அதில் இந்த ச்லோகத்தாலேயே, ஸ்ரீ தேவியினுடைய பாதாரவிந்தத்தை த்யான ஆவாஹனாதிகளால் ஸ்தாபித்து, ஷோடசோபசார பூஜைகள் செய்து ஒரு மண்டலம் தினந்தோறும், இந்த ச்லோகத்தை 300 ஆவ்ருத்தி ஜபம் செய்து வந்தால், ஸ்வப்னத்தில் பராசக்தியினுடைய தர்சனம் ஏற்பட்டு, அந்த ஸாதகன் ஸர்வ புருஷார்த்தங்களையும் அடைய அர்ஹனாக ஆகிவிடுகிறான். அக்னி ஆதானம் செய்துகொண்ட ஆஹிதாக்னிக்குத்தான் ग्रहमेधीयं, पुत्रकामीयं (க்ருஹமெதீயம், புத்ரகாமீயம்) (க்ரஹமேதீயம, புத்ரகாமீயம்,) முதலான அவாந்தர இஷ்டிகளில் கர்த்ருத்வம் ஏற்படுவதுபோல், ஸ்ரீவித்யோபாஸகர்களான மஹான்களிடத்தில் மந்த்ர தீக்ஷை செய்துகொண்டவர்களுக்குத்தான், ஸௌந்தர்ய லஹரீயில் சொல்லப்படுகிற ப்ரயோகத்தில் அதிகாரம் ஸித்திக்கும் என்பதையும் அறியவும். ச்லோகபாராயணத்தில் மந்த்ரதீக்ஷை வேண்டும் என்ற அவச்யம்கூட இல்லை. பராசக்தியை மனதில் தியானம் செய்துகொண்டு ச்லோகங்களை பாராயணம் செய்துகொண்டு வந்தாலே ஸ்ரீஜகன் மாதாவான தேவியினுடைய அனுக்ரஹம் ஏற்பட்டு ஸர்வ ஸௌபாக்யத்தையும் ப்ராணிகள் அடையலாம் என்பது திண்ணம்.

——:o:——

## 5. பராசக்தி பூஜையின் மஹிமை.

हरिस्त्वामाराध्य प्रणतजनसौभाग्यजननीम्
पुरा नारी भूत्वा पुररिपुमपि क्षोभमनयत् ।
स्मरोऽपि त्वां नत्वा रतिनयनलेह्येन वपुषा
मुनीनामप्यन्तः प्रभवति हि मोहाय महताम् ॥ ५ ॥

𑌹𑌰𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯 𑌪𑍍𑌰𑌣𑌤𑌜𑌨𑌸𑍌𑌭𑌾𑌗𑍍𑌯𑌜𑌨𑌨𑍀𑌮𑍍
𑌪𑍁𑌰𑌾 𑌨𑌾𑌰𑍀 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌰𑌰𑌿𑌪𑍁𑌮𑌪𑌿 𑌕𑍍𑌷𑍋𑌭𑌮
𑌨𑌯𑌤𑍍 ।
𑌸𑍍𑌮𑌰𑍋𑌽𑌪𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌨𑌤𑍍𑌵𑌾 𑌰𑌤𑌿𑌨𑌯𑌨𑌲𑍇𑌹𑍍𑌯𑍇𑌨 𑌵𑌪𑍁𑌷𑌾
𑌮𑍁𑌨𑍀𑌨𑌾𑌮𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑌿 𑌹𑌿 𑌮𑍋𑌹𑌾𑌯
𑌮𑌹𑌤𑌾𑌮𑍍 ॥ ௫ ॥

ஹரிஸ்த்வாமாராத்ய ப்ரணதஜந ஸௌபாக்ய ஜநநீம்
புராநாரீ பூத்வா புரரிபுமபி க்ஷோபமநயத் ।
ஸ்மரோபி த்வாம்நத்வா ரதிநயநலேஹ்யேந வபுஷா
முநீநாமப்யந்த: ப்ரபவதி ஹி மோஹாய மஹதாம் ॥ 5 ॥

| | |
|---|---|
| हे ! भगवति (𑌹𑍇 ! 𑌭𑌗𑌵𑌤𑌿) ஹே! பகவதி) | = ஹே! பராசக்தியான தாயே! |
| प्रणतजनसौभाग्यजननीं (𑌪𑍍𑌰𑌣𑌤𑌜𑌨𑌸𑍌𑌭𑌾𑌗𑍍𑌯𑌜𑌨𑌨𑍀𑌂) (ப்ரணத ஜந ஸௌபாக்ய ஜநநீம்) | = சரீரம், வாக்கு, மனது இந்த மூன்று கரணங்களாலும்பக்தியோடுநமஸ்கரிக்கின்றவர்களுக்கு ஸகலவிதமான ஸௌபாக்யத்தையும் உண்டு பண்ணுகிறவளான |
| त्वां (𑌤𑍍𑌵𑌾𑌂) (த்வாம்) | = உன்னை |
| पुरा (𑌪𑍁𑌰𑌾) (புரா) | = முன்காலத்தில் |
| हरिः (𑌹𑌰𑌿𑌃) (ஹரி:) | = மஹாவிஷ்ணுவானவர் |
| आराध्य (𑌆𑌰𑌾𑌧𑍍𑌯) (ஆராத்ய) | = பூஜை செய்து |
| नारी (𑌨𑌾𑌰𑍀) (நாரீ) | = ஸ்த்ரீ ரூபமாக |
| भूत्वा (𑌭𑍂𑌤𑍍𑌵𑌾) (பூத்வா) | = ஆகி |

पुररिपुमपि (வ¬ஶரிவ¬ஃவி) (புராிபுமபி) = த்ரிபுராஸுரனைக் கொன்ற பரமேச்வரனைக்கூட

क्षोभं (க்ஷோஹ°) (க்ஷோபம்) = மனோவிகாரத்தை

अनयत् (ஃநயக) (அநயத்) = அடையும்படி செய்தார்;

स्मरोपि (ஸ்ஶரொவி) (ஸ்மரோபி) = மன்மதனும்

त्वां (க்ஷா°) (த்வாம்) = உன்னை

नत्वा (நக்ஷா) (நத்வா) = நமஸ்கரித்து

रतिनयनलेह्येन (ரதிநயநலெஹ்யேந) (ர்திநயநலேஹ்யேந) = ரதி யென்ற தன்னுடைய மனைவியோ, அல்லது, ரொம்பவும் ஸுந்தரியான ஸ்த்ரீகளோ அவர்களுடைய கண்களால் ஆஸ்வாதிக்கத் தகுந்த (அநுபவிக்கத் தகுந்த)

वपुषा (வவுஷா) (வபுஷா) = சரீரத்தால்

महतां (ஶஹதா°) (மஹதாம்) = மஹான்களான

मुनीनामपि (ஶுநீநாஶவி) (முநீநாமபி) = மஹரிஷிகளுக்குங்கூட

अन्त: (ஃஞ:) (அந்த:) = மனதில்

मोहाय (ஶொஹாய) (மோஹாய) = மோஹத்தை உண்டு பண்ணுவதற்கு

प्रभवति हि (ஶ்ரஹவதி ஹி) (ப்ரபவதி ஹி) = ஸமர்த்தனாகிறானல்லவா!

தாத்பர்யம்:—இந்த ச்லோகத்தால் அம்பாள் நித்ய ஸாந்நித்யத்தை அடைந்திருக்கும் ஸ்ரீசக்ரத்தின் பூஜையையும், அம்பாளுடைய பரதத்வத்தை விளக்குகிற பஞ்சதசீ முதலான மஹா மந்த்ரங்களுடைய ஜபத்தின் மஹிமையும் சொல்லப்படுகிறது. முன் காலத்தில் மஹாவிஷ்ணுவானவர் மோஹினீ ரூபத்தைத் தரித்துக்கொண்டு ஸ்த்ரீயாக விளங்கி வந்தார் என்பதை புராணக் கதை மூலமாக அறிந்துகொள்ளலாம். அதாவது பரமேச்வரன் த்ரிபுராஸுரனை ஸம்ஹாரம் செய்து லோகத்திற்கு நன்மையைச் செய்த காலத்தில், த்ரிபுராஸுரனைச் சேர்ந்த அஸுர ஜனங்கள், அந்த பரமேச்வரனை ஜயிக்க என்ன உபாயம் என்பதை ஆலோசித்தார்கள். பிறகு அந்த அஸுரர்கள் வைகுண்டத்திற்கதிபதியான மஹாவிஷ்ணுவை சரணமடைந்து பரமசிவனுடைய கோபத்தைத் தணித்து தங்கள் வம்சத்தை ரக்ஷிக்கவேண்டுமாய்ப் ப்ரார்த்தித்துக் கொண்டார்கள். மஹாவிஷ்ணுவும் அந்தப் ப்ரார்த்தனைக் கிணங்கி பரமசிவனை எவ்விதம் சாந்தமூர்த்தியாகச் செய்யலாம் என்று ஆலோசித்துக் கொண்டிருக்கும் ஸமயத்தில் யத்ருச்சையாக நாரதர் அங்கு வந்து சேர்ந்தார். நாரதர் வந்தவுடன் மஹாவிஷ்ணுவும் அவரை வரவேற்றுவிட்டு தனது ஆஸனத்தில் உட்கார்ந்தார். ஆனல் மஹாவிஷ்ணுவினுடைய முகத்தில் அவ்வளவாக களையைக் காணவில்லை. அதை பார்த்த நாரதர் "ஹே ப்ரபோ! தங்களுக்குக்கூட மனக்கவலை ஏதோ இருப்பதாகத் தெரிகிறதே. அதற்குக் காரணம் என்ன" என்று கேட்டார். நாரதருடைய வார்த்தையைக் கேட்ட மஹாவிஷ்ணுவும், 'மஹர்ஷே! த்ரிபுராஸுரனைக் கொன்றுவிட்ட பரமசிவனுடைய கோபம் இன்னும் அடங்கவில்லையாம். அந்த அஸுரனுடைய வம்சத்தில் பிறந்தவர்கள் 'பரமசிவனல் தங்கள் குலக்ஷயமே ஏற்பட்டுவிடுமோ,' என்று அஞ்சி என்னிடம் சரணமடைந்தார்கள். நான் அவர்களுக்கு அபயப்ரதான

மும் செய்துவிட்டேன். ஆகிலும், அந்த பரமேச்வரனை சாந்தமூர்த்தியாகச்செய்வதில் உபாயம் இன்னதென்று தெரியாமல் கவலையை அடைந்து வருகிறேன்'' என்று சொன்னார். நாரத மஹர்ஷியும் மந்தஹாஸம் செய்துகொண்டு, ''மஹாவிஷ்ணோ! கவலையை அடையவேண்டாம். அம்பாளுடைய அனுக்ரஹத்தை யடைந்துவிட்டால் ஸகலகார்யமும் நிறைவேறிவிடும். ஆகையால் ஸ்ரீதேவியினுடைய மஹாமந்த்ர ஜபமும், ஸ்ரீசக்ர பூஜையும் செய்துவந்தால் பரமசிவனையும் மோஹிக்கச் செய்துவிடலாம். அவ்விதமாகச் செய்யும் பூஜைக்கு ப்ரயோக பாரிஜாத க்ரந்தரீதியாக 'மனஸ்ஸம்க்ஷோபணம்' என்று பெயர் ஏற்பட்டது. ஆகையால் தாங்கள் அதை அனுஷ்டித்து வரவேண்டும்'' எமென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். மஹாவிஷ்ணுவோ அதுமுதல் அந்த பூஜாக்ரமங்களையும் மஹா மந்த்ரத்தையும் தனக்கு உபதேசிக்கும் ஆசார்ய புருஷனை ஆவலுடன் எதிர்பார்த்திருக்க ஸாக்ஷாத்பராசக்தியான பரதேவதையே மஹாவிஷ்ணுவுக்கு ப்ரத்யக்ஷமாக ஆவிர்பவித்து ''பஞ்சதசீ'' என்ற மஹாமந்த்ரத்தையும் ஸ்ரீசக்ர பூஜாக்ரமங்களையும் உபதேசித்தாள். அதை ஸித்தி பண்ணிவந்த மஹிமையினால் மஹாவிஷ்ணுவுக்கு தான் நினைத்த மாத்ரத்தில் எந்த ரூபத்தை வேண்டுமென்றாலும் எடுத்துக்கொள்ளும்படியான சக்தி ஏற்பட்டுவிட்டது. அதனால் மஹாவிஷ்ணு திவ்யமான ஸ்த்ரீ ரூபத்தைத் தரித்துக்கொண்டு தேவர்களும் அஸுரர்களும் அம்ருதமதனம் செய்த காலத்திலும் அஸுரர்களை வ்யாமோஹிக்கச் செய்தார்.

இந்த விஷயம் பரமேச்வரனுடைய காதில் எட்டி அவரும் மஹாவிஷ்ணுவினுடைய ஸ்த்ரீ ரூபத்தைத் தான் பார்க்கவேண்டுமென்ற ஆசையுடன் இருந்து வந்தார். அதையறிந்த மஹாவிஷ்ணுவும் திவ்யமான ஸ்த்ரீ ரூபத்தைத் தரித்துக்கொண்டு த்ரிபுராஸுரனை எதிர்த்த பரமேச்வரனைக்கூட வ்யா

மோஹப்படுத்தி இந்திரியம் ஸ்கலிக்கும்படியாகச் செய்துவிட்டார். மன்மதனையும் சாம்பலாக்கின பரம சிவனுக்கு ஸ்த்ரீ விஷயமான காமனை ஏற்பட ந்யாய முண்டா? ஆகிலும் ப்ரக்ருதத்தில் பரமேச்வரன் விஷ்ணுவினுடைய மோஹினீ வேஷத்தைப் பார்த்து மோஹத்தையடைந்தார் என்பதில் தேவியினுடைய பூஜாவைபவமே காரணமாகும். ஆகையால் ஸர்வ ஜனங்களையும் வசீகரணம்செய்து தனக்கு அநுகூல மாகவே எம்பொழுதும் லோகம் இருந்துவரும்படி செய்துகொள்ளுவதில் ஸ்ரீவித்யையினுடைய உபா ஸனம்தான் முக்யமான உபாயமாகும் என்று தெரி கிறது.

விஷ்ணுமாத்ரமல்ல, அம்பாளை உபாஸிக் கிற புண்யவான்களுக்குள் மன்மதனும் ஒருவனு வான். அந்த மன்மதனும் முன்காலத்தில் ஸ்ரீசக்ரத்தை பூஜைசெய்தும் மூலவித்யையான "பஞ்சதசீ"யை ஜபம் செய்தும் அளவிடமுடியாததான ஸௌந்தர் யத்தை அடைந்தான். ஸுந்தரிகளான ஸ்த்ரீகளுக் கும் தன் மனைவியான ரதிதேவிக்குங்கூட ஆச்சரியப் படத்தகுந்ததாயும் விழித்த கண்களால் எப்பொழு தும் பார்த்துக்கொண்டே யிருக்க வேண்டுமென்று தோன்றுகிறதாயுமுள்ள ஸௌந்தர்யத்தை அடைந்த வனாகக் கொண்டு உலகமே தன்னு வசப்படும்படி செய்து கொண்டான். ஜிதேந்த்ரியர்களான மஹர் ஷிகளுக்கும் மனதில் விஷயாபிலாஷையை உண்டு பண்ணுவதில் சக்தியுள்ளவனாகவும் ஆகிவிட்டான். இதனால் பொதுவாக ப்ராணிகளுக்கு எந்த மனிதனிட மாவது நாளுக்கு நாள் ப்ரீதி அதிகரித்து அந்த மனிதனுடைய விஷயத்தில் தங்கள் மனதிற்கு பெரிய வ்யாமோஹமும் ஏற்பட்டு 'ஸர்வ ஸொத்தையும் அந்த மனிதனுக்கு நாம் அர்ப்பணம் செய்துவிட வேண்டும், அவனுக்கு நாம் கிங்கரனாக இருக்க வேண்டும்' என்ற எண்ணமும் த்ருடமாக ஏற்படு மானால் அதற்கு அந்த மனிதனிடத்திலுள்ள தேவீ

யின் ப்ரஸாதம்தான் முக்ய காரணம் என்பதை அறியவும்.

அவ்விதம் தேவியினுடைய ப்ரஸாதத்தை அடைவதற்கோ மூலவித்யாமந்த்ரஜபமும் ஸ்ரீசக்ரஸமாராதனமும்தான் முக்யமான காரணமாக ஆகும். ஆகையால் பூலோகத்தில் உத்தமமான மானிட ஜன்மாவையடைந்த புண்ய ஜனங்கள் ஸ்ரீவித்யை என்ற ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரி என்ற மஹா மந்த்ரத்தை பெரியோர்கள் முகமாக உபதேசித்துக்கொண்டு ஸ்ரீ சக்ரத்தில் சுத்த சக்தியை கௌலாசார விதானப்படி ஸ்ரீசக்ரத்தையும் ஆராதித்து தேவியினுடைய ப்ரஸாதத்தை அடையவேண்டும். இந்த ப்ரயோகத்திற்கு ஸர்வ வசீகரம் என்றும் ஸர்வ ஸம்க்ஷோபகரம் என்றும் பெயர் உண்டு. மஹாவிஷ்ணுவும், மன்மதனுமே தேவியை ஆராதிப்பார்களேயானல் ஸாமான்யமான மனிதர்களுக்கு தேவியினுடைய ஆராதனம் முக்யமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஆகையால் ஜனங்கள் ஸ்ரீசங்கரபகவத் பாதாளால் இயற்றப்பட்ட "ஸௌந்தர்ய லஹரீ" என்ற மஹாப்ரபந்தத்திலுள்ள हरिस्त्वां आराध्य (ஹரிஸ்த்வாம் ஆராத்ய) (ஹரிஸ்த்வாம் ஆராத்ய) என்ற ச்லோகத்தின் உண்மையை அறிந்துகொண்டு, அதை அவ்விதமே அனுஷ்டித்து தேவியினுடைய கடாக்ஷத்திற்கு பாத்ரர்களாக ஆகி ஸர்வ ஸௌபாக்யத்தையும் அடைவார்களாக.

---

## 6. கடைக்கண்ணின் கருணை.

धनुः पौष्पं मौर्वी मधुकरमयी पञ्च विशिखाः
वसन्तः सामन्तो मलयमरुदायोधनरथः ।
तथाप्येकः सर्वं हिमगिरिसुते कामपि कृपां
अपाङ्गात्ते लब्ध्वा जगदिदमनङ्गो विजयते ॥ ६ ॥

𑌧𑌨𑍁𑌃 𑌪𑍌𑌷𑍍𑌪𑌂 𑌮𑍌𑌰𑍍𑌵𑍀 𑌮𑌧𑍁𑌕𑌰𑌮𑌯𑍀 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌶𑌿𑌖𑌾𑌃
𑌵𑌸𑌨𑍍𑌤𑌃 𑌸𑌾𑌮𑌨𑍍𑌤𑍋 𑌮𑌲𑌯𑌮𑌰𑍁𑌦𑌾𑌯𑍋𑌧𑌨𑌰𑌥𑌃 ।
𑌤𑌥𑌾𑌪𑍍𑌯𑍇𑌕𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌹𑌿𑌮𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇 𑌕𑌾𑌮𑌪𑌿 𑌕𑍃𑌪𑌾𑌂
𑌅𑌪𑌾𑌙𑍍𑌗𑌾𑌤𑍍𑌤𑍇 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌜𑌗𑌦𑌿𑌦𑌮𑌨𑌙𑍍𑌗𑍋 𑌵𑌿𑌜𑌯𑌤𑍇 ॥௬॥

தநு: பௌஷ்பம் மௌர்வீ மதுகரமயீ பஞ்சவிசிகா:
ஸஸந்த: ஸாமந்தோ மலயமரூதாயோ தநரத: ।
ததாப்யேக: ஸர்வம் ஹிமகிரிஸுதே காமபி க்ருபாம்
அபாங்காத்தே லப்த்வா ஜகதிதமநங்கோ விஜயதே ॥ 6 ॥

हे! हिमगिरि सुते (𑌹𑍇! 𑌹𑌿𑌮𑌗𑌿𑌰𑌿 𑌸𑍁𑌤𑍇) (ஹே! ஹிமகிரி ஸுதே) = பர்வத ராஜனான ஹிமவானின் பெண்ணான ஹே பராசக்தியே!

यस्य (𑌯𑌸𑍍𑌯) (யஸ்ய) = எந்த மன்மதனுக்கு

धनुः (𑌧𑌨𑍁𑌃) (தநு:) = வில்லானது

पौष्पं (𑌪𑍌𑌷𑍍𑌪𑌂) (பௌஷ்பம்) = புஷ்பமாக இருக்கின்றதோ,

मौर्वी (𑌮𑍌𑌰𑍍𑌵𑍀) (மௌர்வீ) = வில்லை வளைக்கும் நாணானது

मधुकरमयी (𑌮𑌧𑍁𑌕𑌰𑌮𑌯𑍀) (மதுகரமயீ) = வண்டுகளின் வரிசையாக இருக்கின்றதோ,

विशिखाः (𑌵𑌿𑌶𑌿𑌖𑌾𑌃) (விசிகா:) = பாணங்கள்

पञ्च (𑌪𑌞𑍍𑌚) (பஞ்ச) = ஐந்துகள் தானே.

सामन्तः (𑌸𑌾𑌮𑌨𑍍𑌤𑌃) (ஸாமந்த:) = மந்த்ரியானவன்

वसन्तः (𑌵𑌸𑌨𑍍𑌤𑌃) (வஸந்த:) = வஸந்த ருதுவோ,

आयोधनरथः (𑌆𑌯𑍋𑌧𑌨𑌰𑌥𑌃) (ஆயோதநரத:) = யுத்தத்துக்கு ஏற்பட்ட ரதமானது

मलयमरुत् (𑌮𑌲𑌯𑌮𑌰𑍁𑌤𑍍) = மலய பர்வதத்தின்
(மலயமருத்) காற்ரே

तथापि (𑌤𑌥𑌾𑌪𑌿) (ததாபி) = அப்படியிருந்தாலும்

स: अनङ्ग: (𑌸𑌃 𑌅𑌨𑌙𑍍𑌗𑌃) = அந்த மன்மதனுனவன்
(ஸ: அநங்க:)

एक: (𑌏𑌕𑌃) (ஏக: = ஸகாயமில்லாதவனுய்

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

अपाङ्गात् (𑌅𑌪𑌾𑌙𑍍𑌗𑌾𑌤𑍍) = கடைக்கண்ணிலிருந்து
(அபாங்காத்)

कामपि (𑌕𑌾𑌮𑌪𑌿) (காமபி) = வர்ணிக்க முடியாததான

कृपां (𑌕𑍃𑌪𑌾𑌂) (க்ருபாம்) = தயையை

लब्ध्वा (𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾) (லப்த்வா) = அடைந்து

सर्वं (𑌸𑌰𑍍𑌵𑌂) (ஸர்வம்) = ஸமஸ்தமான

इदं (𑌇𑌦𑌂) (இதம்) = இந்த

जगत् (𑌜𑌗𑌤𑍍) (ஜகத்) உலகத்தை

विजयते (𑌵𑌿𑌜𑌯𑌤𑍇) = ஜயிக்கின்ருன்
(விஜயதே)

தாத்பர்யம் :—இந்த ச்லோகத்தால் சொல்லப் படும் வித்யைக்கோ, 'அனங்கவித்யை' எனப் பெயர். இந்த வித்யைக்கு மன்மதனே ரிஷியாக ஆகுவான். இந்த ச்லோகத்தில் சொல்லப்படும் வித்யையை உபா ஸித்துத்தான் மன்மதனுனவன், பரமசிவனுல் எரிக் கப்பட்ட சரீரத்தோடு கூடினவனுக இருந்தாலும், லோக முழுமையையும் தன் வசமாக்கிக்கொண்டு ஸர் வோத்க்ருஷ்டனுக விளங்கிவருகிருன். சங்கரபகவத் பாதாள் என்ற பரமாசார்யாளோ அம்பாளை ஸ்துதிக் கும்பொழுது அம்பாளுடைய கருணுகடாக்ஷத்தினு

டைய பெருமையை விளக்குகிருர்."பர்வதராஜனுக்கு தத்வோபதேசம் செய்வதற்காக அந்த ராஜனுடைய புத்ரி என்ற வ்யாஜத்தால் மங்கள விக்ரஹத்தோடு, ஸகுணமாக பாஸித்துவருகிற ஹே பராசக்தியே! ஹே! தாயே! உன்னுடைய கடாக்ஷ வீக்ஷணம் எந்த புண்ய புருஷனிடத்தில் வீழ்கிறதோ, அந்த புண்ய புருஷனுடைய வசமாகவே ஸகல ஜகத்தும் இருந்துவருகிறதம்மா. அதன் பெருமையை யாரால் வர்ணிக்க முடியும்! அந்த வைபவத்தை தற்காலத்தில் அனுபவித்துவருகிறவன் மன்மதன் ஒருவனே. அந்த மன்மதனே பரமசிவனுடைய நெற்றிக்கண்ணுல் எரிக்கப்பட்டு சரீரமில்லாதவனுக ஆகிவிட்டான். சரீரமில்லாதபோனுலும், அனங்கனுகவே அவன் ஜீவிக்கும்படி அவனுடைய தர்மபத்னியாகிய ரதிதேவியின் ப்ரார்த்தனேக்கு இணங்கி பரமசிவன் அனுக்ரஹம் செய்தார். அந்த பரமசிவனுடைய அனுக்ரஹத்தால் மன்மதன் அனங்கனுகவே இருந்துவருகிருன். ஆகிலும் ஸகலமான லோகமும் அவனுடைய வசத்தில்தான் இருந்துவருகிறது. எவ்விதமான ஜிதேந்த்ரியர்களான மஹரிஷிகள்கூட மன்மதனுடைய வசமாகத்தானிருந்து வருகிருர்கள். அப்படி லோகங்களே ஜயிக்கும்படியான உபகரணங்கள் ஏதாவது அவனிடம் இருக்குமோவென்ருல் ஒன்றுமில்லே. சரீரமேயில்லே. எவ்விதம் யுத்தம் செய்யமுடியும்! அத்துடன், அந்த மன்மதனுக்கு புஷ்பமே வில்லென்றும் ப்ரஸித்தமானது. புஷ்பத்தை கையினுல் தொட்டாலேயே வாடிவிடும். அதை வளேக்கிறதோ, அதில் பாணத்தை ஸந்தானம் செய்கிறதோ, அதனுல் ஒரு சத்துருவை ஜயிக்கிறதோ, இவைகளெல்லாம் ஸாத்யமாகுமா? அத்துடன் வில்லே வளேக்கும் நாண் கயிருே புஷ்பரஸத்தை அபஹரிக்கும் வண்டுகளுடைய பங்க்திகளாகவும் தெரிகிறது. வரிசையாக உட்கார்ந்துகொண்டிருக்கும் வண்டுகளே நம்பி ஒரு கார்யம் செய்யமுடியுமா? பாணங்களோ, தாமரைப் புஷ்பம் முதலான ஐந்து

புஷ்பங்களேதான் ஆகும். புஷ்பங்களை ஒரு மனிதன் சரீரத்தில் விட்டால் அது வ்யதையை உண்டுபண்ணுமா? அதிலும் ஐந்து பாணங்கள்தான். ஐந்தையும் ப்ரயோகம் செய்துவிட்டால் ஆருவது பாணமோ யில்லை. மந்த்ரியோ வஸந்த ருதுவாகத் தெரிகிறது. இந்த ருதுகாலம் விசேஷமானதினுல், காலத்திற்கு ரூபமில்லாததினுல், ரூபரஹிதமான காலத்தில் எதுதான் செய்யமுடியும்? யுத்த யாத்ரைக்காக ஏற்பட்ட ரதமோ மலயபர்வதத்தின் காற்ருகிறது. வாயுவுக்கும் ரூபம் இல்லை. ரூபமில்லாத வாயுவை வைத்துக்கொண்டு என்னதான் செய்யமுடியும்? ஸஹாயமான வேறு மனுஷ்யன் யாராவது உண்டோ என்ருல் அதுவுமில்லை. இவ்விதம் யுத்த ஸாதனமான உபகரணங்களுக்குள் யாதொன்றும் இல்லாதவனுக இருந்தாலும், ஸமஸ்தமான லோகங்களையும் தன்வசமாக்கிக்கொண்டு ஸர்வோத்க்ருஷ்டனுக அந்த மன்மதன் விளங்குகிருன். அதற்குக் காரணமோ, உன்னுடைய க்ருபாகடாக்ஷந்தான். ஏதோ இவ்வளவுதான் என்று சொல்லமுடியாத உன் கடைக்கண்ணிலிருந்து ஒரு க்ருபையை அவன் அடைந்திருக்கிருன்.

ஹேதாயே! உன் கடாக்ஷத்திற்கு பாத்ரபூதனுக ஆகிவிட்டால், அந்த மனிதனுக்கு எதுதான் துர்லபமாகும்? எல்லாம் அவனுக்கு ஸுலபந்தான். அந்த மஹிமையினுல்தான் மன்மதனுனவன் லோகமுழுமையிலும் ஜயபேரிகை அடித்துக்கொண்டு விளங்கிவருகிருன். உன் கடாக்ஷத்தின் பெருமையை யாரால் அறிய முடியும்?" என்று அம்பாளுடையகடாக்ஷ பாதத்தின் மஹிமையை பரமாச்சார்யாள் இந்த ச்லோகத்தால் வெளியிடுகிருர்கள். இந்த ச்லோகத்தால் மாதன ப்ரயோகமானது சொல்லப்படும் இந்த ப்ரயோகத்தை அனுஷ்டித்து வருகிறவனுக்கு அம்பாளுடைய கருணு கடாக்ஷம் ஏற்படுமென்பது ஸித்தம். ஷட்கோண யந்த்ரத்தை தங்கத் தகட்டிலோ, வெள்ளியிலோ, தாம்ரத்திலோ, அல்லது பூர்ஜர பத்ரத்

திலோ எழுதி, அதன் நடுவில் காமராஜ பீஜத்தையும் எழுதி, எந்த ஸாதகனானவன் சிகப்பு அரளிப் புஷ்பங்களால் மூலமந்த்ரத்தைச் சொல்லி த்யான, ஆவாஹனாதி ஷோடசோப்சார பூஜைகளைச் செய்து, மதுவை நிவேதனம் செய்து, ஒவ்வொரு தினமும் ரிஷி. சந்தஸ், தேவதை, அங்கந்யாஸம், கரந்யாஸம், த்யான ச்லோகங்கள், பஞ்சமுத்ரை, பஞ்சபூஜை இவைகளைச் செய்துவிட்டு, ஆயிரம் தடவைகள் இந்த धनुः पौष्पं मौर्वी (𑌧𑌨𑍁𑌃 𑌪𑍌𑌷𑍍𑌪𑌂 𑌮𑍌𑌰𑍍𑌵𑍀) (தநு: பௌஷ்பம் மௌர்வீ) என்ற ச்லோகத்தை ஆவர்த்தி செய்துகொண்டு ஒரு மண்டலம் அம்பாளை ஆராதித்து வந்தால், ஜாக்ரத்திலேயே தேவி கடாக்ஷ பாத்ரபூதனாக ஆகி, அந்த ஸாதகன் ஸகல ஜகத்தையும் தன்வசமாக்கிக்கொள்ளலாம். மன்மதனுக்கு ஸமானமான மஹிமையுள்ளவனாகவும் ஆவான். இந்த வித்யைக்கு 'மன்மத ப்ரஸ்தாரம்' என்றே பெயராகும். மன்மதனையே ரிஷியாகவும் தேவி காயத்ரியை சந்தஸ்ஸாகவும், ராஜ ராஜேச்வரியை தேவதையாகவும் அறிந்துகொள்ளவேண்டும். பஞ்சதசீ வித்யையினால் பீஜ, சக்தி, கீலகம், அங்கந்யாஸ கரந்யாஸத்தைச் செய்யவும். பஞ்சதசீ வித்யையினுடைய த்யான ச்லோகமே இதற்கும் த்யான ச்லோகமாகும். இந்த தத்வங்களை மஹா குருவினிடம் உபதேசம் செய்து கொண்டு குரு கடாக்ஷத்தை முன்பாக அடைந்து, விதிப்ரகாரம் இந்த ப்ரயோகத்தை அனுஷ்டித்துவரும் ஸாதகனுக்கு அம்பாளுடைய கடாக்ஷ வீக்ஷணம் ஏற்பட்டு, மன்மதனைப்போல் ஸர்வவிதமான ஸௌபாக்யத்திற்கும் அந்த ஸாதகன் பாத்ரனாக ஆகிறான் என்பது நிச்சயம்.

---

## 7. பராசக்தியின் ரூப வர்ணனம்

क्वणत्काञ्चीदामा करिकलभकुम्भस्तननता
परिक्षीणा मध्ये परिणतशरच्चन्द्रवदना ।
धनुर्बाणान्पाशं सृणिमपि दधाना करतलैः
पुरस्तादास्तां नः पुरमथितुराहोपुरुषिका ॥ ७ ॥

𑌕𑍍𑌵𑌣𑌤𑍍𑌕𑌾𑌞𑍍𑌚𑍀𑌦𑌾𑌮𑌾 𑌕𑌰𑌿𑌕𑌲𑌭𑌕𑍁𑌮𑍍𑌭𑌸𑍍𑌤𑌨 𑌨𑌤𑌾
𑌪𑌰𑌿𑌕𑍍𑌷𑍀𑌣𑌾 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑌰𑌿𑌣𑌤𑌶𑌰𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑌦𑌨 ।
𑌧𑌨𑍁𑌰𑍍𑌬𑌾𑌣𑌾𑌨𑍍𑌪𑌾𑌶𑌂 𑌸𑍃𑌣𑌿𑌮𑌪𑌿 𑌦𑌧𑌾𑌨𑌾 𑌕𑌰𑌤𑌲𑍈𑌃
𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌦𑌾𑌸𑍍𑌤𑌾𑌂 𑌨𑌃 𑌪𑍁𑌰𑌮𑌥𑌿𑌤𑍁𑌰𑌾𑌹𑍋
𑌪𑍁𑌰𑍁𑌷𑌿𑌕𑌾 ॥ ௭ ॥

க்வணத் காஞ்சீதாமா கரிகலப கும்பஸ்தந நதா
பரிக்ஷீணமத்யே பரிணத சரச்சந்த்ரவதநா ।
தநுர் பாணாந் பாசம் ஸ்ருணிமபி ததாநா கரதலை:
புரஸ்தாதாஸ்தாம் ந: புரமதிதுராஹோபுருஷிகா ॥ 7 ॥

क्वणत्काञ्चीदामा (𑌕𑍍𑌵𑌣𑌤𑍍𑌕𑌾𑌞𑍍𑌚𑍀𑌦𑌾𑌮𑌾) (க்வணத்காஞ்சிதாமா) = சப்திக்கின்ற தங்கச் சலங்கைகளோடு கூடிய ஒட்யாணத்தால் அலங்கரிக்கப்பட்டவளாயும்,

(करिकलभकुंभस्तननता (𑌕𑌰𑌿𑌕𑌲𑌭𑌕𑍁𑌂𑌭𑌸𑍍𑌤𑌨𑌨𑌤𑌾) (கரிகலபகும்பஸ்தநநதா) = மதம்பிடித்த யானைக் குட்டியின் கும்பம் (தலைப்ரதேசம்) போல் பெருத்ததான குசபாரத்தால் கொஞ்சம் குனிந்து நிற்கிறவளாயும்,

मध्ये (𑌮𑌧𑍍𑌯𑍇) (மத்யே) = இடுப்பு ப்ரதேசத்தில்

परिक्षीणा (𑌪𑌰𑌿𑌕𑍍𑌷𑍀𑌣𑌾) (பரிக்ஷீணா) = க்ருசமானவளாயும்,

परिणतशरच्चन्द्रवदना (𑌪𑌰𑌿𑌣𑌤𑌶𑌰𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑌦𑌨𑌾) (பரிணதசரச்சந்த்ரவதநா) = பரிபூர்ணமான சரத்கால சந்த்ர மண்டலம் போல் உள்ள முகத்தோடு கூடினவளாயும்,

धनुः (𑌧𑌨𑍁𑌃) (தநு:) = கரும்பு வில்லையும்

बाणान् (𑌬𑌾𑌣𑌾𑌨𑍍) (பாணாந்) = புஷ்பபாணங்களையும்

पाशं (𑌪𑌾𑌶𑌂) (பாசம்) பாசக்கயிற்றையும்

सृणिमपि (𑌸𑍃𑌣𑌿𑌮𑌪𑌿) (ஸ்ருணிமபி) = ஈட்டியையும்

करतलैः (𑌕𑌰𑌤𑌲𑍈𑌃) (கரதலை:) = நான்கு கைகளால்

दधाना (𑌦𑌧𑌾𑌨𑌾) (ததாநா) = தரித்துக் கொண்டிருக்கிறவளாயும் உள்ள,

पुरमथितुः (𑌪𑍁𑌰𑌮𑌥𑌿𑌤𑍁𑌃) (புரமதிது:) = த்ரிபுராந்தகனான பரம சிவனுடைய

आहोपुरुषिका (𑌆𑌹𑍋𑌪𑍁𑌰𑍁𑌷𑌿𑌕𑌾) (ஆஹோ புருஷிகா) = அஹங்கார ரூபிணியான பரதேவதையானவள்

नः (𑌨𑌃) (ந:) = எங்களுக்கு

पुरस्तात् (𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍) (புரஸ்தாத்) = முன்பாகவே

आस्तां (𑌆𑌸𑍍𑌤𑌾𑌂) (ஆஸ்தாம்) = இருக்கட்டும் (விளங்கி விலாஸம் செய்யவேண்டும்)

தாத்பர்யம் :—ஸ்ரீவித்யாதந்த்ரத்தில் ஸமயம், கௌலம் என்று இரண்டுவித ஆசாரம் உண்டு. பாஹ்ய பூஜையை அவலம்பித்த மஹான்களை கௌலாசாரத்தை கைகொண்டவர்களென்றும், ஆந்தரமான பராசக்தியினுடைய த்யானத்தில் ஈடுபட்டவர்களை ஸமயாசாரத்தைக் கைகொண்டவர்களென்றும், சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த ஸமயத்தை அனுஸரித்து. सुधासिन्धु (സുധാസിന്ധു) (ஸுதாஸிந்து) என்ற சப்தத்தால் சொல்லப்படுகின்ற ப்ரும்மரந்த்ரத்தில் பரதேவதையினுடைய த்யானத்தை நிரூபணம் செய்கிற எட்டாவது ச்லோகத்திற்கு உபயோகியாக இந்த ச்லோகத்தில் मणिपूरक (മണിപൂരകം) (மணிபூரகம்) என்ற ஸ்தானத்திலிருந்து, हृदयकमल (ഹൃദയകമല) (ஹ்ருதயகமல) மத்தியில், த்வம் பதத்தின் லக்ஷ்யார்த்தமாகிய ப்ரத்யகாத்மாவுக்கு எதிராக ஸாக்ஷாத் பரதேவதையானவள் ப்ரகாசிக்கட்டும், என்று ஸாதகர்கள் அம்பாளை ப்ரார்த்திக்கின்றனர்கள்.

இந்த சரீரத்திற்குள் மூலாதாரம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை, ப்ரும்மரந்த்ரம் என்று சில உத்தமமான ஸ்தானங்கள் சக்ராகாரங்களாக ஸுஷும்ன நாடியை ஆச்ரயித்து விளங்கிவருகின்றன. அந்த சக்ரங்களுக்குள், மணிபூரகம் என்பது. த்ரிபுராந்தகன் என்று ப்ரஸித்தி பெற்ற மஹாகாமேச்வரனுடைய ஸ்தானமாகும். அந்த மணிபூரகத்தில் காமேச்வரனுடைய ஸ்வரூபத்திற்கு வேறுபடாததான ஸ்வரூபத்தோடு ஜகதீச்வரியானவள் விளங்கிவருகிறாள். இந்த அவஸரத்தில் அம்பாளுடைய ஸ்வரூபம் எவ்விதமென்பதை உபாஸகர்கள் அறிந்து த்யானம் செய்யவேண்டும்.

ஜகதீச்வரியான பராசக்தியானவள் நித்யயுவதியான ஸ்வரூபத்தோடு விளங்கிவருகிறாள். அநேக

விதமான ரத்னங்களிழைத்த தங்க ஒட்யாணம் அம்பாளுடைய இடுப்பில் பாஸித்து வருகிறது. அந்த ஒட்யாணத்தில தங்கச் சலங்கைகளும் கட்டப்பட்டிருக்கின்றன அந்தச் சலங்கைகளும், கண, கண, என்று அம்பாள் ஸஞ்சரிக்கும்போது சப்திக்கின்றன. அத்துடன் மதம்பிடித்த யானைக்குட்டியின் தலையில் காணப்படும் இரண்டு கும்பங்களைப்போல் அம்பாளுடைய இரண்டு குசங்களும் ஸுவ்ருத்தமாயும் (வட்டமாயும்) ஸுலக்ஷணமாயும், ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்திற்கு ஒத்ததாயும் இருக்கும் காரணத்தால், அந்த பார நிமித்தமாக, அம்பாளுடைய சரீரம் கொஞ்சம் குனிந்ததாகவும் இருக்கிறது. இடுப்பு ப்ரதேசமோ ஸாமுத்ரிகா சாஸ்த்ரப்படி ரொம்பவும் க்ருசமாகவும் (இருக்கிறதோ, இல்லையோவென்று ஸந்தேஹிக்கும்படி அல்பமாகவும்) இருக்கிறது நான்கு கைகளோடு கூடினவளாகவும் அம்பாள் விளங்கிவருகிறாள். அம்பாளுடைய ஒரு கையில் கரும்பு வில்லும், மற்றொரு கையில் புஷ்பபாணங்களும், வேறொரு கையில் பாசக்கயிறும், நான்காவது கையில் ஈட்டியும் விளங்கி வருகின்றன.

அத்துடன், த்ரிபுராந்தகனான பரமசிவனுடைய ஸஹசாரிணியாகவும் இருந்து வருகிறாள். பரமசிவனுக்கு த்ரிபுராந்தகன் என்ற பெயர் வந்ததற்கு, த்ரிபுராஸுரர்களை ஸம்ஹரித்ததுமட்டும் காரணமல்ல. புரம் என்றால் பீஜாக்ஷரத்திற்கும் பெயருண்டு. த்ரிபுரை என்ற பெயரோடு கூடின பராம்பிகையினுடைய மூல மந்த்ரவர்ணங்களே த்ரிபுரம் என்று சொல்லப்படும். அந்த மூன்று பீஜாக்ஷரங்களாகிய திவ்யமான க்ஷீரத்தை பரமசிவனாகிய காமேச்வரன், தன்னுடைய மனதாகிய மத்தால் கடைந்தார். அதிலிருந்தும் நவநீதம்போல், ஜகதீச்வரியினுடைய ஸ்வரூபமானது ஆவிர்ப்பவித்தது. அக்காரணத்தாலும், பரமசிவனுக்கு த்ரிபுரமதனன் என்று பெயர்வந்தது. த்ரிபுராந்தகன் என்ற பதத்திற்கோ, மூன்று பீஜாக்ஷரங்களு

னுடைய அர்த்தத்திற்கு (நிச்சயத்திற்கு—அதாவது, அந்த மூன்று பீஜாக்ஷரங்களுக்கும் எந்த அர்த்தத்தில் முக்யமான தீர்மானம் என்பதற்கு), தான் கர்த்தா வாக ஆனுர் என்பதே தான் ஆகும். அந்த பரமசிவ னுடைய ஆஹோபுருஷிகையாக பராசக்தியானவள் விளங்கி வருகிருள். पुरुष: (வாருாஷஃ) (புருஷ:) என்ற பதமானது ப்ரத்யகாத்மாவைச் சொல்லும். அந்த ப்ரத்யகாத்மாவைச் சொல்கிற புருஷ சப்தமும் அஹம் என்றபதத்திற்கு வாச்யமாகிறது (சொல்லப்படுகிறது) என்பது ப்ரஸித்தமானது. आहो (சூஹொ) (ஆஹோ) என்ற சப்தத்திற்கு, ஆச்சர்யம் என்ற அர்த்தம் உண்டு. ப்ரக்ருதத்தில், அஹம் என்ற தன்மையே ஆஹோ என்ற சப்தத்தின் பொருளாகும். இதனுல் காமேச்வரனுடைய அஹம் பத லக்ஷ்யமான ப்ரத்ய காத்மாவே காமேஸ்வரீ என்ற தீர்மானம் வெளியா கிறது. पुरमथितु: (வாருாஉமிதாஃ) (புரமதிது:) என்ற பதத்திற்கு "காமேச்வரனுடைய" என்று அர்த்தம். ஆஹோ என்றதினுல் அஹம் பத வாச்யமான புருஷிகா ப்ரத்யகாத்மா என்ற அபிப்ராயத்தை पुरमथितु: आहोपुरुषिका (வாருாஉமிதாஃ சூஹொவாருாஷிகா) (புரமதிது: ஆஹோபுருஷிகா) என்ற பதங்களால் அறிந்து கொள்ளவேண்டும். இதனுல் சிவனுக்கும் சக்திக்கும் ஐக்யம்தான் ஸ்ரீவித்யாதந்த்ர ஸித்தம் என்பது வெளி யாகிறது.

இவ்விதமான மஹிமையோடு ஜகதீச்வரியான வள் மணிபூரக சக்ரத்தில் காமேச்வராபின்னமாக விளங்கிவருகிருள். ஸாதக புருஷர்களுடைய ஜீவ னுடைய ஸ்தானமோ ஹ்ருதயகமலம். அந்த ஜீவ னுக்கு மணிபூரகம் போவதற்கு சக்தி இல்லை. அதற் காக எவ்விதமான அவஸரத்தோடு மணிபூர கத்தில் பரதேவதையானவள் விளங்கிவருகிருளோ, அந்த ரூபத்துடனேயே; ஜீவனிருக்கும் ஹ்ருதய கம லத்தில் ஜீவனுக்கு எதிராக ப்ராகாசிக்கட்டும் என்று

ஸாதகபுருஷர்கள் அம்பாளுடைய ஸாந்நித்யத்தை ப்ரார்த்திக்கின்றூர்கள். இந்த ச்லோகமானது ஜாக்ரத்திலோ (விழித்திருக்கும்போதோ) அல்லது ஸ்வப்னத்திலோ அம்பாளுடைய திவ்ய தர்சனத்திற்கு அந்தரங்க உபாயமான மந்த்ரமாகும். ஹ்ருதய கமலத்தில் தேவீயை த்யானம் செய்ய சக்தியற்ற பஹிர்முகர்களான ஜனங்கள் வெளியிலேயே ஸ்ரீசக்ரத்தில் பிந்துவில் ஸர்வேச்வரியான ஜகன்மாதாவை த்யானுவாஹநம், முதலான ஷோடசோபசாரங்களால் பூஜை செய்து, क्वणत्काञ्चीदामा (க்வணத்காஞ்சீதாமா) (க்வணத் காஞ்சிதாமா) என்ற ச்லோகத்தை ஒரு பக்ஷத்திலோ (15 நாட்கள்) அல்லது ஒரு மண்டலத்திலோ (45 நாட்கள்) லக்ஷம் ஆவர்த்தி ஆகும்படி ஜபம் செய்து முடித்தால் தேவியினுடைய தர்சனம் அந்த உபாஸகனுக்கு ஜாக்ரத்தில் கிடைப்பது அரிதானுலுங்கூட ஸ்வப்நத்தில் அந்த உபாஸகனுக்கு தேவியின் தர்சனம் அவச்யம் கிடைக்கும். அம்பாளுடைய க்ருபாகடாக்ஷத்திற்கு பாத்ரபூதனுக ஆகி, ஸர்வவிதமான ஸௌபாக்யங்களோடும் கூடினவனுக அந்த உபாஸகன் ஆவான் என்பது நிச்சயம்.

இந்தவித்யைக்குப்பெயர்மஹாவித்யாஎன்றுசொல்லப்படும். இந்த வித்யையை, ப்ரும்ம ரிஷிகளுக்குள் வஸிஷ்டர்,விச்வாமித்ரர் முதலானவர்களும் ராஜாக்களுக்குள் ஜனகர், அச்வபதி, அஜாத சத்ரு முதலானவர்களும் கைக்கொண்டு, பராம்பிகையினுடைய ஸந்தர்சனமும் அவர்களுக்கு ஏற்பட்டு, அக்காரணத்தால் அவர்கள் லோகமான்யர்களாக விளங்கிவருகிறூர்கள். ஆகையால் உத்தமமான மானிட ஜன்மாவை அடைந்த பெரியோர்கள், லோகத்திற்கே தாயாரான பராசக்தியை ஆராதிக்கவோ, அந்த பரதேவதையினுடைய மூலமந்த்ரங்களை ஜபம் செய்யவோ, த்யானம் பண்ணவோ, கடமைப்பட்டவர்களாகவே ஆகின்றூர்கள். அதிலும் தேவியினுடைய ஸாக்ஷாத்காரத்திற்கு

இந்த ச்லோகம் ரொம்பவும் அவச்யமானதினால்,இந்த ச்லோகத்தை விதிப்படி ஸித்தி செய்து. மனிதர்கள் ஸௌபாக்யத்தை அடையவேண்டும் என்பதும் அவச்யமாகும்.

—:o:—

## 8. பராசக்தியின் ஸ்தான வர்ணனம்

सुधासिन्धोर्मध्ये सुरविटपिवाटीपरिवृते
मणिद्वीपे नीपोपवनवति चिन्तामणिगृहे ।
शिवाकारे मञ्चे परमशिवपर्यङ्कनिलयां
भजन्ति त्वां धन्याः कतिचन चिदानन्दलहरीम् ॥ ८ ॥

𑌸𑍁𑌧𑌾𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑍁𑌰𑌵𑌿𑌟𑌪𑌿𑌵𑌾𑌟𑍀𑌪𑌰𑌿𑌵𑍃𑌤𑍇
𑌮𑌣𑌿𑌦𑍍𑌵𑍀𑌪𑍇 𑌨𑍀𑌪𑍋𑌪𑌵𑌨𑌵𑌤𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌗𑍃𑌹𑍇 ।
𑌶𑌿𑌵𑌾𑌕𑌾𑌰𑍇 𑌮𑌞𑍍𑌚𑍇 𑌪𑌰𑌮𑌶𑌿𑌵𑌪𑌰𑍍𑌯𑌙𑍍𑌕𑌨𑌿𑌲𑌯𑌾𑌂
𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌧𑌨𑍍𑌯𑌾𑌃 𑌕𑌤𑌿𑌚𑌨 𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑌹𑌰𑍀𑌮𑍍 ॥ ௮ ॥

ஸுதாஸிந்தோர்மத்யே ஸுரவிடபிவாடீபரிவ்ருதே
மணித்வீபே நீபோபவநவதி சிந்தாமணிக்ருஹே ।
சிவாகாரே மஞ்சே பரமசிவபர்யங்கநிலயாம்
பஜந்தி த்வாம் தந்யா: கதிசந சிதாநந்தலஹரீம் ॥ 8 ॥

हे ! भगवति (𑌹𑍇 ! 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே! பரதேவதையே (ஹே! பகவதி)

सुधासिन्धोः (𑌸𑍁𑌧𑌾𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃) = அமிர்தக் கட.லினுடைய (ஸுதாஸிந்தோ:)

मध्ये (𑌮𑌧𑍍𑌯𑍇) (மத்யே) = நடுவில்



ஸ்ரீ ஜகன்மாதா லலிதா பரமேஸ்வரி

| | |
|---|---|
| सुरविटपिवाटीपरिवृते<br>ஸுரவிடபிவாடீ<br>பரிவ்ருதே)<br>(ஸுர விட.பிவாடீ<br>பரிவ்ருதே) | = கல்பவ்ருக்ஷங்களுடைய வரிசைகளால் சூழப் பட்டதான |
| मणिद्वीपे )மணித்வீபே )<br>(மணித்வீபே) | = மணிமயமான தீவில் |
| नीपोपवनवति<br>நீபோபவநவதி)<br>(நீபோபவநவதி) | = கதம்ப வ்ருக்ஷங்களால் நிறைந்த உத்யானவனத் தோடு கூடியதான |
| चिन्तामणिगृहे<br>(சிந்தாமணிக்ருஹே)<br>(சிந்தாமணிக்ருஹே) | = சிந்தாமணி என்ற ரத் = னங்களால் இழைக்கப் பட்ட அரண்மனையில் |
| शिवाकारे (ஶிவாகாரே)<br>(சிவாகாரே) | = த்ரிகோண ஆகாரமான |
| मञ्चे (மஞ்சே) (மஞ்சே) | = கட்டிலில் |
| परमशिवपर्यङ्कनिलयां<br>(பரமஶிவபர்யங்க<br>நிலயாம்) பரமசிவ<br>பர்யங்கநிலயாம்) | ஸதாசிவ தத்வமாகிய படுக்கையில் வீற்றிருக் கிறவளாயும் |
| चिदानन्दलहरीं<br>(சிதாநந்தலஹரீம்)<br>(சிதாநந்தலஹரீம்) | = நிரதிசயமாயும் சித்ரூப = மாயுமுள்ள ஆநந்த ப்ர வாஹ ரூபமான |
| त्वां (த்வாம்) (த்வாம்) | = உன்னை |
| कतिचन (கதிசந) (கதிசந) | = சில |
| धन्याः (தந்யாः) (தந்யா:) | = புண்யவான்கள் |
| भजन्ति (பஜந்தி) (பஜந்தி) | = த்யானம் செய்கிறார்கள் |

தாத்பர்யம் :— ஸ்ரீவித்யாதந்த்ரத்தில் ஸமயாசார மென்றும், குலாசாரம் என்றும் இரண்டுவகை உண்டு ஆந்தரமான (மானஸிக) பூஜையில் ஏற்படும் ஆஸக் திக்கு (ஆவலுக்கு) ஸமயாசாரம் என்றும், பாஹ்ய பூஜையிலுள்ள ஆஸக்திக்கு குலாசாரம்என்றும் பெயர். அத்துடன் ஸ்ரீசக்ரத்திற்கு வியத்சக்ரம் என்றும் பெயருண்டு. வியத் என்றால் ஆகாசம் என்று அர்த்தம். ஆகாசத்தில் ஸ்ரீசக்ரத்தை பூஜிக்கவேண்டியதினால், ஸ்ரீசக்ரத்திற்கே வியத்சக்ரம் என்று பெயர் வந்தது. ஆகாசத்தில் பூஜிப்பதென்பதும், தஹராகாசம், பாஹ்யா காசம் என்று இருவகைப்படும். பாஹ்யமான ஆகா சத்தின் இடைவெளியில் சாரதாபீடம், ச்யாமளாபீடம் முதலான உத்தமபீடத்திலோ. ப்ரதிமைகளிலோ, அல்லது பூர்ஜ வ்ருக்ஷத்தின் பட்டையில் எழுதப்பட்ட ஸ்ரீசக்ரத்திலோ, அல்லது வெளுப்பான திவ்ய வஸ்த் ரத்தில் எழுதப்பட்ட ஸ்ரீசக்ரத்திலோ, தங்கமோ, வெள்ளியோ, பஞ்சலோஹாதிகளோ, இவைகளால் செய்யப்பட்ட ஸ்ரீசக்ரத்திலோ, பராம்பிகையை பூஜை செய்வதே பாஹ்யாகாசத்தில் செய்யப்பட்ட பூஜையென்றும், குலாசார பூஜை என்றும் சொல்லப் படும். இந்த பூஜையானது ஸகலவிதமான ஸௌபாக் யங்களையும் ஸாதகர்களுக்குக் கொடுக்கும். ப்ரதி சுக்ர வாரத்திலும், பௌர்ணமி தினத்திலும், விஷு, அய னம், ஸங்க்ரமணம் முதலான புண்யகாலத்திலும் இந்த பூஜையானது உபாஸகர்களுக்கு ரொம்பவும் நன்மையைக் கொடுக்கக்கூடியது. பூஜையின் க்ரமங் களையும். மந்த்ர தந்த்ராதிகளையும் குருமுகமாக அறிந்து கொள்ளவேண்டியது அவச்யம்.

ஸமயாசாரத்திலோ. ஒன்பது தாதுமயமான இந்த சரீரமாகிற ஸ்ரீசக்ரத்தில் பிந்து ஸ்தானமாகிய ஹ்ரு தய புண்டரீகத்திலுள்ள ஸுஷிரத்தில் (இடைவெளி யில்)பராம்பிகையின் த்யானமானது ஸாதகர்களுக்கு விசேஷமான பலத்தைக் கொடுக்கக்கூடியது. கௌலா சாரத்தில் ஒன்பது த்ரிகோணரூபமே ஸ்ரீசக்ரமாகும்.

அதை नवयोन्यात्मकं (നവയോന്യാത്മകം) (நவயோந்யாத்மகம்) ஒன்பது யோநி ரூபம் என்றும் ஸாதகர்கள் சொல்வார்கள். அதில் சிவஸ்வரூபமான நான்கு யோநிகளுக்கு மேலாகவும், சக்தி ஸ்வரூபமான ஐந்து யோநிகளுக்கு கீழாகவும் உள்ள ஸ்ரீசக்ர ப்ரதேசத்திலுள்ள பிந்து ஸ்தானத்தை ஸுதாஸிந்து என்று ஸாதகர்கள் த்யானம் செய்யவேண்டும். ஐந்து யோநிகளையும் கல்பக வ்ருக்ஷங்களாகவும், அவைகளுடைய நடுவில் கதம்ப வ்ருக்ஷங்களால் நிறைக்கப்பட்ட உத்யானவனமும், மணித்வீபம் சிந்தாமணிக்ருஹம், சிவஸ்வரூபமான நான்கு யோநி ரூபமான மஞ்சம், ஸதாசிவ தத்வமாகிற தல்பம் (படுக்கை) இவைகளை த்யானித்து அதில் மஹாத்ரிபுரஸுந்தரியை ஸாதகர்கள் த்யானம் செய்யவேண்டும். ப்ருமமா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன் இந்த நான்கு பேர்களும் இந்தக்கட்டிலின் கால்களாகவும் த்யானிக்கத் தகுந்தவர்கள். இவ்விதம் ஸாதகர்கள் ஸர்வேச்வரியான பராசக்தியை ஆராதித்து வந்தால், ஜகன்மாதாவினுடைய அனுக்ரஹத்திற்கு பாத்ர பூதர்களாக ஆவார்கள்.

இந்த ச்லோகத்தில் சொல்லியபடி தேவியை த்யானம் செய்யும் மஹான்களுடைய மஹிமையைப் பற்றி भैरवयामलं (ഭൈരവയാമലം) (பைரவயாமலம்) என்ற க்ரந்தத்தில் ரொம்பவும் விசதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதில்,

शिवार्कमण्डलंभित्वा द्रावयन्तीन्दुमण्डलं ।
कुलयोषित् कुलं त्यक्त्वा परं वर्षणमेतिसा ॥

ശിവാർക്കമണ്ഡലം ഭിത്വാ ദ്രാവയന്തീന്ദുമണ്ഡലം ।
കുലയോഷിത് കുലം ത്യക്ത്വാ പരം വർഷണ
മേതിസാ ॥

சிவார்க்கமண்டலம் பித்வா த்ராவயந்தீந்துமண்டலம் ।

குலயோஷித் குலம் த்யக்த்வா பரம் வர்ஷண மேதிஸா ॥

என்ற ச்லோகமும் காணப்படுகிறது. இதன் தாத்பர்யமோ, மூலாதார சக்ரத்தில் குண்டலிநீ சக்தி ரூபமாக விளங்கிவரும் பரமேச்வரியானவள் ஹ்ருதய புண்டரீகத்திலுள்ள ஸூர்யமண்டலத்தை பேதித்துவிட்டு, அந்த ஸூர்யமண்டலத்திற்கு மேல், ப்ரும்ம ரந்த்ரத்திலுள்ள சந்த்ரமண்டலத்தையும் மறைத்துக்கொண்டு, ஸுஷும்நா மார்க்கத்தை விட்டுவிட்டு, அந்த சந்த்ரமண்டலத்திலேயே தானிருந்துகொண்டு, 72,000 நாடிகளிலும் அந்த அம்ருதவர்ஷங்களை வர்ஷித்துவிட்டு, மறுபடியும் தனக்கு ஸ்வஸ்தானமாகிற மூலாதார சக்ரத்திற்கு வந்து, குண்டலிநீ சக்தி ரூபமாக யோக நித்ரையை அடைந்து விளங்கிவருகிறாள் என்று சொல்லியிருப்பதை அறியவேண்டும். சரீரத்திற்குளளே, ஸ்வாதிஷ்டானத்தில் அக்னி மண்டலமும் ஹ்ருதயபுண்டரீகத்தில் ஸூர்யமண்டலமும், ப்ரும்மரந்த்ரத்தில் சந்த்ரமண்டலமும் இருந்துவருகின்றன. ஸுஷும்நா நாடி என்பது பாதரஸத்தினுல் ஏற்படுத்தப்பட்ட ஒரு குழாய் மாதிரி இருக்கிறது. அதில் மேல் பாகத்தில் ப்ரும்மரந்த்ரத்தில் சந்த்ர மண்டலம் இருக்கிறது. அதன் அம்ருதமயமான கிரணங்கள் கீழுள்ள நாடிகளில் ஸம்பந்தப்பட்டாலும், ஹ்ருதய புண்டரீகத்திலுள்ள ஸூர்யமண்டலத்தினுல் அந்த ஈரம் கொஞ்சமேனும் இல்லாமல் காய்ந்துபோய் விடுகிறது. 72,000 நாடிகளுக்கும் அம்ருத ஸம்பந்தம் இருந்தால், அந்த ஜீவனுக்கு ஒருநாளும் சாவே கிடையாது. ஸூர்யமண்டலம் சிவஸ்தானம்; சந்த்ர மண்டலம் சக்தி ஸ்தானம். சிவன் தபிக்கச் செய்கிறவன்; சக்தியோ ரக்ஷிக்கின்ற தாயார். மூலாதார சக்ரத்தில் குண்டலிநீ சக்திரூபமாக விளங்கிவரும் பரதேவதையை அதிதீவ்ரமான த்யானத்தினுல் ஹ்ருதய புண்டரீகத்திற்கு அழைத்துக்கொண்டு வந்துவிட்டால், தேவியானவள் ஸூர்யமண்டலத்தை மறைத்து

விட்டு, சந்த்ரமண்டலம் சென்று, அதன் அம்ருதமய மான கிரணங்களை கீழ்நோக்கும்படி செய்து, ஸகல விதமான நாடிகளிலும் பெருகும்படி செய்கிறாள். அதனால் அந்த ஸாதகனானவன் சிரஞ்சீவியாகவே ஆகி விடுகிறான் என்பது நிச்சயம். அகஸ்த்ய மஹர்ஷி, ஆஞ்சநேயர் முதலான மஹான்கள் இந்த ச்லோகத் தினுடைய ப்ரயோகத்தை அனுஷ்டித்துத்தான் சிரஞ் சீவிகளாக இருந்துவருகிறார்கள். ஆகையால் நோயற்ற வாழ்வோடு சிரஞ்சீவியாகவே இருக்க வேண்டுமென்ற ஆவலுள்ளவர்கள் இந்த ச்லோகத் தில் சொல்லியபடி, ஸமயாசாரத்தை அனுஸரித்தோ, கௌலாசாரத்தை அனுஸரித்தோ, பராம்பிகையை உபாஸிப்பது அவச்யமாகும்.

---

## 9, தேவியின் அனுஸந்தானம்

महीं मूलाधारे कमपि मणिपूरे हुतवहं
स्थितं स्वाधिष्ठाने हृदि मरुतमाकाशमुपरि ।
मनोऽपि भ्रूमध्ये सकलमपि भित्वा कुलपंथं
सहस्रारे पद्मे सह रहसि पत्या विहरसे ॥ ९ ॥

𑌮𑌹𑍀𑌂 𑌮𑍂𑌲𑌾𑌧𑌾𑌰𑍇 𑌕𑌮𑌪𑌿 𑌮𑌣𑌿𑌪𑍂𑌰𑍇 𑌹𑍁𑌤𑌵𑌹𑌂
𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌸𑍍𑌵𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑍇 𑌹𑍃𑌦𑌿 𑌮𑌰𑍁𑌤𑌮𑌾𑌕𑌾𑌶𑌮𑍁𑌪𑌰𑌿 ।
𑌮𑌨𑍋𑌽𑌪𑌿 𑌭𑍍𑌰𑍂𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑌕𑌲𑌮𑌪𑌿 𑌭𑌿𑌤𑍍𑌵𑌾 𑌕𑍁𑌲𑌪𑌥𑌂
𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌰𑍇 𑌪𑌦𑍍𑌮𑍇 𑌸𑌹 𑌰𑌹𑌸𑌿 𑌪𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌹𑌰𑌸𑍇 ॥ ௯ ॥

மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம்
ஸ்திதம் ஸ்வாதிஷ்டானே ஹ்ருதி மருதமாகாசமுபரி ।
மனோபி ப்ரூமத்யே ஸகலமபி பித்வா குலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே॥ 9 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பரதேவதையே!

मूलाधारे (𑌮𑍂𑌲𑌾𑌧𑌾𑌰𑍇) (மூலாதாரே) = ஸகலத்திற்கும் ஆதார சக்ரமான மூலாதார மென்ற குதஸ்தானத்தில்

स्थितं (𑌸𑍍𑌥𑌿𑌤𑌂) (ஸ்திதம்) = இருக்கின்ற

महीं (𑌮𑌹𑍀𑌂) (மஹீம்) = ப்ருத்வீ தத்வத்தையும்

मणिपूरे (𑌮𑌣𑌿𑌪𑍂𑌰𑍇) (மணிபூரே) = மணிபூரக சக்ரத்தில்

स्थितं (𑌸𑍍𑌥𑌿𑌤𑌂) (ஸ்திதம்) = இருக்கின்ற

कमपि (𑌕𑌮𑌪𑌿) (கமபி) = ஜலதத்வத்தையும்

स्वाधिष्ठाने (𑌸𑍍𑌵𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑍇) (ஸ்வாதிஷ்டானே) = ஸ்வாதிஷ்டானசக்ரத்தில்

स्थितं (𑌸𑍍𑌥𑌿𑌤𑌂) (ஸ்திதம்) = இருக்கின்ற

हुतवहं (𑌹𑍁𑌤𑌵𑌹𑌂) (ஹுதவஹம்) = அக்னி தத்வத்தையும்

हृदि (𑌹𑍃𑌦𑌿) (ஹ்ருதி) = ஹ்ருதயாகாசத்திலிருக்கின்ற அநாஹத சக்ரத்தில்

स्थितं (𑌸𑍍𑌥𑌿𑌤𑌂) (ஸ்திதம்) = இருக்கின்ற

मरुतं (𑌮𑌰𑍁𑌤𑌂) (மருதம்) = வாயு தத்வத்தையும்

उपरि (𑌉𑌪𑌰𑌿) (உபரி) = கீழ்ச்சொன்ன சகரங்களுக்கு மேலிருக்கிற விசுத்தி சக்ரத்தில்

स्थितं (𑌸𑍍𑌥𑌿𑌤𑌂) (ஸ்திதம்) = இருக்கின்ற

आकाशं (𑌆𑌕𑌾𑌶𑌂) (ஆகாசம்) = ஆகாச தத்வத்தையும்

| | |
|---|---|
| भ्रूमध्ये (ஞூமெஃயெ) (ப்ரூமத்யே) | = புருவங்களுக்கு மத்தியி லுள்ள ஆக்ஞா சக்ரத் தில் |
| स्थितं (ஸ்ரீதம்) (ஸ்திதம்) | = இருக்கின்ற |
| मनोपि (மநோவி) (மனேபி) | = மனஸ் தத்வத்தையும் |
| एतत् (வனதக்) (ஏதத்) | = இந்த |
| सकलमपि (ஸகலமவி) (ஸகலமபி) | = ஸமஸ்தமான |
| कुलपथं (குலவயம்) (குலபதம்) | = ஸுஷும்நா மார்க் கத்தை |
| भित्वा (ஹிக்வா) (பித்வா) | = பிளந்துகொண்டு(தாண் டிக்கொண்டு) |
| सहस्रारे (ஸஹஸ்ராரெ) (ஸஹஸ்ராரே) | = ஆயிரந்தளமுள்ள |
| पद्मे (வஜ்ஜெ) (பத்மே) | = தாமரை மலரில் |
| पत्या सह (வதூரஸஹ) பத்யாஸஹ) | = ஸதாசிவன் என்ற மஹா புருஷனேடு கூட |
| विहरसे (விஹரஸெ) (விஹரஸே) | = ஆநந்தமாக விளங்கி வரு கிருய். |

தாத்பர்யம் :—இந்த பிண்டம் என்ற சரீரத்திற் குள் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை, என்று ஆறு சக்ரங்கள் ஸுஷும்ஞ நாடிக்குள் விளங்கிவருகின்றன. அந்த ஆறு சக்ரங் களையும், ப்ருத்வி, அக்னி, ஜலம், வாயு, ஆகாசம், மனஸ், என்ற தத்வங்களாகவே சாஸ்த்ரங்களில் வர் ணிக்கப்பட்டிருக்கின்றன. மூலாதாரத்தில் ப்ருத்வி தத்வமானது கந்த தன்மாத்ரையாகவும், மணிபூரகத் தில் ஜலதத்வமானது ரஸ தன்மாத்ரையாகவும். ஸ்வா

திஷ்டானத்தில் அக்னி தத்வமானது ரூப தன்மாத்ரையாகவும், அநாஹதத்தில் வாயுதத்வமானது ஸ்பர்ச தன்மாத்ரையாகவும், விசுத்தி சக்ரத்தில் ஆகாச தத்வமானது சப்த தன்மாத்ரையாகவும் விளங்கி வருகின்றன. புருவங்களுடைய நடுமத்தியிலுள்ள ஆக்ஞா சக்ரத்தால் மனஸ்தத்வமானது விளங்கி வருகிறது. மனஸ்தத்வம் என்ற பதத்தால் சக்ஷுஸ், ச்ரோத்ரம், ரஸனம், க்ராணம், த்வக் என்ற ஐந்து ஞானேந்த்ரியங்களும், வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம், என்ற ஐந்து கர்மேந்த்ரியங்களும், அந்தக்கரணமும், ஆகமொத்தம் பதினொன்று இந்த்ரிய தத்வங்களை க்ரஹித்துக் கொள்ள வேண்டும்.

ஆறு சக்ரங்களிலுள்ள ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம், சப்தம் என்ற ஐந்து தன்மாத்ரைகள், ப்ருத்வி, அப், தேஜஸ், வாயு, ஆகாசம், என்ற ஐந்து பூதங்கள், ஆகமொத்தம் பத்து தத்வங்கள். முன் சொன்ன பதினொன்று தத்வங்கள், இந்த பத்து தத்வங்கள் எல்லாம் சேர்ந்து இருபத்தொன்று தத்வங்கள் ஆகின்றன. ஆயிரம் தளமுள்ள தாமரை மலரைப்போல் விளங்கிவரும் ஸஹஸ்ரகமலம், சந்த்ரமண்டலம், த்வாதசாந்தம், என்று சொல்லப்படும் ப்ரம்மரந்த்ரத்தில் மாயாதத்வம், சுத்த வித்யாதத்வம், மஹேச்வரதத்வம், ஸதாசிவதத்வம் என்ற நான்கு தத்வங்கள் அடங்கியிருக்கின்றன. ஆகமொத்தம் இருபத்தைந்து $(21+4)$ தத்வங்களாகிவிட்டன, இருபத்தைந்தாவது தத்வமாகிற ஸதாசிவ தத்வத்துடன், இருபத்தாருவது தத்வமாகிய ஸாக்ஷாத் ஜகதீச்வரி சேர்ந்து கொண்டு சுத்தபரப்ரும்மமாக வர்ணிக்கப்படுகிருள்.

மூலாதாரம் என்ற சக்ரமானது சரீரத்திற்கே ஆதாரபூதமான சக்ரமாகும். எல்லாவற்றிற்கும் பூமிதான் ஆதாரம் என்பது ப்ரஸித்தமானது. அந்தப்ருத்வி தத்வமானது மூலாதார சக்ரத்தில் கந்த தன்மாத்ரை ரூபமாக விளங்கி வருகிறபடியால், மூலாதார சக்ர

மானது சரீரத்தினுடைய ஸ்திதிக்கு ஹேதுபூதமான சக்ரமாக ஆகிறது, ப்ருத்வி தத்வரூபமான மூலாதார சக்ரமில்லாதபோனால், தேஹமானது ஆகாசத்திலாவது பறந்துபோய்விடும்; அல்லது பாதாளத்திலாவது அமிழ்ந்துவிடும். ஆகையால் மூலாதார சக்ரமானது ரொம்பவும் முக்யமானது.

மணிபூரகத்தில் ஜலதத்வமானது ரஸ தன்மாத்ரையாக விளங்கிவருகிறது பரதேவதையானவள் இந்த சக்ரத்திலிருந்துகொண்டு அநேகவிதமான மணிகளால் அந்த ப்ரதேசத்தையே பூர்த்திசெய்து வைக்கிறபடியால், அந்த சக்ரத்திற்கு மணிபூரக சக்ரமென்று ப்ரஸித்தி ஏற்பட்டுவிட்டது. ஸமயாசாரத்தை அவலம்பித்து ஆந்தரமாக பூஜை செய்கிறவர்களுக்கு, மூன்ருவது கமலமாகிய மணிபூரகத்தில் அநேக ப்ரகாரமான மணிகளா லிழைக்கப்பட்ட ஆபரணங்களை தேவிக்கு அலங்காரம் செய்து ஆந்தரமாக ஆநந்தத்தை அடைகிருர்கள் என்பது ஸ்ரீவித்யாதந்த்ரத்தில் ஒரு பெரிய ரஹஸ்யமாகும்.

அவ்விதமே ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் அக்னிதத்வமானது ரூப தன்மாத்ரையாக விளங்கிவருகிறது. ஸ்வாதிஷ்டானம் என்ற பதத்தின் அர்த்தத்தை கீழ்க்கண்டபடி அறியவும். பராம்பிகையானவள் குண்டலிநீ சக்தி ரூபமாக தானே அந்த ஸ்தானத்தை ஆக்ரமித்துக்கொண்டு க்ரந்திகளையும் (முடிச்சு) போட்டுவிட்டு இருப்பதே ஸ்வாதிஷ்டானமாகும். ஸ்வாதிஷ்டானத்தினுடைய மேல்பாகத்தின் கடைசியில் ருத்ரக்ரந்தி என்ற ஓர் ஸ்தானம் இருக்கிறது. அதாவது, குண்டலிநீ சக்திரூபமான தேவியை உபாஸிக்கிற ரிஷி ருத்ரனே. அவர் இருக்கும் ஸ்தானத்திற்கு ருத்ரக்ரந்தி என்று பெயர்.

அநாஹத சக்ரத்தில் ஸ்பர்சதன்மாத்ரை ரூபமாக வாயுதத்வம் விளங்கிவருகிறது. அந்த ஸ்தானத்தில்

க்ரமமாக சக்ரங்களை தாண்டிக்கொண்டுபோன ஸாதகனுக்கு தேவியினுடைய ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்பதற்கு அறிகுறியாக, முன்பு ஒரு சப்தம் அதிரமணீயமாக ஏற்படுகிறது. அதற்கு நாதம் என்று ஸ்ரீவித்யாதந்த்ரத்தில் சொல்லப்படும். அந்த நாதம் ஒரு பேரிவாத்யத்தை ஒரு தண்டத்தால் அடித்து ஏற்படுவதுபோலாவது, அல்லது ஒரு பெரிய மணியை அடித்து ஏற்படுவதுபோலாவது, வீணை, பிடில் முதலான வாத்யங்களை வாசித்து ஏற்படுவதுபோலாவது உள்ள சப்தத்தைப்போலில்லாமல் அபூர்வமான சப்தமாயிருப்பதினால், அநாஹத ஸ்தானமென்று அதற்குப் பெயர் ஏற்பட்டது.

அதற்குமேல் விசுத்தி சக்ரம் என்று சொல்லப்படும். அது சுத்த ஸ்படிகத்திற்கு ஸமானமாக இருந்துவருகிறது. அதில் சப்த தன்மாத்ரை ரூபமாக ஆகாசதத்வம் விளங்கிவருகிறது. இதனுடைய அக்ர ஸீமாவில்தான் (மேல்பாகத்தின் கடைசியில்) விஷ்ணுக்ரந்தியானது இருந்துவருகிறது. அதாவது விசுத்தி சக்ரத்தில் நாதப்ரம்ம ரூபிணியான பராம்பிகையை உபாஸிப்பதில் ரிஷியானவர் விஷ்ணுவே. அவர் இருந்துவரும் ஸ்தானம் விஷ்ணுக்ரந்தியாகும்.

பிறகு இரண்டு புருவங்களுடைய நடுமத்தியில் ஆக்ஞாசக்ரம் என்று ஒரு விசேஷஸ்தானம் இருந்துவருகிறது. आङ् ईषत् (𑌆𑌙𑍍 𑌈𑌷𑌤𑍍) (ஆங் ஈஷத்) என்ற ஸூத்ரத்தை அவலம்பித்து. ज्ञा ज्ञाने (𑌜𑍍𑌞𑌾, 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇) (ஜ்ஞா, ஜ்ஞானே) என்றதையும் முன்னிட்டு, மின்னலைப்போல் தேவியினுடைய ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் உபாஸகர்களுக்கு அந்த சக்ரத்தில் க்ஷணகாலம் ஏற்படுகிறபடியால், ஆக்ஞாசக்ரம் என்று அந்த ஸ்தானத்திற்கு பெயர் ஏற்பட்டிருக்கிறது. அந்த சக்ரத்தின் மேல்பாகத்தில் ப்ரம்மக்ரந்தியானது இருந்துவருகிறது.

அதற்கு மேலாகத்தான், ஸஹஸ்ரகமலம். சந்த்ர மண்டலம், த்வாதசாந்தம், ப்ரும்மரந்த்ரம், என்று அநேகவிதமாகச் சொல்லப்பட்ட மஹாசக்ரத்தில் இருபத்தைந்தாவது தத்வமாகிற ஸதாசிவதத்வத்தோடு, இருபத்தாறுவது தத்வமாகிய சக்தி தத்வமானது ஒன்றுகச்சேர்ந்து सादा (ஸாதா) (ஸாதா) என்ற பெயரையும் அடைந்து, விளங்கிவருகிறது. ஸமய மதத்தை அவலம்பித்து ஆந்தரபூஜை செய்கிறவர்களுக்கு இந்த ரஹஸ்யங்களைத் தெரிந்துகொள்ள வேண்டியது ரொம்பவும் அவச்யமானது. இவ்விதம் அந்தந்த சக்ரத்தினுடைய ஸ்வரூபத்தையும், அந்தந்த சக்ரத்திலுள்ள தத்வத்தையும், தேவதையையும் அறிந்து உபாஸிக்கிற ஸாதகர்களுக்கு, ஸர்வாபீஷ்டமும், அணிமாத்யஷ்டைச்வர்ய ஸித்தியும், பகவதியினுடைய ஸ்வரூப ஸாக்ஷாத்காரமும் க்ரமமாக ஏற்பட்டு உபாஸகர்கள் ஸபலமான ஜன்மாவோடு கூடினவர்களாக ஆவார்கள்.

—:o:—

## 10 ஆதார சக்ரத்தில் தேவியின் வர்ணனம்

सुधाधारासारैश्चरणयुगलान्तर्विगलितैः

प्रपञ्चं सिञ्चन्ती पुनरपि रसाम्नायमहसः ।

अवाप्य स्वां भूमिं भुजगनिभमध्युष्टवलयं

स्वमात्मानं कृत्वा स्वपिषि कुलकुण्डे कुहरिणि ॥ १० ॥

ஸுதாதாராஸாரைச்சரணயுகளாந்தர்விகளிதை:

ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ புநரபி ரஸாம்நாயமஹஸ: ।

அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபமத்யுஷ்டவலயம்

ஸ்வமாத்மாநம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே

குஹரிணி ॥ ௧0 ॥

ஸுதாதாரா ஸாரை: சரணயுகளாந்தர்விகளிதை:
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தி புநரபிரஸாம்நாய மஹஸ: ।
அவாப்யஸ்வாம் பூமிம் புஜகநிபமத்யுஷ்டவலயம்
ஸ்வமாத்மாநம் க்ருத்வா ஸ்வபிஷிகுலகுண்டே
குஹரிணி ॥ 10 ॥

| | |
|---|---|
| हे भगवति (ஹெ ஹமவதி) (ஹே பகவதி) | = ஹே பராசக்தியே! |
| चरणयुगलान्तर्विगलितैः (அரணயுமஜாஞவிமஜிதை:) (சரணயுகளாந்தர் விகளிதை:) | = உனது இரண்டு கால்களின் நடுவிலிருந்து பெருகுகிறதான |
| सुधाधारा सारैः (ஸுயாயாரா ஸாரெ:) (ஸுதாதாரா ஸாரை:) | = அம்ருத தாரையின் ப்ரவாஹத்தால் |
| प्रपञ्चम् (ப்ரவஞ்ம) (ப்ரபஞ்சம்) | = எழுபத்திரண்டாயிரம் நாடிகளையும் |
| सिंचन्ती (ஸிஂஅஂதீ) (ஸிஞ்சந்தீ) | = நனைக்கிறவளாகக் கொண்டு |
| रसाम्नाय महसः (ரஸாஂநாய உஹஸ:) (ரஸாம்நாய மஹஸ:) | = சந்த்ர மண்டலத்திலிருந்து |
| स्वां (ஸ்வாஂ) (ஸ்வாம்) | = தன்னுடைய |
| भूमिं (ஹூமிஂ) (பூமிம்) | = ஸ்தானமாகிய ஆதார சக்ரத்தை |
| पुनरपि (வுநரவி) (புனரபி) | = மறுபடியும் |

| | |
|---|---|
| अवाप्य (𑌅𑌵𑌾𑌪𑍍𑌯) (அவாப்ய) | = அடைந்து |
| भुजगनिभं (𑌭𑍁𑌜𑌗𑌨𑌿𑌭𑌂) (புஜகநிபம்) | = ஸர்ப்பத்திற்கு ஸமானமாக |
| अध्युष्टवलयं (𑌅𑌧𑍍𑌯𑍁𑌷𑍍𑌟𑌵𑌲𑌯𑌂) (அத்யுஷ்டவலயம்) | = குண்டலம் போட்டுக கொண்டிருப்பதாக |
| स्वां (𑌸𑍍𑌵𑌾𑌂) (ஸ்வாம்) | = தன்னுடைய |
| आत्मानं (𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂) (ஆத்மாநம்) | = உருவத்தை |
| कृत्वा (𑌕𑍃𑌤𑍍𑌵𑌾) (க்ருத்வா) | = செய்துகொண்டு |
| कुहरिणि (𑌕𑍁𑌹𑌰𑌿𑌣𑌿) (குஹரிணி) | = ஸூக்ஷ்மமான த்வாரத்தை உடைய |
| कुलकुण्डे (𑌕𑍁𑌲𑌕𑍁𑌣𑍍𑌡𑍇) (குலகுண்டே) | = தாமரைக் கிழங்குபோலிருக்கிற மூலாதார சக்ரத்தில் |
| स्वपिषि (𑌸𑍍𑌵𑌪𑌿𑌷𑌿) (ஸ்வபிஷி) | = யோக நித்ரையைச் செய்கிறாய். |

தாத்பர்யம்:—புருஷனுடைய சிரஸ்ஸில் சந்த்ர மண்டலம் இருக்கிறதென்பது யோகசாஸ்த்ரத்தில் ப்ரஸித்தமானது. ஸ்ரீவித்யா தந்த்ரத்திலும் ஸமயிகர்கள் என்று சொல்லப்பட்ட ஆந்தரமான பூஜையில் த்ருப்தியுள்ள மஹான்களின் ரீதியாக அந்த சந்த்ர மண்டலத்தை ஸ்ரீசக்ரம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஸ்ரீசக்ரம் என்ற சந்த்ரமண்டல ஸ்தானமானது ஆயிரம் தளத்துடன் கூடின தாமரை புஷ்பம்போன்ற மாம்ஸபிண்டத்தின் நடுவில் விளங்கி வருகிறது என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிறது. இவ்விதம் சிரஸ்ஸில் ஸஹஸ்ரகமலத்தில் உள்பாகத்

தில் விளங்குகிற ஸ்ரீசக்ரமாகிற சந்த்ரமண்டலத்தினுடைய நடுவில் ஸாக்ஷாத் பரதேவதையான ஜகந்மாதாவின் சரணாரவிந்தமானது இருந்து வருகிறதாகவும் சாஸ்த்ரத்தினுடைய ஸித்தாந்தமாகும். அந்த சந்த்ரகமலத்தின் நடுவிலிருக்கும் தேவியின் சரணகமலத்தில் ஸம்பந்தப்படுகிற ஜலமானது அம்ருதமயமாக ஆகிறபடியால் உபாஸகனுடைய சரீரத்திற்குள்ளிருக்கும் 72000 நாடிகளிலும் அம்பாளுடைய அந்த அம்ருதமயமான பாதஜலம் பெருகி அந்த நாடிகளுக்கு பலத்தையும் தைர்யத்தையும் உண்டுபண்ணும் காரணத்தால் தேவியை உபாஸிக்கிறவர்கள் சிரஞ்சீவிகளாவும் மனோபலம், வாக்பலம், காயபலம் இவைகளோடு கூடினவர்களாகவும் விளங்கிவருகிறார்கள். இவ்விதம் உபாஸகர்களுடைய சரீரத்தை அம்பாளாகிய தேவியானவள் சந்த்ரமண்டலத்திலிருந்து தன் பாத ஜலத்தில் நனைத்துவிட்டு தன்னுடைய ஸ்தானமாகிய மூலாதார சக்ரத்தில் வந்து ஸர்ப்பம்போல் தன் ஸ்வரூபத்தைக் குண்டலமண்டலாகாரமாகச் செய்துகொண்டும் குண்டலினிசக்தி என்ற பெயரையும் அடைந்து யோக நித்ரையில் அமர்ந்திருக்கிறாள்.

ப்ருத்வி என்ற மஹாபூத தத்வம் எந்த சக்ரத்திலடங்கியிருக்கிறதோ, அந்த ஆதாரசக்ரத்திற்கு பெயர் குலம். அதிலும் ஸுஷும்ணை என்ற பரமநாடியின் மார்க்கத்தில் அது இருந்துவருகிறது. அந்த மூலாதாரசக்ரமென்ற ஸுஷும்ணா மார்க்கத்தில் தாமரைக் கிழங்குபோல் சக்ராகாரமாக ஒரு ஸ்தானமிருந்து வருகிறது. அதில் தாமரைத் தண்டுக்குள்ளிருக்கும் நூல்போல் அதிஸூக்ஷ்மமான சரீரத்தோடு அம்பாள் வஸித்துவருகிறாளென்பது சாஸ்த்ர ஸித்தமானது. அதாவது ஸுஷும்ணா நாடியை அவலம்பித்துக் கொண்டு ஸாக்ஷாத் ஜகதீச்வரியானவள் விளங்கிவருகிறாள். மூலாதாரத்தில் ஸுஷும்ணா மார்க்கத்தில் தேவியானவள் ஸர்ப்பம்போல் குண்டலம் போட்டுக் கொண்டு தாமரைத் தண்டுக்குள்ளிருக்கும் நூல்

போல் ஸூக்ஷ்மமான சரீரத்தோடு விளங்கிவரும் காரணத்தால் குண்டலிநீசக்தி என்ற பெயருடன் கூடினவளாகவும் விளங்கிவருகிருள்.

அவ்விதமான தேவியின் ஸ்வரூபத்தை ஆந்தர பூஜை செய்கிறவர்கள் ப்ரத்யக்ஷமாக அநுபவிக்க வேண்டுமானுல் நிர்ஜனமான ப்ரதேசத்தில் பத்மாஸனத்தில் உட்கார்ந்துகொண்டு தனது குதம் என்ற ஸ்தானத்தை குறுக்கிக்கொண்டு ப்ராணவாயுவை மேல்நோக்கிப் போகிறதாகவும் செய்துகொண்டு, பிறகு ப்ராணவாயுவை உச்வாஸ நிச்வாஸமில்லாமல் கும்பகம் செய்துகொண்டு தேவீஸ்வரூபத்தை த்யானம் பண்ணினுல் அந்த வாயுவின் ஸம்பந்தத்தால் ஸ்வாதிஷ்டான சக்ரத்திலுள்ள அக்னி தத்வமானது ஜ்வலிக்க ஆரம்பித்து விடுகிறது. அந்த ஜ்வாலையால் ஸர்ப்பம்போல் குண்டலம் போட்டுக்கொண்டு தூங்குகிற குண்டலிநீ சக்தியென்ற தேவியானவள் ருத்ரக்ரந்தி, ப்ரஹ்மக்ரந்தி, விஷ்ணுக்ரந்தி என்ற மூன்று க்ரந்திகளேயும், மூலாதாரம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு சக்ரங்களேயும், ஸோமகண்டம், ஸூர்யகண்டம், அக்னிகண்டம் என்ற மூன்று கண்டங்களேயும், அதாவது இந்த பன்னிரண்டு ஸ்தானங்களேயும் பேதித்துக்கொண்டு, இந்த பன்னிரண்டு ஸ்தானங்களுக்கும் முடிவானது எந்த ஸஹஸ்ரகமலத்தில் ஏற்படுகிறதோ, அந்த ஸஹஸ்ரகமலத்தில் ஸ்ரீசக்ரமென்ற சசிபிம்பத்தின் நடுவில் காமேச்வரனென்ற நிஷ்களபரமசிவ தத்வத்தோடு ஜகதம்பாளாகிய காமேச்வரியானவள் ஒரு தத்வமாக ஆகி திவ்ய ஸ்வரூபத்தோடு அந்தர்முகனுன ஸாதகனுக்கு தர்சனம் கொடுக்கிருள். உடன் அந்த உபாஸகன் ஸர்வக்ஞனுயும், ஸர்வ சக்திமானுயும், சிரஞ்சீவியாயும் ஆகிவிடுகிருன். இதனுல் ப்ராண நிரோதம், மனோநிரோதமென்ற யோகத்தின் தத்வத்தை கரை காணுத மூடஜனங்களின் விஷயத்தில் தேவியின் ஸ்வரூபம் ஸர்ப்பம்போல பயத்திற்குக்

காரணமாகவே காணப்படும். யோகாரூடர்களின் விஷயத்தில் திவ்யரூபத்தோடு ஸஹஸ்ரகமலத்தில் தேவியானவள் உபாஸகனுக்கு தர்சனம் கொடுப்பாள் என்பது வெளியாகிறது. இந்த ச்லோகமானது தேவியினுடைய ஸாக்ஷாத்காரத்தை அடைவதற்குள்ள உபாயத்தைக்காட்டும் ச்லோகமாகும். ப்ருத்வீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம், என்ற பஞ்சபூதமென்ன, சந்த்ரன், ஸூர்யன், அக்னி என்ற மூன்று தேஜஸ்ஸின் தத்வத்தையும், ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற தேவதா தத்வத்தையும் ஸ்வாதீனம் செய்துகொண்ட மனிதனுக்குத்தான் தேவியின் ஸந்தர்சனம் கிடைக்கும். கிடைக்குமிடமும் ஸஹஸ்ரகமலந்தான். அந்த பன்னிரண்டு தத்வங்களையும் ஸ்வாதீனம் செய்துகொள்ளவோ, ப்ராணவாயுவை மேல்நோக்கிவிடும் காரணத்தால் குதத்தை குறுக்கிக்கொண்டு பத்மாஸனத்தில் உட்கார்ந்துகொண்டு பிறகு உச்வாஸ நிச்வாஸ கதியை தடுத்து கும்பகம் செய்துகொண்டு தேவியினுடைய ஸ்ரீவித்யா பீஜத்தை மானஸமாக ஆவர்த்தி செய்வதே அந்தரங்க உபாயமாகும். அவ்விதம் செய்கிற ஸாதகனுக்கு ஆறு சக்ரத்தின் பேதனமும், மூன்று க்ரந்தியின் சேதனமும், மூன்று கண்டத்தின் தரணமும் ஸித்தித்து தேவியினுடைய தர்சனமும் ஏற்படும்.

---

## 11. ஸ்ரீ சக்ர வர்ணனம்.

चतुर्भिः श्रीकण्ठैः शिवयुवतिभिः पञ्चभिरपि
प्रभिन्नाभिः शंभोः नवभिरपि मूलप्रकृतिभिः ।
चतुश्चत्वारिंशद्वसुदलकलाश्रत्रिवलय-
त्रिरेखाभिः सार्धं तव चरणकोणाः परिणताः ॥ ११ ॥

𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑌿𑌃 𑌶𑍍𑌰𑍀𑌕𑌣𑍍𑌠𑍈𑌃 𑌶𑌿𑌵𑌯𑍁𑌵𑌤𑌿𑌭𑌿𑌃 𑌪𑌞𑍍𑌚𑌭𑌿𑌰𑌪𑌿
𑌪𑍍𑌰𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌭𑌿𑌃 𑌶𑌂𑌭𑍋𑌃 𑌨𑌵𑌭𑌿𑌰𑌪𑌿 𑌮𑍂𑌲𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌭𑌿𑌃 ।
𑌚𑌤𑍁𑌶𑍍𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿𑌂𑌶𑌦𑍍𑌵𑌸𑍁𑌦𑌲𑌕𑌲𑌾𑌶𑍍𑌰𑌤𑍍𑌰𑌿𑌵𑌲𑌯
𑌤𑍍𑌰𑌿𑌰𑍇𑌖𑌾𑌭𑌿𑌃 𑌸𑌾𑌰𑍍𑌧𑌂 𑌤𑌵 𑌶𑌰𑌣𑌕𑍋𑌣𑌾𑌃 𑌪𑌰𑌿𑌣𑌤𑌾𑌃 ॥

*சதுர்பி: ஸ்ரீகண்டை: சிவயுவதிபி: பஞ்சபிரபி*
*ப்ரபிந்நாபி: சம்போ: நவபிரபி மூலப்ரக்ருதிபி: ।*
*சதுச்சத்வாரிம்சத்வஸுதலகலாச்ரத்ரிவலய*
*த்ரிரேகாபிஸ்ஸார்த்தம் தவசரணகோணா: பரிணதா: ॥11॥*

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே மஹாசக்தியே!

चतुर्भिः (𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑌿𑌃) (சதுர்பி:) = நான்கு

श्रीकण्ठैः (𑌶𑍍𑌰𑍀𑌕𑌣𑍍𑌠𑍈𑌃) (ஸ்ரீகண்டை:) = சிவாத்மகமான, அதாவது சிவஸ்வரூபமான சக்ரங்களாலும்

शंभोः (𑌶𑌂𑌭𑍋𑌃) (சம்போ:) = நான்குவிதமான சிவ த்ரிகோணங்களைக் காட்டிலும்

प्रभिन्नाभिः (𑌪𑍍𑌰𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌭𑌿𑌃) (ப்ரபிந்நாபி:) = மிகவும் வேறுபட்டதான சிவ சக்ரத்தைத் தொடாததான

पंचभिः अपि (𑌪𑌞𑍍𑌚𑌭𑌿𑌃 𑌅𑌪𑌿) (பஞ்சபி: அபி) = ஐந்துகளாயுமுள்ள

शिवयुवतिभिः (𑌶𑌿𑌵𑌯𑍁𑌵𑌤𑌿𑌭𑌿𑌃) (சிவயுவதிபி:) = சக்திஸ்வரூபமான ஐந்து சக்ரங்களாலும்

नवभिः (𑌨𑌵𑌭𑌿𑌃) (நவபி:) = ஒன்பதான

| | |
|---|---|
| मूलप्रकृतिभिः (മൂലപ്രകൃതിഭിഃ) (மூலப்ருக்ருதிபி:) | = இக்த ப்ரபஞ்சத்தின் மூலகாரணமான, சக்தி ஸ்வரூபமான மூல தாதுக்கள் ஐந்து. அதாவது, த்வக், அஸ்ருக், மாம்ஸம், மேதஸ், அஸ்தி. சிவ ஸ்வரூபமான நான்கு தாதுக்கள். அதாவது, மஜ்ஜை, சுக்லம், ப்ராணன், ஜீவன் இவ்விதம் இரண்டு தத்வங்களும் சேர்ந்து உலகத்திற்கு மூலகாரணமான |
| तव (தவ) (தவ) | = உன்னுடைய |
| चरणकोणाः (ചരണകോണാഃ) (சரணகோணு:) | = பிந்து ஸ்தான மந்த்ர கோணங்கள் |
| वसुदलकलाश्रत्रिवलय त्रिरेखाभिः (വസുദലകലാശ്രത്രി വലയ ത്രിരേഖാഭിഃ) (வஸுதலகலாச்ரத்ரி வலய த்ரிரேகாபி:) | = எட்டு தளம், பதினாறு தளம் மூன்று மேகலை நான்கு திக்கிலும் த்வார மூள்ள மூன்று ப்ரகாரங்கள் - அது பூபுரத்ரயம் என்று சொல்லப்படும் இவைகளோடு |
| सार्धं (സാർദ്ധം) (ஸார்த்தம்) | = கூடினதாக |
| परिणताः सन्तः (പരിണതാഃ സന്തഃ) (பரிணதா: ஸந்த:) | = உருவங்களோடு கூடினவைகளாகக் கொண்டு |
| अपि (അപി) (அபி) | = இந்த ஸமஷ்டியானது |

चतुश्चत्वारिंशत् (𑌚𑌤𑍁𑌶𑍍𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿𑌂𑌶𑌤𑍍) (சதுச்சத்வாரிம்சத்) = நாற்பத்தி நான்கு தத்வங்களாக
भवन्ति (𑌭𑌵𑌨𑍍𑌤𑌿) (பவந்தி) = ஆகின்றன

தாத்பர்யம்:—முன் ச்லோகத்தில் ஸாக்ஷாத் பராசக்தி ஸ்ரீசக்ரரூபிணி என்றும், அந்த ஸ்ரீசக்ரம் சந்த்ர மண்டல ரூபமென்றும் விவரிக்கப்பட்டது. அவ்விதம் மஹிமைதங்கிய ஸ்ரீ சக்ரத்தின் ஸ்வரூபத்தை விஸ்தாரமாக ஸ்ரீ பகவத்பாதாள் அவர்கள் இந்த ச்லோகத்தில் உபதேசிக்கின்றார்கள். இந்த ஸ்ரீசக்ரநிர்ணயம் ஸ்ரீவித்யோபாஸகர்களுக்கு ரொம்பவும் முக்யமாகத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயமான நூல் இதை முக்ய பக்த ஜனங்கள் தெரிந்து அந்த ப்ரகாரமே அனுஷ்டித்து ஸ்ரீ தேவியின் ப்ரஸாதத்திற்கு பாத்ரர்களாகவேண்டும்.

ஸ்ரீசக்ரத்தின் ஸ்வரூபமோ, ஒன்பது யோனிகள் என்று சொல்லப்பட்ட த்ரிகோணங்கள்; ஒன்பது தாதுக்களாகச் சொல்லப்படுகிறது. காமிகாகமத்தில் இதன் விவரத்தை அறியவும்.

त्वगसृक् मांसमेदोस्थि धातवः शक्तिमूलकाः ।

मज्जाशुक्लप्राणजीव धातवश्शिव मूलकाः ॥

नवधातुरयंदेहः नवयोनिसमुद्भवः ।

दशमो धातुरेकैव पराशक्तिः तदीश्वरी ॥

𑌤𑍍𑌵𑌗𑌸𑍃𑌕𑍍 𑌮𑌾𑌂𑌸𑌮𑍇𑌦𑍋𑌸𑍍𑌥𑌿 𑌧𑌾𑌤𑌵𑌃 𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑍂𑌲𑌕𑌾𑌃 ।

𑌮𑌜𑍍𑌜𑌾𑌶𑍁𑌕𑍍𑌲𑌪𑍍𑌰𑌾𑌣𑌜𑍀𑌵 𑌧𑌾𑌤𑌵𑌶𑍍𑌶𑌿𑌵 𑌮𑍂𑌲𑌕𑌾𑌃 ॥

𑌨𑌵𑌧𑌾𑌤𑍁𑌰𑌯𑌂𑌦𑍇𑌹𑌃 𑌨𑌵𑌯𑍋𑌨𑌿𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ।

𑌦𑌶𑌮𑍋 𑌧𑌾𑌤𑍁𑌰𑍇𑌕𑍈𑌵 𑌪𑌰𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌤𑌦𑍀𑌶𑍍𑌵𑌰𑍀 ॥

*த்வகஸ்ருக் மாம்ஸமேதோஸ்தி தாதவ: சக்திமூலகா: ।*

*மஜ்ஜாசுக்லப்ராணஜீவ தாதவச்சிவ மூலகா: ॥*

*நவதாதுரயம்தேஹ: நவயோநிஸமுத்பவ: ।*

*தசமோ தாதுரேகைவ பராசக்தி: ததீச்வரீ ॥*

என்றபடி த்வக் (தோல்), அஸ்ருக் (ரத்தம்), மாம்ஸம், மேதஸ், அஸ்தி இந்த ஐந்துகளும், ஐந்து சக்திகோணங் களென்றும், மஜ்ஜா, சுக்லம், ப்ராணன், ஜீவன் இந்த நான்குகளும் நான்கு சிவகோணங்களென்றும் இவ்வி தம் ஒன்பது கோணங்களும் சேர்ந்து, ஸ்ரீசக்ரரூபமாக ஆகிறது. இந்த ஒன்பது கோணங்களுடைய நடுவில் பத்தாவது யோனி யென்ற பிந்துஸ்தானமானது சொல்லப்படும். இதனால் தேஹமே ஸ்ரீசக்ரமென்று பாஸிக்கின்றது. அந்த தேஹத்திற்கோ ஸவாமியான தேவதை ஸாக்ஷாத் பராசக்திதான். இவ்விதம் ஒன் பது தாதுக்கள் அடங்கிய தேஹத்தை ஒன்பது கோண ரூபமான ஸ்ரீசக்ரமாக பாவித்து நடுவில் ஹ்ரு தயத்தில் ஸ்ரீசக்ரத்திற்கு நாயகியான பராசக்தியான வள் பாஸித்துவருகிருள் என்று த்யானம் செய்வதே ஸமயாசாரப்படி தேவியினுடைய பூஜாக்ரமத்தில் ஒரு ப்ரகாரமாக ஆகும். இந்த தேஹத்தை ஸ்ரீசக்ரம் என்று சொல்லுவதே பிண்டாண்டம், ப்ரமமாண்டம் என்ற இருவகை அண்டத்தில் (வ்யஷ்டி. ஸமஷ்டி இருவகையில்) பிண்டாண்டத்தின் உத்பத்திக்ரம மென்று அறியவும். ப்ரம்மாண்டத்தின் உத்பத்தி க்ரமத்தை அனுஸரித்தாலோ, ப்ரத்வீ, அப், தேஜஸ், வாயு ஆகாசம் என்ற ஐந்து மஹா பூதங்களையும், ஐந்து சக்தி கோணங்களாகவும் மாயை சுத்த வித்யை, மஹேச் வரன், ஸதாசிவன் என்ற நான்கு தத்வங்களை நான்கு சிவகோணங்களாகவும் பாவித்து, இவ்விதம் உள்ள ஒன்பது கோண ரூபமான ஜகத்தையே ஸ்ரீசக்ரமாக அறிந்து அந்த ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம் ஹாராதிகளுக்கு மூலகாரணபூதமான பரப்ரம்மத்தை

பராசக்தியாக அறிவதே ப்ரம்மாண்டோத்பத்தி க்ரமத்தில் ஸ்ரீசக்ர பூஜையாக ஆகும். இதனுல்,

शिवशक्त्यात्मकं विद्धि जगदेतच्चराचरम्।

ஶிவஶக்த்யாத்மகம் வித்தி ஜகதேதச்சராசரம்।

சிவசக்த்யாத்மகம் வித்தி ஜகதேதச்சராசரம் ।

என்ற சாஸ்த்ரப்படி பிண்டாண்டம், ப்ரம்மாண்டம் என்று சொல்லப்படும் ஸகல ஜகத்தும் சிவசக்தி ஸ்வரூபம் என்று அறிவதே பூஜாக்ரமத்தில் ரொம்பவும் உயர்ந்த பூஜையாக ஆகும். :சில சாஸ்த்ரங்களின் ஸித்தாந்த ப்ரகாரம் 51 தத்வங்கள் என்று தெரிகிறது. அதாவது :—

பஞ்ச மஹாபூதங்கள் (5), தன்மாத்ரைகள் (5), ஞானேந்த்ரியங்கள் (5), கர்மேந்த்ரியங்கள் (5), தாதுக்கள் (7), ப்ராணன் (5), மனஸ், அஹங்காரம், க்யாதி, ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம், ப்ரக்ருதி, புருஷன், ராகம், வித்யை, கலை, நியதி, காலம், மாயை, சுத்த வித்யை, மஹேச்வரன், ஸதாசிவன், சக்தி, சிவ தத்வம்.

பஞ்சபூதங்களென்றுல் முன சொன்ன ப்ருத்வி முதலானவைகளே. ஸ்தூல சரீராகாரமாக பரிணமித்து விளங்கும் தத்வமாகும். தன்மாத்ரையென்பதினுல்; அந்தந்த பூதங்களின் குணங்களான ரூப, ரஸ, கந்த. ஸ்பர்ச, சப்தம் என்ற ஐந்து குணங்களாக அறியவும். த்வகிந்த்ரியம், சக்ஷுரிந்த்ரியம், ஜிஹ்வை, க்ராண, ச்ரோத்ரம் என்ற ஐந்து இந்த்ரியங்களும் ஞானேந்த்ரிய பஞ்சகமா . வாக், பாணி, பாயு, பாத, உபஸ்தம் என் இந்த ஐந்து இந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களாகும். த்வக், அஸ்ருக், மாம்ஸம், மேதஸ், மஜ்ஜா அஸ்தி, சுக்லம்,, இந்த ஏழுகளே ஸப்த தாதுக்கள், ப்ராணன், அபானன், வ்யானன்,

உதானன். ஸமானன்களே ப்ராண பஞ்சகம். மனன சக்தியே மனஸ்ஸு. அஹம் என்ற பாவனேயே அஹங்க்ருத். ஞானம், க்யாதி, குணங்கள், மூன்றும் ப்ரஸித்தமானவை, மூலப்ரக்ருதியே ப்ரக்ருதியாகும். புருஷன், ஜீவன், இச்சை, ராகம். வித்யை மோக்ஷஸாதனமான ஞானம். 360 கலேகளே கலேயாகும். நியமன சக்தியே நியதி எனச் சொல்லப்படும். ஸம்ஹாரசக்தியே காலம். மாயை ஐந்த்ரஜாலிக வித்யை. சுத்த வித்யை மோசக ஞானம். ஸ்ருஷ்டிகர்த்தா மஹேச்வரன். ஸ்ருஷ்டி, ஸ்திதி இரண்டுகளேயும் செய்கிறவன் ஸதாசிவன், மஹேச்வரன் ஸதாசிவன் இவ்விருவர்களுடைய ரக்ஷிப்பது, ஸ்ருஷ்டிப்பது என்பவைகளே சக்தியாகும். சிவதத்வமென்பது ப்ரம்ம ஸ்வரூபம், இவ்விதம், 51 தத்வங்கள் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகள் நவசக்த்யாத்மகமான ஸ்ரீசக்ரத்தில் அங்காங்கு அந்தர்பாவத்தை அடைகின்றன். நவயோனி ஸ்வரூபமான ஸ்ரீசக்ரத்திலோ, ஐந்துயோனிகள் சக்தியாகவும், நான்கு யோனிகள் சிவனுகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றபடியால், அவைகளில் ப்ராம்மோத்பத்தி க்ரமத்தில் பஞ்ச மஹாபூதங்களே ஐந்து யோனிகளாகச் சொல்லப்பட்டிருப்பதைக் கொண்டு அந்த ஐந்து பூதங்களும் ஸர்வ ஜகத்திற்கும் மூலகாரணமானதினுல் அவைகளில் எல்லாவற்றையும் அந்தர்பாவப்படுத்த ஸ்ரீசக்ர ரூபமாகவே ஜகத்தை பாவிக்கவேண்டும்.

ஸ்ரீசக்ரமானது 44 கோணங்கள் என்று சொல்லப்பட்டது चतुश्चत्वारिंशत् (ചതുശ്ചത്വാരിംശൽ) (சதுச்சத்வாரிம்சத்) என்ற ச்லோகத்தில் ஸ்பஷ்டமாக இருந்துவருகிறது. वसुदलकलाश्र त्रिवलयत्रिरेखाभिः (വസുദളകലാശ്ര ത്രിവലയത്രിരേഖാഭിഃ) (வஸுதலகலாச்ர த்ரிவலயத்ரிரேகாபி:) என்ற பதத்தால் வஸு என்பதில் எட்டு கோணங்களும்; கலாச்ரம் என்பதினுல் பதினறு கோணங்களும்; த்ரிவலயம் என்பதினுல் மூன்று

மேகலேயும், த்ரிரேகை என்பதினுல் மூன்று *பூபுரங்களும் என்று பரகாசப்படுத்தப்படுகிறது.

बिन्दु त्रिकोण वसुकोण दशारयुग्ममन्वश्र नागदल संयुत षोडशारम्।
वृत्तत्रयं च धरणी सदनत्रयंच श्रीचक्रमेतत् उदितं परदेवतायाः ॥

𑌬𑌿𑌨𑍍𑌦𑍁 𑌤𑍍𑌰𑌿𑌕𑍋𑌣𑌵𑌸𑍁𑌕𑍋𑌣 𑌦𑌶𑌾𑌰𑌯𑍁𑌗𑍍𑌮
𑌮𑌨𑍍𑌵𑌶𑍍𑌰 𑌨𑌾𑌗𑌦𑌲 𑌸𑌂𑌯𑍁𑌤 𑌷𑍋𑌡𑌶𑌾𑌰𑌂 ।
𑌵𑍃𑌤𑍍𑌤𑌤𑍍𑌰𑌯𑌂 𑌚 𑌧𑌰𑌣𑍀 𑌸𑌦𑌨 𑌤𑍍𑌰𑌯𑌂 𑌚
𑌶𑍍𑌰𑍀𑌚𑌕𑍍𑌰𑌮𑍇𑌤𑌤𑍍 𑌉𑌦𑌿𑌤𑌂 𑌪𑌰𑌦𑍇𑌵𑌤𑌾𑌯𑌾𑌃 ॥

பிந்து த்ரிகோண வஸுகோண தசாரயுக்ம
மந்வச்ர நாகதல ஸம்யுத ஷோடசாரம் |
வ்ருத்தத்ரயம் ச தரணீ ஸதந த்ரயம் ச
ஸ்ரீசக்ரமேதத் உதிதம் பரதேவதாயா: ||

என்றதினுல், நடுமத்தியில் உள்ள பிந்து, த்ரிகோணம், எட்டுகோணம், இருபது அரம், எட்டு தளம், பதினுறு தளம், இவைகளோடு கூடின பதினுறு அரம். மூன்று வர்துளாகாரமான ரேகை, பூபுரத்ரயம் இவைகள் சேர்ந்து ஸ்ரீ சக்ரம் என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஸம்ஹார க்ரமமாக ஸ்ரீசக்ரத்தின் நிர்மாணத்தை அடியிற்கண்டபடி அறியவும்:—

---

*[நான்கு திக்குகளிலும் நான்கு த்வாரமுள்ள வலயாகாரமான மூன்று ரேகைகள்]

அதோமுகமாக நான்கு த்ரிகோணங்களையும் ஊர்த்வமுகமாக ஐந்து த்ரிகோணங்களையும் எழுதி, ஊர்த்வ முகமாக உள்ள முதல்த்ரிகோணத்தினுடைய நடுவில் பிந்துவை எழுதவும். ஊர்த்வமுகமான ஐந்து கோணம், அதோமுகமான நான்கு கோணம், இவைகள் சேர்ந்து ஓன்பது கோணங்களுக்கும் மேல் பாகத்தில் எட்டு தளபத்மமும், அதைச் சுற்றி 16 தள பத்மமும். அதைச் சுற்றி மூன்று மேகலையாகிய ரேகைகளும், பிறகு சதுரச்ரமாக மூன்று ரேகைகளிலும், நாலு திக்குகளிலும் நான்கு த்வாரங்களுடன் மூன்று ரேகைகளை எழுதவும். இந்த மூன்று ரேகைகளைத்தான் ப்ராகார்ரவலயம் என்று சொல்லப்படும். இவ்விதம் எல்லா கோணங்களும் சேர்ந்து 44 கோணங்களாக ஆகிறபடியால், चतुश्चत्वारिंशत् तव चरण कोणाः परिणताः (அத~ஶ்வாரிஂஶஶ் தவ அரணகொணாঃ வரிணதாঃ) (சதுச்சத்வாரிம்சத் தவசரணகோணா: பரிணதா:) என்று பகவத்பாதாளவர்கள் சொல்கிருர்கள். இதில், सतद्वाष्टारगमन्ता संहार्यं (ஸதத்ஷாரமஉந்தா ஸஂஹாயஂ) (ஸதத்வாஷ்டாரகமந்தா ஸம்ஹார்யம்) என்ற ச்ருதியே ப்ரமாணமாகும்.

ஸ்ரீசக்ரமென்றதோ மேரு ப்ரஸ்தாரம் என்றும், கைலாஸ ப்ரஸ்தாரமென்றும், பூ ப்ரஸ்தாரம் என்றும் மூன்றுவிதமாகச் சொல்லப்படும். இம்மூன்று வித வித்யாசங்களும் மந்த்ர பேதங்களால் ஏற்பட்டவைகள். ஷோடசாக்ஷரி என்ற மஹாமந்த்ரத்தின் க்ரமத்தை அனுஸரித்து ஏற்பட்ட ஸ்ரீசக்ரத்தை மேரு ப்ரஸ்தாரமென்றும், மாத்ருகா வர்ணத்தின் க்ரமத்தால் ஏற்பட்ட ஸ்ரீசக்ரத்தை கைலாஸப்ரஸ்தாரமென்றும், வசினீ முதலான தேவதைகளின் க்ரமத்தை அனுஸரித்து ஏற்பட்ட ஸ்ரீ சக்ரத்தை பூப்ரஸ்தாரமென்றும் சொல்லுவார்கள். இவைகளுடைய விவரங்களைப் பற்றி பின்வரும் चतुष्ट्या तन्त्रैः (அத~ஷஷ்டீா தந்த்ரைঃ) (சதுஷ்ட்யா தந்த்ரை:)

என்ற ச்லோகத்தின் தாத்பர்யத்தை ப்ரசுரிக்கும் ஸந் தர்ப்பத்தில் ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொள்ளலாம். இவ்விதமான ப்ரஸ்தார க்ரமத்தை அனுஸரித்து பரதேவதையானவள் ஸ்ரீசக்ரரூபிணியானதினுல், ஸ்ரீ சக்ர ரூபிணியான தேவியை, முமுக்ஷுக்கள் ஆரா திக்கவேண்டிய தவச்யமாகும். தேவியினுடைய பூஜாவிதானப்படி ஒன்பதுவிதமான ஆவரண தேவ தைகள் ஏற்பட்டுள்ளன. இந்த ஆவரண தேவதை களைப்பற்றி மந்த்ர சாஸ்த்ரங்களில் விவரிக்கப்பட்டி ருக்கின்றன. சுத்த சக்திமாலா மந்த்ரம் என்பது இந்த ஒன்பதுவிதமான ஆவரணதேவதைகளின் ஸ்வ ரூபத்தை போதிக்கின்ற மந்த்ரங்களாகவே ஆகும். இந்த ஒன்பது தேவதைகளும் ஸ்ரீசக்ரத்தி லடங்கி இருக்கின்றார்கள். இதில் ஒன்பதாவது தேவதை யாகிய பரமேச்வரீ மஹாபிந்துவாகச் சொல்லப்படு வாள். ஆகையால் ஸ்ரீசக்ரத்தில் ஒன்பதுவிதமான கோணங்களுடைய மத்தியில் எழுதப்பட்டுள்ள பிந்து வில் தேவியினுடைய பரிபூர்ண ஸ்வரூபம் நித்ய ஸாந் நித்யத்தை அடைந்திருப்பதினுல், பிந்துவில்தான் பூஜைகளைச் செய்யவேண்டும். தங்கத்திலோ, வெள்ளியிலோ, தாம்பரத்திலோ, பஞ்சலோகத் திலோ. பூர்ஜபத்ரத்திலோ, சந்தனத்திலோ ஸ்ரீசக் ரத்தை மேற்கண்ட ச்லோகத்தில் சொல்லிய ப்ரகா ரம் எழுதி எந்த உபாஸகன் ப்ரதி தினமோ, ப்ரதி சுக்ரவாரமோ, ப்ரதி பௌர்ணமியிலோ, பூஜை செய்துவருகின்றானோ, அவனுக்கு தேவி ப்ரத்யக்ஷ மாக ஆகி, அவனுடைய அபீஷ்டத்தைப் பூர்த்திசெய் கிறாள். ஆகையால் ச்ரேயஸ்ஸை விரும்பும் மஹான் கள் அவச்யம் ஸ்ரீசக்ரரூபிணியான தேவியை ஆரா திக்கவேண்டும். இவ்விதம் க்ரமமாக நியமத்துடன் தேவியை ஆராதிக்க சக்தியில்லாத ஜனங்கள், மேற் சொன்ன ச்லோகத்தை ஜபம் செய்துவந்தாலேயே தேவியினுடைய தர்சனத்தை அடைந்து, ஜன்ம ஸாபல்யத்தை அடையலாம். 44 கோணங்கள்

தேவியினுடைய சரணகோணங்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றபடியால், ஒவ்வொரு கோணங்களேயும் ஒவ்வொரு ஸஹஸ்ரமாக பாவித்து 44,000 ஆவர்த்தி இந்த ச்லோகத்தை ஜபித்தால் ஸித்தியடையலாம் என்றும் ஸூசிப்பிக்கப்படுகிறது. ஒவ்வொரு தினத்திலும், ஸுகந்தியான சந்தனத்தில் மேற்சொன்ன ப்ரகாரம் ஸ்ரீசக்ரத்தை எழுதி பிந்து ஸ்தானத்தில் பரதேவதையை மூலமந்த்ரத்தால் பூஜித்து, இந்த ச்லோகத்தை ஜபித்துவரவேண்டும். தன் சக்தியை அனுஸரித்து ஜபம் ஆனவுடன் பூஜையை முடித்து, அந்த சந்தனத்தை சரீரத்தில் பூசிக்கொள்வதோ, உள்ளுக்குள் சாப்பிடுவதோ எப்படிச் செய்தாலும், இந்த ஸாதகன் 44,000 ஆவர்த்தி முடியுங்காலத்தில் தேவியினுடைய ஸ்வரூபத்தைப் பார்த்து ஸர்வவித்யையிலும் பாரங்கதனுக ஆவதோடுங்கூட, அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம். வசித்வம் என்ற எட்டுவிதமான ஸித்தியையும் கைகொண்டு, மூன்று லோகங்களிலும் பூஜிக்கத்தகுந்தவனுக ஆகி ஜன்ம ஸாபல்யத்தையும் அடைகிருன். இந்த ஸ்ரீசக்ர பூஜையிலோ, ஸ்ரீசக்ர உத்தாரணத்தை வெளிப்படுத்தும் ச்லோகத்தைப் பாராயணம் செய்வதிலோ, அதிகார ஸம்பத்தியானது பூர்வ புண்யத்தால்தான் ஏற்படவேண்டும்.

---

## 12. தேவியின் ஸௌந்தர்ய வர்ணனம்

त्वदीयं सौन्दर्यं तुहिनगिरिकन्ये तुलयितुं
कवीन्द्राः कल्पन्ते कथमपि विरिञ्चिप्रभृतयः ।
यदालोकौत्सुक्यादमरललना यान्ति मनसा
तपोभिर्दुष्प्रापामपि गिरिशसायुज्यपदवीम् ॥ १२ ॥

𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑌂 𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌂 𑌤𑍁𑌹𑌿𑌨𑌗𑌿𑌰𑌿𑌕𑌨𑍍𑌯𑍇 𑌤𑍁𑌲𑌯𑌿𑌤𑍁𑌂
𑌕𑌵𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌃 𑌕𑌲𑍍𑌪𑌨𑍍𑌤𑍇 𑌕𑌥𑌮𑌪𑌿 𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌿𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌯𑌃 ।
𑌯𑌦𑌾𑌲𑍋𑌕𑍌𑌤𑍍𑌸𑍁𑌕𑍍𑌯𑌾𑌦𑌮𑌰𑌲𑌲𑌨𑌾 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌨𑌸𑌾
𑌤𑌪𑍋𑌭𑌿𑌰𑍍𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑌾𑌮𑌪𑌿 𑌗𑌿𑌰𑌿𑌶𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌪𑌦𑌵𑍀𑌮𑍍 ॥

த்வதீயம் ஸௌந்தர்யம் துஹிநகிரிகந்யே துலயிதும்
கவீந்த்ரா: கல்பந்தே கதமபி விரிஞ்சி ப்ரப்ருதய: ।
யதாலோகௌத்ஸுக்யாதமரலலநாயாந்தி மநஸா
தபோபிர்துஷ்ப்ராபாமபி கிரிஸஸாயுஜ்யபதவீம் ॥ 12 ॥

हे तुहिनगिरिकन्ये (𑌹𑍇 𑌤𑍁𑌹𑌿𑌨𑌗𑌿𑌰𑌿𑌕𑌨𑍍𑌯𑍇) (ஹே துஹிநகிரிகந்யே) = பனியை ப்ரதானமாக உடைய பர்வத ராஜனுடைய புத்ரியே!

त्वदीयम् (𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑌮𑍍) (த்வதீயம்) = உன் தேகத்தைச் சார்ந்த

सौन्दर्यं (𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌂) (ஸௌந்தர்யம்) = லாவண்யத்தை

तुलयितुं (𑌤𑍁𑌲𑌯𑌿𑌤𑍁𑌂) (துலயிதும்) = ஓர் த்ருஷ்டாந்த மூலமாக வர்ணிப்பதற்கு

विरिञ्चि प्रभृतय: (𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌿 𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌯𑌃) (விரிஞ்சி ப்ரப்ருதய:) = ப்ரம்மா முதலான

कवीन्द्रा: (𑌕𑌵𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌃) (கவீந்த்ரா:) = பெரிய க்ரந்த கர்த்தாக்களான மஹாகவிகள்கூட்

कथमपि (𑌕𑌥𑌮𑌪𑌿) (கதமபி) = ச்ரமப்பட்டும்

कल्पन्ते (𑌕𑌲𑍍𑌪𑌨𑍍𑌤𑍇) (கல்பந்தே) = ஸமர்த்தர்களாக ஆகிறார்களா? ஆகவேயில்லை;

यत् (𑌯𑌤𑍍) (யத்) = யாதொரு காரணத்தால்

असरललना: (அமரலலநா:) = ரம்பை, ஊர்வசி முத
(அமரலலநா:) லான தேவ ஸ்த்ரீகள்

आलोकौत्सुक्यात् = உன்னுடைய ஸௌந்தர்
(ஆலோகௌத்ஸுக்யாத்) யத்தைப் பார்ப்பதில்
(ஆலோகௌத்ஸுக்யாத்) பரம உத்ஸாஹத்தோடு
கூடியிருக்கும் நிமித்தமாக

तपोभिः (தபோபி:) = க்ருச்ர சாந்த்ராயணாதி
(தபோபி:) வ்ரதானுஷ்டானங்களால்

दुष्प्रापामपि (துஷ்ப்ராபாமபி) = கஷ்டப்பட்டும் அடைய
(துஷ்ப்ராபாமபி) முடியாததான

गिरिशसायुज्यपदवीम् = சிவதேஹத்தில் ஐக்யமாகு
(கிரிஶஸாயுஜ்ய வதை,
பதவீம்) (கிரிசஸாயுஜ்ய
பதவீம்)

मनसा (மநஸா) (மநஸா) = மனதினல்

यान्ति (யாந்தி) (யாந்தி) = அடைகிறார்கள்.

தாத்பர்யம் :—ப்ரம்மா, ப்ருஹஸ்பதி, விஷ்ணு, இந்த்ரன் முதலான மஹா கவிகளால்கூட பார்வதராஜ புத்ரியான பராசக்தியினுடைய தேஹஸௌந்தர்யத்திற்கு ஒரு உபமானம் சொல்லி வர்ணிக்க சக்தியில்லை. ஊர்வசி, ரம்பை முதலிய தேவஸ்த்ரீகளை உபமானமாகச் சொல்லாமோ என்றாலும், அதுவும் ஸாத்யமில்லை. அநேககோடி ஊர்வசி ரம்பைகளைச் சேர்ந்த அந்த ஸமஷ்டி ஸௌந்தர்யத்தைக்கூட அம்பாளுடைய தேக ஸௌந்தர்யத்தின் லேசாலேசத்திற்கு உபமானமாகச் சொல்லமுடியாமல் ப்ரம்மாதிகள் கஷ்டப்படுகிறார்கள். தேவஸ்த்ரீகளு

டைய ஸமஷ்டி ஸௌந்தர்யங்கூட அம்பாளுடைய ஸௌந்தர்ய லேசத்திற்கு ஈடாகாது. ஏனென்றால் ஊர்வசி முதலான தேவஸ்த்ரீகளே அம்பாளுடைய ஸௌந்தர்யத்தைப் பார்த்து, வ்யாமோஹத்தை யடைந்தார்கள். தன் தேக அழகை ஓரழகாக எப்படி சொல்லிக்கொள்வதென்ற லஜ்ஜையுடன் தேவியி னுடைய ஸௌந்தர்யத்தின் முடிவு எவ்வளவு தூரந் தான் போகிறதென்பதைப் பார்க்கவேண்டுமென்ற எண்ணத்தால், தேவியானவள் பரப்ரம்மமஹிஷியான காரணத்தைக் கொண்டு, தேவஸ்த்ரீகளுக்குக்கூட தேவியினுடைய அருகில் போய் பார்க்கமுடியாமல், தேவியினுடைய அருகில் போகக்கூடிய காமேச்வரரு டைய திவ்ய ஸாயுஜ்யத்தை தபஸ்ஸினால் அடைய மனதில் இச்சிக்கிறார்கள். இவ்விதம் தேவஸ்த்ரீ களுக்கே அம்பிகையினுடைய தேக ஸௌந்தர் யம், அளவிடமுடியாமலிருக்குமானால் பும் பாவத்தை யடைந்த கவிகளுக்கு, அந்த மாதாவினுடைய ஸௌந் தர்யம் எவ்விதம் வர்ணிக்கத் தகுந்ததாக ஆகும்? அந்த தேவியினுடைய ஸௌந்தர்யத்திற்கு உப மானமாக ஒரு வஸ்துவும், லோகத்தில் கவிகளுக்கு அகப்படவில்லை. அதனால் தேவியினுடைய ஸௌந் தர்யவர்ணனத்தில் கவிகள் அநந்வயாலங்காரத்தைத் தான் ஆச்ரயிக்க வேண்டியதாயிருக்கிறது. அதா வது தேவியினுடைய ஸௌந்தர்யத்திற்கு, தேவியினு டைய ஸௌந்தர்யந்தான் உபமானமாகிறது. இவ் விதம் அபரிச்சின்னமான ஸௌந்தர்யத்தோடு கூடின பரதேவதையினுடைய சரணகமலத்தை ஆராதிக் கிற புண்ய ஜனங்களுக்கு ஸ்ரீமாதாவினுடைய அனுக் ரஹத்தால் ஸகலவிதமான ஸௌபாக்யமும் ஏற்படு மென்பதில் ஆக்ஷேபணையேயில்லை. ஆகையால் முன் ஜன்மாக்களில் தவஞ்செய்த பாக்யவான்கள் தேவியை மேற்சொன்ன ச்லோகத்தால் ஸ்தோத்ரம் செய்து வருவார்கள் என்பது திண்ணம்.

---

## 13. தேவியினுடைய கடைக்கண் பார்வையின் மஹிமை

नरं वर्षीयांसं नयनविरसं नर्मसु जडं
तवापाङ्गालोके पतितमनुधावन्ति शतशः ।
गळद्वेणीबन्धाः कुचकलशविस्रस्तसिचया
हठात्त्रुट्यत्काञ्च्यः विगलितदुकूला युवतयः ॥ १३ ॥

𑌨𑌰𑌂 𑌵𑌰𑍍𑌷𑍀𑌯𑌾𑌂𑌸𑌂 𑌨𑌯𑌨𑌵𑌿𑌰𑌸𑌂 𑌨𑌰𑍍𑌮𑌸𑍁 𑌜𑌡𑌂
𑌤𑌵𑌾𑌪𑌾𑌙𑍍𑌗𑌾𑌲𑍋𑌕𑍇 𑌪𑌤𑌿𑌤𑌮𑌨𑍁𑌧𑌾𑌵𑌨𑍍𑌤𑌿 𑌶𑌤𑌶𑌃 ।
𑌗𑌳𑌦𑍍𑌵𑍇𑌣𑍀𑌬𑌨𑍍𑌧𑌾𑌃 𑌕𑍁𑌚𑌕𑌲𑌶𑌵𑌿𑌸𑍍𑌰𑌸𑍍𑌤𑌸𑌿𑌚𑌯𑌾
𑌹𑌠𑌾𑌤𑍍𑌤𑍍𑌰𑍁𑌟𑍍𑌯𑌤𑍍𑌕𑌾𑌂𑌚𑍍𑌯𑌃 𑌵𑌿𑌗𑌳𑌿𑌤𑌦𑍁𑌕𑍂𑌲𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌃 ॥ ௧௩ ॥

நரம் வர்ஷீயாம்ஸம் நயநவிரஸம் நர்மஸு ஜடம்
தவாபாங்கா லோகே பதித மநுதாவந்தி சதச: ।
களத்வேணீ பந்தா: குசகலசவிஸ்ரஸ்தஸிசயா:
ஹடாத்த்ருட்யத் காஞ்ச்ய: விகளித துகூலா யுவதய: ॥13॥

हे ! भगवति (𑌹𑍇! 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே! பகவதி) = ஹே! பராசக்தியான தேவியே!

वर्षीयांसं (𑌵𑌰𑍍𑌷𑍀𑌯𑌾𑌂𑌸𑌂) (வர்ஷீயாம்ஸம்) = மிகவும் வயது முதிர்ந்த கிழவனையும்

नयनविरसं (𑌨𑌯𑌨𑌵𑌿𑌰𑌸𑌂) (நயநவிரஸம்) = கண்களில் காமாலை முதலான தோஷங்களால் குரூபியாயும்

नर्मसु जडं (𑌨𑌰𑍍𑌮𑌸𑍁 𑌜𑌡𑌂) (நர்மஸு ஜடம்) = ஸுரதக்ரீடையின் பெருமையை அறியாதவனையும் இருந்தாலும்

तव (தவ) (தவ) = உன்னுடைய

अपाङ्गालोके (ஊவாஜூ ரொகெ) (அபாங்கா லோகே) = கடைக்கண்பார்வையின் வழியில்

पतितं (வதிதம்) (பதிதம்) = தவறிவந்தவனை

नरं (நரம்) (நரம்) = மனிதனை

मदनं (மதநம்) (மதநம்) = மன்மதனுக

मत्वा (மக்வா) (மத்வா) = எண்ணி

शतशः (ஶதஶஃ) (சதச:) = அநேகம் பேர்களான

युवतयः (யுவதயஃ) (யுவதய:) = ஸௌந்தர்யமுள்ள பெண்கள்

गलद्वेणी बन्धाः (மலத்வெணீ ஸுநாஃ) (களத்வேணீ பந்தா:) = அவிழ்ந்துபோன தலை மயிர் முடியோடு கூடினவர்களாயும்

कुचकलश विस्रस्त सिचयाः (குசகலஶ விஸ்ரஸ்த ஸிசயாஃ) (குசகலச விஸ்ரஸ்த ஸிசயா:) = கலசம்போன்ற ஸ்தனங்களிருந்து நழுவிப்போன தலைப்பு முடிச்சோடு கூடினவர்களாயும்

हठात् (ஹடாத்) (ஹடாத்) = சீக்ரமாக

त्रुट्यत्काञ्च्यः (த்ருட்யத்காஞ்ச்யஃ) (த்ருட்யத்காஞ்ச்ய:) = பூட்டு முறிந்த ஒட்டியாணத்தோடு கூடியவர்களாயும்

| | |
|---|---|
| विगलितदुकूला: (ஷிமஸிதஷுகூஸா:) (விகளிததுகூலா:) | = நழுவிப்போன இடுப்பி லுள்ள வெண்பட்டோடு கூடியவர்களாயும் |
| सत्य: (ஸத்ய:) (ஸத்ய:) | = இருந்துகொண்டு |
| अनुधावन्ति (ஊநுயாவஞி) (அநுதாவந்தி) | = பின்தொடர்ந்து ஓடுகின் றுர்கள். |

தாத்பர்யம்:—ஸ்ரீ தேவியினுடைய கடைக்கண் பார்வை எந்த மனிதனிடத்தில் விழுகிறதோ அவன் பரம ஸௌபாக்யத்தை அடைகிருனென்று இந்த ச்லோகத்தால் வர்ணிக்கப்படுகிறது.

ஓர் மனிதன் முதிர்ந்த கிழவனுயும், காமாலை முதலிய ரோகங்களால் விகாரமான கண்ணேடு கூடியவனுயும், ஸ்த்ரீ ஸுகத்தின் பெருமையை கொஞ்சமேனும் அறியாதவனுயும், மிகவும் மூடனுன பரம ப்ராக்ருதனுகவும் இருந்தாலும், பராசக்தியினுடைய கடைக்கண் பார்வையின் வழியில் பூர்வ புண்ய வசத்தால் வந்து சேர்ந்து தேவியின் கடாக்ஷத்திற்கு பாத்ரனுக ஆகிவிட்டால், அந்த மனிதனை பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகமென்ற மூன்று லோகத்திலுள்ள ஸ்த்ரீகளும் அவனை மன்மதனுக அறிந்து, இவன் மன்மதன்தான் என்ற எண்ணத்துடன் பின்தொடர்ந்து போகிருர்கள். இதனுல் துர்பகனுன மனிதனையும் ஸுபகனுக செய்துவைக்கும்படியான சக்தி விசேஷம் தேவியினுடைய கடாக்ஷத்திற்கு இருக்கிறதென்பதாவது ஸூசிப்பிக்கப்படுகிறது.

இந்த ச்லோகத்தை ஸ்த்ரீவச்யகரம் என்று மஹான்கள் வர்ணித்திருக்கிருர்கள். ஆனுலும் ப்ராக்ருதமான ஸ்த்ரீகளினுடைய வச்யத்தை மாத்ரம் தேவியினுடைய கடாக்ஷபாதம் உண்டுபண்ணுகிறதென்

பது மாத்ரம் போதாது. இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்ட ஸ்த்ரீகளோ அப்ராக்ருதமான ஸ்த்ரீகளாகிய உபநிஷத்துக்கள் என்றதை அறியவும். உபநிஷத்துக்களுக்கு ஸச்சிதானந்த ரூபமான பரப்ரஹ்மம் என்ற காமேச்வரனிடத்தில்தான் பரம தாத்பர்யம் என்பதை உபக்ரமோபஸம்ஹார ஐக்யம், அப்யாஸம், அபூர்வத்வம்,பலம், அர்த்தவாதம்,உபபத்தி என்ற ஆறுவிதமான தாத்பர்ய லிங்கங்களால் அறியவேண்டும். தேவியினுடைய கடாக்ஷபாதம் எந்த மனிதனிடத்தில் விழுந்தாலும் அவன் காமேச்வரன் என்ற பரப்ரம்மமாகவே ஆகிவிடுகிருன். அதனுல் ப்ரம்மத்தைத் தேடிவரும் உபநிஷத்துகளாகிற திவ்ய ஸ்த்ரீகள் தேவியினுடைய கடாக்ஷத்திற்குப்பாத்ரனுன மனிதனே பரப்ரஹ்மம் என்று நினேத்து தான் குறிப்பிடும் வஸ்து இந்த மஹாநுபாவன்தான் என்று நினேத்து இவனேப் பின்தொடர்ந்து ஓடுகிருர்கள் என்றுதான் இதன் தத்வம் என்பதை அறியவேண்டும். அதாவது பூர்வ புண்யத்தால் பராசக்தியின் கடாக்ஷத்திற்கு பாத்ரனுக ஆகிருன். உடனே அந்த புருஷன் காமேச்வர ஸாயுஜ்யத்தை அடைந்து ஸகலமான உபநிஷத்துக்களில் ப்ரதிபாதிக்கப்படுகிற மஹிமையோடு கூடின பரப்ரஹ்மமாக விளங்கிவருகிருன் என்ற அர்த்தத்தை அறியவும்.

——: o :——

## 14. ஆதாரசக்ரத்தின்மேலுள்ள தேவியின் வர்ணனம்.

क्षितौ षट्पञ्चाशद्द्विसमधिक पञ्चाशदुदके
हुताशे द्वाषष्टिः चतुरधिक पञ्चाशदनिले ।
दिविद्विष्षट्त्रिंशत् मनसिच चतुः षष्टिरितिये
मयूखाः तेषामप्युपरि तव पादाम्बुजयुगम् ॥ १४ ॥

𑌕𑍍𑌷𑌿𑌤𑍌 𑌷𑌟𑍍𑌪𑌞𑍍𑌚𑌾𑌶𑌦𑍍𑌦𑍍𑌵𑌿𑌸𑌮𑌧𑌿𑌕 𑌪𑌞𑍍𑌚𑌾𑌶𑌦𑍁𑌦𑌕𑍇
𑌹𑍁𑌤𑌾𑌶𑍇 𑌦𑍍𑌵𑌾𑌷𑌷𑍍𑌟𑌿𑌃 𑌚𑌤𑍁𑌰𑌧𑌿𑌕 𑌪𑌞𑍍𑌚𑌾𑌶𑌦𑌨𑌿𑌲𑍇 ।
𑌦𑌿𑌵𑌿 𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌷𑌟𑍍𑌤𑍍𑌰𑌿𑌂𑌶𑌤𑍍 𑌮𑌨𑌸𑌿 𑌚 𑌚𑌤𑍁𑌃 𑌷𑌷𑍍𑌟𑌿𑌰𑌿𑌤𑌿𑌯𑍇
𑌮𑌯𑍂𑌖𑌾𑌃 𑌤𑍇𑌷𑌾𑌮𑌪𑍍𑌯𑍁𑌪𑌰𑌿 𑌤𑌵 𑌪𑌾𑌦𑌾𑌂𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑌮𑍍 ॥ ௧௪ ॥

க்ஷிதௌ ஷட்பஞ்சாசத்விஸமதிக பஞ்சாசதுதகே
ஹுதாசே த்வாஷஷ்டி: சதுரதிகபஞ்சாசதநிலே ।
திவித்விஷ் ஷட்த்ரிம்சத் மநஸிச சது: ஷஷ்டிரிதியே
மயூகா: தேஷாமப்யுபரி தவ பாதாம்புஜயுகம் ॥ 14 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பரதேவதையே!

ये (𑌯𑍇) (யே) = எந்த

मयूखा: (𑌮𑌯𑍂𑌖𑌾𑌃) (மயூகா:) = கிரணங்கள்

क्षितौ (𑌕𑍍𑌷𑌿𑌤𑍌) (க்ஷிதௌ) = ப்ருத்வீ தத்வமாகிற மூலாதார சக்ரத்தில்

षट्पंचाशत् (𑌷𑌟𑍍𑌪𑌂𑌚𑌾𑌶𑌤𑍍) (ஷட் பஞ்சாசத்) = ஐம்பத்தாறுகளோ

उदके (𑌉𑌦𑌕𑍇) (உதகே) = ஜல தத்வமாகிய மணி பூரக சக்ரத்தில்

द्विसमधिकपंचाशत् (𑌦𑍍𑌵𑌿𑌸𑌮𑌧𑌿𑌕 𑌪𑌂𑌚𑌾𑌶𑌤𑍍) (த்விஸமதிகபஞ்சாசத்) = ஐம்பத்திரண்டுகளோ

| | |
|---|---|
| हुताशे (𑌹𑍁𑌤𑌾𑌶𑍇) (ஹுதாசே) | = அக்னி தத்வமாகிற ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் |
| द्वाषष्टि: (𑌦𑍍𑌵𑌾𑌷𑌷𑍍𑌟𑌿𑌃) (த்வாஷஷ்டி:) | = அறுபத்திரண்டுகளோ |
| अनिले (𑌅𑌨𑌿𑌲𑍇) (அநிலே) | = வாயு தத்வமாகிற அநாஹத சக்ரத்தில் |
| चतुरधिक पंचाशत् (𑌚𑌤𑍁𑌰𑌧𑌿𑌕 𑌪𑌂𑌚𑌾𑌶𑌤𑍍) சதுரதிக பஞ்சாசத்) | = ஐம்பத்து நான்குகளோ |
| दिवि (𑌦𑌿𑌵𑌿) (திவி) | = ஆகாச தத்வமாகிற விசுத்தி சக்ரத்தில் |
| द्वि: षट्त्रिंशत् (𑌦𑍍𑌵𑌿𑌃 𑌷𑌟𑍍𑌤𑍍𑌰𑌿𑌂𑌶𑌤𑍍) (த்வி: ஷட்த்ரிம்சத்) | = எழுபத்திரண்டுகளோ |
| मनसि च (𑌮𑌨𑌸𑌿 𑌚) (மநஸிச) | = மனஸ் தத்வமாகிற ஆக்ஞா சக்ரத்தில் |
| चतु: षष्टि: (𑌚𑌤𑍁𑌃 𑌷𑌷𑍍𑌟𑌿𑌃) (சது: ஷஷ்டி:) | = அறுபத்தி நான்குகளோ |
| इति (𑌇𑌤𑌿) (இதி) | = என்பது சாஸ்த்ர ப்ரஸித்தமானதுகளோ |
| तेषां (𑌤𑍇𑌷𑌾𑌂) (தேஷாம்) | அந்த கிரணங்களுடைய |
| उपर्यपि (𑌉𑌪𑌰𑍍𑌯𑌪𑌿) (உபர்யபி) | = மேலானதான ஸஹஸ்ரதள கமலம் என்று சொல்லப்படுகிற ப்ரம்ம |

ரந்த்ர சக்ரத்திற்கும் நடுவிலிருக்கும் சந்த்ர பிம்ப ரூபமான பைந்தவ ஸ்தானத்தில்

तव (தவ) (தவ) = உன்னுடைய

पादांबुजयुगं (வாஓாஂவுஜ யுாமஂ) (பாதாம்புஜ யுகம்) = இரு பாத கமலங்கள்

वर्तते (வதஂதெ) (வர்ததே) = விளங்கிவருகின்றன.

தாத்பர்யம்:—ஸ்ரீவித்யாதந்த்ரத்தில் ஸமயாசாரம் கௌலாசாரம் என்று ஆசாரம் இருவகைப்படும். பாஹ்ய பூஜா ப்ரதானமான ஆசாரத்தை கௌலாசாரம் என்றும் ஆந்தர பூஜாப்ரதானமான ஆசாரத்தை ஸமயாசாரம் என்றும் ஸ்ரீ வித்யாதத்வ வேதிகள் சொல்வார்கள். ஸமயாசாரத்தை அநுஸரித்து ஆந்தர பூஜாவிதானப்படி அந்தர்முகாள் அநுஸந்தானம் செய்யவேண்டிய ப்ரகாரமானது இந்த ச்லோகத்தால் சொல்லப்படுகிறது. மனிதனுடைய சரீரத்திற்குள் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு சக்ரங்கள் இருந்துவருகின்றன. இந்த ஆறுவிதமான சக்ரஸ்வரூபம்தான் ஸ்ரீ சக்ரம் என்பதே. ஸ்ரீ சக்ர ரூபமான இந்த ஆறுசக்ரங்களையும் மூன்று கண்டங்களாக சாஸ்த்ரத்தில் பிரிக்கப்பட்டிருக்கிறது. மூலாதாரமும், ஸ்வாதிஷ்டானமும் சேர்ந்து ஒரு கண்டமாகவும், மணிபூரகமும் அநாஹதமும் சேர்ந்து ஒரு கண்டமாகவும், விசுத்தியும் ஆக்ஞையும் சேர்ந்து மற்றொரு கண்டமாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. முதல் கண்டத்தினுடைய மேல்பாகத்தில் அக்னியினுடைய ஸ்தானம்; அதற்குத்தான் ருத்ரக்ரந்தி என்று

சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இரண்டாவது கண்டத்தினுடைய மேல்பாகத்தில் ஸூர்யனுடைய ஸ்தானம்; அதற்குத்தான் விஷ்ணுக்ரந்தியென்று பெயருண்டு. மூன்றாவது கண்டத்தின் மேல்பாகத்தில் சந்த்ரனுடைய ஸ்தானம்; அதற்கு ப்ரம்மக்ரந்தி என்று பெயர் வழங்கிவருகிறது. முதலாவது கண்டத்தின் மேல்பாகத்திலுள்ள அக்னியானது தன்னுடைய ஜ்வாலைகளால் முதல் கண்டம் முழுமையும் சூழ்ந்துகொண்டு வருகிறது. இரண்டாவது கண்டத்தின் மேல்பாகத்திலுள்ள ஸூர்யன் தன் கிரணங்களால் இரண்டாவது கண்டம் முழுமையும் சூழ்ந்துகொண்டு பாஸிக்கிறான். மூன்றாவது கண்டத்தின் மேல்பாகத்திலுள்ள சந்த்ரனோ தன்னுடைய கலைகளால் மூன்றாவது கண்டத்தை சூழ்ந்துகொண்டு விளங்குகிறான்.

மூலாதாரம் என்ற சக்ரத்தில் ப்ருத்வீதத்வமானது (அதாவது பார்த்திவமான ஒரு ஸ்வாயம்புவ லிங்கமானது) விளங்கிவருகிறது. அது அக்னியினுடைய ஸ்தானமானதினால், ஐம்பத்தாறு விதமான ஜ்வாலைகள் பாஸித்துக்கொண்டு வருகின்றன. மணிபூரக சக்ரத்தில் ஜலதத்வம். அதாவது அப்மயமான ஒரு ஸ்வாயம்புவலிங்கம் பாஸித்துவருகிறது. அதிலே ஐம்பத்திரண்டுவிதமான அக்னி ஜ்வாலைகள் ப்ரகாசித்து வருகின்றன. இவ்விதம் கணக்கிட்டுப்பார்த்தால் மூலாதாரத்தில் 56 விதமாயும், மணிபூரகத்தில் 52 விதமாயும் ப்ரகாசிப்பதை கவனித்து அக்னி ஜ்வாலைகள் 108 விதம் என்று அறியவும்.

அதுபோலவே, ஸ்வாதிஷ்டானத்தில் அக்னிதத்வம் பாஸித்துவருகிறது. அதாவது ஜ்யோதிர்மயமான மஹாலிங்கம் பாஸித்துவருகிறது. மணிபூரகமும் அநாஹதமும் சேர்ந்து ஸூர்யகண்டம் ஆனதாலும் மணிபூரகத்திற்கும் அநாஹதத்திற்கும் நடுவில், ஸ்வாதிஷ்டானசக்ரம் இருப்பதினாலும் அக்னிதத்வாத்

மகமான ஸ்வாதிஷ்டான சக்ரத்திலும், மணிபூரக சக்ரத்தில் ஸம்பந்தப்பட்ட ஸூர்யனுடைய கிரணங்கள் வீசவேண்டியதவச்யமானதினால் 62 ஸூர்ய கிரணங்கள் பாஸித்துவருகின்றன.

அவ்விதமே வாயுதத்வத்தினால் அலங்கரிக்கப்பட்ட அநாஹத சக்ரத்தில் 54 கிரணங்கள் வீசுகின்றன. அவ்விடத்தில் வாயுரூபமான ஸ்வாயம்புவ லிங்கம் விளங்கிவருகிறது. ஸ்வாதிஷ்டானத்தில் 62-ம் அநாஹதத்தில் 54 மாக ஸூர்ய கிரணங்களை 116 கிரணங்களாக பாவிக்கவேண்டியது.

மணிபூரகமும் அநாஹதமும் சேர்ந்து ஸூர்ய கண்டமென்று முன் சொல்லப்பட்டிருப்பதினால், மணிபூரகத்திற்கு மேலிருக்கும் ஸ்வாதிஷ்டானத்திலும் அநாஹதத்திலும் ஸூர்யகிரணங்களுக்கு ப்ரஸரணம் ஏற்பட்டதுபோல், மணிபூரக சக்ரத்தில் ஸூர்ய கிரணங்கள் இவ்வளவு என்று ஏன் சொல்லவில்லை என்றாலோ, ஸூர்யனும் அக்னியும் ஒன்றுதான் என்ற அபிப்ராயத்தைக்கொண்டு மணிபூரகத்திலுள்ள அக்னிஜ்வாலைகளிலேயே ஸூர்யகிரணங்களை அந்தர்பாவப்படுத்தவேண்டிய தவச்யமானதால், மணிபூரக சக்ரத்தில் ஸூர்ய கிரணங்கள் இவ்வளவு என்று தனிப்பட சொல்லவில்லை. அதுபோலவே மூலாதாரமும் ஸ்வாதிஷ்டானமும் சேர்ந்து அக்னி கண்டமானாலும் ஸ்வாதிஷ்டானத்தில் அக்னி ஜ்வாலைகள் இவ்வளவு என்று சொல்லாததற்கு காரணமும் ஸூர்யகிரணங்களால் அக்னிஜ்வாலைகளுக்கு அந்தர்பாவம் ஏற்பட்டதேதானாகும்.

---

## 15. உபாஸனத்தால் கவித்வப்ராப்தி
## (ஸாரஸ்வத ப்ரயோகம்)

शरज्ज्योत्स्नाशुद्धां शशियुतजटाजूटमकुटां
वरत्रासत्राणस्फटिकघटिका पुस्तककराम् ।
सकृन्नत्वा नत्वा कथमिव सतां संनिदधते
मधुक्षीरद्राक्षामधुरिमधुरीणाः फणितयः ॥ १५ ॥

𑌶𑌰𑌜𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌂 𑌶𑌶𑌿𑌯𑍁𑌤𑌜𑌟𑌾𑌜𑍂𑌟𑌮𑌕𑍁𑌟𑌾𑌂
𑌵𑌰𑌤𑍍𑌰𑌾𑌸𑌤𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌘𑌟𑌿𑌕𑌾 𑌪𑍁𑌸𑍍𑌤𑌕𑌕𑌰𑌾𑌂 ।
𑌸𑌕𑍃𑌨𑍍𑌨𑌤𑍍𑌵𑌾 𑌨𑌤𑍍𑌵𑌾 𑌕𑌥𑌮𑌿𑌵 𑌸𑌤𑌾𑌂 𑌸𑌂𑌨𑌿𑌦𑌧𑌤𑍇
𑌮𑌧𑍁𑌕𑍍𑌷𑍀𑌰𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌾𑌮𑌧𑍁𑌰𑌿𑌮𑌧𑍁𑌰𑍀𑌣𑌾𑌃
𑌫𑌣𑌿𑌤𑌯𑌃 ॥ ௧௫ ॥

*சரஜ்ஜ்யோத்ஸ்னாசுத்தாம் சசியுதஜடாஜூடமகுடாம்*
*வரத்ராஸத்ராணஸ்படிக கடிகா புஸ்தக கராம் ।*
*ஸக்ருந்நத்வா நத்வா கதமிவ ஸதாம் ஸந்நிதததே*
*மதுக்ஷீரத்ராக்ஷாமதுரிமதுரீணா: பணிதய: ॥ 15 ॥*

| | |
|---|---|
| हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) | = பராசக்தியான ஹே தாயே |
| शरज्ज्योत्स्नाशुद्धां (𑌶𑌰𑌜𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌂) (சரஜ்ஜ்யோத்ஸ்னாசுத்தாம்) | = சரத்கால சந்த்ரிகையை போல் ரொம்ப வெளுப்பான வர்ண முள்ளவளாயும் |
| शशियुत जटाजूट मकुटां (𑌶𑌶𑌿𑌯𑍁𑌤 𑌜𑌟𑌾𑌜𑍂𑌟 𑌮𑌕𑍁𑌟𑌾𑌂) (சசியுத ஜடாஜூட மகுடாம்) | = சந்த்ரகலையால் அலங்கரிக்கப்பட்ட தலை முடியோடும் நவரத்னங்களால் இழைக்கப்பட்ட க்ரீடத்தோடும் கூடினவளாயும் |

| | |
|---|---|
| वरत्रासत्राणस्फटिकघटिका पुस्तककरां (𑌵𑌰𑌤𑍍𑌰𑌾𑌸𑌤𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌘𑌟𑌿𑌕𑌾 𑌪𑍁𑌸𑍍𑌤𑌕𑌕𑌰𑌾𑌂) (வரத்ராஸத்ராண ஸ்படிககடிகா புஸ்தக காரம்) | = தனது பக்தர்களுக்கு அபீஷ்டமான வரனைக் கொடுக்கும் முத்ரையென்ன, யம பயத்தை நிவ்ருத்தி செய்து மோக்ஷத்தைக் கொடுக்கும் அபய முத்ரை யென்ன, ஸ்படிக மாலை யென்ன, புஸ்தகமென்ன, இவைகளை நான்கு கைகளிலும் அலங்காரமாக தரித்துக் கொண்டிருக்கிறவளாயுமுள்ள |
| त्वा (𑌤𑍍𑌵𑌾) (த்வா) | = உன்னை |
| सकृत् (𑌸𑌕𑍃𑌤𑍍) (ஸக்ருத்) | = ஒரே தடவை |
| नत्वा (𑌨𑌤𑍍𑌵𑌾) (நத்வா) | = நமஸ்காரம் பண்ணினதினால் |
| सतां (𑌸𑌤𑌾𑌂) (ஸதாம்) | = உன்னுடைய பக்தர்களுக்கு |
| मधुक्षीरद्राक्षा मधुरिमधुरीणाः फणितयः (𑌮𑌧𑍁𑌕𑍍𑌷𑍀𑌰𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌾𑌮𑌧𑍁𑌰𑌿𑌮𑌧𑍁𑌰𑍀𑌣𑌾𑌃 𑌫𑌣𑌿𑌤𑌯𑌃) (மதுக்ஷீரத்ராக்ஷா மதுரி மதுரீணா: பணிதய:) | = தேன், பால், த்ராக்ஷை இவைகளுடைய தித்திப்பை அதிகரித்து, தித்திப்புள்ள வாக்குகள் (அழகான வாக் விலாஸங்கள்) |

कथमिव (கயமிவ) (கதமிவ) = ஏன்

नसन्निदधते (நஸ ஞிதயதெ) நஸங்நிததததே) = தானுகவே நதி ப்ரவாகம் போல் ப்ரவாகித்து ஸாந் நித்யத்தை அடையாது. கட்டாயம் உன் பக்தர்களுக்கு மதுரமான வாக்குகள் ஸ்வயமாகவே ஸித்திக்கின்றன.

தாத்பர்யம்:—இந்த ச்லோகத்தால் பராசக்தியை உபாஸிக்கிற ஸ்ரீவித்யா உபாஸர்களுக்கு ஸகல வித்யைகளிலும் அபாரமான பாண்டித்யமும், ஸ்வயமாகவே கவனம் பண்ணக்கூடிய சக்தி விசேஷங்களும் ஏற்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. வித்யையில் மேன்மையை அடையவேண்டுமென்று நினைக்கும் மனிதன் இந்த ச்லோகத்தில் சொல்லிய படி தேவியை த்யானம் செய்யவேண்டும். த்யானம் பண்ணும் ப்ரகாரத்தையோ அடியிற் கண்டபடி அறியவும்.

"ஹே லோகமாதாவான பராசக்தியே! உன்னுடைய சரீரமோ சரத்காலத்தில் பூர்ண கலையோடு உதித்த சந்த்ரனுடைய சந்த்ரிகையானது எவ்விதம் வெண்ணிறமாயுள்ளதோ, அதுபோல் மிகவும் வெண்ணிறத்தோடு பாஸிக்கின்றது. அதனுல் ரஜோகுணமோ, தமோகுணமோ இந்த இரண்டுவிதமான குணங்களுடைய ஸம்பந்தமே உனக்கு இல்லையென்று வெளியாகுவதோடுங்கூட, நீ சுத்த ஸத்வமூர்த்தி யென்றும், உன் ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்துகின்ருய். அதனுல் ரஜோகுணத்திற்கும் தமோகுணத்திற்கும் அவகாசம் கொடுக்காமல் சுத்தமான ஸத்வகுணத்தையே ப்ரதானமாக அவலம்பித்த மஹாபுருஷர்களே உன்னு

டைய உபாஸனத்தில் அதிகாரமுள்ளவர்களென்று வெளியாகிறது. அத்துடன் ஹே, என் தாயே! உன்னுடைய ஜடாமுடியில் சந்த்ரகலையும், சிரஸ்ஸில் நீ தரித்துக்கொண்டிருக்கும் நவரத்னங்களால் இழைக்கப்பட்ட க்ரீடமும், எனக்கு உன்னுடைய சரணாரவிந்தத்தில் மிகுந்த பக்தியைக் கொடுத்து வருகிறது. சந்த்ர கலையை ஜடாமுடியில் தரிக்கும் பரமசிவ ஸ்வரூபத்தை, உன் ஸ்வரூபத்தில் நீ அடக்கிக்கொண்டு விட்டபடியால் உன் ஜடாமுடியில் அந்த சந்த்ரகலை காணப்படுகின்றது, அதனால் உன்னுடைய ஆராதனத்தால் காமேச்வரனுடைய ஆராதனமும் செய்ததாகவே ஸித்திக்கின்றது. அத்துடன் ஸகல லோகங்களையும் நீ ஆளுகிறவளென்பதை ஸூசிக்கின்றது உன் சிரஸ்ஸிலுள்ள விசேஷமான க்ரீடம். அதனாலும் நீ மஹாராக்ஞீ என்று எனக்கு நன்றாகப் புலப்படுகின்றது. அதோடு நான்கு கைகளோடு நீ கூடிக்கொண்டு விளங்கி வருகிற மஹிமையைப் பார்க்க என் மனமானது உன் திருவடியில் என்னை சரணாகதி அடையும்படியாக வற்புறுத்தி உனக்கு மேலான தெய்வமே கிடையாதென்றும் உபதேசிக்கின்றது. நீ ஒரு கையில் பக்தர்களுக்குக் கொடுக்கவேண்டிய அபீஷ்டமான வரன்களையும், மற்றொரு கையில் அபயமென்ற மோக்ஷத்தையும், மற்றொருகையில் ஸ்படிக மாலையையும், மற்றொரு கையில் புஸ்தகத்தையும் தரித்து வருகிறாயே, அது உன்னை தர்சனம் பண்ணுகிறவர்களுக்கு மிகுந்த ஆச்சர்யத்தைக் கொடுத்து வருகிறது. உன்னுடைய வரஹஸ்தம், அபய ஹஸ்தம், இவைகளின் உண்மையை உன்னுடைய கடாக்ஷத்தால் கொஞ்சம் நான் அறிந்தவனாக இருந்தாலும், ஸ்படிகமாலை, புஸ்தகம் இவைகளின் உண்மையை என்னால் அறியமுடியவில்லை. ஒரு ஸமயம் நீயே உன்னுடைய பக்த ஜனங்களுக்கு ஸ்படிகமாலையை கையில் தரித்துக்கொண்டு 'என்னுடைய மகாமந்த்ரத்தை நீ ஜபம் செய்து வந்தால் என்னுடைய ஸ்வ

ரூபம் உனக்கு ப்ரத்யக்ஷமாக புலப்படும்' என்பதைத் தான் ஸ்படிக மாலையை கையில் வைத்துக்கொண்டு போதிக்கின்றாயோ! அப்படி 'என் ஸ்வரூபம் ப்ரத்யக்ஷமான பிற்பாடு உனக்கு ஞானோபதேசம் பண்ணுவதற்கு நானே குருமூர்த்தியாக இருந்துவருகிறேன்' என்பதை கையில் புஸ்தகத்தை வைத்துக்கொண்டு போதிக்கின்றாயோ! நான் ஒன்றையும் அறியேன். உன் பரிபூர்ணமான கடாக்ஷமே எனக்கு ஸகலவிதமான சொத்து என்று என் நிச்சயம். மேல்சொன்னபடி உன் ஸ்வரூபத்தை த்யானம் செய்யும் புண்ய ஜனங்களுக்கு ஸரஸ்வதி கடாக்ஷம் பரிபூர்ணமாக ஏன் ஏற்படாது? தேன், பால், த்ராக்ஷை, இவைகளைக் காட்டிலும் மதுரமான தன்வாக்குகளால் ஸகல லோகங்களையும் தன்வசமாக்கிக் கொண்டு மஹாபண்டிதர்களாக விளங்கிவருவார்கள் என்பதற்கு ஆக்ஷேபணையே யில்லை. ஆகையால் நான் மேல்சொன்னபடி உன் ஸ்வரூபத்தை எப்பொழுதும் த்யானஞ் செய்து வருகிறபடியால் என்னையும் நீ மஹாகவியாகச் செய்யவேண்டுமென்று உன்னை சரணமடைகிறேன். உன்கடாக்ஷத்தால் மஹா கவியாக ஆவதற்கு உன்னுடைய ஸ்வரூபத்யானம் வரையிலுங் கூடப் போகவேண்டாம். உனக்கு ஒருதடவை நமஸ்காரம் செய்தாலே போதும். உன்னை நமஸ்காரம் பண்ணுகிறவர்களுடைய மனதிலே தான் கவித்வமென்ற அங்குரம் முளைக்கும். ஆகையால் மஹத்தான கவிதைக்குக் காரணமான உன்னுடைய நமஸ்காரத்தில் ஆவலுள்ள மனிதர்களே புண்யத்தைச் செய்தவர்களென்று சொல்லவேண்டும்.'' இவ்விதம் ஸகல ஜனங்களும் பராசக்தியினுடைய ஸ்வரூப த்யானத்தாலோ, ஸ்தோத்ரத்தாலோ, நமஸ்காரத்தாலோ, மஹாகவிகளாகத் தான் ஆகி ஞானலாபத்தை அடைந்து ஜன்ம ஸாபல்யத்தை அடைய முன்னுக்கு வரவேண்டும்.

இந்த ச்லோகமானது ஸாரஸ்வத ப்ரயோக மானதினாலும் இதற்கு அடுத்த மற்றும் இரண்டு ச்லோகங்களும் இந்த ச்லோகத்தைச்சார்ந்ததினாலும் ஸாரஸ்வத ப்ரயோகத்தின் க்ரமத்தை அந்த ச்லோகங்களின் தாத்பர்யத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

---

## 16. வித்யா விலாஸ லாபம்

कवीन्द्राणां चेतःकमलवनबालातपरुचिं
भजन्ते ये सन्तः कतिचिदरुणामेव भवतीम् ।
विरिञ्चिप्रेयस्यास्तरुणतरशृङ्गारलहरी
गभीराभिर्वाग्भिर्विदधति सतां रञ्जनममी ॥ १६ ॥

കവീന്ദ്രാണാം ചേതഃ കമലവനബാലാതപരുചിം
ഭജന്തേ യേ സന്തഃ കതിചിദരുണാമേവ ഭവതീം ।
വിരിഞ്ചിപ്രേയസ്യാസ്തരുണതരശൃങ്ഗാരലഹരീ
ഗഭീരാഭിർവാഗ്ഭിർവിദധതി സതാം രഞ്ജനമമീ ॥ ൧൬ ॥

கவீந்த்ராணும் சேத: கமலவந பாலாதபருசிம்
பஜந்தே யே ஸந்த: கதிசிதருணுமேவ பவதீம் ।
விரிஞ்சி ப்ரேயஸ்யாஸ்தருணதர ச்ருங்காரலஹரீ
கபீராபி: வாக்பிர் விதததி ஸதாம் ரஞ்சநமமீ ॥ 16 ॥

हे भगवति (ഹേ ഭഗവതി) (ஹே பகவதி) = ஹே பராசக்தியான தாயே

कवीन्द्राणां (കവീന്ദ്രാണാം) (கவீந்த்ராணும்) = சிறந்த வித்வான்களுடைய,

चेतःकमलवनबालातपरुचिं (செதஃகமலவநபாலா தவரு௱சிம்) (சேத: கமலவநபாலாதபருசிம்) = மனதாகிற தாமரைப் புஷ்பத்தினுடைய கூட்டத்தை மலரச்செய்யும் இளம் வெய்யில் காந்தியைப்போலொத்த காந்தியோடு கூடினவளாயும்

अरुणां (அரு௱ணாம்) (அருணாம்) = அருணை என்ற பெயருள்ளவளாயும், சிகப்பு வர்ண முள்ளவளாயும் இருக்கிற

भवतीम् (ஹவதீம்) (பவதீம்) = உம்மை

कतिचित् (கதிசித்) (கதிசித்) = சில

ये (யெ) (யே) = எந்த

सन्तः (ஸந்தஃ) (ஸந்த:) = ஸத்புருஷர்கள்

भजन्ते (ஹஜந்தெ) (பஜந்தே) = ஸேவிக்கின்றார்களோ

ते (தெ) (தே) = அந்த

अमी (அமீ) (அமீ) = இந்த ஸத்புருஷர்கள்

विरिञ्चिप्रेयस्याः (விரிஞ்சிப்ரெயஸ்யாஃ) (விரிஞ்சிப்ரேயஸ்யா:) = ப்ரும்மாவின் பத்னியான ஸரஸ்வதியினுடைய

तरुणतरशृङ्गारलहरीगभीराभिः (தரு௱ணதரசுரு௱ஙாரலஹரீ மஹீராஹிஃ) (தருணதரச்ருங்கார லஹரீ கபீராபி:) = மிகவும் யௌவனத்தை அடைந்த ச்ருங்கார ரஸத்தின் ப்ரதானமான ப்ரவாகம்போல், கம்பீரமான

वाग्भिः (வாஹ்பி:) (வாக்பி:) = வாக் விலாஸங்களால்

सतां (ஸதாம்) (ஸதாம்) = ஸப்யாளுக்கு

रञ्जनं (ரஞ்ஜநம்) (ரஞ்ஜநம்) = மனஸ்ஸந்தோஷத்தை

विदधति (விதததி) (விதததி) = செய்கின்றார்கள்.

தாத்பர்யம் :—இந்த ச்லோகமும் மனிதர்களுக்கு வித்யா விலாஸத்தை உண்டுபண்ணும் ஸாரஸ்வத ப்ரயோகத்தையே சேர்ந்ததாக ஆகிறது. சரீரத்திற்குள் ஹ்ருதய புண்டரீகத்தில், பகவதியை த்யானம் செய்ய வேண்டும். ஹ்ருதய கமலத்தில் பாஸித்துவரும் பராசக்திக்கு, அருணா என்ற பெயர் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த தேவியினுடைய சரீர காந்தியும், செம்பருத்தி பூவைப்போல் சிகப்பு வர்ணமுள்ளது. பெயராலும், காந்தியாலும் அருணை என்று உபாஸகர்களுடைய அனுபவத்தில் தேவியானவள் பாஸித்து வருகிறாள். அந்த பராசக்திக்கு எட்டு கைகளை த்யானம் செய்துகொள்ளவேண்டும். ஒரு கையில் பாசத்தையும், மற்றொரு கையில் ஈட்டியையும், மற்றொருகையில் கரும்பாகிய வில்லையும், மற்றொரு கையில் புஷ்பபாணங்களையும், மறறொரு கையில் வரன்களையும், மற்றொரு கையில் அபயம் என்ற மோக்ஷத்தையும், மற்றொருகையில் புஸ்தகத்தையும், மற்றொரு கையில் ஸ்படிக மாலையையும் வைத்துக்கொண்டு விளங்கிவருகிறாள். ஸூர்யன், சந்திரன், அக்னி, இந்த மூன்றுதத்வங்களும், அந்த பராசக்திக்கு மூன்று கண்களாக விளங்கி வருகின்றன. மஹா பிந்துவாகிய அம்ருதக் கடலில் வித்யா பீஜங்களை எழுதிக்கொண்டு விளையாடி வருகிறாள். அந்த தேவியினுடைய ஸ்வரூபம் அகார முதல் ளகார முடிய மாத்ருகாக்ஷரங்களே ஸ்வரூபமாக விளங்கிவருகிறபடியால் அக்ஷர ரூபமான ஸரஸ்வதியே அந்த பராசக்தியென்று வெளியாகிறது. ஸரஸ்வதி ரூபமானதால் உபாஸகாகர்களுக்கு பரிபூர்ண ஸரஸ்வதி கடாக்ஷத்தை அந்த தேவியானவள்

கொடுத்துவருகிறுள். அந்த தேவியினுடைய சரீர காந்தியானது சிகப்பு வர்ணமாக இருக்கும் காரணத்தாலும் உபாஸகர்களும் அவ்விதமே த்யானம் செய்த மஹிமையாலும் உபாஸகர்களுடைய முக கமலத்திலிருந்து பெருகிவரும் வாக் விலாஸங்களெல்லாம் ச்ருங்கார ரஸ ப்ரதானமாகவே விளங்குகின்றன. அவர்களுடைய வாக் விலாஸமாகிற அம்ருதத்தை பானம் செய்த ஸபையோர்களும் பரமானந்தத்தை அனுபவிக்கின்ருர்கள். அந்த உபாஸகர்களை நிமித்தமாக வைத்துக்கொண்டு அவர்களால் உபாஸிக்கப்பட்ட பராசக்தியே ஸபையில் உள்ள ஜனங்களை ச்ருங்கார ரஸ ப்ரதானமாக வாக் விலாஸங்களால் வ்யாமோஹப்படுத்துகிருள். அந்த ஸபாஸ்தலமானது இந்த்ரஸபைக்கும் மேலானதாகவே விளங்கிவரும். இவ்விதம் பராசக்தியை ஹ்ருதய கமலத்தில் உபாஸித்து தேவியினுடைய பரிபூர்ணமான அனுக்ரஹத்தையும் தான் அடைந்து இந்த உபாஸனத்தின் வைபவத்தை அனுபவித்த ப்ராசீன வித்வான்களுக்குள் காளிதாஸனை முதன்மையாக விவேகிகள் அறிந்து கொள்ளலாம். காளிதாஸனைப்போல் மஹாகவி வேறு யாரும் இல்லையென்பதையும் நிச்சயமாகச் சொல்லலாம். அந்த மஹாகவியினுடைய முக கமலத்திலிருந்து ப்ரவாஹித்துவரும் வாக்விலாஸமாகிய, அம்ருதப் பெருக்குகளில், ச்ருங்கார ரஸமே ப்ரதானமாக பாஸித்துவரும் மஹிமையையும், ஸாஹித்ய ரஸத்தை ஆஸ்வாதனம் பண்ணின வித்வான்கள் அறிந்த விஷயமே. அந்த காளிதாஸ மஹாகவியினுடைய வாக் விலாஸங்களெல்லாம் ச்ருங்கார ரஸ ப்ரதானம் என்பதற்கு சிறியதான ஒரு உதாஹரணத்தை கவனிக்கவும். அதாவது :—

உஜ்ஜயினி என்ற நகரத்தில் போஜன் என்ற அரசன் மஹா ப்ரஸித்தனுக விளங்கி வந்தான். அந்த அரசன், ப்ருக்ருதத்தில் உள்ள பராசக்தியை ஆரா

த்து தேவியினுடைய அனுக்ரஹத்திற்கு பாத்ர மாகும்படியான பாக்யத்தைச் செய்த அபூர்வமான ஒரு மஹாபுருஷனே. ஸம்ஸ்க்ருத வித்தையில் ரொம் பவும் சிறந்த பாண்டித்யம் உள்ளவன். அந்த அரச னுடைய ஸபையில், இந்த காளிதாஸன் என்ற மஹா கவியானவர், ப்ரதான வித்வானுக விளங்கி வந்தார். மற்றும் பவபூதி, வரருசி முதலான பெரிய வித்வான்கள் அரசனுடைய ஸபையில் குவிந்துகொண்டிருந்தார் கள். ஒரு தினத்தில் அரசன் மஹாஸபையில் कुसुमे कुसुमोत्पत्ति: श्रूयते नचदृश्यते (குஸுமெ குஸுமொத்பத்திஃ ஶ்ரூயதெ நசத்ருஶ்யதெ)(குஸுமே குஸுமோத்பத்தி: ச்ரூயதே நசத்ருச்யதே) என்று பாதிச்லோகத்தை மாத்ரம் சொல்லிவிட்டு இதை பூர்த்தி செய்பவர் களுக்கு பாதி ராஜ்யம் தருவதாக அரசன் ப்ரதிக்ஞை செய்தான். பவபூதி வரருசி முதலான வித்வான் களுக்கு ராஜனுடைய அபிப்ராயம் இன்னதுதான் என்று ஸ்புரிக்காததால் உத்தரார்த்தத்தை பூர்த்தி பண்ண, அதாவது மற்ற பாதி ச்லோகத்தை பூர்த்தி பண்ண, ப்ரதிபை ஏற்படாமலே கஷ்டப்பட்டார்கள். காளிதாஸ மஹா கவியோ, கொஞ்சமேனும் ஆலோ ஜிக்காமல் ஸபையில் தன்னுடைய அருகில் அமர்ந் திருக்கும், தன்னல் அனுபவிக்கப்பட்டு வருகிற ஒரு தாஸியைப் பார்த்து बालेतवमुखाम्भोजे दृष्टं इन्दीवरद्वयं (பாலெதவமுகாம்஭ொஜெ த்ருஷ்டம் இந்தீவரத்வயம்) (பாலேதவ முகாம்போஜே த்ருஷ்டம் இந்தீவரத்வயம்) என்று சொல்லி அரசனுடைய ச்லோகத்தின் பின பாதியை பூர்த்திசெய்தான். அரசனுடைய ஸந்தோஷத்தை அளவிட முடியவில்லை. அரசனல் செய்யப்பட்ட முன் பாதி ச்லோகத்திற்கோ, "புஷ்பத்தில் புஷ்பம் முளைத்திருப்பதாக கேள்விப்படுகிறது, ஆனல் பார்க் கப்பட வில்லை" என்ற அர்த்தம் பாஸிக்கிறது: ராஜ னுடைய அபிப்ராயமும் அதுதான். காளிதாஸன் செய்த பின் பாதி ச்லோகத்திற்கோ "உத்தமஸ்த்ரீக ளுடைய முகமே தாமரைப் புஷ்பமென்றும் அதில்

காணப்படும், இரண்டு கண்களும் நீலோத்பல புஷ்பமென்றும்" அர்த்தமானது வெளியாகிறது. புஷ்பத்தில் புஷ்பம் என்பதை அரசனுக்கு காளிதாஸ மஹாகவி ப்ரத்யக்ஷமாகக் காட்டிவிட்டார். இந்த ச்லோகத்தில் ச்ருங்காரரஸமே ப்ரதானமாக பெருகுகிறதென்பதையும் இதைக்கேட்ட ஸபையோர்கள், ச்ருங்காரரஸத்தில் மூழ்கி ஆனந்த தாண்டவமாடினார்கள் என்பதையும் யாரால் மறுக்கமுடியும். இந்த வைபவங்களெல்லாம், எல்லா மனிதர்களுக்கும் ஏற்படக்கூடியதல்ல. அருணை என்ற தேவியை ஹ்ருதய கமலத்தில் உபாஸிக்கும் புண்யவான்களுக்குத்தான் இது ஸித்திக்கக் கூடியது. அதிலும் காளிதாஸனைப்போல் பராசக்தியை ப்ரத்யக்ஷமாக தர்சனம் செய்த மஹாகவிகளுக்கே கிடைக்கக் கூடியது.

அதனால் இந்த ச்லோகத்தையோ இதற்கு மூல பூதமான வாமகேச்வர தந்த்ரத்திலுள்ள ச்லோகங்களையோ சொல்லிக்கொண்டு, ஹ்ருதய கமலத்தில் அருணை என்ற தேவியை தினந்தோறும் உபாஸிக்கிறவர்களுக்கு ஸரஸ்வதி கடாக்ஷம் பரிபூர்ணமாக ஸித்திக்கும்.

த்யானத்திற்கு உபயோகமாக வாமகேச்வர தந்த்ரத்திலுள்ள ச்லோகங்கள் அடியிற்கண்டவைகளே.

अरुणाख्यां भगवतीं अरुणाभां विचिन्तयेत् ।
पाशाङ्कुशधरांदेवीं धनुर्बाणधरां शिवाम् ॥ १ ॥
वरदाभयहस्ताञ्च पुस्तकाक्षस्रगन्विताम् ।
अष्टबाहुं त्रिनयनां खेलन्तीं अमृताम्बुदौ ॥ २ ॥
साकरोत्येव श्रृङ्गाररसास्वादन लम्पटान् ।
सभासदः तथासर्वान् साधिकेन्द्रः सभास्थलः ॥ ३ ॥

𑌅𑌰𑍁𑌣𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌭𑌗𑌵𑌤𑍀𑌂 𑌅𑌰𑍁𑌣𑌾𑌭𑌾𑌂
𑌵𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ।
𑌪𑌾𑌶𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌧𑌰𑌾𑌂 𑌦𑍇𑌵𑍀𑌂 𑌧𑌨𑍁𑌰𑍍𑌬𑌾𑌣𑌧𑌰𑌾𑌂
𑌶𑌿𑌵𑌾𑌮𑍍 ॥ ௧ ॥
𑌵𑌰𑌦𑌾𑌭𑌯 𑌹𑌸𑍍𑌤𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍁𑌸𑍍𑌤𑌕𑌾𑌕𑍍𑌷𑌸𑍍𑌰𑌗𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌮𑍍 ।
𑌅𑌷𑍍𑌟𑌬𑌾𑌹𑍁𑌂 𑌤𑍍𑌰𑌿𑌨𑌯𑌨𑌾𑌂 𑌕𑍇𑌲𑌨𑍍𑌤𑍀𑌂 𑌅𑌮𑍃𑌤𑌾𑌂
𑌬𑍁𑌧𑍈 ॥ ௨ ॥
𑌸𑌾𑌗𑌰𑍋𑌤𑍍𑌥𑍇𑌵 𑌶𑍃𑌙𑍍𑌗𑌾𑌰𑌰𑌸𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌨
𑌲𑌮𑍍𑌪𑌟𑌾𑌨𑍍 ।
𑌸𑌭𑌾𑌸𑌦𑌃 𑌤𑌥𑌾𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌸𑌾𑌧𑌿𑌕𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃
𑌸𑌭𑌾𑌸𑍍𑌥𑌲𑌃 ॥ ௩ ॥

அருணுக்யாம் பகவதீம் அருணுபாம் விசிந்தயேத் ।
பாசாங்குசதராம்தேவீம் தநுர்பாணதராம் சிவாம் ॥ 1 ॥
வரதாபய ஹஸ்தாஞ்ச புஸ்தகாக்ஷஸ்ரகந்விதாம் ।
அஷ்டபாஹும் த்ரிநயநாம் கேலந்தீம் அம்ருதாம்
புதௌ ॥ 2 ॥
ஸாகரோத்யேவ ச்ருங்காரரஸாஸ்வாதந லம்படாந் ।
ஸபாஸத: ததாஸர்வாந் ஸாதிகேந்த்ர: ஸபாஸ்தல: ॥ 3 ॥

---

## 17. வாக் விலாஸ லாபம்

सवित्रीभिर्वाचां शशिमणिशिलाभङ्गरुचिभिः
वशिन्याद्याभिस्त्वां सह जननि सञ्चिन्तयति यः ।
स कर्ता काव्यानां भवति महतां भङ्गिरुचिभिः
वचोभिर्वाग्देवीवदनकमलामोदमधुरैः ॥ १७ ॥

𑌸𑌵𑌿𑌤𑍍𑌰𑍀𑌭𑌿𑌰𑍍𑌵𑌾𑌚𑌾𑌂 𑌶𑌶𑌿𑌮𑌣𑌿𑌶𑌿𑌲𑌾𑌭𑌙𑍍𑌗𑌰𑍁𑌚𑌿𑌭𑌿𑌃
𑌵𑌶𑌿𑌨𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑌹 𑌜𑌨𑌨𑌿 𑌸𑌞𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌤𑌿 𑌯𑌃 ।
𑌸 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌕𑌾𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌮𑌹𑌤𑌾𑌂 𑌭𑌙𑍍𑌗𑌿𑌰𑍁𑌚𑌿𑌭𑌿𑌃
𑌵𑌚𑍋𑌭𑌿𑌰𑍍𑌵𑌾𑌗𑍍𑌦𑍇𑌵𑍀𑌵𑌦𑌨𑌕𑌮𑌲𑌾𑌮𑍋𑌦𑌮𑌧𑍁𑌰𑍈𑌃
॥ ௧௭ ॥

ஸவித்ரீபிர்வாசாம் சசிமணிசிலாபங்கருசிபி:
வசிந்யாத்யாபிஸ்த்வாம் ஸஹ ஜநநி ஸஞ்சிந்தயதி ய: ।
ஸ கர்தா காவ்யாநாம் பவதி மஹதாம் பங்கிருசிபி:
வசோபிர்வாக்தேவீவதனகமலாமோதமதுரை: ॥ 17 ॥

हे जननि ! (𑌹𑍇 𑌜𑌨𑌨𑌿 !) (ஹே ஜனனி!) = ஹே லோகமாதாவாகிய பராசக்தியே!

वाचां (𑌵𑌾𑌚𑌾𑌂) (வாசாம்) = நவரஸங்களாலும் அலங்கரிக்கப்பட்டவாக் விலாஸங்களை

सवित्रीभि: (𑌸𑌵𑌿𑌤𑍍𑌰𑍀𑌭𑌿𑌃) (ஸவித்ரீபி:) = உண்டு பண்ணுகின்றவர்களாயும்

शशिमणिशिलाभङ्गरुचिभि: (𑌶𑌶𑌿𑌮𑌣𑌿𑌶𑌿𑌲𑌾𑌭𑌙𑍍𑌗𑌰𑍁𑌚𑌿𑌭𑌿𑌃) (சசிமணி சிலாபங்கருசிபி:) = சந்த்ரகாந்தக் கல்லை பிளந்தால் அது எவ்வித மான வெண்மை நிற முள்ளதாகக் காணப் படுமோ அதுபோல் மிகவும் ஸுந்தரமான மஹிமை, நிறம் இவைகளை யுடைத்தானவர்களாயு மிருக்கின்ற

वशिन्याद्याभि: (𑌵𑌶𑌿𑌨𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌭𑌿𑌃) (வசிந்யாத்யாபி:) = வசினி, முதலான எட்டு விதமான சக்திகளோடு

| | |
|---|---|
| सह (സഹ) (ஸஹ) | = சேர்ந்து |
| त्वां (ത്വാം) (த்வாம்) | = உன்னை |
| यः (യഃ) (ய:) | = எந்த உபாஸகன் |
| सञ्चिन्तयति (സഞ്ചിന്തയതി) (ஸஞ்சிந்தயதி) | = உபாஸிக்கின்றானோ |
| सः (സഃ) (ஸ:) | = அந்த உபாஸகன் |
| महतां (മഹതാം) (மஹதாம்) | = காளிதாஸன் முதலான மஹாகவிகளுடைய |
| भङ्गिरुचिभिः (ഭങ്ഗിരുചിഭിഃ) (பங்கிருசிபி:) | = வாக்விலாஸம் போலும், உல்லேகம் போலும் மஹிமை யுள்ளதாயும் |
| वाग्देवीवदनकमलासोद मधुरैः (വാഗ്ദേവീ വദനകമലാ മോദ മധുരൈഃ) (வாக்தேவீ வதநகமலா மோத மதுரை:) | = ஸரஸ்வதியினுடைய தாமரைப் புஷ்பத்தைப் போலொத்த முகத்தி லுள்ள பரிமளத்தை உடைத்தானதாயு மிருக்கின்ற |
| वचोभिः (വചോഭിഃ) (வசோபி:) | = அழகான வாக் விலாசங்களால் |
| काव्यानां (കാവ്യാനാം) (காவ்யாநாம்) | = அரும் பெரிய காவ்ய நாடக அலங்காரங்களை |
| कर्ता (കർത്താ) (கர்த்தா) | = செய்கிறவனாக |
| भवति (ഭവതി) (பவதி) | = ஆகிறான். |

தாத்பர்யம்:—இந்த ச்லோகமும் இதற்கு முன்னுள்ள ச்லோகத்தையே சார்ந்தது. இதனாலும் ஸாரஸ்வத ப்ரயோகத்தின் பெருமையைத்தான் குறிப்பிட்டிருக்கிறது. பராசக்தியினுடைய ஸ்வரூபம் அகார

முதல் ள கார முடியவுள்ள ஐம்பது மாத்ருகாவர்ணங்க ளென்ற பீஜாக்ஷரங்கள்தான் என்று ஸ்ரீ வித்யாதந்த் ரங்களில் சொல்லபபட்டிருக்கின்றன. இந்த ஐம்பது அக்ஷரங்களையும் எட்டு பாகங்களாகப் பிரித்துக் கொள்ளவேண்டும். அவர்க்கம், கவர்க்கம், சவர்க்கம். டவர்க்கம், தவர்க்கம், பவர்க்கம், யவர்க்கம், ஸவர்க்கம் என்று அந்த எட்டு பாகங்களையும் அறியவேண்டும். அகாரம் முதல், முதல் பதினாறு எழுத்துக்களும் ஸ்வ ரம் என்று சொல்லப்படும்.

अ, आ, इ, ई, उ, ऊ, ऋ, ॠ, ऌ, ॡ, ए, ऐ, ओ, औ, अं, अः

𑌅, 𑌆, 𑌇, 𑌈, 𑌉, 𑌊, 𑌋, 𑍠, 𑌌, 𑍡, 𑌏, 𑌐,

𑌓, 𑌔, 𑌅𑌂 𑌅𑌃

(அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ரு, ரூ, லு, லூ, ஏ, ஐ,

ஓ, ஔ, அம், அ:)

இந்த பதினாறு எழுத்துக்களை ஸ்வரமென்றும், அவர்க்கமென்றும் அறிந்துகொண்டு, மேற்சொன்ன எட்டு பாகங்களில் இவை முதல் பாகமாக அறிந்து கொள்ளவேண்டும். கவர்க்கம் இரண்டாவது பாக மாகும். क, ख, ग, घ, ङ, (𑌕, 𑌖, 𑌗, 𑌘, 𑌙,) என்ற ஐந்து எழுத்துக்களும் கவர்க்கமாயும், மேற்சொன்ன எட்டு பாகங்களில் இரண்டாவது பாகமாகும். அவ்விதமே च, छ, ज, झ, ञ (𑌚, 𑌛, 𑌜, 𑌝, 𑌞,) என்ற ஐந்து வர்ணங்களும், மூன்ருவது வர்க்கமாயும் மேல் சொன்ன பாகங்களில் மூன்ருவது பாகமாயும் ஆகின்றது. ट, ठ, ड, ढ, ण (𑌟, 𑌠, 𑌡, 𑌢, 𑌣) இந்த ஐந்து அக்ஷரங்களும் நான்காவது பாகமாகும், त, थ, द, ध, न (𑌤, 𑌥, 𑌦, 𑌧, 𑌨) என்ற ஐந்தும் ஐந்தாவது பாகமாகும், प, फ, ब, भ, म (𑌪, 𑌫, 𑌬, 𑌭, 𑌮) என்ற ஐந்தும் ஆருவது பாகமாகும். य, र, ल. व, (𑌯, 𑌰, 𑌲, 𑌵) என்ற நான்கும் ஏழாவது பாகமாகும். श, ष, स, ह, ळ (𑌶, 𑌷, 𑌸, 𑌹, 𑌳)

என்ற ஜந்தும் எட்டாவது பாகமாகும். இவ்விதம் எட்டு வர்க்கங்களடங்கிய மாத்ருகா, அக்ஷரங்கள் தேவியினுடைய ஸ்வரூபமாக ஆகின்றது. அந்த ஸந் தர்ப்பத்தில் भगवति। मातृका। त्रिपुरसुन्दरी॥ (ஜமவதி। ஊதரகா। திரிவுரஸுந்தரீ॥) (பகவதி। மாத்ருகா। த்ரிபுரஸுந்தரீ॥) என்ற திவ்ய நாமங்கள் அம்பா ளுக்கு ஸித்திக்கின்றன.

பிந்துத்ரிகோண ரூபமான நர்ன்கு சிவசக்ரம், அஷ்டகோணம், தசகோணம், மிச்ராரம், சதுர்தசபுவ னம், என்ற எட்டு சக்ரங்களிலும் வசினி, காமேச்வரி, மோதினி, விமலா, அருணு, ஜெயினீ, ஸர்வேச்வரீ, காளீ என்ற எட்டு தேவதைகளையும் க்ரமமாகச் சேர்த்து புவனேச்வரீ என்ற ஜகன்மாதாவை உபாஸிக்கிறவர் கள் மஹா வித்வான்களாக ஆகின்ருர்கள். பராசக்தி யான ராஜராஜேச்வரிக்கு பரிவார தேவதைகளுக்குள் வசினீ முதலான எட்டு தேவதைகள் ரொம்பவும் முக்யமான தேவதைகளாக ஆவார்கள். அது போலவே பன்னிரண்டுவிதமான யோகினீ என்ற தேவதைகளும் ஜகதீச்வரியான அம்பாளுக்கு முக்ய மான பரிவார தேவதைகளாக ஆகிருர்கள். வித்யா யோகினீ, ரேசகாயோகினீ, மோசிகாயோகினீ அம்ருதா யோகினீ, தீபிகாயோகினீ, ஞானயோகினீ, ஆப்யாயினீ யோகினீ. வ்யாபினீயோகினீ, மேதாயோகினீ, வ்யோமரூபா யோகினீ, ஸித்தரூபாயோகினீ, லக்ஷ்மீயோகினீ, என்று இந்த பன்னிரண்டு யோகினீ தேவதைகளுக்கு நாம தேயங்களை அறியவும். வசினீ முதலான எட்டு தேவதைகளோடு வித்யாயோகினீ முதலான பன்னி ரண்டு தேவதைகள் சேர்ந்து இருபது தேவதை களாக ஆகி இருபது கலைகள் என்று சொல்லப்படு வார்கள். அந்த இருபது தேவதைகளுடைய சரீர காந்தியும் சுத்தமான ஸ்படிகம்போல் விளங்கிவரும். அவ்விதம் அந்த தேவதைகளை உபாஸகர்கள் த்யா னிக்கவேண்டும்.

அவ்விதமே, கந்தாகர்ஷிணீ, ரஸாகர்ஷிணீ, ரூபாகர்ஷிணீ, ஸ்பர்ஸாகர்ஷிணீ, என்ற நான்கு தேவதைகளேயும் சக்ரத்தினுடைய நான்கு த்வாரங்களிலும் த்வார தேவதைகளாக பாவித்துக்கொண்டு த்யானம் செய்ய வேண்டும். இந்த நான்கு தேவதைகளும் முக்யமான தேவதைகளாக ஆவார்கள்.

गन्धद्वारान्दुराधर्षां नित्यपुष्टाङ्करीषिणीम् ।

ईश्वरीं सर्वभूतानां त्वामिहोपह्वयेश्रियम् ॥

𑌗𑌨𑍍𑌧𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌂 𑌦𑍁𑌰𑌾𑌧𑌰𑍍𑌷𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌪𑍁𑌷𑍍𑌟𑌾𑌙𑍍𑌕𑌰𑍀𑌷𑌿𑌣𑍀𑌮𑍍 ।

𑌈𑌶𑍍𑌵𑌰𑍀𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑍍𑌵𑌾𑌮𑌿𑌹𑍋𑌪𑌹𑍍𑌵𑌯𑍇𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ॥

கந்தத்வாராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாங்கரீஷிணீம் ।

ஈச்வரீம் ஸர்வபூதாநாம் த்வாமிஹோபஹ்வயேச்ரியம் ॥

என்ற ச்ருதியானது மஹாத்ரிபுரஸுந்தரியான ராஜ ராஜேச்வரீ யென்ற பரதேவதையை கந்தாகர்ஷிணீ முதலான நான்கு த்வார தேவதைகளோடுகூட சேர்த்துத்தான் த்யானம் செய்யவேண்டுமென்று வற்புறுத்துகிறது. அந்த ச்ருதியின் அர்த்தத்தை அடியிற்கண்டபடி ஸாதகர்கள் அறிந்துகொள்ளவும். அதாவது, गन्धद्वारां (𑌗𑌨𑍍𑌧𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌂)(கந்தத்வாராம்) என்ற இடத்தில் கந்தம், என்ற சப்தத்தால் கந்தம்,ரஸம், ரூபம், ஸ்பர்ஸம், என்ற நான்கு தத்வங்களேயும் க்ரஹித்துக் கொள்ளவேண்டும். அதனுல் கந்தாகர்ஷிணீ, ரஸாகர்ஷிணீ, ரூபாகர்ஷிணீ, ஸ்டர்ஸாகர்ஷிணீ, என்ற நான்கு த்வாரதேவதைகளேயும் மேற்சொன்ன ச்ருதியானது குறிப்பிடுகின்றது. இவ்விதமான நான்கு தேவதைகளேயும், க்ரமமாக கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்ற நான்குவிதமான ஸ்ரீபுராம்ச நகரத்தின் கோட்டை வாசலிலும் ஸ்தாபனம் செய்துகொண்டு

ஸாக்ஷாத் பரமேச்வரியானவள் ஸ்ரீபுரம் என்ற தனது ராஜதானியில் விளங்கிவருகிற மஹிமையை गन्धद्वारां (கந்தத்வாராம்) (கந்தத்வாராம்) என்ற விசேஷணமானது ப்ரகாசப்படுத்துகின்றது. அக்காரணத்தால் பராம்பிகையானவள் दुराधर्षा (துராதர்ஷா) (துராதர்ஷா) என்றும் வர்ணிக்கப்படுகிருள். பாக்கியமில்லாத ஜனங்களுக்கு கண்டுபிடிக்க முடியாத வைபவமுள்ளவள் என்று வெளியாகிறது. தேவியினுடைய ஸ்வரூபத்தை ப்ரத்யக்ஷமாக தர்சிக்கவேண்டுமானுல், சென்ற அநேக ஜன்மாக்களில் மிகுந்த தவங்களைச் செய்திருக்கவேண்டும். அவ்விதமான புண்யவான்களுக்குத்தான் அம்பாளுடைய ஸ்வரூப தர்சனத்திலோ, ஸ்ரீசக்ரரூபிணியான தேவியை ஆராதிப்பதிலோ, அந்த பராம்பிகையினுடைய மூலமந்த்ர ஜபத்திலோ, அந்த தேவியினுடைய திவ்ய சரித்ர ச்ரவணத்திலோ ச்ரத்தையும் ப்ரவர்த்தியும் ஏற்படும். அன்னியில், அல்பமான புண்யத்தைச் செய்கிறவர்களுக்கு அந்த பாக்கியமே கிடைக்காது. இந்த விஷயத்தை பரமாசார்யாள், முதல் ச்லோகத்தில் कथं अकृत पुण्यः प्रभवति (கதம் அக்ருத புண்ய:ப்ரபவதி) (கதம் அக்ருத புண்ய:ப்ரபவதி) என்பதினுல் ப்ரகாசப்படுத்தியிருக்கின்ருர்கள். ஆகையால் பாக்யமில்லாத ஜனங்களுக்கு பரதேவதையினுடைய ஸமீபத்தில் அண்ட முடியாது. அதைத்தான் दुराधर्षां (துராதர்ஷாம்) (துராதர்ஷாம்) என்ற விசேஷணமானது போதிக்கிறது. அத்துடன் மேற்சொன்ன ச்ருதியில் नित्यपुष्टां (நித்யபுஷ்டாம்) (நித்யபுஷ்டாம்) என்று மற்ருெரு விசேஷணமும் காணப்படுகிறது. அதனுல் பூதகாலம், பவிஷ்யத்காலம், வர்த்தமானகாலம் என்ற மூன்று காலங்களிலோ அல்லது ப்ராதிபாஸிகம், வ்யாவஹாரிகம், பாரமார்த்திகம் என்ற மூன்று தசைகளிலோ, அழிவில்லாததாயும், ஞானவடிவாயும், துக்கஸம்பந்தமில்லாததாயும், மேல், கீழ் என்ற தாரதம்ய மற்றதாயும், நிஜமாயும் ஒருவிதமான ஸாதனங்களாலும் ஸாத்யமா

காமல் எப்பொழுதும் நித்தஸித்தமாயுமுள்ள பேரானந்தம், பேரின்பம் என்று சொல்லப்படும் நிரதிசயமான ஆனந்தமே பராசக்தியினுடைய ஸ்வரூபமானதினால், ஆனந்தரூபிணியான பரதேவதைக்கு ஒரு தேசத்திலும், ஒரு காலத்திலும், ஒரு வஸ்துவாலும், ஸ்வரூபத்தாலும். குணத்தாலும் யாதொரு குறையும் ஏற்பட ந்யாயமில்லாததால், எப்பொழுதும் ஸகலவிதமான ஸம்ருத்தியாலும் பரிபுஷ்டையாக பராம்பிகை விளங்கிவருகிருள். இந்த ரஹஸ்யத்தை நித்யபுஷ்டாம் (நித்யபுஷ்டாம்) (நித்யபுஷ்டாம்) என்ற விசேஷணமானது ப்ரகாசப்படுத்துகின்றது. கரீஷிணீம் (கரீஷிணீம்) (கரிஷிணீம்) என்ற மற்றொரு விசேஷணம் மேற்சொன்ன ச்ருதியில் காணப்படுகிறது. கரீ (கரீ)(கரீ) என்றால் மத ஜலத்தைப் பெருகவிட்டுக்கொண்டிருக்கும் உயர்ந்த ஜாதியிற் சேர்ந்த யானை; அளவற்ற மத்த கஜங்களால் சூழப்பட்டவள் என்ற அர்த்தமானது அந்த விசேஷணத்தால் வெளியாகிறது. பராசக்தியினுடைய ஸந்நிதியில் மத்தகஜங்கள் சூழ்ந்துகொண்டு நின்றுவரும். ஸம்பத்துக்களுக்குள் கஜங்கள் ப்ரதானமான ஸம்பத்தானதினுல், தேவியினுடைய அருகில் கஜ ஸம்பத்தை கூட்டங்கூட்டமாக காணப்படுகிற மஹிமையைக்கொண்டு, பராம்பிகையை உபாஸிக்கிறவர்களை கஜம் முதலான ஸகல ஸம்பத்துக்களும் சூழ்ந்துகொண்டு நிற்கும் என்பது ப்ரத்யக்ஷமாகிறது. இதற்கு உதாஹரணமாக ஹாலாஸ்ய க்ஷேத்ரமென்ற மதுரைமா நகரத்தைப் பார்த்துக்கொள்ளலாம். ஸாக்ஷாத் பராசக்தியானவள் பாண்டிய ராஜனுடைய புத்ரியாக அவதரித்து மீனுக்ஷி என்ற பெயருடன் அரசாண்டுவந்தாள் என்பதை ஸகல ஜனங்களும் அறிந்ததே. இக்காலத்திலும், அந்த பராம்பிகை உத்ஸவ காலத்தில் ராஜ வீதியில் மீனுக்ஷீ வரும்பொழுது, யானைகள் கூட்டங்கூட்டமாக முன்செல்வதைப் பார்க்காத ஜனங்கள் யாருமில்லை என்பதாகச் சொல்லலாம். அதனுல், பராம்பிகையினுடைய பரி

பூர்ணமாக ஸாந்நித்யம் எந்த க்ஷேத்திரத்தில் இருந்து வருகின்றதோ அதற்கு யானைகளின் கூட்டமே முக்ய மான லிங்கமாகும்(அறிகுறியாகும்). ஆகையால், பரா சக்தியை உபாஸிக்கின்றவர்களுக்கு இந்த ஸம்ஸார மண்டல நிவ்ருத்தி துர்லபமான பதார்த்தம் ஒன்றுமே யில்லை என்பதை நிச்சயமாகச் சொல்லலாம்.

இவ்விதம் गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीं (ഗന്ധദ്വാരാം ദുരാധർഷാം നിത്യപുഷ്ടാം കരീഷിണീം) (கந்தத்வா ராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம்) என்ற விதமான மஹிமையுள்ள ஸர்வபூதங்களுக்கும் ஈச்வரி யான பராசக்தியை, அதாவது ஸ்தாவர ஜங்கம ரூபாத்மகமான ஸகல ஜகத்தையும் நியமனம் பண் ணும் சக்தியுள்ள பரதேவதையான உன்னை இந்த ஸ்ரீசக்ரத்தில் நான் தியானம், ஆவாஹனம் இவைகளைச் செய்துகொண்டு பூஜிக்கின்றேன் என்ற அர்த்தத்தை மேற்சொன்ன गन्धद्वारां (ഗന്ധദ്വാരാം) (கந்தத்வாராம்) என்ற ச்ருதியால் அறிந்துகொள்ளவேண்டும். மேற் சொன்ன ச்ருதியானது, ஸ்ரீவித்யோபாஸகனுக்கு பராம்பிகையை ஸ்ரீசக்ரத்தில் த்யானம், ஆவாஹனம் முதலியவைகளைச் செய்துகொள்ள மஹாமந்த்ரமாக உபயோகப்படுகிறது. அம்பாளுடைய ஆராதனத் தில்தான் அந்த மந்த்ரத்திற்கு உபயோகமன்னியில், மற்ற எந்த கர்மாக்களிலும் அந்த மந்த்ரத்திற்கு உப யோகமில்லை என்பது நிச்சயமாகிறது. இந்த மந்த் ரத்திலேயே த்வார தேவதைகள் நான்கையும் மாத்ரம் சொல்லியிருப்பதாக நினைக்கக்கூடாது. மற்ற வசிநீ முதலான எட்டு தேவதைகளுக்கும் பன்னிரண்டு வித மான யோகிநீ தேவதைகளுக்கும் கந்தாகர்ஷிணீ முதலான நான்கு தேவதைகள் உபலக்ஷணமாக ஆகின்றார்கள்.

---

## 18. ஸ்த்ரீவச்யகர ஸாதனம்.

तनुच्छायाभिस्ते तरुणतरणिश्रीसरणिभिः
दिवं सर्वामुर्वीं अरुणिमनिमग्नां स्मरति यः ।
भवन्त्यस्य त्रस्यद्वनहरिणशालीननयनाः
सहोर्वश्या वश्याः कतिकति न गीर्वाणगणिकाः ॥ १८ ॥

𑌤𑌨𑍁𑌚𑍍𑌛𑌾𑌯𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑍇 𑌤𑌰𑍁𑌣𑌤𑌰𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌸𑌰𑌣𑌿𑌭𑌿𑌃
𑌦𑌿𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌮𑍁𑌰𑍍𑌵𑍀𑌂 𑌅𑌰𑍁𑌣𑌿𑌮𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌾𑌂 𑌸𑍍𑌮𑌰𑌤𑌿 𑌯𑌃 ।
𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑍍𑌰𑌸𑍍𑌯𑌦𑍍𑌵𑌨𑌹𑌰𑌿𑌣𑌶𑌾𑌲𑍀𑌨𑌨𑌯𑌨𑌾𑌃
𑌸𑌹𑍋𑌰𑍍𑌵𑌶𑍍𑌯𑌾 𑌵𑌶𑍍𑌯𑌾𑌃 𑌕𑌤𑌿𑌕𑌤𑌿 𑌨 𑌗𑍀𑌰𑍍𑌵𑌾𑌣𑌗𑌣𑌿𑌕𑌾𑌃
॥ ௧௮ ॥

தநுச்சாயாபிஸ்தே தருண தரணி ஸ்ரீஸரணிபி:
திவம் ஸர்வாம் உர்வீம் அருணிம நிமக்னாம் ஸ்மரதி ய: ।
பவந்த்யஸ்ய த்ரஸ்யத்வந ஹரிண சாலீந நயநா:
ஸஹோர்வச்யா வச்யா: கதிகதி ந கீர்வாண கணிகா: ॥18॥

| | |
|---|---|
| हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) | = ஹே தாயே! |
| तरुणतरणिश्रीसरणभिः (𑌤𑌰𑍁𑌣𑌤𑌰𑌣𑌿 𑌶𑍍𑌰𑍀𑌸𑌰𑌣𑌿𑌭𑌿𑌃) (தருண தரணி ஸ்ரீஸரணிபி:) | = பால ஸூர்யனுடைய இளம் வெய்யிலைப்போல் சிவப்பு காந்தியை யுடைத்தான |
| ते (𑌤𑍇) (தே) | = உன்னுடைய |
| तनुच्छायाभिः (𑌤𑌨𑍁𑌚𑍍𑌛𑌾𑌯𑌾𑌭𑌿𑌃) (தநுச்சாயாபி:) | = தேக காந்திகளால் |
| दिवं (𑌦𑌿𑌵𑌂) (திவம்) | = த்யுலோகாதிகளையும் |

| | |
|---|---|
| सर्वां उर्वींच (𑌸𑌰𑍍𑌵𑌾𑌂 𑌉𑌰𑍍𑌵𑍀𑌂𑌚) (ஸர்வாம் உர்வீம்ச) | = ஸமஸ்தமான பூமியையும் |
| अरुणिमनिमग्नां (𑌅𑌰𑍁𑌣𑌿𑌮𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌾𑌂) (அருணிமநிமக்னாம்) | = செம்பஞ்சுக்குழம்பு ஸாகரத்தில் முழுகினதாக |
| यः (𑌯𑌃) (ய:) | = எந்த ஸாதகனானவன் |
| स्मरति (𑌸𑍍𑌮𑌰𑌤𑌿) (ஸ்மரதி) | = த்யானம் செய்கிறானோ |
| अस्य (𑌅𑌸𑍍𑌯) (அஸ்ய) | = அந்த உபாஸகனுக்கு |
| त्रस्यद्वनहरिणशालीन नयनाः (𑌤𑍍𑌰𑌸𑍍𑌯𑌦𑍍𑌵𑌨𑌹𑌰𑌿𑌣𑌶𑌾𑌲𑍀𑌨 𑌨𑌯𑌨𑌾𑌃)(த்ரஸ்யத்வநஹரிணசாலீந நயனா:) | = பயத்தோடுகூடிய காட்டிலிருக்கும் மான்குட்டிகளுடைய கண்களைப் போல் மனோஹரமான கண்விழிகளோடுகூடிய |
| गीर्वाण गणिकाः (𑌗𑍀𑌰𑍍𑌵𑌾𑌣 𑌗𑌣𑌿𑌕𑌾𑌃) (கீர்வாண கணிகா:) | = அப்ஸரஸ்த்ரீகள் |
| उर्वश्यासह (𑌉𑌰𑍍𑌵𑌶𑍍𑌯𑌾𑌸𑌹) (ஊர்வச்யாஸஹ) | = ஊர்வசீ என்ற உத்தம அப்ஸர ஸ்த்ரீயோடுகூட |
| कतिकति (𑌕𑌤𑌿𑌕𑌤𑌿) (கதிகதி) | = எவ்வளவு எவ்வளவு ஸ்த்ரீகள்தான் |
| वश्याः (𑌵𑌶𑍍𑌯𑌾𑌃) (வச்யா:) | = ஸ்வாதீனர்களாக |
| नभवन्ति (𑌨𑌭𑌵𑌨𑍍𑌤𑌿) (நபவந்தி) | = ஆகாமலிருக்கின்றார்கள். |

தாத்பர்யம் :— இந்த ச்லோகமானது ஸ்த்ரீவச்யகரம் என்று சொல்லப்படும். உபாஸகர்கள் தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானஞ் செய்யவேண்டிய

ப்ரகாரமோ, அடியிற்கண்டபடி அறியவும். தேவியி னுடைய சரீரமோ, ஸூர்யபகவான காலையில் உதிக் கும்போது எவ்விதமான வர்ணம் உள்ளவராக பாஸிக் கிருரோ, அதைப்போல் சிவப்பான காந்தியுள்ள தேஹத்தோடு அம்பாள் பாஸித்து வருகிருள். தேவி யினுடைய தேஹகாந்தியானது, த்யுலோகம் முதல் மேல்பாகங்களிலும், பூலோகம் முதல் கீழ்பாகங்களி லும் வ்யாபரித்து இருப்பதினுல், லோகம் முழுமை யுமே ஒரே சிவப்பாக காணப்படுகிறது. செம்பஞ்சுக் குழம்பு ஸாகரமாகப் பெருகி அதிலேயே லோகம் முழுகிப்போய் சிவப்பாகவே பாஸிக்கின்றதோ என்று உபாஸனுகாலத்தில் ஸாதகர்களுக்குத் தோன்றும். அவ்விதம் அந்த உபாஸனத்தில் ஈடுபட்டவர்களுக்கு லோகத்திலுள்ள உத்தம ஸ்த்ரீகளெல்லோரும் வச மாகிவிடுகிருர்கள். ஊர்வசி, ரம்பை, மேனகை, திலோத்தமை முதலானவர்களைக்கூட இந்த உபாஸ கன் ஸ்வ வசமாகச் செய்துகொள்வான். இந்த ச்லோ கத்தால் உபாஸகர்களுடைய பெருமையானது விளக் கப்படுகிறதன்னியில் காமவிடாளான புருஷர்கள் ஸந் தோஷிக்கக்கூடிய அம்சம் ஒன்றுமே இல்லை.

இந்த ப்ரயோகத்தில் ஶ்ரீ வித்யோபாஸகர்களுக் குத்தான் அதிகாரம் ஏற்படும். உபாஸகர்களாக ஆகி பஞ்சதசீ, ஷோடசீ, முதலான மஹாமந்த்ரங்களை ஜபித்து, ஸித்திசெய்து, ஸாக்ஷாத் பராம்பிகையை ப்ரத்யக்ஷமாக தர்சனம் செய்தபிறகு, இந்த ப்ரயோ கத்தைச் செய்தால் பலிக்கும். அப்போதும் அந்த மஹான்கள் தனக்கு வச்யமான ஸ்த்ரீகளிடம் காம விகாரத்தால் ப்ராக்ருதமான ஸ்த்ரீத்வ புத்தியையே வைக்கமாட்டார்கள்.

स्त्रिय: समस्ता: तवदेविभेदा: (ஸ்த்ரிய: ஸமஸ்தா: தவதேவி பேதா:) (ஸ்த்ரிய: ஸமஸ்தா: தவதேவிபேதா:) என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து தனக்கு உபாஸ்யமான

பரதேவதை என்றே அந்த ஸ்த்ரீகளை பாவித்து சரண மடைந்து ஸ்தோத்ரங்களால் பூஜிக்கத்தான் பூஜிப் பார்கள். மனோவிகாரத்தை அடையமாட்டார்கள். அனுபாஸகர்களுக்கு, இந்தவிதமான ப்ரயோகத்தில் கொஞ்சமேனும் அதிகாரமே இல்லை. அனுபாஸகர் களுடைய விஷயத்திலும் இந்தப்ரயோகத்தை உப யோகப்படுத்தினாலும், அதுவும் சாஸ்த்ர விரோதமாக ஆகாது. அதாவது, இந்த ச்லோகத்தினால் பரமாசார் யாள் க்ரஹஸ்தாச்ரமிகளின் பெருமையை ப்ரகாசப் படுத்துகிறார். களத்ரம் அனுகூலமாக இருந்தால்தான் கார்ஹஸ்த்ய தர்மம் ஒழுங்காக நடந்துவரும். பூர்வ கர்ம வசத்தால் ப்ரதிகூலமான களத்ரத்தை அடைந்த வர்களுக்கும் இந்த ப்ரயோகத்தால் அப்பேர்ப்பட்ட களத்ரத்தையும் அனுகூலமானதாகச் செய்து கொண்டுவிடலாம் என்ற அபிப்ராயத்தை ஸ்ரீமத் பக வத் பாதாள் மனதில் வைத்துக்கொண்டுதான், ஊர் வசியோ, ரம்பையோ, மேனகையோ, யார்தான் இப் படிப்பட்ட உபாஸகனுக்கு வசமாகமாட்டார்கள் என்பதை ப்ரகாசம் செய்திருக்கின்றார்கள். அத்து டன், ஸ்த்ரீயினுடைய பாரவச்யத்தை அடைந்த புருஷன் பரம சிஷ்டனானாலும் துர்க்கதியைத்தான் அடைவான். ஆகையால், அவர்களுடைய வசமாக ஒருநாளும் புருஷன் ஆகிவிடவேகூடாது. அவர்களைத் தன் வசமாகத்தான் புருஷன் ஆக்கிக்கொள்ளவேண் டும். அந்த வழியில் இந்த ப்ரயோகம்தான் உத்தம மான ஸாதனமாகும். ஸ்த்ரீகள் இந்த உபாஸகனை ச்ருங்காராதி லீலைகளினால் தன் வசமாக்கிக்கொள்ள ஸாமர்த்யமுள்ளவர்களாக ஆகமாட்டார்கள் என்று தான் இந்த ச்லோகத்தின் பரமதாத்பர்யமாகும். அடுத்த ச்லோகமும் இதைச் சார்ந்ததானதினால் அதன் பொருளும் எழுதிய பிற்பாடு இந்த ப்ரயோக க்ரமம் விசதமாக வெளியிடப்படும்.

---

## 19. த்ரிலோக வச்யம்.

मुखं बिन्दुं कृत्वा कुचयुगमधस्तस्यतदधः
हरार्धं ध्यायेद्यः हरमहिषि तेमन्मथकलाम् ।
स सद्यः सङ्क्षोभं नयति वनिता इत्यतिलघु
त्रिलोकीमप्याशु भ्रमयति रवीन्दुस्तनयुगाम् ॥ १९ ॥

𑌮𑍁𑌖𑌂 𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌕𑍁𑌚𑌯𑍁𑌗𑌮𑌧𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌤𑌦𑌧𑌃
𑌹𑌰𑌾𑌰𑍍𑌧𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌦𑍍𑌯𑌃 𑌹𑌰𑌮𑌹𑌿𑌷𑌿 𑌤𑍇𑌮𑌨𑍍𑌮𑌥𑌕𑌲𑌾𑌮𑍍 ।
𑌸 𑌸𑌦𑍍𑌯𑌃 𑌸𑌙𑍍𑌕𑍍𑌷𑍋𑌭𑌂 𑌨𑌯𑌤𑌿 𑌵𑌨𑌿𑌤𑌾 𑌇𑌤𑍍𑌯𑌤𑌿𑌲𑌘𑍁
𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌕𑍀𑌮𑌪𑍍𑌯𑌾𑌶𑍁 𑌭𑍍𑌰𑌮𑌯𑌤𑌿 𑌰𑌵𑍀𑌨𑍍𑌦𑍁𑌸𑍍𑌤𑌨𑌯𑍁𑌗𑌾𑌮𑍍
॥ ௧௯ ॥

முகம் பிந்தும் க்ருத்வா குசயுகமதஸ்தஸ்ய ததத:
ஹரார்த்தம் த்யாயேத்ய: ஹரமஹிஷி தேமந்மதகலாம்
ஸ ஸத்ய: ஸங்க்ஷோபம் நயதி வநிதா இத்யதி லகு
த்ரிலோகீமப்யாசு ப்ரமயதி ரவீந்துஸ்தநயுகாம் ॥ 19 ॥

| | |
|---|---|
| हे हरमहिषि ! (𑌹𑍇 𑌹𑌰 𑌮𑌹𑌿𑌷𑌿 !) (ஹே ஹர மஹிஷி!) | = ஹே சிவசக்தியே! |
| मुखं (𑌮𑍁𑌖𑌂) (முகம்) | = முகத்தை |
| बिन्दुं (𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌂) (பிந்தும்) | = பிந்துஸ்தானமாக |
| कृत्वा (𑌕𑍃𑌤𑍍𑌵𑌾) (க்ருத்வா) | = த்யானம் செய்து கொண்டு |
| तस्य (𑌤𑌸𑍍𑌯) தஸ்ய) | = அந்த முகத்திற்கு |
| अधः (𑌅𑌧𑌃) (அத:) | = கீழ் பாகத்தில் |
| कुचयुगम् (𑌕𑍁𑌚𑌯𑍁𑌗𑌮𑌂) (குசயுகம்) | = இரண்டு ஸ்தனங்களையும் |

कृत्वा (𑌕𑍃𑌤𑍍𑌵𑌾) (க்ருத்வா) = த்யானம் செய்து கொண்டு

तदधः (𑌤𑌦𑌧𑌃) (ததத:) = அதற்கும் கீழ் பாகத்தில்

हरार्धं (𑌹𑌰𑌾𑌰𑍍𑌧𑌂) (ஹரார்த்தம்) = பரமேச்வர சக்தியான யோனியை

कृत्वा (𑌕𑍃𑌤𑍍𑌵𑌾) (க்ருத்வா) = த்யானம் செய்து கொண்டு

तत्र (𑌤𑌤𑍍𑌰) (தத்ர) = அந்த பரமேச்வர சக்தியில்

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

मन्मथकलां (𑌮𑌨𑍍𑌮𑌥𑌕𑌲𑌾𑌂) (மன்மதகலாம்) = மன்மத கலையை (காம ராஜ பீஜத்தை)

यः (𑌯𑌃) (ய:) = எந்த உபாஸகன்

ध्यायेत् (𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌤𑍍) (த்யாயேத்) = சிந்திக்கிறானோ (த்யானம் செய்கிறானோ)

सः (𑌸𑌃) (ஸ:) = அந்த உபாஸகன்

सद्यः (𑌸𑌦𑍍𑌯𑌃) (ஸத்ய:) = உடனே

वनिताः (𑌵𑌨𑌿𑌤𑌾𑌃) (வநிதா:) = ஸ்தரீகளை

सङ्क्षोभं (𑌸𑌙𑍍𑌕𑍍𑌷𑍋𑌭𑌂) (ஸங்க்ஷோபம்) = மனோவிகாரத்தை

नयतीतियत् (𑌨𑌯𑌤𑍀𑌤𑌿𑌯𑌤𑍍) (நயதீதியத்) = அடைவிக்கிறானென்பது யாதொன்றுண்டோ

तत् (𑌤𑌤𑍍) (தத்) = அது

अतिलघु (𑌅𑌤𑌿𑌲𑌘𑍁) (அதிலகு) = மிக அல்பமானதே

किंतु (𑌕𑌿𑌂𑌤𑍁) (கிந்து) = ஆனாலோ

| | |
|---|---|
| रवीन्दुस्तनयुगां (𑌰𑌵𑍀𑌨𑍍𑌦𑍁𑌸𑍍𑌤𑌨𑌯𑍁𑌗𑌾𑌂) (ரவீந்துஸ்தநயுகாம்) | =ஸூர்யன் சந்த்ரன் இருவர்களேயும் ஸ்தனங்களாக உடைத்தான |
| त्रिलोकीमपि (𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌕𑍀𑌮𑌪𑌿) (த்ரிலோகீமபி) | =மூன்று லோகங்களாகிற ஸ்த்ரீகளைக்கூட |
| आशु (𑌆𑌶𑍁) (ஆசு) | =சீக்ரமாக |
| भ्रमयति (𑌭𑍍𑌰𑌮𑌯𑌤𑌿) (ப்ரமயதி) | =மோகிக்கச் செய்கிறான். |

தாத்பர்யம் :—இந்த ச்லோகமானது மாதன ப்ரயோகமென்று சொல்லப்படும். அதாவது ஸ்த்ரீவச்யகரம். முன் ச்லோகமும் இந்த ச்லோகத்தோடு சேர்ந்து ஒரே ப்ரயோகமாக ஆகிறது. பஞ்சதசீ, ஷோடசீ முதலான மந்த்ரங்களை குருமுகமாக தீக்ஷாக்ரமத்துடன் உபதேசம் செய்துகொண்டு ஸ்ரீசக்ரரூபிணியான பராம்பிகையை உபாஸித்து வருகிற மஹான்களுக்கே இந்த ப்ரயோகத்தில் அதிகாரம் ஏற்படுமன்னியில், அனுபாஸகர்களுக்கு ஏற்படாது. உபாஸகன் தனக்கு அபிமதமான ஸ்த்ரீகளுடைய தாதாம்யத்தை அடையவேண்டுமென்று நினைத்தால் இந்த ப்ரயோகமானது அந்த விஷயத்தில் உபயோகப்படும். அபிமதமான ஸ்த்ரீகளுடைய முகத்தை த்ருகோண சக்ரத்தின் நடுவிலுள்ள பிந்து ஸ்தானத்திலும், அந்த மூகத்திற்குக் கீழ்பாகத்திலுள்ள குசமண்டலத்தை த்ருகோண சக்ரத்திற்கு கீழ்பாகத்திலுள்ள ஸ்தானமாயும் அபிமதமான ஸ்த்ரீயினுடைய ப்ரதானமான சக்தியை த்ருகோண சக்ரத்தின் கீழ்பாகத்திற்கும் கீழ்பாகமாயும் த்யானம் செய்துகொண்டு அபிமத ஸ்த்ரீயினுடைய ப்ரதான சக்தியாகிற ஸ்தானத்தில் காமகலை யென்கிற காமராஜ பீஜத்தையும் த்யானம் செய்யவேண்டும். இவ்விதமான மஹிமையினால் அந்த உபாஸகன் மூன்று லோகத்தையும் தன் வச

மாக்கிக்கொள்கிருன். இந்த மூன்று லோகமும் ஒரு ஸ்த்ரீ ரூபமாகவே காணப்படுகின்றன. சந்த்ர மண்டலமும் ஸூர்ய மண்டலமும் த்ரிலோகீ யென்ற ஸ்த்ரீயினுடைய குசமண்டலமாகக் காணப்படுகின்றன. அவ்விதமான ஸ்த்ரீரூபமான த்ரிலோகத்தையும் இந்த உபாஸகன் தன் வசமாக்கிக்கொள்கிருன். அவ்விதமிருக்கும்பொழுது ப்ராக்ருதமான ஸ்த்ரீகளை தன்வசமாக்கிக் கொள்கிருனென்பது ஒரு ஆச்சர்யமர்குமா? அது உபாஸகர்களிடத்தில் ரொம்பவும் ஸுலபமான கார்யந்தான். ஆகிலும், தனக்கு அபிமதமான ஸ்த்ரீகளை உபாஸகர்கள் வசமாக்கிக் கொள்ள மேற்சொன்ன மாதன ப்ரயோகமானது ஏற்பட்டிருந்தாலும்கூட க்ராம்ய ஸுகத்தில் ஆசை வைத்துக்கொண்டு இந்த ப்ரயோகத்தைச் செய்யக் கூடாது.

सुवासिन्यर्चनप्रीता (ஸுவாஸிந்யர்சநப்ரீதா) (ஸுவாஸிந்யர்சநப்ரீதா) என்ற லலிதா ஸஹஸ்ர நாமத்திலுள்ள நாமாவை அனுஸரித்து வித்யோபாஸகர்களுக்கு ஸுவாஸினிகளை பூஜிக்கவேண்டியது அவச்யமானதால், அந்தப் பூஜையை அங்கீகரித்துக் கொண்டு ஸுவாஸினிகள் தேவதைகளுடைய ஸ்தானத்திலிருக்க ஸம்மதித்திருப்பதென்பதுதான் ஸ்த்ரீ வசீகரணமென்பதற்கே பொருளாகும். அன்னியில், சாஸ்த்ர விருத்தமான அர்த்தத்தை मुखंबिन्दुं कृत्वा (முகம்பிந்தும் க்ருத்வா) (முகம்பிந்தும் க்ருத்வா) என்ற ச்லோகத்தால் க்ரஹித்துக்கொள்ளக்கூடாது. மேலும், இந்த ச்லோகத்தினுலேயே ஸ்த்ரீகளிடத்தில் தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்யவேண்டுமென்று ஸித்திக்கிறபடியால், தேவியானவள் லோகமாதாவானதினுலும் ஸகல ஸ்த்ரீகளிடத்திலும் மாத்ருத்வ புத்தியை அவச்யம் பாவிக்கவேண்டியபடியாலும் விபரீதாசாரத்திற்கு அவகாசம் ஏற்படவேண்யாயமில்லை. மேலும், உபாஸகர்களுடைய மஹி

மையை ப்ரசம்சை செய்வதில்தான் இந்த ச்லோகத்திற்கு பரம தாத்பர்யமென்று அறியவும். அத்துடன், ஸ்த்ரீலோலர்களாயுள்ள மூர்க்க ஜனங்களையும் ஸன்மார்க்கத்தில் திருப்பி ஸ்ரீமாதாவான பரதேவதையினுடைய சரணாரவிந்தத்தில் த்ருட பக்தியை செலுத்தும்படி செய்ய அந்த மூர்க்க ஜனங்களுக்கும் தாங்கள் போகிற வழிக்கும் சாஸ்த்ரத்தில் உபாயமிருப்பது போல் காட்டி அவர்களை சாஸ்த்ரார்த்தத்தை அனுஷ்டிக்கும்படி செய்வதில்தான் மேற்சொன்ன ச்லோகத்தின் ப்ரவ்ருத்தியாகும்.

---

## 20. விஷம், ஜ்வரம்—இவைகளைப் போக்கும் சக்தி.

किरन्तीमङ्गेभ्यः किरणनिकुरुम्बामृतरसं
हृदि त्वामाधत्ते हिमकरशिलामूर्तिमिव यः ।
स सर्पाणां दर्पं शमयति शकुन्ताधिप इव
ज्वरप्रुष्टान् दृष्ट्या सुखयति सुधाधारसिरया ॥ २० ॥

𑌕𑌿𑌰𑌨𑍍𑌤𑍀𑌮𑌙𑍍𑌗𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌿𑌰𑌣𑌨𑌿𑌕𑌰𑍁𑌮𑍍𑌬𑌾𑌮𑍃𑌤𑌰𑌸𑌂
𑌹𑍃𑌦𑌿 𑌤𑍍𑌵𑌾𑌮𑌾𑌧𑌤𑍍𑌤𑍇 𑌹𑌿𑌮𑌕𑌰𑌶𑌿𑌲𑌾𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌮𑌿𑌵 𑌯𑌃 ।
𑌸 𑌸𑌰𑍍𑌪𑌾𑌣𑌾𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂 𑌶𑌮𑌯𑌤𑌿 𑌶𑌕𑍁𑌨𑍍𑌤𑌾𑌧𑌿𑌪 𑌇𑌵
𑌜𑍍𑌵𑌰𑌪𑍍𑌰𑍁𑌷𑍍𑌟𑌾𑌨𑍍 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌸𑍁𑌖𑌯𑌤𑌿 𑌸𑍁𑌧𑌾𑌧𑌾𑌰𑌸𑌿𑌰𑌯𑌾 ॥ ௨௦ ॥

கிரந்தீமங்கேப்ய: கிரணநிகுரும்பாம்ருதரஸம்
ஹ்ருதி த்வா மாதத்தே ஹிமகரசிலாமூர்த்திமிவ ய: ।
ஸ ஸர்ப்பாணும் தர்ப்பம் சமயதி சகுந்தாதிப இவ
ஜ்வர ப்ருஷ்டாந் த்ருஷ்ட்யா ஸுகயதி ஸுதாதார ஸிரயா ॥ 20 ॥

हे देवि ! (ஹெ தெவி !) (ஹே தேவி !) = ஹே பராசக்தியே !

यः (யঃ) (ய:) = எந்த உபாஸகன்

अङ्गेभ्यः (அஜெ ஹ்யঃ) (அங்கேப்ய:) = அவயவங்களிலிருந்து

किरणनिकुरुम्बामृतरसं (கிரணநி குரும்பாம்ருதரஸம்) (கிரணநிகுரும்பாம்ருத ரஸம்) = கிரண ஸமூஹங்களிலிருந்து உண்டான அம்ருத ரஸத்தை

किरन्तीम् (கிரந்தீம்) (கிரந்தீம்) = வாரி யிறைக்கிறவளாயும்

हिमकरशिलामूर्तिमिव (ஹிமகரஶிலாமூர்திமிவ) (ஹிமகரசிலாமூர்த்திமிவ) = சந்த்ரகாந்த சிலேகளால் செய்யப்பட்ட ப்ரதிமை போல் இருக்கின்ற

त्वां (த்வாம்) (த்வாம்) = உன்னை

हृदि (ஹ்ருதி) (ஹ்ருதி) = மனதில்

आधत्ते (ஆதத்தே) (ஆதத்தே) = வைத்து த்யானம் பண்ணுகின்றானோ

सः (ஸ:) (ஸ:) = அவன்

शकुन्ताधिप इव (ஶகுந்தாதிப இவ) (சகுந்தாதிப இவ) = பக்ஷிராஜனான கருடனைப்போல்,

सर्पाणां (ஸர்பாணாம்) (ஸர்ப்பாணாம்) = பாம்புகளுடைய

दर्पम् (தர்பம்) (தர்ப்பம்) = கொழுப்பை

शमयति (ஶமயதி) (சமயதி) = போக்கடிக்கின்றான்

सुधाधारसिरया (ஸுதாதாரஸிரயா) (ஸுதாதார ஸிரயா) = அம்ருததாரைக்கு ஆதார நாடியாகிய

दृष्ट्या (த்ருஷ்ட்யா) (த்ருஷ்ட்யா) = கடாக்ஷத்தால்

ज्वरप्रुष्टान् (ஜ்வரப்ருஷ்டாந்) (ஜ்வரப்ருஷ்டாங்) = ஜ்வரத்தால் தபிக்கப் பட்டவர்களையும்

सुखयति (ஸுகயதி) (ஸுகயதி) = ஸுகிக்கச் செய்கிருன்.

தாத்பர்யம்:—இந்த ச்லோகத்தால் காருட ப்ரயோகமானது சொல்லப்படுகின்றது. चतुः शति (சதுஃ சதி) (சது: சதி) என்ற க்ரந்தத்தில் இந்த ப்ரயோகமானது விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றது. ஆறுமாஸம் த்யானம் செய்ததிலிருந்து உபாஸகன் கருடனுக்கு ஸமானமாக ஆகிவிடுகிருன். தன் த்ருஷ்டி மாத்ரத்தால் கடோரமான விஷங்களையும் நாசம் செய்கிருன். தாபஜ்வரங்களால் பீடிக்கப்பட்டவர்களையும் ஜ்வராதிகளை நாசம் பண்ணி ஸுகமாக வாழச் செய்கிருன். ஹ்ருதய புண்டரீகத்தில் அம்பாளை த்யானம் செய்யவேண்டும். த்யானகாலத்தில் அம்பிகையினுடைய ஸ்வரூபத்தை அடியிற்கண்ட விபரப்படி அனுஸந்தானம் செய்யவேண்டும். அதாவது தேவியினுடைய சரீரமானது ஒரே தேஜோமயமாக பாஸித்து வருகின்றது. தேஜோமயமானதினுல் அநேக ப்ரகாரமாக கிரணங்கள் வீசுகின்றன. அந்தக் கிரணங்களுடைய ஸமூஹத்திலிருந்து அம்ருதரஸம் பெருகுகிறது. அந்த ரஸத்தால் உபாஸகனுடைய சரீரத்தை தேவியானவள் குளிர்ந்து போனதாகச் செய்கிருள். அத்துடன் தேவியினுடைய சரீரமானது சந்த்ரகாந்த மணிகளால் செய்யப்பட்ட மூர்த்தியைப்போல் பாஸித்துவருவதாக அனுஸந்தானம் செய்யவேண்டும். இவ்விதம் ஆறுமாஸகாலம் த்யானம் செய்கிறவன், இந்த ப்ரயோகம் காருட ப்ரயோகமானதினுல், பக்ஷிராஜனுன கருடனுக்கு ஸமானமான வைபவமுள்ளவனுக ஆகிருன். அந்த உபாஸகன் தன்னுடைய

த்ருஷ்டியினுலேயே ஸகல ப்ராணிகளுடைய ரோகங்களையும் நிவர்த்தி செய்துவைத்து ப்ராணிகளை ஸுகிகளாகப் பண்ண சக்தியுள்ளவனுக ஆகின்ருன். இதிலுள்ள ப்ரமாண வாக்யங்களோ அடியில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. அதாவது,

षण्मासध्यानयोगेन जायते गरुडोपमः ।
दृष्ट्या कर्षयतेलोकं दृष्ट्यैव कुरुतेवशम् ॥
दृष्ट्या संक्षोभयेन्नारीं दृष्ट्यैवहरतेविषम् ।
दृष्ट्या चतुर्थकादींश्च ज्वरान्नाशयतेक्षणात् ॥
चन्द्रकान्त शिलामूर्तिं चिन्तयित्वा विनाशयेत् ।
तापज्वरानशेषांश्च शीघ्रंताक्ष्यएवापरः ॥
गरुडध्यानयोगेन स्मरणान्नाशयेत् विषम् ॥

𑌷𑌣𑍍𑌮𑌾𑌸𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌗𑌰𑍁𑌡𑍋𑌪𑌮𑌃 ।
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌕𑌰𑍍𑌷𑌯𑌤𑍇𑌲𑍋𑌕𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑍈𑌵
𑌕𑍁𑌰𑍁𑌤𑍇𑌵𑌶𑌮𑍍 ॥
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌸𑌂𑌕𑍍𑌷𑍋𑌭𑌯𑍇𑌨𑍍𑌨𑌾𑌰𑍀𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑍈𑌵
𑌹𑌰𑌤𑍇𑌵𑌿𑌷𑌮𑍍
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌕𑌾𑌦𑍀𑌂𑌶𑍍𑌚 𑌜𑍍𑌵𑌰𑌾𑌨𑍍𑌨𑌾𑌶𑌯𑌤𑍇𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍 ॥
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌕𑌾𑌨𑍍𑌤 𑌶𑌿𑌲𑌾𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌨𑌾𑌶𑌯𑍇𑌤𑍍 ।
𑌤𑌾𑌪𑌜𑍍𑌵𑌰𑌾𑌨𑌶𑍇𑌷𑌾𑌂𑌶𑍍𑌚 𑌶𑍀𑌘𑍍𑌰𑌂𑌤𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌏𑌵𑌾𑌪𑌰𑌃 ॥
𑌗𑌰𑍁𑌡𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑍍𑌮𑌰𑌣𑌾𑌨𑍍𑌨𑌾𑌶𑌯𑍇𑌤𑍍 𑌵𑌿𑌷𑌮𑍍 ।

ஷண்மாஸத்யாநயோகேந ஜாயதே கருடோபம:।
த்ருஷ்ட்யா கர்ஷயதே லோகம் த்ருஷ்ட்யைவ குருதேவசம் ॥

த்ருஷ்ட்யா ஸம்க்ஷோபயேந்நாரீம் த்ருஷ்ட்யைவ
ஹரதேவிஷம் ।

த்ருஷ்ட்யா சதுர்த்தகாதீம்ச்ச ஜ்வராந்நாசயதேக்ஷணாத் ॥

சந்த்ரகாந்த சிலாமூர்த்திம் சிந்தயித்வா விநாசயேத் ।

தபாஜ்வராநசேஷாம்ச்ச சீக்ரமதார்க்ஷ்யஇவாபர: ॥

கருடத்யாநயோகேந ஸ்மரணாந்நாசயேத் விஷம் ।

என்றவை முதலான சாஸ்த்ரங்கள் மேல்சொன்ன காருட ப்ரயோகத்தில் ஆதாரமாக ஆகின்றன. குரு முகமாக ஸ்ரீவித்யையில் மந்த்ரதீக்ஷை செய்து கொண்ட உபாஸகர்களுக்குத்தான் இந்த ப்ரயோகத்தில் அதிகாரம் ஏற்படும். இந்த ப்ரயோகத்தால் நிவ்ருத்தியாகாததானது லோகத்தில் ஒன்றும் கிடையாது. க்ரஹபாதை, ஜ்வராதிகள், விஷங்கள் எல்லாவற்றையும் இந்த ச்லோகத்தைச் சொல்லிக்கொண்டு அம்பிகா த்யானத்துடன் ரோகிகளுக்கு பஸ்மாவை அபிமந்த்ரணம் செய்துகொடுத்தாலே அந்த ரோகம் நிவ்ருத்தியாகிவிடும். உபாஸகனுக்கு கருடஸாம்யம் ஏற்படுகிறதென்று சொன்னாலும், விஷத்தை நாசம் பண்ணுவதில் கருடனும் உபாஸகனும் ஸமான வைபவமுள்ளவனென்று ஏற்பட்டாலும், ஜ்வரம் முதலான ரோகங்களால் பீடிக்கப்பட்டவர்களை த்ருஷ்டிமாத்ரத்தால் ஜ்வராதிகளிலிருந்து விமுக்தர்களாகச் செய்து அவர்களையும் ஸுகிகளாக வாழச் செய்யும் விஷயத்தில், உபாஸகன் கருட பகவானுக்கும் மேலான வைபவமுள்ளவனாக ஆகிறான். பொதுவாகவே இந்த ச்லோகத்தை எந்த ஜனங்களும் பதினாறு ஆவர்த்திக்குக் குறையாமல் அம்பிகா த்யானத்துடன் சொல்லிக்கொண்டு பஸ்மாவையோ தீர்த்தத்தையோ அபிமந்த்ரணம் செய்து ரோகிகளிடம் அதைக் கொடுத்து பஸ்மாவானால் அவர்களை தரித்துக்கொள்ளும்படிக்கும், தீர்த்தமானால் அவர்களை உட்கொள்ளும்படிக்கும் செய்வதினாலேயே இந்த ப்ர

யோகத்தை பரீக்ஷித்துப் பார்த்துவிடலாம். ஸகல ரோக நிவர்த்தி யென்பதில் ஸந்தேஹமில்லை. உபாஸ கர்களுடைய த்ருஷ்டிக்கே ரோகாதிகளை நிவர்த்தி செய்து வைக்கும்படியான வைபவம் ஸித்திக்கிறது. ஆகையால், எல்லா புண்ய ஜனங்களும் இந்த ச்லோ கத்தை தினந்தோறும் நூறு ஆவர்த்திக்குக் குறையா மல் பாராயணம் செய்து பராசக்தியினுடைய ப்ர ஸாதத்தால் அரோகத்ருட காத்ரர்களாக ஆகவேண்டு மென்று ப்ரார்த்திக்கப்படுகின்றது.

---

## 21. பரமாஹ்லாத ஸாதனம்

तटिल्लेखातन्वीं तपनशशिवैश्वानरमयीम्
निषण्णां षण्णामप्युपरि कमलानां तवकलाम् ।
महापद्माटव्यां मृदितमलमायेनमनसा
महान्तः पश्यन्तः दधति परमानन्दलहरीम् ॥ २१ ॥

𑌤𑌟𑌿𑌲𑍍𑌲𑍇𑌖𑌾𑌤𑌨𑍍𑌵𑍀𑌂 𑌤𑌪𑌨𑌶𑌶𑌿𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌮𑌯𑍀𑌮𑍍
𑌨𑌿𑌷𑌣𑍍𑌣𑌾𑌂 𑌷𑌣𑍍𑌣𑌾𑌮𑌪𑍍𑌯𑍁𑌪𑌰𑌿 𑌕𑌮𑌲𑌾𑌨𑌾𑌂 𑌤𑌵𑌕𑌲𑌾𑌮𑍍 ।
𑌮𑌹𑌾𑌪𑌦𑍍𑌮𑌾𑌟𑌵𑍍𑌯𑌾𑌂 𑌮𑍃𑌦𑌿𑌤𑌮𑌲𑌮𑌾𑌯𑍇𑌨𑌮𑌨𑌸𑌾
𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌃 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌃 𑌦𑌧𑌤𑌿 𑌪𑌰𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑌹𑌰𑍀𑌮𑍍 ॥ ௨௧ ॥

தடில்லேகாதந்வீம் தபநசசிவைச்வாநரமயீம்
நிஷண்ணாம் ஷண்ணாமப்யுபரிகமலாநாம் தவகலாம் ।
மஹாபத்மாடவ்யாம் ம்ருதிதமலமாயேநமநஸா
மஹாந்த: பச்யந்த: தததி பரமாநந்தலஹரீம் ॥ 21 ॥

| | |
|---|---|
| हे भगवति ! (ஹெ ஹமவதி ! ஹே பகவதி !) | = ஹேபராசக்தியே ! |
| तटिल्लेखातन्वीं (தடிஜ்லெவாதநீ்ஂ) (தடில்லேகாதந்வீம்) | = மின்னல் கொடியைப் போல் நீண்ட உருவத்தை உடைத்தானவளாயும், ஸூக்ஷ்மமாயும், ஜ்யோதிர் மயமாயும், க்ஷணகாலம் பக்தனுடைய விஷயத்தில் ப்ரகாசித்து மறைகிறவளாயும், |
| तपनशशिवैश्वानरमयीं (தவநஶஶிவெஶ்வாநரமயீஂ) (தபநசசிவைச்வாநரமயீம்) | = ஸூர்யன், சந்த்ரன், அக்னி இந்த மூன்று பேர்களுடைய உருவமாயும் |
| षण्णां (ஷண்ணாஂ) (ஷண்ணும்) | = ஆறுகளான |
| कमलानां (கமலாநாஂ) (கமலாநாம்) | = ஆதார சக்ரங்களுக்கும் |
| अपि (அவி) (அபி) | = மூன்றுவிதமான க்ரந்திகளுக்கும் |
| उपरि (உவரி) (உபரி) | = மேல் பாகத்தில் |
| महापद्माटव्यां निषण्णां (மஹாவஶ்ராடவ்யாஂ நிஷண்ணாஂ) (மஹாபத்மாடவ்யாம் நிஷண்ணும்) | = ஆயிரம் தளமுள்ள பெரிய தாமரைப் புஷ்பத்தின் கர்ணிகையில் விளங்குகிறதாயும் உள்ள |

तव (𑌤𑌵) (தவ) = உனனுடைய

कलां (𑌕𑌲𑌾𑌂) (கலாம்) = ஸாதா என்ற மந்த்ர சாஸ்த்ரத்தில் ப்ரஸித்தமான மஹாபிந்து ஸ்வரூபமான கலையை

महान्तः (𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌃) (மஹாந்த:) = ஞானிகள்

मृदित मलमायेन (𑌮𑍃𑌦𑌿𑌤 𑌮𑌲𑌮𑌾𑌯𑍇𑌨) (ம்ருதித மலமாயேந) = நாசம் செய்யப்பட்ட காமக்ரோதாதிகள், அவித்யை, ராகத்வேஷம் முதலானவைகளோடு கூடின (சுத்தமான)

मनसा (𑌮𑌨𑌸𑌾) (மநஸா) = மனதால்

पश्यन्तः (𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌃) (பச்யந்த:) = ப்ரத்யக்ஷமாக தர்சனம் செய்கிறவர்களாகக் கொண்டு

परमानन्दलहरीं (𑌪𑌰𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑌹𑌰𑍀𑌂) (பரமானந்த லஹரீம்) = அளவற்ற ஆனந்த ப்ரவாஹத்தை

दधति (𑌦𑌧𑌤𑌿) (தததி) = அனுபவிக்கின்றார்கள்.

தாத்பர்யம்:—இந்த ச்லோகமானது பரமாஹ்லாதகரம் என்று சொல்லப்படும். மனிதர்களுக்கு தன் வாழ்வில் துக்கமே வராமல் ஸுகத்தை மாத்ரம் மேன்மேலும் வ்ருத்தி செய்துகொண்டு ஆனந்தமாக வாழ்வதற்கு, இந்த ச்லோகம் பெரிய ஸஞ்சீவியாக ஆகும். ஸாக்ஷாத் பராசக்தியான ஜகன்மாதாவினுடைய முக்யமான கலையை இந்த ச்லோகத்தால் த்யா

ணம் செய்யவேண்டும். அந்த கலைக்கு साद (ஸாதா) (ஸாதா) என்று பெயர் ஏற்பட்டது. மஹாபிந்து ரூபிணி என்று சொல்லியபடி பிந்துவே அந்த கலை யாக ஆகும். அந்த கலையானது பாஸித்துவரும் இடமோ மஹாபத்மாடவீ என்று சொல்லப்படும். பத்மம் என்றால் தாமரைப்புஷ்பம். மஹாபத்மம் என்றால் ஆயிரம் தளமுள்ள தாமரைப்புஷ்பம். ஆயிரம் தளங் களும் மலர்ந்திருந்தால் அதுவே ஒரு அரண்யம்போல் விளங்கும். அதனால் அது மஹாபத்மாடவீ என்று சொல் லப்பட்டது. மனிதனுடைய சரீரமாகிய வ்யஷ்டி புருஷனிடத்தில் மூர்த்தா (மூர்தா) (மூர்தா) என்று சொல்லப்படும் ப்ரம்மரந்த்ரமாகிய சிரஸ் ஸிற்குள் இருக்கும் ஆதாரசக்ரமே மஹாபத்மாடவீ என்று சொல்லப்படும். விராட்புருஷனாகிய ஜகத்தா கிய ஸமஷ்டி புருஷனிடத்திலோ த்வாதசாந்தம், ஹாலாஸ்யம், பூலோக சிவலோகம் என்ற காரணப் பெயர்களுடன் கூடிய மதுராபுரியே மஹாபத்மாடவீ யாக ஆகும். அந்த நகரமானது ஸ்ரீசக்ர ரூபமென் பதை எவ்வித்வான்களும் அறிந்திருக்கக்கூடும். அந்த நகரத்திற்கு அதீச்வரியான ஜகன்மாதாவான ஸாக்ஷாத் ஸ்ரீமீனாக்ஷீ பரதேவதையினுடைய ஸ்தா னமே மஹாபிந்துவாகும். அந்த ஸஹஸ்ரகமலமென்ற மேலான ஸ்தானமோ, மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு சக்ரங்களுக்கும், ப்ரம்மக்ரந்தி, விஷ்ணு க்ரந்தி, ருத்ர க்ரந்தி என்ற மூன்று க்ரந்திகளுக்கும் மேல் ஸ்தானத்தில் விளங்கிவருகிறது. அதாவது சந்த்ர மண்டலமென்று சொல்லப்படும் ஸஹஸ்ர கமல மென்ற ஸ்தானத்திற்கு மேலான ஸ்தானமே கிடை யாதென்று பரமாசார்யாளுடைய ஸித்தாந்தமாகும். அந்தர்முகாளானால் வ்யஷ்டி புருஷனிடத்தில் ஸமயா சாரத்தை அவலம்பித்து தர்சனம் செய்யலாம். பஹிர்முகாளானால் கௌலமத ரீதியாக விராட்புருஷ னிடத்தில் மேற்சொன்ன த்வாதசாந்தம் என்ற ஸ்தா

னத்தில் தர்சனம் செய்யலாம். இந்த உபாஸனையைச் செய்கிறவர்களுக்கு காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்யம் என்ற ஆறு தோஷங்களும் இருக்கக் கூடாது. அத்துடன், அவித்யை, அஸ்மிதம், ராகம், த்வேஷம், அபிநிவேசம் என்ற பஞ்சக்லேசத்தையும் தேவியை உபாஸிப்பவர்கள் விட்டவர்களாக ஆக வேண்டும். அவித்யை என்ருல், ஜடமான தேஹத்தை ஆத்மா என்று அனுபவிக்கும் அத்யாஸ மாகும். அஸ்மிதம் என்ருல் 'தான் பெரியவன்' என்ற அஹங்காரமாகும். ராகம் என்ருல் இஷ்டமான வஸ்துவிலுள்ள ஆசை. த்வேஷம் என்ருல் அனிஷ்டமான வஸ்துவிலுள்ள வெறுப்பு. அபிநிவேசம் என்ருல் சாகாமலிருக்கவேண்டுமென்ற பேராசை. இந்த ஐந்து க்லேசங்களும், இந்த உபாஸகர்களிடத்தில் கொஞ்சமேனுமிருக்கக்கூடாது. இவைகளை விட்டு உபாஸிப்பவர்கள் மஹான்கள் என்றுதான் சொல்லவேண்டும். மஹாஞானிகளாக இருந்தால் மாத்ரம் இந்த உபாஸனத்தைச்செய்ய ஸாத்யமாகும். सादा (ஸாதா)(ஸாதா) என்ற தேவியினுடைய கலையோ மின்னலைப்போலொத்தது. மின்னல் நீண்டதாயும் ஜ்யோதிர்மயமாயும், மிகவும் ஸூக்ஷ்மமாயும், க்ஷணகாலம் ப்ரகாசித்துவிட்டு மறையும் ஸ்வபாவமுள்ளதாயும் இருப்பது லோக ப்ரஸித்தமானது. இதைப்போலவே தேவியினுடைய கலையையும் அறியவும். தேவியும் உபாஸகர்களுடைய விஷயத்தில் மின்னலைப்போல் ஒரு க்ஷணந்தான் ப்ரகாசிப்பாள். ஸூர்யன், சந்த்ரன், அக்னி இம்மூன்று தத்வமும், सादा (ஸாதா) (ஸாதா) என்ற கலையின் விபூதியாகும். இதனுல், ஸூர்யன் இருட்டைப் போக்கடிப்பதுபோல், இந்த கலையை உபாஸிப்பவர்களுக்கு அக்ஞானமென்ற உள் இருள் நசித்துவிடும். சந்த்ரனுனவன் தாபத்தை நிவர்த்தி செய்வதுபோல், தேவியும் ஆத்யாத்மிக ஆதி பௌதிக, ஆதிதைவிகமென்ற மூன்று தாபங்களி

னின்று நிவர்த்தி செய்துவைத்து ஆரோக்யத்தைக் கொடுப்பாள். ஆத்யாத்மிகமென்ருல் சரீரத்தில் தாதுவைஷம்யத்தால் ஏற்படும் துக்கமாகும். ஆதி பௌதிகமென்ருல், ப்ருதிவி, ஜலம், தேஜஸ், வாயு என்ற பூதங்களின் நிமித்தமாக ஏற்படும் துக்க மாகும். ஆதிதைவிகமென்ருல், அனுவ்ருஷ்டி, அதி வ்ருஷ்டி இவைகளால் ஏற்படும் துக்கமாகும். அக்னி ஸ்வரூபமாக விளங்கிவருகிறதென்று சொன்னதி லிருந்து அக்னிக்கு அபக்வமான பதார்த்தத்தை பக் வம் செய்துவைக்கும் சக்தியிருப்பதுபோல், தேவியும் உபாஸகனுக்கு புண்ய கர்மாக்களை சீக்ரம் பக்வப் படுத்தி ஸுகானுபவத்திற்கு ஸ்வானுபவமாக செய் வதுபோல், பாபகர்மாவையும் புண்யகர்மாவாக பக் வம் செய்து ஸுகத்தையே கொடுக்கும்படி செய்யும் சக்தி உள்ளவள். ஆகையால் பரதேவதையினுடைய सादा (ஸாதா) (ஸாதா) என்ற கலையை உபாஸிப்பது, மனிதர்களுக்கு துக்கத்தை நிவர்த்தி செய்து ஸுகத் தையே கொடுப்பதற்கு அந்தரங்கஸாதனமானதினுல், எல்லா ப்ராணிகளும் அதை உபாஸித்து வரவேண்டி யது அவச்யமாகும். தினந்தோறுமோ, அல்லது ப்ரதி சுக்ரவாரமோ, பௌர்ணமியிலோ ஸௌகர்யம்போல் தன் க்ருஹத்திலேயே சுத்தமான ஆகாரத்துடன் ஷட்கோணசக்ரம்போட்டு, மத்தியில் பிந்துவையும் எழுதி அதன்மேல் ஐந்துமுகமுள்ள தீபத்தை ஏற்றி வைத்து, த்யான ஆவாஹனுதி பூஜைகளால் தேவியை ஸந்தோஷிக்கச் செய்துவிட்டு, ஆயிரமோ, முன் னூருே அல்லது நூறு ஆவர்த்தியோ. மேற்சொன்ன ச்லோகத்தை பாராயணம் செய்வதே மேற்சொன்ன உபாஸனுக்ரமத்தில் ஒன்ருகும்.

———

## 22. தேவியின் ஸ்தோத்ர மஹிமை.

भवानि त्वं दासे मयि वितर दृष्टिं सकरुणाम्
इति स्तोतुं वाञ्छन् कथयति भवानि त्वं इति यः ।
तदैव त्वं तस्मै दिशसि निजसायुज्यपदवीम्
मुकुन्दब्रह्मेन्द्रस्फुटमकुटनीराजितपदाम् ॥ २२ ॥

𑌭𑌵𑌾𑌨𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌦𑌾𑌸𑍇 𑌮𑌯𑌿 𑌵𑌿𑌤𑌰 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌂 𑌸𑌕𑌰𑍁𑌣𑌾𑌮𑍍
𑌇𑌤𑌿 𑌸𑍍𑌤𑍋𑌤𑍁𑌂 𑌵𑌾𑌞𑍍𑌛𑌨𑍍 𑌕𑌥𑌯𑌤𑌿 𑌭𑌵𑌾𑌨𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌇𑌤𑌿 𑌯𑌃 ।
𑌤𑌦𑍈𑌵 𑌤𑍍𑌵𑌂 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌦𑌿𑌶𑌸𑌿 𑌨𑌿𑌜𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌪𑌦𑌵𑍀𑌮𑍍 ॥
𑌮𑍁𑌕𑍁𑌨𑍍𑌦𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌫𑍁𑌟𑌮𑌕𑍁𑌟𑌨𑍀𑌰𑌾𑌜𑌿𑌤𑌪𑌦𑌾𑌮𑍍
॥ 22 ॥

பவானி த்வம் தாஸே மயி வித்ர த்ருஷ்டிம் ஸகருணாம்
இதி ஸ்தோதும் வாஞ்சந் கதயதி பவானித்வம் இதி யः ।
ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜஸாயுஜ்ய பதவீம்
முகுந்த ப்ரஹ்மேந்த்ர ஸ்புட மகுட நீராஜித பதாம் ॥ 22 ॥

| | |
|---|---|
| हे भवानि ! (𑌹𑍇 𑌭𑌵𑌾𑌨𑌿 !) (ஹே பவானி) | = பரமசிவனுடைய தர்ம பத்னியான பரா சக்தியே ! |
| त्वं (𑌤𑍍𑌵𑌂) (த்வம்) | = நீ |
| दासे (𑌦𑌾𑌸𑍇) (தாஸே) | = ஒரு கிங்கரனை |
| मयि (𑌮𑌯𑌿) (மயி) | = என்னிடத்தில் |
| सकरुणां (𑌸𑌕𑌰𑍁𑌣𑌾𑌂) (ஸகருணாம்) | = கருணையோடு கூடின |
| दृष्टिं (𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌂) (த்ருஷ்டிம்) | = கடாக்ஷத்தை |
| वितर (𑌵𑌿𑌤𑌰) (விதர) | = பரவச் செய் |
| इति (𑌇𑌤𑌿) (இதி) | = என்று |

स्तोतुं (ஸ்தோதும்) = ஸ்தோத்ரம் செய்வதற்கு
(ஸ்தோதும்)

वान्छन् (வாஞ்சந்)(வாஞ்சந்) = இச்சிக்கிறவனுய்

भवानि (ஹவாநி)(பவானி) = ஹே பார்வதீ !

त्वं (த்வம்) (த்வம்) = நீ

इति (இதி) (இதி) = என்று மாத்ரம்

यः (யஃ) (ய:) = எவன்

कथयति (கயயதி) (கதயதி) = சொல்கிருனே

तस्मै (தஸ்மை) (தஸ்மை) = அவன் பொருட்டு

तदैव (ததைவ) (ததைவ) = அவன் சொன்ன க்ஷணத் திலேயே

त्वं (த்வம்) (த்வம்) = நீ

मुकुन्द ब्रह्मेन्द्रस्फुट मकुट नीराजितपदां (முகுந்த ப்ரஹ்மேந்த்ர ஸ்ஃபுட மகுட நீராஜித பதாம்) (முகுந்த ப்ரஹ்மேந்த்ரஸ்புட மகுட நீராஜிதபதாம்) = விஷ்ணு, ப்ரம்மா, இந்த்ரன் இவர்களுடைய கிரீடங்களால் ப்ரகாசமாகும்படி மங்கள ஹாரத்தி செய்யப்பட்ட திவ்ய பாதாரவிந்தத்துடன் கூடின

निजसायुज्यपदवीं (நிஜஸாயுஜ்ய பதவீம்) (நிஜஸாயுஜ்ய பதவீம்) = தனது ஸாயுஜ்ய பதவியை (தனக்கும், தன்னை ஸ்துதித்தவனுக்கும், பேதமில்லாமல் ஒன்ருக பாவிக்கும் தன்மையை)

दिशसि (திஶஸி) (திசஸி) = கொடுக்கின்ருய்.

தாத்பர்யம் :—ஜகன்மாதாவின் கருணையின் வைப வத்தை யாரும் இவ்வளவுதான் என்று வர்ணிக்க முடியாது. தேவியினுடைய ஸந்நிதி சென்று, ரொம் பவும் மூடனான ஒரு மனிதன், " தாயே! நான் உன்னு டைய கிங்கரன்; என்னிடத்தில் நீ கருணா த்ருஷ்டி யைச் செலுத்தி என்னை ரக்ஷிக்கவேண்டு" மென்று ஸ்தோத்ரம் செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் हे भवानि (ஹெ பவானி) (ஹே பவாநி) என்று மாத்ரம் சொன்னான். भवानि (பவானி) (பவாநி) என்றது க்ரியையாக ஆகும்; க்ரியையில் உத்தம புருஷ ஏக வச னம்; தேவியைக் கூப்பிடும் ஸம்போதன ப்ரதமையா யும் ஆகும். ஸ்தோத்ரம் செய்ய எண்ணம் உள்ள வனே भवानि (பவானி) (பவாநி) என்ற பதத்தை ஸம் போதனப்ரதமையாக நினைத்து தேவியைக் கூப்பிடுவ தான எண்ணத்துடன் சொன்னான். ஆகிலும், தேவி யானவள் भवानि (பவானி) (பவாநி) என்ற பதத்தை க்ரியா பதமாக பாவித்தாள். க்ரியா பதமானால் ஆகின் றேன் என்ற பொருளாகும். த்வம் (நீ) என்றும் ப்ரயோ கம் செய்திருப்பதால் 'நீயாக நான் ஆகின்றேன்' என்று அம்பாள் தாத்பர்யத்தைக் கல்பித்துக்கொண்டாள். ஆனால் ஸ்தோத்ரம் செய்தவனுடைய தாத்பர்யம் அவ்விதம் அல்ல. பதத்திற்கு அப்படி தாத்பர்யம் ஏற்படலாம். அம்பாள் அவ்விதமான தாத்பர்யத் தைக் க்ரஹித்துக்கொண்டதற்கு அம்பாளுடைய அபாரமான கருணையே காரணமாகும் "நீயாக நான் ஆகிறேன்" என்பது வேதாந்தத்தில் ரஹஸ்யங் களில் ரஹஸ்யமான பொருளாகும். இந்த பொரு ளைத்தான் மஹாவாக்யமும் வேதாந்தத்தில் போதிக் கின்றது. இவ்விதமான ஞானமுள்ள புருஷனுக்கு மோக்ஷானந்தத்தையே பலனாக சொல்லப்பட்டிருக் கிறது. பிறகு அந்த மனிதனுக்கு ஸம்ஸார பந்தத் தின் உபத்ரவமே இல்லையென்பது சாஸ்த்ர ஸித்தாந்த மாகும். அவ்விதம் அந்த பக்தனைச் செய்யவேண்டு மென்று தேவி கருதி, அதற்கு அநுகூலமான தாத்பர்

யத்தை க்ரஹித்துக்கொண்டு, தனது ஸாயுஜ்ய பதவியை உடன் அந்த பக்தனுக்குக் கொடுத்துவிட்டாள். தனக்கும் அந்த பக்தனுக்கும் கொஞ்சமேனும் வேற்றுமை யில்லாத தன்மையை அளித்துவிட்டாள். அந்த பக்தன் தேவியினுடைய ஸ்வரூபமாகவே ஆனதிலிருந்து, தேவியினுடைய பாதாரவிந்தத்தில், ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் முதலான தேவர்கள் ஒவ்வொரு தினத்திலும் தங்கள் க்ரீடங்களில் வைத்து இழைத்திருக்கும் நவரத்னங்களின் ஒளியால் ஒரே ப்ரகாசத்தைக் கொடுத்துக்கொண்டு கற்பூர ஆரத்தி செய்வதுபோல் சரணமடைந்து வழக்கமாய் செய்வதான நமஸ்காரம் இந்த பக்தனுடைய பாதாரவிந்தத்திற்கும் ஏற்பட்டுவிட்டது. அம்பாளுக்கும், அவள் பக்தனுக்கும் பேதமில்லையென்பதில் இதைக் காட்டிலும் வேறு அடையாளம் ஒன்று சொல்லவேண்டுமென்பதில்லை. ஆகையால், ஜபம் ஹோமம், மற்ற தேவதோபாஸனங்கள், இவைகளைக் காட்டிலும், லோகமாதாவான தேவியினிடம் भवानि (ஹவானி) (பவானி) என்ற பதத்தால் ஸம்போதனம் செய்து கொண்டு, "கிங்கரனை என்னிடம் நீ கருணை த்ருஷ்டியை செலுத்தவேண்டும்" என்பதான தாதாத்ம்ய உபாஸனமானது ஸாயுஜ்ய பதவியைக் கொடுக்குமானதால், மோக்ஷம் என்ற பரம புருஷார்த்தத்தை விரும்புகிறவர்கள் தேவியை ஸ்தோத்ரம் செய்வதே முக்யமாகும் என்பதுஇதன் கருத்தாகும்.

ஒருவன் இச்சையோடு ஒரு அர்த்தத்தை வெளிப்படுத்தாதபோனாலும், அவனை முக்தனாகச் செய்ய அவன் ஸ்துதித்த பதங்களுக்கு எவ்விதம் அர்த்தம் செய்யவேண்டுமோ அவ்விதம் தேவி தானாகவே செய்துகொண்டு, அவனை முக்தனாகவே செய்துவிடுவாள். இவ்விதமான அபாரமான கருணை தாயான தேவிக்குத்தான் ஏற்படுமே தவிர மற்ற எந்த தேவதைக்கும் ஏற்படாது. தன்னைச் சுடவேண்டுமென்ற

இச்சையுடன் அக்னியைத்தொட்டால்தான் அது சுடுமென்பதில்லை. இச்சையில்லாமல் தொட்டவனை யும் சுட்டே தீருகிறது. அதுபோல் தேவியும் ஒரு பலத்தில் இச்சையுடன் ஸ்துதிப்பவனுக்கு மாத்ரம் அந்தப் பலத்தை கொடுப்பது என்பதில்லை. அவனுடைய இச்சையை எதிர்பார்க்காமலே அவ னுக்கு வேண்டிய போக போக்யாதிகளை அளித்து அவனை முக்தனாகவும் செய்யும் ஸ்வபாவமுள்ளவள். இது மேலான வஸ்துவின் ஸ்வபாவமாகும்,

ஆகையால் லோகமாதாவான தேவியை ஸ்துதிக்க வேண்டியது எல்லா ப்ராணிகளுக்கும் அவச்யமாகும். அதிலும் மேல்சொன்ன ச்லோகத்தால் ஸ்தோத்ரம் செய்வது ஸாமவேதத்தில் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆரு வது அத்யாயத்தில் உள்ள तत्त्वमसि (𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿) (தத்வ மஸி) என்ற மஹாவாக்யத்தின் அர்த்தத்தை அனு ஸந்தானம் செய்யும் கௌரவத்தை கொடுக்கக்கூடி யது. அந்த மஹாவாக்யமும் இந்த ச்லோகமும் ஒரே பொருளைத்தான் விளக்குகிறது.

---

## 23. சக்தி தத்வ மஹத்வம்,

त्वया हृत्वा वामं वपुरपरितृप्तेन मनसा
शरीरार्धं शंभोः अपरमपि शङ्के हृतमभूत् ।
यदेतत्त्वद्रूपं सकलमरुणाभं त्रिनयनम्
कुचाभ्यां आनम्रं कुटिलशशिचूडालमकुटम् ॥ २३ ॥

𑌤𑍍𑌵𑌯𑌾 𑌹𑍃𑌤𑍍𑌵𑌾 𑌵𑌾𑌮𑌂 𑌵𑌪𑍁𑌰𑌪𑌰𑌿𑌤𑍃𑌪𑍍𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾
𑌶𑌰𑍀𑌰𑌾𑌰𑍍𑌧𑌂 𑌶𑌂𑌭𑍋𑌃 𑌅𑌪𑌰𑌮𑌪𑌿 𑌶𑌙𑍍𑌕𑍇 𑌹𑍃𑌤𑌮𑌭𑍂𑌤𑍍 ।
𑌯𑌦𑍇𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑍍𑌰𑍂𑌪𑌂 𑌸𑌕𑌲𑌮𑌰𑍁𑌣𑌾𑌭𑌂 𑌤𑍍𑌰𑌿𑌨𑌯𑌨𑌮𑍍
𑌕𑍁𑌚𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌆𑌨𑌮𑍍𑌰𑌂 𑌕𑍁𑌟𑌿𑌲𑌶𑌶𑌿𑌚𑍂𑌡𑌾𑌲𑌮𑌕𑍁𑌟𑌮𑍍
॥ 23 ॥

த்வயா ஹ்ருத்வா வாமம் வபுரபரித்ருப்தேந மநஸா
சரீரார்த்தம் சம்போ: அபரமபி சங்கே ஹ்ருதமபூத் !
யதேதத்த்வத்ரூபம் ஸகலமருணாபம் த்ரிநயநம்
குசாப்யாம் ஆநம்ரம் குடிலசசி சூடாலமகுடம் ॥ 23 ॥

हे भगवति (ஹெ ஹமவதி) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே !

यत् (யத்) (யத்) = யாதொரு காரணத்தால்

एतत् (ஏதத்) (ஏதத்) = இந்த (அதாவது என்னுடைய ஹிருதயகமத்தில் விளங்கும்)

त्वद्रूपं (த்வத்ரூபம்) (த்வத்ரூபம்) = உமது ஸ்வரூபமானது

सकलं (ஸகலம்) (ஸகலம்) = முழுமையும்

अरुणाभं (அருணாபம்) (அருணாபம்) = சிவந்த காந்தி உள்ளதாயும்

त्रिनयनं (த்ரிநயநம்) (த்ரிநயநம்) = மூன்று கண்ணுள்ளதாயும்

कुचाभ्यां (குசாப்யாம்) (குசாப்யாம்) = இரண்டு ஸ்தனங்களால்

आनम्रं (ஆநம்ரம்) (ஆநம்ரம்) = வணங்கினதாயும்

कुटिलशशि चूडालमकुटं (குடிலசசி சூடாலமகுடம்) (குடிலசசி சூடால மகுடம்) = சந்த்ரகலையினால் சிரோபூஷணத்தை உடைய க்ரீடத்தோடு கூடினதோ

तत् (தகூ) (தத்) = அந்த காரணத்தினுல்

शंभो: (ஶம்஭ோ:) (சம்போ:) = பரமசிவனுடைய

वामं (வாமம்) (வாமம்) = இடதான

अर्धं (அர்த்ம்) (அர்த்தம்) = பாதி

वपु: (வபு:) (வபு:) = சரீரத்தை

हृत्वा (ஹ்ருத்வா) (ஹ்ருத்வா) = அபஹரித்துவிட்டு

अपरितृप्तेन (அபரித்ருப்தேந அபரித்ருப்தேந) = த்ருப்தி இல்லாததான (அதாவது போதும் என்ற எண்ணம் இல்லாததான)

मनसा (மநஸா) (மநஸா) = மனதினுல்

अपरं (அபரம்) (அபரம்) = வேருன

शरीरार्धमपि (ஶரீரார்த்மபி) (சரீரார்த்தமபி) = வலது (பாகத்தில் உள்ள) பாதி சரீரமும்

त्वया (த்வயா) (த்வயா) = உன்னுல்

हृतं (ஹ்ருதம்) (ஹ்ருதம்) = அபஹரிக்கப்பட்டதாக

अभूत् (அபூத்) (அபூத்) = ஆயிற்று

इति (இதி) (இதி) = என்று

शङ्के (ஶங்கே) (சங்கே) = நினைக்கின்றேன்.

தாத்பர்யம்:—இந்த ச்லோகத்தால் சக்தி தத்வமே மேலானது என்று சொல்லப்படுகிறது சக்தி தத்வத்தில் சிவதத்வமானது அடங்கி இருக்கிறது. அதனுல்

புருஷார்த்தங்களை விரும்பும் ஜனங்கள் பராசக்தியையே உபாஸிக்கவேண்டும். சிவன், சக்தி இரண்டும் சேர்ந்து ஒரே உடலாகும். அதில் இடதுபாகத்தை சக்தியாகவும், வலதுபாகத்தை சிவனுகவும் சொல்ல வேண்டியது. சிவனுடைய பாகம் ஸ்படிகம்போல் நல்ல வெளுப்பானது. சக்தியினுடைய பாகமோ உதய காலத்தில உள்ள ஸூர்ய ப்ரபையைப்போல் சிவப்பானது. சக்தியினுடைய பாகம் பாதிபாகமானதினுல் தேவியினுடைய ஸ்வரூபத்தை பார்க்கும்போது ஒரு குசந்தான் காணப்படவேண்டும். மற்ற பாகம் புருஷபாகமனதால் புருஷபாகத்தில் ஸ்தனமானது இருக்கக்கூடாது. தேவியினுடைய ஸ்வரூபம் பாதி பாகம் சிவப்பாயும் பாதிபாகம் வெளுப்பாயும் காண வேண்டியிருக்க, எல்லா பாகமும் சிவப்பாகவே தோன்றுகிறது. இரண்டு குசங்கள் காணப்படுகின்றன. தேவியினுடைய முகத்தில் மூன்று கண்களும் பாஸிக்கின்றன. சந்திரகலையால் அலங்கரிக்கப்பட்ட நவரத்னமயமான கிரீடத்தையும் தரித்துவருகிருள். வெளுப்பான வலதுபாகம் என்ற சிவஸ்வரூபத்தை காணவே முடியவில்லை. இதனுல் பரதேவதையானவள் பரமசிவனுடைய இடதுபாகத்தை மாத்ரம் தன் ஸ்வரூபத்தால் மறைத்து, வெளுப்பான பரமசிவனுடைய உடலை சிவப்பாக செய்தது போதாது என்ற எண்ணத்துடன், பரமசிவனுடைய வலதுபாகத்தையும் தான் ஆக்ரமித்துக்கொண்டு இருக்கும் காரணத்தால் தேவியினுடைய சரீரமுழுமையும் சிவப்பாகவே காணப்படுகின்றது. அதனுல் சக்தியினுடைய அம்சத்தில் சிவாம்சமானது அடங்கி இருப்பது என்பது ஸ்பஷ்டமாக தெரியவருகிறது.

वश:कान्तौ (வஶ:காந்தௌ) (வச:காந்தௌ) என்ற தாதுவிலிருந்து சிவ: என்ற சப்தமானது உண்டானது. காந்தி என்ருல் தீப்தி என்று அர்த்தம்.

हिसि (ஹிஸி) (ஹிஸி) என்ற தாதுவிலிருந்து सिंहः (ஸிம்ஹஃ) (ஸிம்ஹ:) என்ற சப்தம் ஏற்பட்டது. வர்ணங்களுக்கு க்ரமம் மாறி இருக்கிறது. அந்த தாதுவில் हि (ஹி) (ஹி) என்ற எழுத்து முதலிலும், सि (ஸி) (ஸி) என்ற எழுத்து பின்பும் உள்ளது. மாறுதலில் सि (ஸி) (ஸி) என்பது முன்பாகவும் हि (ஹி) (ஹி) என்பது இ காரத்திற்கு லோபம் வந்து ह (ஹ) (ஹ) என்பதற்கு முன்பு அனுஸ்வாரமும் ह (ஹ) (ஹ) என்பதற்கு பின்பு விஸர்கமாகவும் ஏற்பட்டு सिंहः (ஸிம்ஹஃ) (ஸிம்ஹ:) என்ற சப்தம் வந்தது போல் வச தாதுவிற்கு காந்தி என்று அர்த்தமான தால், காந்தி என்ற இடத்திலுள்ள இ காரம் ச காரத்தோடு சேர்ந்து அது முன்பாகவும் வ காரம் பின்பாகவும் விஸர்கத்தோடு கூடினதாகவும் ஆகி சிவ: என்ற சப்தம் ஏற்பட்டது. தத்வத்தை கவனித்தால் சிவ தத்வத்திற்கு சக்தி தத்வமே மூலகாரணம் என்று தெரிகிறபடியாலும், காரணத்தில் காரியம் அடங்குமானபடியாலும், சக்தி தத்வத்தில் சிவதத்வம் அடங்கினது என்று அறியலாம். ஞானசக்தி, இச்சாசக்தி, க்ரியாசக்தி, இவைகளோடு கூடினவன்தான் சிவன் என்று சொல்லப்படுவான். சக்தியோடு கூடாத போனல் சிவ ஸ்வரூபமே ஸித்திக்காது. லோகத்திலும் எந்த வஸ்துவும், ஏதாவது ஒரு விதத்தில் சக்தி உள்ளதாக இருந்தால்தான் ப்ராணிகள் அதை விரும்புவார்கள், சக்தி இல்லாத வஸ்துவை யாரும் ஆதரிக்க மாட்டார்களென்பது லோகப்ரஸித்தமானது. இந்த லோகானுபவத்தைக் கொண்டே சக்தியே மேலான தத்வம் என்பது ஸ்பஷ்டமாக ஆகும். ஆகையால், பரதேவதையினுடைய உபாஸனத்தால்தான் ஸர்வ புருஷார்த்தங்களும் ப்ராணிகளுக்கு ஸித்திக்கும், என்பது ஸித்தமாகும்.

---

## 24. ஸ்ரீ தேவியின் மஹத்த்வம்.

जगत्सूते धाता हरिरवति रुद्रः क्षपयते
तिरस्कुर्वन्नेतत्स्वमपि वपुरीशस्तिरयति ।
सदापूर्वः सर्वं तदिदमनुगृह्णाति च शिवः
तवाज्ञामालम्ब्य क्षणचलितयोर्भ्रूलतिकयोः ॥ २४ ॥

𑌜𑌗𑌤𑍍𑌸𑍂𑌤𑍇 𑌧𑌾𑌤𑌾 𑌹𑌰𑌿𑌰𑌵𑌤𑌿 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌕𑍍𑌷𑌪𑌯𑌤𑍇
𑌤𑌿𑌰𑌸𑍍𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑍇𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌮𑌪𑌿 𑌵𑌪𑍁𑌰𑍀𑌶𑌸𑍍𑌤𑌿𑌰𑌯𑌤𑌿 ।
𑌸𑌦𑌾𑌪𑍂𑌰𑍍𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌦𑌿𑌦𑌮𑌨𑍁𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌚 𑌶𑌿𑌵𑌃
𑌤𑌵𑌾𑌜𑍍𑌞𑌾𑌮𑌾𑌲𑌮𑍍𑌬𑍍𑌯 𑌕𑍍𑌷𑌣𑌚𑌲𑌿𑌤𑌯𑍋
𑌰𑍍𑌭𑍍𑌰𑍂𑌲𑌤𑌿𑌕𑌯𑍋𑌃 ॥ ௨௪ ॥

ஜகத்ஸூதே தாதா ஹரிரவதி ருத்ர: க்ஷபயதே
திரஸ்குர்வந்நேதத்ஸ்வமபி வபுரீசஸ்திரயதி ।
ஸதாபூர்வ: ஸர்வம் ததிதமநுக்ருஹ்ணாதி ச சிவ:
தவாக்ஞாமாலம்ப்ய க்ஷணசலிதயோர்ப்ரூலதிகயோ: ॥ 24 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) ஹே பகவதி = ஹே பராசக்தியான தாயே!

धाता (𑌧𑌾𑌤𑌾) (தாதா) = ப்ரும்மாவானவர்

जगत् (𑌜𑌗𑌤𑍍) (ஜகத்) = ஸ்தாவர ஜங்கம ரூபமான லோகத்தை

सूते (𑌸𑍂𑌤𑍇) ஸூதே) = ஸ்ருஷ்டிக்கின்றார்

हरिः (𑌹𑌰𑌿𑌃) (ஹரி:) = விஷ்ணுவானவர்

अवति (𑌅𑌵𑌤𑌿) (அவதி) = லோகத்தை ரக்ஷிக்கின்றார்

रुद्रः (𑌰𑍁𑌦𑍍𑌰𑌃) (ருத்ர:) = ருத்ரனானவர்

क्षपयते (𑌕𑍍𑌷𑌪𑌯𑌤𑍇) (க்ஷபயதே) = லோகத்தை ஸம்ஹரிக்கின்றார்.

ईशः (𑌈𑌶𑌃) (ஈச:) = ஈச்வரனானவன்

एतत् (𑌏𑌤𑌤𑍍) (ஏதத்) ~ இந்த ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் முதலான மூன்று மூர்த்திகளையும்

तिरस्कुर्वन् (𑌤𑌿𑌰𑌸𑍍𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍) (திரஸ்குர்வந்) = தனது ஸ்வரூபத்தில் லயிக்கும்படி செய்கிறவனைக்கொண்டு

स्वं (𑌸𑍍𑌵𑌂) (ஸ்வம்) = தனதான

वपुरपि (𑌵𑌪𑍁𑌰𑌪𑌿) (வபுரபி) = சரீரத்தையும்

तिरयति (𑌤𑌿𑌰𑌯𑌤𑌿) (திரயதி) = மறையச்செய்கிறான்

सदापूर्वः (𑌸𑌦𑌾𑌪𑍂𑌰𑍍𑌵𑌃) (ஸதாபூர்வ:) = 'ஸதா' என்ற சப்தத்தை முன்பு உடைத்தான

शिवः (𑌶𑌿𑌵𑌃) (சிவ:) = சிவன் என்ற பதத்தால் சொல்லப்படும் சதாசிவனானவன்

तत् (𑌤𑌤𑍍) (தத்) = அந்த

इदं (𑌇𑌦𑌂) (இதம்) = இந்த ப்ரம்மா, விஷ்ணு ருத்ரன், ஈச்வரன் என்ற 4 தத்வங்களையும்

सर्वं (𑌸𑌰𑍍𑌵𑌂) (ஸர்வம்) = எல்லாம்

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

क्षणचलितयोः (𑌕𑍍𑌷𑌣𑌚𑌲𑌿𑌤𑌯𑍋𑌃) (க்ஷணசலிதயோ:) = ஒரு க்ஷணம் சலிக்கும்படி செய்யப்பட்ட

भ्रूलतिकयोः (𑌭𑍍𑌰𑍂𑌲𑌤𑌿𑌕𑌯𑍋𑌃) (ப்ரூலதிகயோ:) = கொடி போன்ற புருவங்களுடைய

आज्ञां (𑌆𑌜𑍍𑌞𑌾𑌂) (ஆக்ஞாம்) = உத்திரவை, (புருவத்தின் சலனத்தால் ஸூசிப்பிக்கும் உத்திரவை)

आलम्ब्य (𑌆𑌲𑌂𑌬𑍍𑌯) = பெற்றுக்கொண்டு
(ஆலம்ப்ய)

अनुगृह्णाति (𑌅𑌨𑍁𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿) = மறுபடியும் ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன் என்ற 4 தத்வங்களையும் ஸ்ருஷ்டிக்கின்ருன்.
(அநுக்ருஹ்ணுதி)

தாத்பர்யம்:—ப்ரும்மாவோ ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிருர். தமோகுணம், ரஜோகுணம், ஸத்வகுணம் என்ற மூன்று குணங்களுடன் கூடின மாயையானது ரஜோகுணத்தை மாத்திரம் முக்யமாக அவலம்பித்துக் கொண்டு, தமோகுணத்தையும் ஸத்வகுணத்தையும் அடக்கிவைத்துக் கொண்டிருக்கும் பொழுது அந்த மாயையில் ஸம்பந்தப்பட்ட சைதன்யமானது ப்ரும்மா என்று சொல்லப்படும். ரஜோகுணத்தை உபாதியாக அவலம்பித்த சைதன்யம் ப்ரும்மா என்று வேதாந்த ஸித்தாந்தமாகும்.

அவ்விதமே, விஷ்ணு ஜகத்தை ரக்ஷிக்கிருர். மாயையானது ஸத்வகுணத்தை முக்யமாக அவலம்பித்து ரஜோ, தமோகுணங்களை அடக்கி வைத்துக் கொண்டு பாஸிக்கும் ஸமயத்தில் அந்த மாயையில் ஸம்பந்தப்பட்ட சைதன்யம் விஷ்ணு என்று சொல்லப்படும்.

ருத்ரன் ஜகத்தை ஸம்ஹரிக்கிருன். அந்த ருத்ரனும், மாயையில் ஸம்பந்தப்பட்ட சைதன்யமே. தமோகுணத்தை முக்யமாக அவலம்பித்துக்கொண்டு, ஸத்வ, ரஜோகுணங்களை அடக்கி வைத்துக்கொண்டு பாஸிக்கும் ஸமயத்தில் அந்த மாயையில் ஸம்பந்தப்பட்ட சைதன்யம் ருத்ரன் என்று சொல்லப் படுவான்.

ப்ரும்மாவைப்போல் விஷ்ணுவும் குணோபாதிகம்தான்; ருத்ரனும் அப்படியே. ப்ரும்மாவிடம்

ரஜோகுணத்தையும், விஷ்ணுவினிடம் ஸத்வகுணத்தையும், ருத்ரனிடம் தமோகுணத்தையும் அறியவும். ரஜோகுணம் ஸ்ருஷ்டிக்கும், ஸத்வகுணம் பரிபாலனத்திற்கும், தமோகுணம் ஸம்ஹாரத்திற்கும் காரணங்களாகும். அதனுல் அம்மூன்று பேர்களும் க்ரமமாக மூன்று கார்யங்களைச் செய்கிருர்கள்,

இந்த மூன்று பேர்களுக்கும் ஈச்வரதத்வம் மேலான தத்வமாகும். ஈச்வரன் மூன்றுபேர்களுக்கும் மேலானவன். ரஜோ, தமோ, ஸத்வகுணம் என்ற மாயையினுடைய குணங்களில் ஒன்று மேலிட்டது, மற்றது குறைந்தது என்பதில்லாமல், அம்மூன்று குணங்களும் ஸமமாக இருக்கும் நிலையில் அந்த மாயையில் ஸம்பந்தப்பட்ட சைதன்யமே ஈச்வர தத்வமாகும். 'மாயோபாதிகன் ஈச்வரன்' என்பதாகச் சொல்லப்படும் ஈச்வரதத்வத்திற்கு மேலாக ஸதாசிவ தத்வம் சொல்லப்படும், 'ஸதா' என்ருல் தேவியினுடைய ஸ்வரூபமாகும். 'சிவன்' என்ருல் ஈச்வரனுடைய ஸ்வரூபமாகும். சக்தியும் சிவனும் சேர்ந்த அகண்டமான தத்வமே ஸதாசிவ தத்வமாகும் ஈச்வர தத்வத்திற்கு மாயை விசேஷணமாகும். ஸதாசிவ தத்வத்திற்கு மாயை உபாதியாக ஆகும். ஸதாசிவ தத்வத்திற்கும் மேல், சுத்த சக்தி தத்வம் என்று சொல்லப்படும். அந்த சுத்த சக்தி தத்வம் என்பதுதான் இந்த க்ரந்தத்தில் ப்ரதிபாதிக்கப்படும் பரதேவதை. அந்த தத்வத்தில் மாயை உபலக்ஷணமாக விளங்கிவரும். அந்த பராசக்தியினுடைய ஆக்ஞையை அவலம்பித்துத்தான் ஸதாசிவ தத்வம் முதலான தேவதைகள் அவரவர்கள் கார்யங்களைச் செய்து வருகிருர்கள். பராசக்தியோ, வாகிந்த்ரியத்தால் ஆக்ஞை செய்கிறதில்லை. தேவியினுடைய புருவத்தின் சலன விசேஷமே (அசைவே) ஆக்ஞையாகும். அந்த ஆக்ஞையை அனுஸரித்துத்தான் ஸதாசிவன் என்ற பரமபுருஷன் ஸ்ருஷ்டி காலத்தில் ஈச்வரதத்வத்தை ஸ்ருஷ்டித்து அதன்

மூலம் த்ரிமூர்த்திகளையும் ஸ்ருஷ்டித்து அவர்களு டைய மூலமாக ஜகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம் ஹாரங்களை அந்தந்த காலத்தில் செய்து வருகிருன். ஆகையால், ப்ரும்ம ஸ்வரூபிணியான பராசக்தியினு டைய ஆளுகைக்குள் ஸதாசிவன் முதலான ஸகல தேவர்களும் இருந்துவரும் காரணத்தால் தேவியி னுடைய ஸ்தோத்ர பூஜா மஹிமையால் ஸர்வ தேவதைகளுடைய ப்ரஸாதத்தையும் புருஷன் அடை யலாம். ஸர்வதேவதைகளையும தனித்தனியாக வர வழைத்து பூஜை செய்வது அஸாத்யமாகும். எந்த ஒரு தேவதையை பூஜித்த மாத்ரத்தில் ஸர்வ தேவர் களும் பூஜிக்கப்பட்டவர்களாக ஆவார்களோ, அந்த மூலதேவதை பராசக்தியானதால் தேவியினுடைய உபாஸனம்தான் ரொம்பவும் முக்யமாகும்.

---

## 25. தேவியின் பூஜையால் த்ரிமூர்த்திகளையும் பூஜை செய்த பலம் ஸித்திக்கிறது.

त्रयाणां देवानां त्रिगुणजनितानां तव शिवे
भवेत्पूजा पूजा तव चरणयोर्या विरचिता ।
तथा हि त्वत्पादोद्वहनमणिपीठस्य निकटे
स्थिता ह्येते शश्वन्मुकुलितकरोत्तंसमकुटाः ॥ २५ ॥

த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுணஜநிதாநாம் தவ ஶிவே
பவேத்பூஜா பூஜா தவ சரணயோர்யா
விரசிதா ।
ததா ஹி த்வத்பாதோத்வஹநமணிபீடஸ்ய நிகடே
ஸ்திதா ஹ்யேதே ஶஶ்வந்முகுலிதகரோத்தம்
ஸமகுடா: ॥ ௨௫ ॥

த்ரயாணும் தேவாநாம் த்ரிகுணஜநிதாநாம் தவ சிவே
பவேத்பூஜா பூஜா தவசரணயோர் யா விரசிதா ।
ததாஹி த்வத்பாதோத்வஹநமணிபீடஸ்ய நிகடே
ஸ்திதாஹ்யேதே சச்வந்முகுளித கரோத்தம்ஸமகுடா: ॥ 25 ॥

हे शिवे! (ഹെ ശിവെ!) (ஹே சிவே !) = ஹே பார்வதி !

त्रिगुणजनितानां (ത്രിഗുണജനിതാനാം) (த்ரிகுணஜநிதாநாம்) = மாயையின் ஸத்வ குணம், ரஜோகுணம், தமோ குணம் என்ற மூன்று குணங்களிலிருந்தும் உண்டான

त्रयाणां देवानां (ത്രയാണാം ദെവാനാം) (த்ரயாணும் தேவாநாம்) = மூன்று பேர்களான ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களுக்கும்

तव (തവ) (தவ) = உன்னுடைய

चरणयो: (ചരണയൊഃ) (சரணயோ:) = பாதாரவிந்தங்களில்

या (യാ) (யா) = யாதொரு

पूजा (പൂജാ) (பூஜா) = பூஜையானது

विरचिता (വിരചിതാ) (விரசிதா) = செய்யப்பட்டதோ

सैव (സൈവ) (ஸைவ) = அதுதான்

पूजा (പൂജാ) (பூஜா) = பூஜையாக

भवेत् (ഭവെൽ) (பவேத்) = ஆகின்றது

तथाहि (തഥാഹി) (ததாஹி) = அது உசிதம்தான் அல்லவா

एते (ഏതെ) (ஏதே) = இந்த ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன்

शश्वत् (ശശ്വൽ) (சச்வத்) = எப்போதும்

मुकुलितकरोत्तंसमकुटाः सन्तः (𑌮𑍁𑌕𑍁𑌲𑌿𑌤𑌕𑌰𑍋𑌤𑍍𑌤𑌂𑌸𑌮𑌕𑍁𑌟𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃) (முகுலிதகரோத்தம் ஸமகுடா: ஸந்த:) = அஞ்சலி பந்தத்தோடு கூடின கைகளை சிரோ பூஷணமாக உடைத்தான நவரத்ன மயமான க்ரீடங்களோடு கூடினவர்களாகக்கொண்டு

त्वत्पादोद्वहनमणिपीठस्य (𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑍋𑌦𑍍𑌵𑌹𑌨𑌮𑌣𑌿𑌪𑍀𑌠𑌸𑍍𑌯) (த்வத்பாதோத்வஹநமணிபீடஸ்ய) = உன் சரணாரவிந்தத்தை வஹிக்கும் நவரத்னமய மான பீடத்தினுடைய ஸிம்ஹாஸனத்தின்

निकटे (𑌨𑌿𑌕𑌟𑍇) (நிகடே.) = ஸமீபத்தில்

स्थिता हि (𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌹𑌿) (ஸ்திதா ஹி) = இருக்கிறார்கள் அல்லவா

தாத்பர்யம்:—ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்யும் ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்கள் ஸ்ரீதேவியினுடைய சரணாரவிந்தங்களை பூஜை செய்யும் மஹாத்ம்யத்தால் ஜகதீச்வரியானவள் தன்னுடைய சரணாரவிந்தங்களால் அலக்கரிக்கச் செய்து கொண்டு வீற்றிருக்கும் நவரத்னமயமான பீடத்தினுடைய ஸமீபத்தில் (அதாவது தேவியின் சரணங்களுக்கு அருகில்) எப்போதும் தன்னுடைய இரண்டு கைகளையும் தலையிலுள்ள கிரீடத்திற்கு மேல்தூக்கி கும்பிட்டுக் கொண்டு நின்றுவரும் பாக்யத்தை அடைந்திருக்கிறார்கள். அவர்களை பூஜிப்பதற்கு அவரவர்கள் ஸ்தானத்தில் போய் பார்த்தால் அவர்களைக் காணமுடியாது. உன் பாதாரவிந்தத்தின் அருகில் வந்தால்தான் பார்க்க முடியும். இதனால் உன் பாதாரவிந்தங்களில் போடும் திவ்ய புஷ்பமானது அவர்களுடைய சிரஸில்தான் விழுந்தாகவேண்டும். அதைக் கொண்டு பரதேவ

தையை பூஜை செய்வதாலேயே த்ரிமூர்த்திகளின் பூஜாபலம் ஸித்திக்கின்றது. சரீரத்திற்குள்ளிருக்கும் மூலாதாரம் முதலான ஆறு ஆதார சக்ரம் தேவியினுடைய பீடமானதினாலும் இரண்டு ஆதார சக்ரங்களாகச்சேர்ந்து அக்நி, ஸூர்யன், ஸோமன் என்று மூன்று கண்டங்களாக பிரிக்கப்பட்டிருப்பதனாலேயும், அந்தந்த கண்டங்களில் ப்ரம்ம க்ரந்தி, விஷ்ணு க்ரந்தி, ருத்ர க்ரந்தி என்கிற மூன்று க்ரந்திகளிலும் ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் வஸிக்கிறபடியால் உபாஸகன் அந்தர்முகனாக இருந்து கொண்டு தேவியை ஆறுவிதமான ஆதார சக்ரங்களிலும் க்ரமமாக பூஜிக்கும்போது ப்ரும்மா, விஷ்ணு, ருத்ராதிகளும் பூஜிக்கப் பட்டவர்களாகவே ஆகிறார்கள் என்பது இந்த ச்லோகத்தின் பொதுக்கருத்தாகும்.

---

### 26 ஸதாசிவனின் மஹத்வம்.

विरिञ्चिः पञ्चत्वं व्रजति हरिराप्नोति विरतिं
विनाशं कीनाशः भजति धनदो याति निधनं ।
वितन्द्री माहेन्द्री विततिरपि संमीलित दृशा
महासंहारेऽस्मिन्विहरति सति त्वत्पतिरसौ ॥ २३ ॥

𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌿𑌃 𑌪𑌞𑍍𑌚𑌤𑍍𑌵𑌂 𑌵𑍍𑌰𑌜𑌤𑌿 𑌹𑌰𑌿𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌵𑌿𑌰𑌤𑌿𑌂
𑌵𑌿𑌨𑌾𑌶𑌂 𑌕𑍀𑌨𑌾𑌶𑌃 𑌭𑌜𑌤𑌿 𑌧𑌨𑌦𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌨𑌿𑌧𑌨𑌂 ।
𑌵𑌿𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑍀 𑌮𑌾𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍀 𑌵𑌿𑌤𑌤𑌿𑌰𑌪𑌿 𑌸𑌂𑌮𑍀𑌲𑌿𑌤 𑌦𑍃𑌶𑌾
𑌮𑌹𑌾𑌸𑌂𑌹𑌾𑌰𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌵𑌿𑌹𑌰𑌤𑌿 𑌸𑌤𑌿
𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑌤𑌿𑌰𑌸𑍌 ॥ ௨௩ ॥

*விரிஞ்சி: பஞ்சத்வம் வ்ரஜதி ஹரிராப்னோதி விரதிம்*
*விநாசம் கீநாச: பஜதி தநதோ யாதி நிதனம் ।*
*விதந்த்ரீ மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலிதத்ருசா*
*மஹாஸம்ஹாரேஸ்மிந் விஹரதி ஸதி த்வத்பதிரஸௌ ॥ 26 ॥*

विरिञ्चिः (விரிஞ்ஜி:) (விரிஞ்சி:) = ப்ரும்மாவானவர்
पञ्चत्वं (வஞ்சத்வம்) (பஞ்சத்வம்) = மரணத்தை
व्रजति (வ்ரஜதி) (வ்ரஜதி) = அடைகின்றார்
हरिः (ஹரி:) (ஹரி:) = விஷ்ணுவானவர்
विरतिं (விரதிம்) (விரதிம்) = முடிவை
आप्नोति (ஆப்னோதி) (ஆப்நோதி) = அடைகின்றார்
कीनाशः (கீநாஶ:) (கீநச:) = யமனும்
विनाशं (விநாஶம்) (விநாசம்) = நாசத்தை
भजति (஭ஜதி) (பஜதி) = அடைகின்றான்
धनदः (தநத:) (தநத:) = குபேரன்
निधनं (நிதநம்) (நிதநம்) = நாசத்தை
याति (யாதி) (யாதி) = அடைகிறான்
वितन्द्री (விதந்த்ரீ) (விதந்த்ரீ) = சோம்பல், தூக்கம் இல்லாததாயும்
माहेन्द्री (மாஹேந்த்ரீ) (மாஹேந்த்ரீ) = இந்திரனை ஸம்பந்தப் பட்டதாயும் உள்ள
विततिरपि (விததிரபி) (விததிரபி) = வரிசைகளும் (அதாவது 14 இந்திரர்களின் ஸமூஹமும்)

संमीलितदृशा (ஸஂமீலிதத்ருஶா) = மூடிக்கொள்ளப்பட்ட
(ஸம்மீலிதத்ருசா) கண்களோடு கூடினதாக

भवति (஭வதி) (பவதி) = ஆகின்றது

हे सति ! (ஹே ஸதி) ! = மஹா பதிவ்ரதையான
(ஹே ஸதி !) ஹே தாயே !

अस्मिन् (அஸ்மிந்) (அஸ்மிந்) = இந்த

महासंहारे (மஹாஸஂஹாரே) = மஹா ப்ரளயகாலத்தி
(மஹாஸம்ஹாரே) லும்

असौ (அஸௌ) (அஸௌ) = (ஆயிரம் தளத்தோடு
கூடின தாமரை புஷ்பத்
தில் காணப்படுகிற) இந்த

त्वत्पतिः (த்வத்பதிः) (த்வத்பதி:) = உமது பர்த்தாவான
ஸதாசிவன் மாத்திரம்

विहरति (விஹரதி) (விஹரதி) = உன்னுடன் கூட ரமிக்
கிறார்.

தாத்பர்யம்:—ப்ரும்மா, விஷ்ணு, குபேரன், யமன், 14 மங்வந்தரங்களிலும் ஏற்பட்ட 14 இந்திரர்களும், மற்ற எல்லா தேவர்களும் மஹா ப்ரளயத்தில் அழிந்துவிடுகிறார்கள். அந்த ப்ரளய காலத்திலும் பராசக்தியினுடைய பர்த்தாவான ஸதாசிவன் என்ற புருஷன் மாத்திரம் பராசக்தியோடு உல்லாஸமாக க்ரீடித்து வருகிறார். எல்லாம் அழிந்துபோகும் மஹா ப்ரளய காலத்திலும் ஸதாசிவன் என்ற காமேச்வரன் அழியாமல் ஸுகமாக ரமித்துக்கொண்டு இருப்பதற்கு காமேச்வரனுடைய தர்மபத்னியான மஹா தேவியினுடைய பாதிவ்ரத்ய மஹிமைதான் முக்யமான காரணமாகும். இதனால் ஸ்திரீகளுடைய பாதிவ்ரத்யத்தைக் கொண்டு புருஷன் தீர்க்கமான ஆயுளை அடைகிறான் என்ற தத்வம் வெளியாகிறது.

---

## 27. ஆறுவித ஐக்யானுஸந்தானம்.

जपो जल्पः शिल्पं सकलमपि मुद्राविरचना
गतिः प्रादक्षिण्यक्रमणमशनाद्याहुतिविधिः ।
प्रणामः संवेशः सुखमखिलमात्मार्पणदृशा
सपर्यापर्यायस्तव भवतु यन्मे विलसितम् ॥ २७ ॥

𑌜𑌪𑍋 𑌜𑌲𑍍𑌪𑌃 𑌶𑌿𑌲𑍍𑌪𑌂 𑌸𑌕𑌲𑌮𑌪𑌿 𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌰𑌚𑌨𑌾
𑌗𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍍𑌯𑌕𑍍𑌰𑌮𑌣𑌮𑌶𑌨𑌾𑌦𑍍𑌯𑌾𑌹𑍁𑌤𑌿𑌵𑌿𑌧𑌿𑌃 ।
𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑌃 𑌸𑌂𑌵𑍇𑌶𑌃 𑌸𑍁𑌖𑌮𑌖𑌿𑌲𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌦𑍃𑌶𑌾
𑌸𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑌰𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌤𑌵 𑌭𑌵𑌤𑍁 𑌯𑌨𑍍𑌮𑍇 𑌵𑌿𑌲𑌸𑌿𑌤𑌮𑍍
॥ ௨௭ ॥

ஜபோ ஜல்ப: சில்பம் ஸகலமபி முத்ராவிரசநா
கதி: ப்ராதக்ஷிண்யக்ரமணமசநாத்யாஹுதி விதி:।
ப்ரணும: ஸம்வேச: ஸுகமகிலமாத்மார்ப்பண த்ருசா
ஸபர்யாபர்யாயஸ்தவ பவது யந்மே விலஸிதம் ॥ 27 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே !

आत्मार्पणदृशा (𑌆𑌤𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌦𑍃𑌶𑌾) (ஆத்மார்ப்பணத்ருசா) = எனது உடல் உயிர் ஆவி எல்லாவற்றையும் உன்னிடத்தில் அர்ப்பணம் செய்துவிட்டு உன்னுடைய ஸ்வரூபமாகவே நான் ஆகிறேன் என்ற ஞானமஹிமையினுல்

जल्पः (𑌜𑌲𑍍𑌪𑌃) (ஜல்ப:) = லோக விஷயமாக பேசும் வ்யவஹாரங்களெல்லாம்

जपः (ஜவः) (ஜபः) = உன்னுடைய (மஹா மந்த்ர) ஜபமாகவும்

सकलं (ஸகலும்) (ஸகலம்) = ஸமஸ்தமான

शिल्पमपि (ஶிலூமவி) (சில்பமபி) = கை கால்களுடைய அசைவு முதலான(ஸமஸ்தமான) சேஷ்டைகளும்

मुद्राविरचना (முத்ராவிரசநா) (முத்ராவிரசநா) = ஸம்க்ஷோபம், வித்ராவணம், ஆகர்ஷணம், வச்யம், உன்மாதம், மஹாங்குசம், கேசரி, பீஜ, யோநி, த்ரிகண்டம் என்ற பத்துவிதமான முத்ரைகளாகவும்

गतिः (மதிः) (கதி:) = தற்செயலான நடையானது

प्रादक्षिण्यक्रमणं (ப்ராதக்ஷிண்ய க்ரமணம்) (ப்ராதக்ஷிண்ய க்ரமணம்) = உனது ப்ரதக்ஷிண க்ரமமாகவும்

अशनादि (அஶநாதி) (அசநாதி) = புஜிக்கப்படும் அன்ன பானாதிகள்

आहुति विधिः (ஆஹுதி வியிः) (ஆஹுதி விதி:) = ஹோமானுஷ்டானமாகவும்,

संवेशः (ஸம்வெஶः) (ஸம்வேச:) = பூமியில் படுத்துக்கொள்வது

प्रणामः (ப்ரணாமः) (ப்ரணாம:) = நமஸ்காரமாகவும்,

एवं (ஏவம்) (ஏவம்) = இவ்விதமாய்

सुखं (ஸுவம்) (ஸுகம்) = ஸுகத்தைக் கொடுக்கக் கூடிய

मे (மெ) (மே) = என்னுடைய

यत् (யகூ) (யத்) = யாதொரு

विलसितं (விஜஸிதம்) (விலஸிதம்) = விலாஸ வ்யாபார முண்டோ

अखिलमपि (ஈவிஜஉவி) (அகிலமபி) = ஸமஸ்தமான அதெல்லாம்

तव (தவ) (தவ) = உம்முடைய

सपर्यापर्याय: (ஸவய-ூா வய-ூாயஃ) (ஸபர்யா பர்யாய:) = பூஜா ரூபமாக

भवतु (ஹவதூ) (பவது) = ஆகட்டும்.

தாத்பர்யம்:—ஸ்ரீவித்யா தந்த்ரரீதியாக ஸமயாசாரமென்று ஒரு க்ரமமானது ப்ரஸித்தமானது. அந்த ஸித்தாந்த ரீதியாக ஸாதா என்ற தேவியின் தத்வமே ஸமய சப்தத்தால் போதிக்கப்படும். அந்த தத்வத்தை ஆயிரம் தளமுள்ள தாமரை புஷ்பம் என்று சொல்லப்படும், ப்ரம்மரந்த்ரம் என்றமேலான ஆதார சக்ரத்தில்தான், அந்தர்முகாளாக இருந்துகொண்டு உபாஸகர்கள் பூஜிக்கவேண்டும். வெளியில் பீடம் முதலானதுகளில் பூஜிப்பது ஸமயமதத்தில் சார்ந்ததல்ல. அந்த ஸமயிகள் என்று சொல்லப்படும் யோகீச்வரர்களும் ஸம்ஸார யாத்திரையை அநுஸரித்துக்கொண்டு ப்ராரப்த கர்மாவுக்கு உட்பட்டு தனது இல்லறத்தில் இருந்துகொண்டே ஸாதா என்று தேவி தத்வத்தை அநுஸந்தானம் செய்துகொண்டு, அந்த தேவியினுடைய ஸ்வரூபத்தில் தனது ஆத்மாவை அர்ப்பணம் செய்துவிட்டு, அந்த பராசக்தி என்ற பரப்ரும்மத்தை உபநிஷத் வாக்யங்கள் மூலமாக விசாரித்துக்கொண்டே காலத்தைக் கழிப்பார்கள். அவர்களை யோகீச்வராள் என்றும், ஜீவன் முக்தர்களென்றும் அறியவேண்டும். அவர்களுக்கு வெளியில் பூஜை ஒன்றுமே இராது. பூஜா ஸாமக்ரியைகளை சேகரிப்பதில் ச்ரமமும் இல்லை. தேவியினுடைய ஸபர்யை

என்று சொல்லப்படும் பூஜைக்கு அங்கங்களோ, தேவி ஸம்பந்தமான மஹாமந்த்ர ஜபம், 10 விதமான முத்ரை, சிதக்நியில் ஹோமம், ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், அர்ச்சனை என்ற ஆறு அங்கங்களே முக்கியமாகும், இந்த, ஜீவன் முக்தர்களுடைய விஷயத்திலோ, இந்த அங்கங்களை அனுஷ்டிப்பதில் தனியாக ப்ரயத்தனம் செய்யவேண்டாம். அவர்கள் பேசிக்கொண்டிருப்பதெல்லாம் தேவியினுடைய மஹா மந்திரத்தை ஜபித்ததாகவே ஆகிறது. அவர்கள் கை, கால்களை அசக்குவது பத்துவிதமான முத்ரைகளை ஆசரித்தாக ஆகிறது. அவர்களுடைய (கால்) நடை ப்ரதக்ஷிணமாக ஆகிறது. அவர்கள் புஜிப்பதே ஹோமமாகிறது. அவர்கள் படுத்துக்கொள்வதே நமஸ்காரமாக ஆகிறது. மற்ற ஸந்தோஷத்திற்கு காரணமான எந்தெந்த செய்கைகள் அவர்களிடம் ஏற்படுகிறதோ அவைகளெல்லாம் புஷ்பாஞ்ஜலியாகவே ஆகும். இவ்விதம் தனது ஆத்மாவை தேவியினிடம் அர்ப்பணம் செய்து பராசக்தியையும் தன்னையும் ஒன்ருக அறிவது ஒரு ஐக்யம். தனது ஸல்லாபத்தையும் ஜபத்தையும் ஒன்ருக அறிவது இரண்டாவது ஐக்யம் தனது கை கால்களினுடைய சேஷ்டையையும், முத்ரைகளையும் ஒன்ருக அறிவது மூன்ருவது ஐக்யம் தனது கால் நடையையும் ப்ரதக்ஷிணத்தையும் ஒன்ருக அறிவது நான்காவது ஐக்யம். தனது போஜனத்தையும் ஹோமத்தையும் ஒன்ருக அறிவது ஐந்தாவது ஐக்யம். தான் படுத்திருப்பதையும் நமஸ்காரத்தையும் ஒன்ருக அறிவது ஆருவது ஐக்யம். இவ்விதம் ஆறுவிதமான ஐக்யத்தையும் அநுஸந்தானம் செய்துகொண்டு எப்பொழுதுமே முன்சொன்ன ஸமயிகள் பராசக்தியை பூஜை செய்கிறவர்களாக ஆகிருர்கள். மூட ஜனங்கள் அந்த மகான்களை ஒன்றும் செய்யாதவர்கள் போல் நினைத்து தனது ஜன்மாவை விபலமாகச் செய்து கொள்கிருர்கள். ஸமயிகள் வெளிக்கு ஒன்றும் செய்யாமல், பேசாமல்

இருப்பதுபோல் தோன்றினாலும் அவர்கள் ஒவ்வொரு நிமிஷத்திலும் செய்வதெல்லாம் தேவியினுடைய ஸபர்யை என்றுதான் விவேகிகள் அறிய வேண்டும். இல்லறத்தில் இருக்கும் ஸமயிகளுக்கே இவ்வித மஹிமை இருக்குமானால் ஜன ஸஞ்சாரமில்லாத அரண்யத்திலோ, மலைகளின் குகைகளிலோ தனியாக இருந்துகொண்டு, பத்மாஸனத்தில் அமர்ந்து கொண்டும், இந்த்ரியங்களை தன் வசமாக்கிக்கொண்டும், எப்போழுதும் ஸாதா என்ற தேவியினுடைய பரதத்வத்தை அனுஸந்தானம் செய்துகொண்டே காலத்தை நயனம் செய்யும் மஹான்களுடைய பெருமையை வர்ணிக்கவும் வேண்டுமா? என்று ஸமயாசார ரீதியாக தேவியினுடைய பூஜா விதியானது இந்த ச்லோகத்தால் சொல்லப் படுகிறது.

---

## 28. தேவியின் தாடங்க மஹிமை.

सुधामप्यास्वाद्य प्रतिभयजरामृत्युहरिणीं
विपद्यन्ते विश्वे विधिशतमखाद्या दिविषदः ।
करालं यत्क्ष्वेलं कबलितवतः कालकलना
न शंभोः तन्मूलं तव जननि ताटंकमहिमा ॥ २८ ॥

ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபயஜராம்ருத்யுஹரிணீம்
விபத்யந்தே விஶ்வே விதிஶதமகாத்யா திவிஷத: ।
கராலம் யத்க்ஷ்வேலம் கபலிதவத: காலகலநா
ந ஶம்போ: தந்மூலம் தவ ஜநநி தாடங்கமஹிமா
॥ உஅ ॥

ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபய ஜராம்ருத்யுஹரிணீம்
விபத்யந்தே விச்வே விதிசதமகாத்யா திவிஷத: ।
கராலம் யத்க்ஷ்வேலம் கபலிதவத:காலகலநா
ந சம்போ: தன்மூலம் தவ ஜநநி தாடங்கமஹிமா ॥ 28 ॥

| | |
|---|---|
| हे जननि (ஹெ ஜநநி) (ஹே ஜநநி) | = ஹே தாயே ! |
| विश्वे (விஶ்வே) (விச்வே) | = ஸமஸ்தமான |
| विधिशतमखाद्या: (விதிஶத மகாத்யாஃ) (விதிசத மகாத்யா:) | = ப்ரம்மா, இந்த்ரன் முதலான |
| दिविषद: (திவிஷதஃ) (திவிஷத:) | = தேவர்கள் |
| प्रतिभयजरामृत्युहरिणीं (ப்ரதிபயஜராம்ருத்யுஹரிணீம்) (ப்ரதிபயஜராம்ருத்யுஹரிணீம்) | = பயங்கரமான கிழத்தன்மை, மரணம் இந்த இரண்டையும் அபஹரிக்கின்ற |
| सुधां (ஸுதாம்) (ஸுதாம்) | = அம்ருதத்தை |
| आस्वाद्यापि (ஆஸ்வாத்யாபி) (ஆஸ்வாத்யாபி) | = பானம் செய்தும் |
| विपद्यन्ते (விபத்யந்தே) (விபத்யந்தே) | = நாசத்தை அடைகிறார்கள் (ப்ரளயகாலத்தில் போய்விடுகிறார்கள்) |
| करालं (கராலம்) (கராலம்) | = அதியுக்ரமான |
| क्ष्वेलं (க்ஷ்வேலம்) (க்ஷ்வேலம்) | = காலகூட விஷத்தை |
| कबलितवत: (கபலிதவதஃ) (கபலிதவத:) | = பக்ஷித்தவரான |
| शंभो: (ஶம்போஃ) (சம்போ:) | = பரமசிவனுக்கு |
| कालकलना (காலகலநா) (காலகலநா) | = நாசமானது |
| नास्ति (நாஸ்தி) (நாஸ்தி) | = ப்ரளயகாலத்திலுமில்லை. |

इति यत् (ஐதி யத்) (இதி யத்) = என்பது யாதொன்றுண்டோ

तन्मूलं (தந்மூலம்) (தந்மூலம்) = அதற்குக் காரணம்

तव (தவ) தவ = உம்முடைய

ताटङ्कमहिमा (தாடங்கமஹிமா) (தாடங்கமஹிமா) = கர்ண ஆபரணத்தின் (தோட்டின்) மஹாத்ம்யம்தான்

தாத்பர்யம்:—இந்த ச்லோகத்தால் புருஷர்களின் ஆயுள் நீடித்து வாழ்வதற்கு ஸ்த்ரீகளின் பாதிவ்ரத்யமே முக்ய காரணமென்று தெரியவருகிறது. ப்ரம்மா, இந்த்ரன் முதலான தேவர்கள் கிழத்தன்மை, மரணம் இவைகளை அண்டவிட்டாமலடிக்கும் அம்ருதத்தை பானம் செய்தவர்கள். பால் கடலில் மஹாவிஷ்ணுவினுடைய ஸஹாயத்தால் தேவர்கள் அம்ருதத்தை எடுத்து பானம் செய்தார்கள் என்பது புராணாந்தரத்தில் ப்ரஸித்தமான கதையாகும். அவ்விதம் அம்ருதபானம் செய்த தேவர்களுடைய அபிப்ராயமோ, ப்ரளய காலத்திலும் தாங்கள் நாசமடையாமலிருக்க வேண்டுமென்ற எண்ணம்தான். அந்த எண்ணம் அவர்களுக்கு நிறைவேறவில்லை. ப்ரளய காலத்தில் ப்ரம்மா, இந்த்ரன் முதலிய தேவர்களும் அழிந்துவிடுகிறார்களென்றே சாஸ்த்ரத்தின் ஸித்தாந்தமாகும். பரமேச்வரனோ தனது குடும்பத்திலுள்ள வ்ருத்தாந்தங்களை யோஜித்து தான் மரிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் தேவர்கள் எந்த பால்கடலில் அம்ருதத்தை எடுத்தார்களோ அந்த பாற்கடலில் அம்ருதம் உண்டாகுவதற்கு முன்பாக உதித்த ஜகத்தையே எரித்துவிடும் ஸ்வபாவமுள்ள காலகூட விஷத்தை பானம் செய்தார். ஜகத்தை எரித்துவிடுகிற காலகூட விஷத்தை பானம் செய்ததற்கு ஜகத்ரக்ஷணம் என்ற மஹாபலம் பரமேச்வரனுடைய

எண்ணமானாலும். தன்னுடைய மரணமும் பரமேச்வரனுடைய எண்ணமென்று சொல்லலாம். வ்யவஹார தசையில் பரமேச்வரனுடைய க்ருஹமாகிய மஹா கைலாஸத்தில் ஒவ்வொரு தினத்திலும் நடந்து வரும் கலஹத்தை கவனித்தால் தான் மரிக்கவேண்டுமென்று பரமேச்வரனுக்கு எண்ணம் உதித்தது ந்யாயமென்றே சொல்லக்கூடும். பரமேச்வரனுக்கோ மஹா கணபதி, ஸுப்ரமண்யர் என்ற இரண்டு குமாரர்கள். அவர்களை யாவரும் அறிவார்கள். அதில் இரண்டாவது குமாரனே,லோகத்ருஷ்டியை அநுஸரித்துப் பார்த்தால் நீசகுலத்தில் பிறந்த வல்லி என்ற ஒரு பெண்ணை, தாய் தகப்பனுக்குத் தெரியாமல் தான ஸ்வயமாகவே மணம் புரிந்து அவளுடைய வீட்டிலேயே இருந்து வருகிறான்.அதை நினைத்தால் பரமேச்வரனுக்கு எவ்வளவு வருத்தம் ஏற்படக்கூடும்? மஹாகணபதி என்ற முதல் குமாரனே பரமேச்வரனை ஸேவிக்கவரும் பக்தர்களை அவரிடத்தில் வரவொட்டாமல் செய்து கைலாஸத்தின் வாசலில் உட்கார்ந்துகொண்டு தானே மேலான தெய்வமென்று,வருகிறவர்களுடைய பூஜையை அவரே ஏற்றுக்கொள்கிறார். அத்துடன் இரண்டாவது குமாரன் நீச குலத்தில பிறந்த பெண்ணை மணம் புரிவதற்கு மூத்த குமாரனும் ஸஹாயமாக இருந்திருக்கிறான். இருவர்களுக்குள் ஒருவரும் தாய் தந்தையர்களிடம் இந்த வ்ருத்தாந்தத்தை சொல்லவேயில்லை அவர்களிருவரும் அன்யோந்யமாகவுமில்லை. இரண்டாவது குமாரன் ஒரு மலையிலும், மூத்தவன் ஒரு அரசமரத்தடியிலுமாக இருந்துவருகிறார்கள். அத்துடன் தனக்கும் தன் மனைவிக்கும் பேச்சு வார்த்தையே இல்லை. தான் ஒரு மூலையிலும் தன்னுடைய மனைவி ஒரு மூலையிலுமாக இருந்துவருகிறார். சில புராணங்களை கவனித்தால் தன்னுடைய மனைவிக்கு ப்ரதம பூஜையும் பிறகுதான் தனக்கு உபசாரமென்றும் ஏற்படுகிறது. தன் மனைவிக்கு தான் உட்பட்டு

இருக்கும் நிலையும் சில சந்தர்ப்பத்தில் ஸித்திக்கின்றது. இதுபோன்ற அநேக விஷயங்களை கவனிக்கும் பொழுது "ஹே பரதேவதே! உன் புருஷனுன பரம சிவனுக்கு 'விஷத்தை தின்ருவது பிராணனை இழந்து விடுவோம், லோகம் பரிஹஸிக்கக்கூடிய நிலையில் நாமிருக்கக்கூடா'தென்ற எண்ணம் ஏன் உதிக்கக் கூடாது? அப்படி உதித்துத் தான் பார்த்த மாத்ரத்தில் ஜகத்தை எரிக்கக்கூடிய காலகூட விஷத்தையும் பானம் செய்தார். ஆகிலும் மரிக்கவில்லை. ப்ரளய காலத்திலும் மஹா ச்மசான ஸாக்ஷியாக இருந்துவரு கிருர். காலகாலன் ம்ருத்யுஞ்ஜயன் என்ற காரணப் பெயர்களையும் அடைந்துவிட்டார். இவைகளுக்கு காரணமோ உன்னுடைய பாதிவ்ரத்யம்தான் என்று ஸித்தாந்தம் செய்யவேண்டும். உன்னுடைய காது களில் அமைக்கப்பட்டிருக்கும் தாடங்கங்கள் என்ற கர்ண ஆபரணத்தின் மஹாத்ம்யம்தான் அதற்கு முக்ய மான காரணமாகும்." ஸ்த்ரீகளுடைய பாதிவ்ரத்யம் த்ருடமாயிருந்தால் புருஷர்கள் தீர்க்கமான ஆயுளோடு நீடித்து வாழ்வார்கள் என்பதே பரம ஸித்தாந்த மாகும். भर्तुर्हि मरणं लोके स्त्रीणां वैगुण्यमुच्यते (𑌭𑌰𑍍𑌤𑍁𑌰𑍍𑌹𑌿 𑌮𑌰𑌣𑌂 𑌲𑍋𑌕𑍇 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌣𑌾𑌂 𑌵𑍈𑌗𑍁𑌣𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇) (பர்துர்ஹி மரணம்லோகே ஸ்த்ரீணாம் வைகுண்ய முச்யதே) ஸ்திரீகளுக்கு முன்பு புருஷன் மரிப்பதில் ஸ்திரீகளுடைய பாதிவ்ரத்ய குறைவுதான் காரண மென்பதும் ஸித்தமாகிறது. இந்த ஸௌந்தர்யலஹரீ என்ற மந்த்ர சாஸ்த்ரமாகிற மஹா ப்ரபந்தத்திற்கு நாயகியோ, மஹா பதிவ்ரதா சிரோமணியானதினுல் அவளுடைய பாதிவ்ரத்ய மஹிமையைக் கொண்டு காலகூட விஷத்தை பானம் செய்த காமேச்வரன் ப்ரளய காலத்திலும் அழியாமலிருந்து வருகிருன். இதனுல் புருஷர்களுடைய தீர்க்காயுளுக்கு தாடங்க மஹிமையானது காரணமாகச் சொல்லப்பட்டது. ஸ்திரீகளுக்கு முக்யமான ஆபரணமோ ஸௌபாக்ய

ஆபரணம் என்று சொல்லப்படும் மாங்கல்ய ஆபரண மாகத்தான் ஆகும் அதற்குள்ள ப்ராதான்யம் தாடங் கத்திற்கு லோக ரீதியாக இல்லை. பகவத்பாதாளோ அந்த மாங்கல்யா பரணத்தைச் சொல்லாமல் ताटंकमहिमा (தாடங்க மஹிமா) (தாடங்கமஹிமா) என்று கர்ண ஆபரணத்தின் பெருமையை புருஷர்களுடைய தீர்கா யுளுக்கு காரணமென்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதனால் தேவியினுடைய தாடங்கம் என்று சொல்லப் படும் ஆபரணமோ, ஸ்ரீ சக்ரரூபமே. ஸ்ரீ சக்ரத்தை ஸுவாஸினிகளும் ஆராதிக்கலாம் என்று ஸித்திக் கிறது. அதில் सुवासिन्यर्चनप्रीता (ஸுவாஸிந்யர்சனப்ரீதா) (ஸுவாஸிந்யர்சநப்ரீதா) என்று லலிதா ஸஹஸ்ர நாமத்திலுள்ள நாமாவளியே ப்ரமாணமாகும். ஸுவாஸினியை பூஜிப்பதில் பரதேவதை த்ருப்தி அடைகிறாள் என்றும் அந்த நாமாவுக்குப் பொருள் உண்டு. ஸுவாஸினி பண்ணுகிற பூஜையினால் த்ருப்தி அடைகிறாள் என்றும் அதற்கு தாத்பர்யம் உண்டு. ப்ரக்ருதத்தில் ஸுவாஸினி பண்ணுகிற பூஜையில் த்ருப்தியை அடைகிறாள் என்று தாத்பர் யத்தை அறியவும். இதனால் எந்த ஸுவாஸினி யானவள் தன் புருஷனுக்கு பரிபூர்ணமான ஆயுளைக் கருதி அதன் மூலம் குடும்பத்தில் பரம ஸௌபாக் யத்தை எதிர்பார்க்கிறாளோ, அந்த ஸுவாஸினி யானவள் மஹா குருமுகமாக தனது புருஷனை மேற் சொன்ன வித்யையை க்ரஹித்துக் கொள்ளும்படி செய்து, புருஷனுடைய முகமாக தான் அந்த வித்யையை க்ரஹித்துக்கொண்டு ஒவ்வொரு தினத் திலும் யதாசக்தி ஜபம் செய்து ஹரித்ராசூர்ணத்தில் (மஞ்சள் பொடியில்) ஸ்ரீ சக்ரத்தை லேகனம் செய்து மூல மந்த்ரத்தாலேயே ஷோடசோபசார பூஜைகளை யும் செய்து சக்தியை அநுஸரித்து லலிதாஸஹஸ்ர நாமம், த்ரிசதி, அஷ்டோத்தரம் இவைகளால் குங்குமத்தாலோ, சிகப்பு புஷ்பத்தாலோ அர்ச்சனை

யும் செய்து, நிவேதனாதிகள் செய்து, ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளால் பரதேவதையை ஆராதனம் செய்துவரவேண்டும். அப்படியானால் புருஷனுக்கு தீர்க்காயுளை ஸம்பாதித்து வைத்து, தானும் மஹா பாக்யவதியாக நீடித்து வாழ்ந்து திவ்ய தம்பதிகளாக குடும்பத்தில் ஸகலவிதமான ஸௌபாக்யத்துடனும் நீடித்து வாழ்வார்கள். முதல் தினம் பூஜை செய்த ஹரித்ரா சூர்ணத்தை (மஞ்சள் பொடியை) மறு தினம் ஸ்னான காலத்தில் முகத்தில் பூசிக்கொண்டு ஸ்னானம் செய்யவேண்டும்.

---

## 29. பரமேச்வரனின் மஹிமை

किरीटं वैरिञ्चं परिहर पुरः कैटभभिदः
कठोरे कोटीरे स्खलसि जहि जम्भारिमकुटम् ।
प्रणम्रेष्वेतेषु प्रसभमुपयातस्य भवनं
भवस्याभ्युत्थाने तव परिजनोक्तिः विजयते ॥ २९ ॥

𑌕𑌿𑌰𑍀𑌟𑌂 𑌵𑍈𑌰𑌿𑌞𑍍𑌚𑌂 𑌪𑌰𑌿𑌹𑌰 𑌪𑍁𑌰𑌃 𑌕𑍈𑌟𑌭𑌭𑌿𑌦𑌃
𑌕𑌠𑍋𑌰𑍇 𑌕𑍋𑌟𑍀𑌰𑍇 𑌸𑍍𑌖𑌲𑌸𑌿 𑌜𑌹𑌿 𑌜𑌮𑍍𑌭𑌾𑌰𑌿𑌮𑌕𑍁𑌟𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌰𑍇𑌷𑍍𑌵𑍇𑌤𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌸𑌭𑌮𑍁𑌪𑌯𑌾𑌤𑌸𑍍𑌯 𑌭𑌵𑌨𑌂
𑌭𑌵𑌸𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑍇 𑌤𑌵 𑌪𑌰𑌿𑌜𑌨𑍋𑌕𑍍𑌤𑌿𑌃 𑌵𑌿𑌜𑌯𑌤𑍇
॥ ௨௯ ॥

கிரீடம் வைரிஞ்சம் பரிஹர புர: கைடபபித:
கடோரே கோடீரே ஸ்கலஸி ஜஹி ஜம்பாரிமகுடம் ।
ப்ரணம்ரேஷ்வேதேஷு ப்ரஸபமுபயாதஸ்ய பவநம்
பவஸ்யாப்யுத்தாநே தவ பரிஜநோக்தி: விஜயதே ॥ 29 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே !

पुरः (𑌪𑍁𑌰𑌃) (புர:) = எதிரில்

वैरिञ्चं (വൈരിഞ്ചം) (வைரிஞ்சம்) = ப்ரும்மாவினுடைய

किरीटं (കിരീടം) (கிரீடம்) = கிரீடத்தை

परिहर (പരിഹര) (பரிஹர) = ஒதுக்கிவிடு

कैटभभिदः (കൈടഭഭിദഃ) (கைடபபித:) = மஹாவிஷ்ணுவினுடைய

कठोरे (കഠോരേ) (கடோரே) = கடினமான

कोटीरे (കോടീരേ) (கோடீரே) = க்ரீடத்தில்

स्खलसि (സ്ഖലസി) (ஸ்கலஸி) = தடுக்கப்போகிறாய்

जंभारिमकुटं (ജംഭാരിമകുടം) (ஜம்பாரிமகுடம்) = இந்த்ரனுடைய மகுடத்தை

जहि (ജഹി) (ஜஹி) = ஒதுக்கி விடு

इति एवं (ഇതി ഏവം) (இதி ஏவம்) = இவ்விதமான

तव (തവ) (தவ) = உன்னுடைய

परिजनोक्तिः (പരിജനോക്തിഃ) (பரிஜநோக்தி:) = பரிசரர்களுடைய வார்த்தையானது

एतेषु (ഏതേഷു) (ஏதேஷு) = இந்த (இந்த ப்ரம்மா விஷ்ணுமஹேந்த்ரர்கள்)

प्रणम्रेषु सत्सु (പ്രണമ്രേഷു സത്സു) (ப்ரணம்ரேஷு ஸத்ஸு) = உன்னை நமஸ்கரித்துக் கொண்டிருக்கும் பொழுது

भवनं (ഭവനം) (பவநம்) = உன் மந்திரத்திற்கு (வீட்டிற்கு)

उपयातस्य (ഉപയാതസ്യ) (உபயாதஸ்ய) = வருகிற

भवस्य (ഭവസ്യ) (பவஸ்ய) = பரமேச்வரனுடைய விஷயத்தில்

अभ्युत्थाने (ஃஹ்யூத்தாநெ) (அப்யுத்தாநே) = எழுந்திருந்து நீ வரவேற்குங் காலத்தில்
विजयते (விஜயதெ) (விஜயதே) = ஸர்வோத்க்ருஷ்டமாக விளங்குகிறது.

தாத்பர்யம்:—முன் ச்லோகத்தில் சொல்லியபடி ஸுவாஸினிகள் ஸ்ரீ சக்ரத்தை ஆராதித்து வந்தால் அந்த க்ருஹத்தில் ஸகல தேவதைகளும் வஸிக்கின்றார்கள். ஸகல ஸௌபாக்யங்களும் கூடிவரும். ஸ்ரீ சக்ரம எந்த க்ருஹத்தில் ஸுவாஸினிகளால் பூஜிக்கப்பட்டு விளங்கி வருகின்றதோ, அந்த க்ருஹத்தில் பரதேவதையினுடைய பூர்ணஸாந்நித்யம் பரிபூர்ணமாக இருந்துவரும் எனபது நிச்சயமாகும. பரதேவதையை புருஷர்கள் ஆராதிப்பதைக் காட்டிலும், ஸ்த்ரீகள் ஆராதிப்பதுதான் லோகத்திற்கும் பொருத்தமாயுள்ளது. ஒரு கனதனவானுடைய பதிவ்ரதையான தர்மபத்னி மற்றொரு கருஹத்திற்கு செல்லவே மாட்டாள். ஸமயாந்தரத்தில் செல்லும்படி நேரிட்டால் மற்றொரு க்ருஹத்து புருஷன் அந்த கனதனவானுடைய் தர்மபத்னியை வரவேற்றல் அவளுக்கு அவ்வளவு த்ருப்தியாகயிராது. அந்த மற்றொரு க்ருஹத்திற் கதிபதியான புருஷனும் தன்னுடைய மனைவியைக் கொண்டுதான பிறருடைய மனைவியை வரவேற்கச் சொல்லவேண்டும் என்பதுதான் லோகத்திலுள்ள ஸம்ப்ரதாயமாகும். அதுபோல்தான் ப்ரக்ருதத்திலும் பரதேவதையை ஸுவாஸினி பூஜித்தால் பரதேவதைக்கு ரொம்பவும் ஸந்தோஷம் ஏற்படும். அந்த க்ருஹத்தில் நித்யஸாந்நித்யத்தோடு விளங்கி வருவாள். அந்த க்ருஹத்திற்கு ஸ்ரீ லலிதாம்பிகா ஸதனம் என்றே பெயர் ஏற்பட்டு விடும். ப்ரம்மா. விஷ்ணு, இந்த்ரன் முதலானவர்கள் தினந்தோறும் அந்த க்ருஹத்திற்கே தேவியை ஸேவிப்பதற்காக வருகிறார்கள். இவ்விதமிருக்கும்பொழுது காமேச்வரனென்ற பரமேச்வரனும் தனது மஹிஷியான பரா

சக்தியை பார்க்க அந்த க்ருஹத்திற்கு வருகிறார். அவர் வரும்பொழுது ப்ரம்மா, விஷ்ணு, இந்த்ரன் முதலானவர்கள் தேவியை நமஸ்கரித்துக் கொண்டிருக்கிறார்கள். தேவியோ, பரமசிவன் வருகிறார் என்பதையறிந்து ஸம்ப்ரமத்துடன் (பரபரப்புடன்) பரமசிவனை வரவேற்க எழுந்திருந்து எதிர்கொண்டு வருகிறாள். அந்த ஸந்தர்ப்பத்தில் தேவியினுடைய பரிஜனங்கள் அதாவது (பாலகிகள்) ஆவரண தேவதைகள் உத்கோஷிக்கிறார்கள். மங்கள சப்தங்கள் ஸ்பஷ்டமாக ச்ரோத்ரியேந்த்ரியத்திற்கு கோசரமாக ஆகின்றன. அதாவது ‘ஹே தாயே! ப்ரம்மா நமஸ்காரம் பண்ணுகிறார் அவருடைய க்ரீடத்தை ஒதுக்கி விட்டு இந்த பக்கமாக வா. விஷ்ணு நமஸ்கரித்துக் கொண்டிருக்கிறார் அவருடைய க்ரீடத்தில் கால் தடுக்கவேண்டாம். அதோ இந்த்ரன் நமஸ்கரிக் என்றான். அந்த க்ரீடத்தை ஒதுக்கி விட்டு அப்பால் வா கின்ற சப்தங்கள் எந்த எந்த ஸுவாஸினிகள் எந்த எந்த தேசத்தில் எந்த எந்த பாஷை பேசுவார்களோ அந்தந்த பாஷையில் காதில்படும். முன் ச்லோகத்தில் சொல்லியபடி தேவியை ஆராதித்து வருகிறவர்களுக்கு அந்த ஆராதனம் ஸித்தியடைந்துவிட்டதென்பதற்கு இந்த ச்லோகத்தில் சொல்லிய சப்த ச்ரவணம் அஸாதாரணமான லிங்கமாகும். அத்துடன் ஆராதனத்தை நிறுத்திவிடாமல் பின்பும் தொடர்ந்து செய்தால் மேற் சொன்ன ஸகல தேவதைகளுடைய ஸாக்ஷாத்காரத்தையுமடையலாம். பிறகு அந்த க்ருஹத்தில் ஸகலவிதமான ஸௌபாக்யத்திற்கும் யாதொருவிதமான தடையுமின்றி மேன் மேலும் அபிவிருத்தி ஏற்பட்டுக்கொண்டு வரும்.

---

## 30. தேவியின் தாதாத்ம்ய மஹிமை.

स्वदेहोद्भूताभिर्घृणिभिरणिमाद्याभिरभितो
निषेव्ये नित्ये त्वामहमिति सदा भावयति यः ।
किमाश्चर्यं तस्य त्रिनयनसमृद्धिं तृणयतो
महासंवर्ताग्निर्विरचयति नीराजनविधिम् ॥ ३० ॥

𑌸𑍍𑌵𑌦𑍇𑌹𑍋𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌭𑌿𑌰𑍍𑌘𑍃𑌣𑌿𑌭𑌿𑌰𑌣𑌿𑌮𑌾𑌦𑍍𑌯𑌾𑌭𑌿𑌰𑌭𑌿𑌤𑍋
𑌨𑌿𑌷𑍇𑌵𑍍𑌯𑍇 𑌨𑌿𑌤𑍍𑌯𑍇 𑌤𑍍𑌵𑌾𑌮𑌹𑌮𑌿𑌤𑌿 𑌸𑌦𑌾 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 𑌯𑌃 ।
𑌕𑌿𑌮𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌤𑍍𑌰𑌿𑌨𑌯𑌨𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌿𑌂 𑌤𑍃𑌣𑌯𑌤𑍋
𑌮𑌹𑌾𑌸𑌂𑌵𑌰𑍍𑌤𑌾𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌰𑌚𑌯𑌤𑌿 𑌨𑍀𑌰𑌾𑌜𑌨𑌵𑌿𑌧𑌿𑌮𑍍 ॥ ௩௰ ॥

ஸ்வதேஹோத்பூதாபிர் க்ருணிபிரணிமாத்யாபிரபிதோ
நிஷேவ்யே நித்யே த்வாமஹமிதி ஸதா பாவயதி ய: ।
கிமாச்சர்யம் தஸ்ய த்ரிநயநஸம்ருத்திம் த்ருணயதோ
மஹாஸம்வர்தாக்நிர் விரசயதி நீராஜநவிதிம் ॥ 30 ॥

हे नित्ये (𑌹𑍇 𑌨𑌿𑌤𑍍𑌯𑍇) (ஹே நித்யே) = உத்பத்தி விநாசமில்லாததான பரம்பொருளான பரதேவதையே!

स्वदेहोद्भूताभिः (𑌸𑍍𑌵𑌦𑍇𑌹𑍋𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌭𑌿𑌃) (ஸ்வதேஹோத்பூதாபி:) = தனது தேஜோ வடிவமாகிய சரணங்களிலிருந்தும் உண்டாகின்ற

घृणिभिः (𑌘𑍃𑌣𑌿𑌭𑌿𑌃) (க்ருணிபி:) = கிரண ஸ்வரூபங்களான

अणिमाद्याभिः (𑌅𑌣𑌿𑌮𑌾𑌦𑍍𑌯𑌾𑌭𑌿𑌃) (அணிமாத்யாபி:) = அணிமை, மஹிமை முதலிய அஷ்டஸித்திகளால்

अभितः (𑌅𑌭𑌿𑌤𑌃) (அபித:) = நாலா பக்கத்திலும்

परिवृतां (𑌪𑌰𑌿𑌵𑍃𑌤𑌾𑌂) (பரிவ்ருதாம்) = சூழப்பட்டிருக்கிற

त्वां (𑌤𑍍𑌵𑌾𑌂) (த்வாம்) = உன்னை

निषेव्ये (𑌨𑌿𑌷𑍇𑌵𑍍𑌯𑍇) (நிஷேவ்யே) = ஸேவிக்கின்றேன்.

एतादृशीं (𑌏𑌤𑌾𑌦𑍃𑌶𑍀𑌂) (ஏதாத்ருசீம்) = இப்படிப்பட்ட

त्वां (𑌤𑍍𑌵𑌾𑌂) (த்வாம்) = உன்னை

यः (𑌯𑌃) (ய:) = எந்த உபாஸகன்

अहमिति (𑌅𑌹𑌮𑌿𑌤𑌿) (அஹமிதி) = தனது ஆத்மாவென்று

सदा (𑌸𑌦𑌾) (ஸதா) = எப்பொழுதும்

भावयति (𑌭𑌾𑌵𑌯𑌤𑌿) (பாவயதி) = பாவிக்கின்றானோ (த்யானம் செய்கின்றானோ)

त्रिनयनसमृद्धिं (𑌤𑍍𑌰𑌿𑌨𑌯𑌨𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌿𑌂) (த்ரிநயநஸம்ருத்திம்) = பரமேச்வரனுடைய = ஐச்வர்யத்தையும்

तृणयतः (𑌤𑍃𑌣𑌯𑌤𑌃) (த்ருணயத:) = புல்லாக பாவிக்கும்

तस्य (𑌤𑌸𑍍𑌯) (தஸ்ய) = அந்த உபாஸகனுக்கு

महासंवर्ताग्निः (𑌮𑌹𑌾𑌸𑌂𑌵𑌰𑍍𑌤𑌾𑌗𑍍𑌨𑌿𑌃) (மஹாஸம்வர்தாக்னி:) = ப்ரளய காலாக்னியானது

नीराजनविधिं (𑌨𑍀𑌰𑌾𑌜𑌨𑌵𑌿𑌧𑌿𑌂) (நீராஜநவிதிம்) = நீராஜனானுஷ்டானத்தை (மங்களஹாரத்தி செய்வதை)

विरचयति (𑌵𑌿𑌰𑌚𑌯𑌤𑌿) (விரசயதி) = செய்கிறது

इति (𑌇𑌤𑌿) (இதி) = என்றதில்

किं आश्चर्यं (𑌕𑌿𑌂 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌂) (கிம் ஆச்சர்யம்) = என்ன ஆச்சர்யமிருக்கிறது? ஒன்றுமே இல்லை.

தாத்பர்யம்:—மேற்சொன்ன தேவியின் ஐக்யத்தை அநுஸந்தானம் செய்துகொண்டு உபாஸகர்கள் பூஜிக்க வேண்டும். ஸ்ரீவித்யா தந்த்ரத்தில் ஆறு விதமான ஐக்யம் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளுக்குள் உபாஸ்யமான பரதேவதையையும் தன்னுடைய ப்ரத்யகாத்மாவையும் ஒன்றுபடுத்தி அநுஸந்தானம் செய்வது என்ற ஐக்யாநுஸந்தானமானது முக்ய மாகும். இதில் तत्त्वमसि, अहं ब्रह्मास्मि, प्रज्ञानं ब्रह्म, अयसात्मा ब्रह्म (𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿, 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑌿, 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, 𑌅𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮) (தத்வமஸி அஹம் ப்ரஹ்மாஸ்மி, ப்ரக்ஞாநம் ப்ரஹ்ம அயமாத்மா ப்ரஹ்ம) என்றது முதலானச்ருதிகளும் क्षेत्रज्ञं चापि सां विद्धि, ज्ञानीत्वात्मैव से सतं (𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿, 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 𑌮𑍇 𑌮𑌤𑌂) (க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி, ஞாநீ த்வாத்மைவ மே மதம்) என்றது முதலான ஸ்ம்ருதிகளும் आत्सेति तूपगच्छन्ति (𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌤𑍂𑌪𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿) (ஆத்மேதி தூபகச்சந்தி) என்றது முதலான ந்யாயங்களும ப்ரமாணமாகும். பராசக்தியை எட்டு விதமான ஆவரண தேவதைகளால் சூழப்படும்படி செய்து நடுமத்தியில் பூஜிக்கவேண்டும். அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், வசித்வம், ஈசித்வம் என்ற எட்டு ஸித்திகளும் எட்டு ஆவரண தேவதைகளாக ஆவார்கள். இந்த தேவதைகளுடைய நடுவில் புவனேச்வரீ என்று சொல்லப்படும் பரதேவதையை ப்ரத்யகாத்மாவாக அநுஸந்தானம் செய்கிற உபாஸனேயே மேலான உபாஸனமாகும். கல்ப ஜீவியாக இருக்கும் ஸித்த புருஷர்கள் இந்த உபாஸனத்தைத்தான் செய்து முடிவில்லாத ஆயுளை அடைந்திருக்கிறுர்கள். ஐக்யாநுஸந்தானம் இந்த உபாஸனத்தில் முக்யமானதினுல் கல்பத்தினுடைய முடிவில் பரப்ரம்ம ஸ்வரூபிணியான பரதேவதையினிடம் உபாஸகன் ஏகீபாவத்தை யடைந்த காரணத்தால் பரதேவதை நித்யமாக இருப்பதுபோல்

உபாஸகனும் நித்யமாகவே இருந்துவருகிறுன். உத்ப்த்தி விநாசமற்ற திவ்யஸ்வரூபத்தோடு அஷ்டஸித்திகளேயும் கைவசமாககிக்கொண்டு கால த்ரயத்திலும் அந்த உபாஸகன் ஸ்வச்சந்தமாக விளங்கிவருகிறுன். அணிமா என்ருல் அநேக ஜனங்களுடைய நடுவில் தானிருந்தாலும் அவர்களுடைய திருஷ்டிக்கு தனது ஸ்வரூபம் கோசரமாகாமலிருக்கும்படி அணுவுக்குமணுவாக அதிஸூக்ஷ்மமான சித்ர வழியாகக்கூட கமனுகமனுதிகள் செய்யும்படியான சக்தி விசேஷத்தோடு இருந்துவரும் நிலே. மஹிமா என்ருல் ஸர்வதேசத்திலும் ஒரே காலத்தில் தனது ஸ்வரூபத்தை எல்லா ப்ராணிகளுடைய த்ருஷ்டிக்கும் புலப்படும்படி ஆகாசம்போல் வ்யாபரித்திருக்கும் நிலேமையாகும். லகிமா என்ருல் பஞ்சுக்கும் லேசாக தனது ஸ்வரூபத்தைச் செய்துகொள்வது. கரிமா என்ருல் மஹா மேருவைக் காட்டிலும் கனமுள்ளதாக தனது ஸ்வரூபத்தைச் செய்துகொள்வது. ப்ராப்தி என்ருல் நினேத்த மாத்ரத்தில் தனக்கு இஷ்டமான லோகம் செல்வது. ப்ராகாம்யம் என்ருல் தனது இச்சையை அநுஸரித்து எல்லா போகத்தையும் அநுபவிப்பது. வசித்வம் என்ருல் ஸர்வலோகங்களேயும் தன் வசமாக்கிக்கொள்வது. ஈசித்வம் என்ருல் ஸர்வ ப்ராணிகளுக்கும் தான் நியந்தாவாக இருப்பது. இந்த எட்டுவிதமான ஸித்திகளும் மஹாராக்ஞீயான பராசக்தியின் எட்டு ஆவரண தேவதைகளின் மூலமாகவே அடையக்கூடுமானல் ஸாக்ஷாத் பராசக்தியினுடைய ஸ்வரூபத்தை ப்ரத்யகாத்மாவாக பாவித்து த்யானம் செய்கிற புண்யவானுக்கு அந்த பராசக்தி மூலமாக எவ்விதமான லாபம் தான் கிடைக்காது! அந்த உபாஸகன் त्रिनयनसमृद्धि (𑌤𑍍𑌰𑌿𑌨𑌯𑌨𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌿) (த்ரிநயநஸம்ருத்தி) யையும் த்ருணமாக நினேக்கிறுன். त्रीणि नयनानि मार्गाः प्रापकाः सूर्य चन्द्र अग्नि रूपाः यस्य दर्शनाय (𑌤𑍍𑌰𑍀𑌣𑌿 𑌨𑌯𑌨𑌾𑌨𑌿 𑌮𑌾𑌰𑍍𑌗𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑌕𑌾𑌃 𑌸𑍂𑌰𑍍𑌯 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑍂𑌪𑌾𑌃 𑌯𑌸𑍍𑌯 𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌯) (த்ரீணி

நயநாடீ மார்கா: ப்ராபகா: ஸூர்ய சந்த்ர அக்னிரூபா: யஸ்ய தர்ஸ்நாய) என்ற ஸ்மர்ஸத்தை அவலம்பித்து சந்த்ரன் ஸூர்யன் அக்னி மூன்று பேர்களும் எந்த ஸதாசிவ தத்வம் என்ற ஸ்தானத்தில் ஜீவனை கொண்டு போய்விடுகிறவர்களோ, ஜீவன் ஸதாசிவனாக ஆகுவதற்கு அதாவது, तत्त्वमसि (தத்த்வமஸி) (தத்வமஸி) என்ற மஹாவாக்யத்திலுள்ள तत् (தத்) (தத்) என்ற பதத்தின் வாக்யார்த்தமாகிய ஈச்வரபாவத்தை யடைவதற்கு அக்னியினுடைய உபாஸனமும், ஸூர்யனுடைய உபாஸனமும், சந்த்ரனுடைய உபாஸனமும் முக்யமாக சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவர்களை உபாஸித்து அவர்கள் மூலமாகத்தான் ஜீவன் ஈச்வரபாவத்தை அடையவேண்டும் அவ்விதம் இந்த மூன்றுபேர்கள் மூலமாக அடையவேண்டிய ஈச்வர பாவத்தில் ஏற்படக்கூடிய ஸம்ருத்தியையும் பராசக்தியை ஐக்யாநுஸந்தானத்தோடு பூஜிக்கிறவன் த்ருணமாக நினைக்கிறான். சந்த்ரன், ஸூர்யன், அக்னி என்ற பதங்களால் பாஹ்ய த்ருஷ்டியை அநுஸரித்து வெளியில் காணப்படும் தேவதைகளை க்ரஹித்துக் கொண்டாலும் ஆந்த்ர த்ருஷ்டியை அநுஸரித்து இடை, பிங்களை ஸுஷும்னை என்ற நாடிகளை க்ரஹித்துக் கொள்ளவேண்டும் இடை என்றால் ஸூர்யநாடியென்றும், பிங்களையென்றால் சந்த்ரநாடியென்றும், ஸுஷும்னை என்றால் அக்னிநாடி என்றும் யோக சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸுஷும்னா நாடிக்குள்தான் மூலாதாரம் முதலான ஷட்சக்ரங்களும் இருக்கின்றன. அதில் அநாஹதசக்ரமென்ற ஹ்ருதய புண்டரீகத்தில் பரமேச்வரன் விளங்கி வருகிறார். அவருடைய உபாஸனத்தைத்தான் தஹரவித்யை என்று சொல்லுவார்கள். அந்த பரமேச்வரனிடம் ஜீவன் அடையவேண்டுமானால் ஜீவனுக்கு மனது ப்ரதானமான உபாதியானதினால் மனது பரமேச்வரனை அடைந்

தால்தான் ஜீவன் அடையமுடியும். மனதோ, ப்ராணன் நிற்குமிடத்தில்தான் போய் நிற்கும். ஆகையால் யோக சாஸ்த்ர ஸித்தாந்தப்படி பூரக, ரேசக கும்பகம் என்ற ப்ராணாயாமத்தின் க்ரமத்தைத் தெரிந்துகொண்டு இடைநாடி என்ற ஸூர்யநாடியினால் பூரகம் பண்ணி, அதாவது வெளியிலுள்ள சுத்தமான காற்றை உள்ளே இழுத்து, அக்னிநாடியாகிய ஸுஷும்னா நாடியில் அந்த ப்ராணவாயுவை நிறுத்தி வைப்பதே கும்பகமாகும். அந்த ஸமயத்தில் மனது அங்குதான் நிற்கும். மனது நிற்குமிடத்தில் ஜீவனும் நிற்கிறான். ஸுஷும்னா நாடியில் அனாஹத சக்ரமென்ற ஹ்ருதயபுண்டரீகத்தில் தஹராகாசம் என்ற சப்தத்தால் சொல்லப்படும் பரமேச்வரனுடைய ஸந்தர்சனமும் ஜீவனுக்கு ஸித்திக்கிறது. பிறகு சந்த்ர நாடியான பிங்களை வழியாக உள்ளுக்குள் நிறுத்தின காற்றை வெளியில் விடுவதே ரேசகம் என்று சொல்லப்படும். பிறகு ஜீவன் மனதுடன் ப்ரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட வந்துவிடலாம். இவ்விதம் அப்யாஸம் செய்து த்ருடாப்யாஸமாகிவிட்டால் இந்த ஜீவன் தஹராகாசம் என்று சொல்லப்படும் பரமேச்வரனாகவே ஆகிவிடுகிறான். அதனால் பரமேச்வர பாவத்தை யடைய சந்த்ரன், ஸூர்யன் அக்னி என்று சொல்லப்படும் இடை, பிங்களை, ஸுஷும்னை என்ற மூன்று நாடிகளும் மார்க்கமாக ஆகிறபடியால் பகவத்பாதாள் त्रिनयनसमृद्धिं (த்ரிநயநஸம்ருத்திம்) (த்ரிநயந ஸம்ருத்திம்) என்ற பதத்தால் அதை ஸூசிப்பிக்கின்றார்கள். அதையும் ஐக்யானுஸந்தானத்தோடு அம்பிகையை உபாஸிக்கிறவன் த்ருணமாக நினைக்கின்றான் என்றே மேல்சொன்னதற்கு அபிப்ராயமாகும். அல்லது त्रिनयनसमृद्धिं (த்ரிநயநஸம்ருத்திம்) (த்ரிநயந ஸம்ருத்திம்) என்ற பதத்திற்கு மூன்று கண்ணோடு கூடின பரமேச்வரனுடைய ஸம்ருத்தியை என்றாவது அர்த்தம் வைத்துக்கொள்ளலாம். அதையும் த்ருண

மாக நினைக்கும் உபாஸகனுக்கு ப்ரளயகாலத்திலும் சாவு இல்லை. சராசரமான ஜகத்தை எரிக்கும் ப்ரளய காலாக்னியும் தேவியின் தாதாத்ம்யத்தையடைந்த இந்த உபாஸகனுக்கு நீராஜன விதியைச்செய்வதாக ஆகிறது. ஆகையால் இந்த ச்லோகத்தில் சொல்லிய படி உபாஸிக்கிறவர்கள் தீர்க்காயுளை அடைந்து கல்ப ஜீவியாக இருக்கலாம்.

---

## 31. தேவியின் தந்த்ரங்கள்

चतुःषष्ट्या तन्त्रैः सकलमतिसंधाय भुवनं
स्थितस्तत्तत्सिद्धिप्रसवपरतन्त्रैः पशुपतिः ।
पुनस्त्वन्निर्बन्धादखिल पुरुषार्थैकघटना-
स्वतन्त्रं ते तन्त्रं क्षितितलमवातीतरदिदम् ॥ ३१ ॥

𑌚𑌤𑍁𑌃𑌷𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌸𑌕𑌲𑌮𑌤𑌿𑌸𑌂𑌧𑌾𑌯 𑌭𑍁𑌵𑌨𑌂
𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌪𑍍𑌰𑌸𑌵𑌪𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌃 ।
𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌦𑌖𑌿𑌲 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑍈𑌕𑌘𑌟𑌨𑌾
𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌂 𑌤𑍇 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌂 𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌤𑌲𑌮𑌵𑌾𑌤𑍀𑌤𑌰𑌦𑌿𑌦𑌮𑍍 ॥ ௩௧ ॥

சது:ஷஷ்ட்யா தந்த்ரைஸ்ஸகலமதிஸந்தாயபுவநம்
'ஸ்திதஸ்தத்தத்ஸித்திப்ரஸவபரதந்த்ரை: பசுபதி: ।
புநஸ்த்வந்நிர்பந்தாதகில புருஷார்த்தைககடநா
ஸ்வதந்த்ரம் தே தந்த்ரம் க்ஷிதிதலமவாதீதரதிதம் ॥31॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே பராசக்தியே!
(ஹே பகவதி)
पशुपतिः (𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌃) = பரமசிவன்
(பசுபதி:)

सकलं (ஸகலம்) (ஸகலம்) = ஸமஸ்தமான

भुवनं (ஹுவநம்) (புவநம்) = லோக ஸமுதாயத்தை

तत्तत्सिद्धि प्रसवपरतन्त्रैः (தத்தத்ஸித்தி ப்ரஸவபரதந்த்ரைஃ) (தத்தத்ஸித்தி ப்ரஸவ பரதந்த்ரை:) = அந்தந்த ஸித்திகளை உண்டுபண்ணுவதில் முக்கியகாரணங்களாகிய

चतुष्षष्ट्यातन्त्रैः (சதுஃஷஷ்ட்யா தந்த்ரைஃ) (சதுஷ் ஷஷ்ட்யாதந்த்ரை:) = 64 விதமான தந்த்ர சாஸ்த்ரங்களால்

अतिसन्धाय (அதிஸந்தாய) (அதிஸந்தாய) = வஞ்சித்துவிட்டடு

स्थितः (ஸ்திதஃ) (ஸ்தித:) = பேசாம விருந்துகொண்டும்

पुनः (புநஃ) (புந:) = மறுபடியும்

त्वन्निर्बन्धात् (த்வந்நிர்பந்தாத்) (த்வந்நிர்பந்தாத்) = உன்னுடைய நிர்ப்பந்தத்தால்

अखिलपुरुषार्थैकघटनास्वतन्त्रं (அகிலபுருஷார்த்தைகவடநாஸ்வதந்த்ரம்) (அகிலபுருஷார்தைக கடநாஸ்வதந்த்ரம்) = 64 தந்த்ரங்களிலும் சொல்லப்பட்ட ஸகல புருஷார்த்தங்களையும் ஸாதித்துக் கொடுக்கிற விஷயத்தில் முக்கிய ஸாதனமான

इदं ते तन्त्रं (இதம் தே தந்த்ரம்) (இதம் தே தந்த்ரம்) = இந்த உன்னுடைய தந்த்ரத்தை (சாஸ்த்ரத்தை, கீழ் ச்லோகத்தில் சொல்லப்போகும் பஞ்சதசீ என்ற வித்யையை)

क्षितितलं (க்ஷிதிதலம்) (க்ஷிதிதலம்) = பூமண்டலத்தில்

अवातीतरत् (அவாதீதரத்) (அவாதீதரத்) = ப்ரகாசமாகும்படி செய்தார்.

தாத்பர்யம்:—இந்த ச்லோகத்தில் पशुपतिः (வശു-வதிഃ) (பசுபதி:) என்ற சப்தத்தின் பொருளை முதலில் அறியவும். पश्यन्तीति पशवः (வശ്യന്തീതി വശവഃ) (பச்யந்தீதி பசவ:) கண் காது முதலான இந்த்ரியங்கள் என்ற கருவிகளுக்குப் புலப்படும் விஷயத்தையே உண்மையாக நம்பி ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கிக்கிடக்கும் ஜீவன்கள் பசுக்கள் என்று சொல்லப்படுவார்கள். அந்த ஜீவன்கள் மாயை, காமம், கர்மா என்ற மூன்றுவிதமான பாசங்களாலும் கட்டப்பட்டு ஸ்வாதந்த்ரியத்தை இழந்துவிட்டார்கள். மாயை என்ருல் தனது ஜன்மா பயனையடைய ஸூக்ஷ்மமான சாஸ்த்ரார்த்தத்தில் அறிய சக்தி இல்லாமலிருப்பதேயாகும். காமம் என்ருல் துச்சமான ஸ்த்ரீ ஸுகாதிகளிலுள்ள ஆசையாகும். கர்மா என்ருல் பூர்வ ஜன்மாவில் செய்த புண்ய பாபங்களாகும். இந்த மூன்றுவிதமான பாசங்களால் கட்டப்பட்டு ஜடமான ஸ்தூலதேகாதிகளில் நான் என்னுடையது என்ற அபிமானத்தையும் வைத்துக்கொண்டு இந்த்ரியங்களுக்கு புலப்படும் துக்கரூபமான விஷயாதிகளிலேயே நம்பிக்கையை அடைந்து, இந்த்ரியங்களுக்கு புலப்படாமல் கேவலம் சாஸ்த்ரங்களைக் கொண்டு மாத்ரம் அறிந்துகொள்ளக்கூடிய உண்மையான தத்வத்தில் நம்பிக்கையையுமிழந்து, பிறப்பு, இறப்பு என்ற ஸம்ஸார ப்ரவாஹத்தில் சுழன்றுவரும் ஜீவன்கள்தான் பசுக்கள் என்று ப்ரக்ருதத்தில் அறியவும். அந்த ஜீவன்களை ரக்ஷித்துவரும் பரமசிவனே பசுபதி என்ற சப்தத்தால் சொல்லப்படுவார். पराभिध्यानात्तु तिरोहितं ततोह्यस्य बन्धविपर्ययौ (வரா ஹിധ്യാநாத்து திரோஹிதம் ததோ ஹ்யஸ்ய ബந்ധவிபய்யௌ) (பராபித்யாநாத்து திரோஹிதம் ததோஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ) என்ற ந்யாயப்படி அந்த பரமேசவரனை த்யானம் செய்தால அவித்யையினுல் மறைபட்டிருக்கும் நிஜமான ப்ரம்மபாவம் ப்ரகாசிக்கும். பந்தமோ, மோக்ஷமோ பரமசிவனுடைய அதீனமாகத்தான் ஜீவன்களுக்கு ஏற்படுகின்றன.

பரமசிவனே உபாஸித்தவனுக்கு மோக்ஷமும், உபாஸிக்காதவனுக்கு பந்தமும் என்றபடி தாத்பர்யத்தை அறிந்து, பரமசிவனே உபாஸிக்கிற ஜீவன்களை முக்தர்களாகச் செய்து பரமசிவன் ரக்ஷிக்கிறபடியாலும், உபாஸிக்காத ஜீவர்களை பக்தர்களாகச் செய்தாலும் அந்தந்த காலத்தில் फलमत: उपपत्ते: (ஃபலமத: உபபத்தே:) (பலமத: உபபத்தே:) என்ற ந்யாயத்தை யனுஸரித்து அவரவர்களின் கர்மாக்களை விபாகம் செய்து ஸுக துக்காதி பலத்தைக் கொடுத்து பரமசிவனே பக்தர்களையும் ரக்ஷிக்கிறவனாகயினால் पशुपति: (பஶுபதி:) (பசுபதி:) என்ற சப்தத்தால் ஜீவனுக்கு நாதனான பரமேச்வரனே சொல்லப்படுவான. அந்த பரமேச்வரனே, பராசக்தியான தனது மஹிஷியினிடம் ஆலோசிக்காமலே ஸகல ஜீவகோடிகளையும் தான் ஸ்வயமாகவே கரையேற்றிவிடலாமென்ற எண்ணத்துடன் 64 தந்த்ர சாஸ்த்ரங்களை உண்டுபண்ணினார். இந்த 64 தந்த்ரங்களைப் பற்றி चतुःशती (சதுஃஶதீ) (சதுச்சதீ) என்ற ப்ரபந்தத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. அதாவது மஹாமாயா சம்பரம், யோகினீ ஜால சம்பரம், தத்வ சம்பரம், எட்டுவிதமான பைரவ தந்த்ரம், எட்டு ரூபமான பஹுரூபதந்த்ரம், எட்டுவிதமான யாமளதந்த்ரம், சந்த்ரஞான் மாலினி, மஹா ஸம்மோஹனம், வாம ஜுஷ்டம், மஹாதேவம், வாதுலம், வாதுலோத்தரம் ஹ்ருத்பேதனம், தந்த்ரபேதனம், குஹ்ய தந்த்ரம் காமிகம், கலாபாதம், கலாஸாரம், குண்டிகாமதம் மதோத்தரம், வீணை, த்ரோதலம், த்ரோதலோத்தரம், பஞ்சாம்ருதம், ரூபபேதம், பூதோட்டாமரம், குல ஸாரம, குலோத்தேசம், குலசூடாமணி, ஸர்வஞானோத்தரம், மஹாகாளிமதம், அருணேசம், மேதினீசம், விகுண்டேச்வரம், பூர்வதக்ஷம், பச்சிமதக்ஷம் உத்தரம், நிருத்தரம், விமலம் விமலேத்தம், தேவீமதம் உத்தரம் என்று 64 தந்த்ரங்களை அறியவும்.

चतुष्षष्टिश्च तन्त्राणि मातॄणां उत्तमानि च ।
महामाया शंबरं च योगिनीजालशंबरम् ॥
तत्वशंबरकं चैव भैरावाष्टकमेव च ।
बहुरूपाष्टकं चैव यामलाष्टकमेव च ॥
चन्द्रज्ञानं मालिनी च महासंमोहनं तथा ।
वामजुष्टं महादेवं वातुलं वातुलोत्तरम् ॥
हृद्भेदतन्त्रभेदं च गुह्यतन्त्रं च कामिकम् ।
कलापादं कलासारं तथान्यत्कुण्डिकामतम् ॥
मतोत्तरं च वीणाख्यं त्रोतलं त्रोतलोत्तरम् ।
पंचामृतं रूपभेदं भूतोड्डामरमेव च ॥
कुलसारं कुलोद्देशं कुलचूडामणिस्तथा ।
सर्वज्ञानोत्तरं चैव महाकालीमतं तथा ॥
अरुणेशं मेदिनीशं विकुण्ठेश्वरमेव च ।
पूर्वपश्चिमदक्षं च उत्तरञ्च निरुत्तरम् ॥
विमलं विमलेत्थं च देवीमतमथोत्तरम् ।

𑌚𑌤𑍁𑌷𑍍𑌷𑌷𑍍𑌟𑌿𑌶𑍍𑌚 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌮𑌾𑌤𑍄𑌣𑌾𑌂 𑌉𑌤𑍍𑌤𑌮𑌾𑌨𑌿 𑌚 ।
𑌮𑌹𑌾𑌮𑌾𑌯𑌾 𑌶𑌂𑌬𑌰𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌿𑌨𑍀𑌜𑌾𑌲𑌶𑌂𑌬𑌰𑌮𑍍 ॥
𑌤𑌤𑍍𑌵𑌶𑌂𑌬𑌰𑌕𑌂 𑌚𑍈𑌵 𑌭𑍈𑌰𑌵𑌾𑌷𑍍𑌟𑌕𑌮𑍇𑌵 𑌚 ।
𑌬𑌹𑍁𑌰𑍂𑌪𑌾𑌷𑍍𑌟𑌕𑌮𑍍 𑌚𑍈𑌵 𑌯𑌾𑌮𑌲𑌾𑌷𑍍𑌟𑌕𑌮𑍇𑌵 𑌚 ॥
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌮𑌾𑌲𑌿𑌨𑍀 𑌚 𑌮𑌹𑌾𑌸𑌂𑌮𑍋𑌹𑌨𑌂 𑌤𑌥𑌾 ।
𑌵𑌾𑌮𑌜𑍁𑌷𑍍𑌟𑌂 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌾𑌤𑍁𑌲𑌂 𑌵𑌾𑌤𑍁𑌲𑍋𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 ॥
𑌹𑍃𑌦𑍍𑌭𑍇𑌦𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌭𑍇𑌦𑌂 𑌚 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌂 𑌚 𑌕𑌾𑌮𑌿𑌕𑌮𑍍 ।
𑌕𑌲𑌾𑌪𑌾𑌦𑌂 𑌕𑌲𑌾𑌸𑌾𑌰𑌂 𑌤𑌥𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑍁𑌣𑍍𑌡𑌿𑌕𑌾𑌮𑌤𑌮𑍍 ॥

𑌮𑌤𑍋𑌤𑍍𑌤𑌰𑌂 𑌚 𑌵𑍀𑌣𑌾𑌖𑍍𑌯𑌂 𑌤𑍍𑌰𑍋𑌤𑌲𑌂 𑌤𑍍𑌰𑍋𑌤𑌲𑍋𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 ।
𑌪𑌞𑍍𑌚𑌾𑌮𑍃𑌤𑌂 𑌰𑍂𑌪𑌭𑍇𑌦𑌂 𑌭𑍂𑌤𑍋𑌡𑍍𑌡𑌾𑌮𑌰𑌮𑍇𑌵 𑌚 ॥
𑌕𑍁𑌲𑌸𑌾𑌰𑌂 𑌕𑍁𑌲𑍋𑌡𑍍𑌡𑍀𑌶𑌂 𑌕𑍁𑌲𑌚𑍂𑌡𑌾𑌮𑌣𑌿𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌤𑌰𑌂 𑌚𑍈𑌵 𑌮𑌹𑌾𑌕𑌾𑌳𑍀𑌮𑌤𑌂 𑌤𑌥𑌾 ॥
𑌅𑌰𑍁𑌣𑍇𑌶𑌂 𑌮𑍇𑌦𑌿𑌨𑍀𑌶𑌂 𑌵𑌿𑌕𑍁𑌣𑍍𑌠𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍇𑌵 𑌚 ।
𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑌶𑍍𑌚𑌿𑌮𑌦𑌕𑍍𑌷𑌂 𑌚 𑌉𑌤𑍍𑌤𑌰𑌂 𑌚 𑌨𑌿𑌰𑍁𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 ॥
𑌵𑌿𑌮𑌲𑌂 𑌵𑌿𑌮𑌲𑍋𑌤𑍍𑌤𑌮𑌂 𑌚 𑌦𑍇𑌵𑍀𑌮𑌤𑌮𑌤𑍋𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 ।

சதுஷ்ஷஷ்டிச்ச தந்த்ராணி மாத்ருணும் உத்தமாநி ச ।
மஹாமாயா சம்பரம் ச யோகினீ ஜாலசம்பரம் ॥
தத்வசம்பரகம் சைவ பைரவாஷ்டகமேவ ச ।
பஹுரூபாஷ்டகம் சைவ யாமளாஷ்டகமேவ ச ॥
சந்த்ரக்ஞானம் மாலினீ ச மஹாஸம்மோஹநம் ததா ।
வாமஜுஷ்டம் மஹாதேவம் வாதுலம் வாதுலோத்தரம் ॥
ஹ்ருத்பேததந்த்ரபேதம் ச குஹ்யதந்த்ரம் ச காமிகம் ।
கலாபாதம் கலாஸாரம் ததாந்யத்குண்டிகாமதம் ॥
மதோத்தரம் ச வீணாக்யம் த்ரோதலம் த்ரோதலோத்தரம் ।
பஞ்சாம்ருதம் ரூபபேதம் பூதோட்டாமரமேவ ச ॥
குலஸாரம் குலோத்தேசம் குலசூடாமணிஸ்ததா ।
ஸர்வஞானோத்தரம் சைவ மஹாகாளீமதம் ததா ॥
அருணேசம் மேதினீசம் விகுண்டேச்வரமேவ ச ।
பூர்வபச்சிமதக்ஷம் ச உத்தரம் ச நிருத்தரம் ॥
விமலம் விமலோத்தம் ச தேவீமதமதோத்தரம் ।

என்று சதுச்சதி என்ற ப்ரபந்தத்தில் சொல்லப்பட்ட ச்லோகங்களே மேற்சொன்ன 64 தந்த்ர சாஸ்த்ரங்களுக்கு ப்ரமாணமாகும். மஹாகைலாஸத்தில் பார்வதிக்கு சொன்னவைகளே இவைகள். இந்த 64 விதமான தந்த்ரங்களும் ப்ராணிகளை வஞ்சித்து ப்ராணிகளையும் தன் வசமாக்கிக்கொண்டு கீர்த்தியை

யும் ஐச்வர்யத்தையும் ஸம்பாதித்துக்கொள்ளத்தான் காரணமாகும். தனது ஜன்மாவை விபலமாகச் செய்து பிறகு நரகதுக்கத்தை அனுபவிப்பதற்கே காரணமாகும். வைதிக மார்க்கத்திற்கு இது முற்றிலும் விருத்தமானது. இதைத்தான் பகவத் பாதாளும் चतुष्षष्ट्यातन्त्रैः सकलमतिसंधाय भुवनं 𑌚𑌤𑍁𑌷𑍍𑌷𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌸𑌕𑌲𑌮𑌤𑌿𑌸𑌂𑌧𑌾𑌯 𑌭𑍁𑌵𑌨𑌂 ) (சதுஷ்ஷஷ்ட்யா தந்த்ரை: ஸகலமதிஸந்தாய புவநம்) என்ற வாக்யங்களால் ஸகல ஜகத்தையும் வஞ்சிக்கக்கூடியது இந்த தந்த்ரங்கள் என்பதை ப்ரகாசப்படுத்தினார்கள். அதிலும் மஹாமாயா சம்பரம் என்ற தந்த்ரம் உண்மையில் இல்லாத பொருளை நிஜம்போல் ப்ரகாசப்படுத்தி லோகத்தை வஞ்சிப்பதற்கு ஏற்பட்டது. மாயா ப்ரபஞ்சத்தை நிர்மாணம் செய்வதே அந்த தந்த்ரத்தின் முக்யமான பலனாகும். ப்ராணிகளுடைய கண்ணுக் கெதிரில் இருப்பது கடமானாலும் (குடமானாலும்) அதை படமாக (வஸ்த்ரமாக) காட்டும். அப்படியே யோகினீ ஜால சம்பரம் என்பதும் மாயையை ப்ரதானமாக அவலம்பித்த ஜால வித்யைதான். ஸ்மசானதிகளில் சென்று அந்த வித்யையை ஸித்தி செய்யவேண்டும். தத்வ சம்பரம் என்பது மஹேந்த்ர ஜால வித்யை ப்ருத்வி முதலான ஐந்து தத்வங்களை மாற்றிக் காட்டுகிறது. பைரவாஷ்டகத்தில் ஸித்த பைரவம், வடுக பைரவம், படபாநல பைரவம், கால பைரவம், காலாக்னி பைரவம், யோகினீ பைரவம், மஹா பைரவம், சக்தி பைரவம் என்று எட்டுவித பைரவ மதங்கள் ஏற்பட்டன. இந்த எட்டு விதமும் அணிமை முதலான எட்டு ஸித்திகளுக்குக் காரணமாகும். ஆகிலும் கபாலிக மதத்தைச் சார்ந்ததினால் அவைகள் வைதிக ஸித்தாந்தத்திற்கு விருத்தமானவைகளே, அவ்விதமே பகுரூபாஷ்டகம் என்பதும் சக்தியினிடத்திலிருந்து உண்டான தேவதைகளே. ப்ராம்ஹீ, மஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்

ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, சிவதூதி இந்த சக்திகளை அவலம்பித்து ஏற்பட்ட தந்த்ரங்கள் எட்டு விதம். அந்த தந்த்ரங்களும் கேவல வாமாசாரத்தை முன்னிட்டு ஏற்பட்டதினால் வைதிக ஸித்தாந்தத்திற்கு விருத்தமானவை. அதனால் அவைகளும் தள்ளத்தகுந்தவைதான். யாமளாஷ்டகம், யாமளை என்றால் காமஸித்தாம்பாள் என்று ஒரு தேவதை. அந்த தேவதையைப் பற்றி சொல்லும் தந்த்ரங்கள் எட்டாகும். அவைகளும் வேத மார்க்கத்திற்கு விருத்தமானவைகள். சந்த்ரஞானம் என்பது ஒரு வித்யை ஆகும். ஷோடசவித்யாதேவதைகளை ப்ரதிபாதனம் செய்யக்கூடியது. அந்த சாஸ்த்ரமும் கபாலிக மதத்தில் அடங்கியிருப்பதால் வேதவிருத்தம். மஹாஸம்மோஹனம் என்று ஒரு தந்த்ரம். ஜாக்ரதவஸ்தையிலும் ப்ராணிகளுக்கு நித்ரையை உண்டுபண்ணக்கூடியது. அந்த ஸித்திகளைப் பெற, குமார்க்கத்தால் அப்யாஸம் செய்யவேண்டும். சிசுக்களுடைய நாக்கை அறுத்து ஹோமம் செய்துதான் அந்த ஸித்தியை அடையவேண்டும். ஆகையால் அதுவும் தள்ளத் தகுந்தது. வாம ஜுஷ்டமஹாதேவ தந்த்ரங்களோ, வித்யையில் அந்தர்கதமான சாஸ்த்ரமானாலும் தந்த்ரசாஸ்த்ரமானதினால் வேதவிருத்த துராசாரத்தை போதிக்கிறபடியாலும் சரேயோர்த்திகளுக்கு தள்ளத் தகுந்ததே. வாதுலம், வாதுலோத்தரம் காமிகம் என்ற மூன்றுவிதமான ஆகமங்களோ தேவதைகளை ஆகர்ஷணம் செய்து பிரதிஷ்டைசெய்யும் ப்ரகாரங்களை போதிக்கின்றன. இது அந்த சாஸ்த்ரங்களில் ஒரு ஏகதேச பாகம்தான் ஆகும். ஆகர்ஷணம் முதல் ப்ரதிஷ்டை முடிய உள்ள ப்ரகாரங்கள் வேதத்திலும் சொல்லப்படுகின்றன. அந்த அம்சம் மாத்ரம் ஸாதுவானாலும் மற்ற பாகங்களெல்லாம் வேதவிருத்தமான அர்த்தத்தை போதிக்கிறபடியால் வைதிகர்களுக்கு அந்த மூன்று ஆகம்ங்களும் ஹேயம்தான்.

ஹ்ருத்பேதனம் என்ற தந்த்ரமும் காபாலிக மதத்தைச் சார்ந்தது. அந்த சாஸ்த்ரத்தில் மூலாதாரம் முதல் ஆறு சக்ரங்களேயும் பேதித்துக்கொண்டு ஸஹஸ்ராரம் என்ற ப்ரம்மரந்த்ர சக்ரத்தில் ப்ரவேசிக்க வழி ரொம்ப ஸுலபமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகிலும், அந்த தந்த்ரமானது வாமாசாரத்தை முன்னிட்டு ஏற்பட்டதினுல் காபாலிக மதத்தைச் சார்ந்தது என்ற காரணத்தைக்கொண்டு அதுவும் தள்ளத் தகுந்ததே. தந்த்ரபேதம் குஹ்யம் என்ற இரண்டு தந்த்ரங்களும் அன்னியர்களால் செய்யப்படும் தந்த்ரங்களே போதிக்கிறபடியால், அதாவது தந்த்ர பேதம் குஹ்யம் என்ற தந்த்ரங்களில் சொல்லியிருக்கும் வித்யையை அனுஷ்டானம் செய்தால் வைதிகர்களை ஒன்றும் தோன்றுமலடித்து பராபவப்படுத்தக் கூடிய உபயாங்களே அந்த இரண்டு தந்த்ரங்களும் சொல்லுகிறபடியால், அநேக ஹிம்ஸைகள் ஏற்படுகிறதென்ற காரணத்தைக்கொண்டு அந்த இரண்டு தந்த்ரங்களேயும் ச்ரேயோர்த்திகள் ஆதரிக்கக்கூடாது. கலாபாதம் என்று ஒரு தந்த்ரம் உண்டு. அது வாத்ஸ்யாயன சாஸ்த்ரத்தைச் சார்ந்தது. காமத்தை ப்ரதானமாக வைத்து அந்த தந்த்ரம் ஏற்பட்டது. அதுவும் வேதநிஷித்தமான பரதாரகமனுதிகளே போதிக்கிறபடியால் தள்ளத் தகுந்ததே. கலாஸாரம் எனறதும் வாமாசாரத்தை முன்னிட்டு ஏற்பட்டதால் ஹேயமே குண்டிகாமதம்,—குடிகாசி திக்பு (ஆகாச மார்க்கங்களில் போவது) முதலானவைகளுக்குக் காரணமாகும். அதுவும் வாமாசாரத்தை முன்னிட்டதினுல தள்ளத் தகுந்ததே. மதோத்தர மதம், ரஸவாதம் தாம்பிரம் இரும்புகளேத் தங்கமாக்குவது. அதுவும் வைதிக மத விருத்தமானதினுல் ஹேயமாகும். வீணு என்று ஒரு தந்த்ரம். வீணு எனருல் சம்போக யக்ஷிணீ என்று ஒரு தேவதை. பிறர்களுடைய வீட்டில் பெட்டியில் வைத்திருக்கும் பணத்தைக் கொணடுவந்து உபாஸகர்களுக்குக்கொடுக்கும். அந்த சாஸ்த்ரமும் வைதிக ஸித்

தாந்த விருத்தமே. ஜன்மாவை நசித்துக்கொள்வதற்கு முக்ய காரணமாகும். அதனால் அதுவும் ஹேயமே. த்ரோதலம் என்று ஒரு தந்த்ரம். அதை குடிகாஞ்ஜன பாதுகா ஸித்தி என்றும் சொல்வார்கள். பைரவாகமத்தில் சேர்ந்தது. பாதுகையை போட்டுக்கொண்டு ஆகாசத்திலும் ஜலத்திலும் நடப்பது ப்ராணிகளை மையால் மயக்கி வசப்படுத்துகிறது அதுவும் வைதிக மார்க்க விருத்தமானதினால் ஹேயம்தான். த்ரோதலோத்தரம் என்பது 64 ஆயிரம் யக்ஷிணீ தேவதைகளை ப்ரத்யக்ஷமாக வரவழைத்துக்காட்டுகிற தந்தரமாகும் பஞ்சாம்ருதம், ப்ருத்வி முதலான ஐந்து தத்வங்களடங்கிய பிண்டத்திலோ அண்டத்திலோ சரீரத்திற்கும் ரணமில்லாமல் செய்துகொள்ளும் ஸித்தியாகும். அதுவும் அவைதீகம்; கபாலிக மதத்தைச் சார்ந்தது. தந்த்ர பஞ்சகம், திடீரென்று மரிக்கவேண்டுமானால் அதற்குள்ள காரணத்தை போதிப்பது; அதுவும் அவைதீகம். சர்வக்ஞானம் முதல் ஐந்து தந்த்ரங்கள் கபாலிக ஸித்தாந்தமாகும். திகம்பர தத்வத்திலும் சேர்ந்ததாகும். அவைகளும் வைதிகமத விருத்தம். இவ்விதம் 64 தந்த்ரங்களும் ஞானிகளையும் வஞ்சிக்கக்கூடியது. ஐஹிக ஸித்தி மாத்ரந்தான் அந்த தந்த்ரங்களின் பலமாகும். வைதிகமார்க்கத்தில் த்ருடமாக இருந்துகொண்டு மஹாவித்வான்களான பெரியோர்களும் ஐஹிகமான துச்சபலத்தை அபேக்ஷித்து சில ஸந்தர்ப்பத்தில் மேற்சொன்ன தந்த்ரங்களில் ப்ரவ்ருத்தித்து தன் ஜன்மாவை வீணுக்கிக்கொள்ளுகிறார்கள்.

ஆனால் பரமேச்வரன்தான் இவ்விதமான வஞ்சக சாஸ்தரங்களை நிர்மாணம் செய்யலாமா? பரமேச்வரனே நிர்மாணம் செய்திருப்பதால்தானே அந்த தந்த்ரங்களில் வித்வான்களுக்கும் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது. ஆகையால் பரமேச்வரன் எதற்காக இதை நிர்மாணம் செய்தார் என்ற சங்கைக்கு கீழ்கண்டபடி ஸமாதானத்தை அறியவும்.

பரமேச்வரனே மஹா கருணாமூர்த்தி. ப்ராம் மணன், க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன் என்ற ஜாதியைத் தான் ஸ்ருஷ்டித்தாலும் அநுலோம ப்ரதிலோம ஸங்கரஜாதிகள் ப்ராணிகளுடைய காம வசத்தால் பஹுளமாக ஆகிவிட்டார்கள். அவர் களிடமும் பரமேச்வரனுக்கு கருணைவந்து ஸங் கர ஜாதியில் பிறந்ததினால் அவர்களுக்கோ ஆமுஷ் மிக ஸுகம் இல்லவேயில்லை. இஹத்திலாவது அவர் கள் ஒரு மேன்மை அடையவேண்டும் என்ற எண்ணத்துடன் மேற்சொன்ன 64 தந்த்ரங்களையும் அவர்களைக் குறித்து நிர்மாணம் செய்தார். அதிலும் சாதுர்வர்ணத்திலும் த்ரைவர்ணிகர்களுக்கு அடுத்த ச்லோகத்தில் ப்ரகாசப்படுத்தப்போகும் வைதிகமான சந்த்ரகலாவித்யை என்ற மேற்படி வித்யையில் அதி காரமும் ஏகஜாதியான சூத்ரர்களுக்கும் அநுலோம ப்ரதிலோம ஸங்கர ஜாதிகளுக்கும் 64 தந்த்ரங்களில் அதிகாரம் என்றும் ஸித்தாந்தத்தை அறியவும். பர மேச்வரனிடத்தில் யாதொரு விதமான தோஷமு மில்லை. ப்ராணிகளிடத்தில்தான் தோஷம் ஏற்பட்டது தவிரவும் பரமேச்வரன் எல்லா ஜாதிகளிடத்திலும் கருணையோடு கூடினவரே. த்ரைவர்ணிகர்களுக்கு ஆமுஷ்மிகமான ஸுகத்தை ப்ரதானமாகவும், சூத்ரர் களுக்கும் (மூர்த்தாபிஷிக்தர்களுக்கு) ஸங்கர ஜாதியில் பிறந்தவர்களுக்கும் ஐஹிக ஸுகத்தை ப்ரதானமாக வும் கருதினார். ஆமுஷ்மிக ஸுகத்திற்கு வைதிக மார்க்கமே உபாயமானதினால் த்ரைவர்ணிகர்களுக்கு வைதிக மார்க்கத்தில்தான் அதிகாரம். ஐஹிக ஸுகத் திற்கோ தாந்த்ரீகமார்க்கமே உபாயமானதினால் ஐஹிக ஸுகத்தை ப்ரதானமாக அவலம்பித்து ஏற்பட்ட சூத் ரர்களுக்கும் ஸங்கர ஜாதிகளுக்கும் தாந்த்ரீகமார்கத் தில்தான் அதிகாரம். த்ரைவர்ணிகர்களுக்கு தந்த்ர சாஸ்த்ரத்திலும் அதிகாரமில்லை. சூத்ரர்களுக்கும் ஸங்கர ஜாதியில் பிறந்தவர்களுக்கும் வேதத்திலும் அதிகாரமில்லை. வேதத்தில் அதிகாரமில்லாத ப்ராணி

களிடத்தில் பரமேச்வரன் கருணை கூர்ந்து அஹோ! இந்த ஜனங்கள் ஆமுஷ்மிக ஸுகத்தை அடைய முடியாமல் போய்விட்டார்களே! இஹத்திலாவது ஸுகத்தையும் கீர்த்தியையும் அடையட்டும். அதற்கு ஒரு உபாயத்தை கற்பிப்போம் என்ற எண்ணத்துடன் வேத அநதிகாரிகளை உத்தேசித்து பரமேச்வரனால் கற்பிக்கப்பட்ட தந்த்ர சாஸ்த்ரங்களில் வேதத்தில் அதிகாரமுள்ள த்ரைவர்ணிகனும் ஐஹிக ஸுகலோபத்தால் ப்ரவ்ருத்தித்து நாசத்தை யடைந்தால் அது பரமேச்வரனுடைய தோஷமாகுமா? இல்லவேயில்லை ப்ராணிகளுடைய தோஷம்தான். சந்த்ர கலாவித்யாஷ்டகம் என்பதோ, ஸ்ரீ வித்யையை ப்ரதிபாதனம் செய்யக்கூடிய சாஸ்த்ரமாகும். சந்த்ரகலா, ஜ்யோத்ஸ்னவதி, கலாநிதி, குலார்ணவம், குலேச்வரி, புவனேச்வரீ, பார்ஹஸ்பத்யம், துர்வாஸம் என்று எட்டு பரகாரமாகும். ப்ராம்மணர்களை முன்னிட்டு ப்ரதக்ஷிண க்ரமமாக ஸகலவிதமான அநுஷ்டான கலாபங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த சந்த்ரகலா வித்யாஷ்டகத்தில் சாதுர் வர்ணத்தைச் சார்ந்த சூத்ரர்களுக்கும் அதிகாரமுண்டென்று சிலர்கள் சொல்லுவார்கள். அதனால் அது அபசவ்ய மார்க்கத்தை யநுஸரித்துத்தான் ஏற்பட்டது. வாமாசாரமென்று சொல்லப்படும் அந்த பூஜையில் மத்யமாம்ஸாதிகளுக்கும் உபயோகமுண்டு.

வைதிகமார்க்க விருத்தமானதினால் த்ரைவர்ணிகர்கள் அதை அனுஷ்டிக்கக்கூடாதென்பதே சாஸ்த்ர ஸித்தாந்தமாகும். அதனால் வாமாசாரம் தள்ளத்தகுந்ததுதான். வஸிஷ்டர், ஸனகர், ஸனந்தனர், ஸனத்குமாரர், சுகப்ரம்மம் இந்த ஐந்துபேர்களும் ஸ்ரீ வித்யோபாஸனையில் ரொம்பவும் முதன்மையை அடைந்தவர்கள். அந்த ஐந்து மஹர்ஷிகளுடைய அநுஷ்டான ப்ரகாரத்தைச்சொல்லும் சாஸ்த்ரமானது 'சுபாகம தந்த்ர பஞ்சகம்' என்று சொல்லப்படும். அது

வைதிக மார்க்கத்தை அனுஸரித்திருக்கிறபடியால் ச்ரேயஸ்ஸை விரும்பும் த்ரைவர்ணிகர்கள் அதை அவலம்பிக்க வேண்டும். பகவத் பாதாளும் இந்த சுபாகம தந்த்ர பஞ்சகத்தை அனுஸரித்துத்தான் ஷீ வித்யையை ஆராதித்து வந்தார்கள். இந்த க்ரந்தத் தையும் எழுதினார்கள் என்று தெரிகிறது. இதைத் தான் ஸமயாசாரம் என்று சொல்லுவார்கள். பகவத் பாதாளுடைய ஸித்தாந்தத்தை அனுஸரித்துத்தான் பகவத்பாதாளுக்குப் பின் ஏற்பட்ட வித்வான்களும் மேற்சொன்ன வித்யையை அனுஷ்டானம் செய்து வருகிறார்கள். ஸாக்ஷாத் பராம்பிகையை அடிக்கடி ப்ரத்யக்ஷமாக தர்சனம் செய்த பாஸ்கரராயர் முதலிய மஹான்களும் பகவத்பாதாளுடைய மதமாகிய சமய மதத்தையே அனுஸரித்தவரென்றும் தெரிகிறது. அதற்கோ சுபாகம பஞ்சகமே மூலப்ரமாணமாகும் முன் சொன்ன எட்டுவிதமான சந்த்ரகலா வித் யையோ ஸமயம் கௌலம் என்ற இரண்டையும் அனுஸரித்தது. சுபாகம பஞ்சகமோ ஸமயமதத்தை மாத்ரம் அவலம்பித்து ஏற்பட்டது. 64 தந்த்ரங்க ளோடு ஸ்ரீ வித்யை சார்ந்ததானாலும் கௌலமார்க் கத்தைத்தான் அனுஸரித்தது. இவ்விதம் சுபாகம பஞ்சகம் கேவல ஸமயமதத்தை அனுஸரித்தது. 64 தந்த்ரங்கள் கேவல கௌலமதத்தை அனுஸரித்தன. சந்த்ர கலாவித்யாஷ்டகம் ஸமயம் கௌலம் இரண் டையும் மிச்ரமாக அனுஸரித்தது என்பதை விளக்கம் செய்து தெரிந்துகொண்டு கேவல கௌலமோ, மிச்ர கௌலமோ, வைதிக மதத்திற்கு விரோதமான ஸம் ப்ரதாயத்தை போதிக்கிறபடியாலும், சுபாகம பஞ் சகமோ கேவல ஸமய மதத்தை அவலம்பித்து ஏற் பட்ட காரணத்தைக்கொண்டு வைதிக மதத்திற்கு கொஞ்சமேனும் விரோதமில்லாமல் அதை யனு ஸரித்தே ஸம்ப்ரதாயத்தை போதித்துக்கொண்டு வரும் காரணத்தாலும், ச்ரேயஸ்ஸை விரும்பும் புண்ய வான்கள் சுபாகம பஞ்சகத்தை ப்ரமாண சாஸ்த்ர

மாகக் கைகொண்ட மஹாகுருக்களிடம் ஸ்ரீ வித்யையை உபதேசம் செய்துகொண்டு ஸ்ரீ வித்யையை அநுஷ்டானம் செய்துவரவேண்டும். கேவல ஸமய மதத்தை அநுஸரித்தது சுபாகம பஞ்சகம் என்று சொல்லப்பட்டது. அந்த ஸமய மதத்தின் ஸ்வரூபத்தையோ तवाधारे मूले सह समयया (தவாயாஇெ உூஇெ ஸஹ ஸமயயா) (தவாதாரே மூலே ஸஹ ஸமயயா) என்ற ச்லோக வ்யாக்யானத்தில் ஸ்பஷ்டமாக தெரிந்து கொள்ளலாம். சுபாகம பஞ்சகம் என்ருல் 16 வித மான நித்யதேவதைகளை ப்ரதிபாதனம் பண்ணும் சாஸ்த்ரமாகும். षोडशनित्याः (ஷொஜஶ நித்யாஃ) (ஷோடசநித்யா:) என்ற வித்யைகளோ மூலவித்யையில் அந்தர்பாவத்தை அடைந்து ஷி சந்த்ரவித்யையில் அங்கமாகவே அந்தர்பாவமானது சொல்லப்பட்டிருக்கிறது. 64 தந்த்ரங்களில் அடங்கின சந்த்ரவித்யையிலோ षोडशनित्याः (ஷொஜஶ நித்யாஃ) (ஷோடசநிதயா:) என்ற தேவதைகள் அந்தர்பாவத்தை அடைந்திருக்கிருர்கள், தந்த்ரங்களுக்குள் ஒன்ருன சந்த்ரவித்யையில் ஷோடசநித்யா என்ற தேவதைகளுக்கு அந்தர்பாவத்தைச் சொல்லும் மதம் கௌலமதமாகும். ஸ்ரீ சக்ரவித்யையில் அங்கமாக மூல வித்யையில் ஷோடசநித்யா: என்ற தேவதைகளுக்கு அந்தர்பாவத்தைச் சொல்லும் மதம் ஸமயமதமாகும். இதில் வாஸிஷ்ட ஸம்ஹிதை, ஸனக ஸம்ஹிதை, ஸனந்தன ஸம்ஹிதை ஸனத்குமார ஸம்ஹிதை, சுக ஸம்ஹிதை என்ற ஐந்தும் ப்ரமாண பூதங்களான சாஸ்த்ரங்களாகும். அதில் வாஸிஷ்ட ஸம்ஹிதையில்,

श्रृणु देवि प्रवक्ष्यामि नित्याषोडशिकार्णवम् ।
न कस्यचित् मयाख्यातं सर्वतन्त्रेषु गोपितम् ॥

तत्रादौ प्रथमा नित्या महात्रिपुरसुन्दरी ।
ततः कामेश्वरी नित्या नित्या च भगमालिनी ॥
नित्यक्लिन्ना तथा चैव भेरुण्डा वह्निवासिनी ।
महाविद्येश्वरी दूती त्वरिता कुलसुन्दरी ॥
नित्या नीलपताका च विजया सर्वमंगला ।
ज्वालामालनिका चित्रा एता नित्यास्तु षोडश ॥
प्रतिपत्प्रमुखाः देवाः पौर्णमास्यन्तमर्चयेत् ॥

𑌶𑍃𑌣𑍁 𑌦𑍇𑌵𑌿 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌷𑍋𑌡𑌶𑌿𑌕𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌨 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌨𑍍 𑌮𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌗𑍋𑌪𑌿𑌤𑌮𑍍 ॥
𑌤𑌤𑍍𑌰𑌾𑌦𑍌 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌮𑌹𑌾𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌰𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑍀 ।
𑌤𑌤𑌃 𑌕𑌾𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌚 𑌭𑌗𑌮𑌾𑌲𑌿𑌨𑍀 ॥
𑌨𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌲𑌿𑌨𑍍𑌨𑌾 𑌤𑌥𑌾 𑌚𑍈𑌵 𑌭𑍇𑌰𑍁𑌣𑍍𑌡𑌾 𑌵𑌹𑍍𑌨𑌿𑌵𑌾𑌸𑌿𑌨𑍀 ।
𑌮𑌹𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑍇𑌶𑍍𑌵𑌰𑍀 𑌦𑍂𑌤𑍀 𑌤𑍍𑌵𑌰𑌿𑌤𑌾 𑌕𑍁𑌲𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑍀 ॥
𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌨𑍀𑌲𑌪𑌤𑌾𑌕𑌾 𑌚 𑌵𑌿𑌜𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑌂𑌗𑌲𑌾 ।
𑌜𑍍𑌵𑌾𑌲𑌾𑌮𑌾𑌲𑌿𑌨𑌿𑌕𑌾 𑌚𑌿𑌤𑍍𑌰𑌾 𑌏𑌤𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌷𑍋𑌡𑌶 ॥
𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑌾𑌃 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌪𑍌𑌰𑍍𑌣𑌮𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍍
𑌅𑌰𑍍𑌚𑌯𑍇𑌤𑍍 ॥

ச்ருணு தேவி ப்ரவக்ஷ்யாமி நித்யாஷோடசிகார்ணவம் ।
ந க்ஸ்யசித் மயாக்யாதம் ஸர்வதந்த்ரேஷு கோபிதம் ॥
தத்ராதௌ ப்ரதமா நித்யா மஹாத்ரிபுரஸுந்தரீ ।
தத: காமேச்வரீ நித்யா நித்யா ச பகமாலினீ ॥
நித்யக்லிந்நா ததாசைவ பேருண்டா வஹ்நிவாஸினீ ।
மஹாவித்யேச்வரீ தூதி த்வரிதா குலஸுந்தரீ ॥

நித்யா நீலபதாகா ச விஜயா ஸர்வமங்களா !
ஜ்வாலமாலநிகா சித்ரா ஏதா: நித்யாஸ்து ஷோடச ॥
ப்ரதிபத்ப்ரமுகா: தேவா: பௌர்ணமாஸ்யந்தமர்சயேத்

என்ற ச்லோகங்களால் மஹாத்ரிபுரஸுந்தரீ, காமேச்வரீ, பகமாலினீ, நித்யக்லின்னு, பேருண்டா, வன்னிவாஸினீ, மஹாவித்யேச்வரீ தூதீ, த்வரிதா, குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வமங்களா, ஜ்வாலாமாலாநிகா, சித்ரா என்ற பதினறு தேவதைகளை ஷோடசநித்யா: என்று சொல்லப்படும், இந்த ஷோடச நித்யா: என்ற தேவதைகள் இரண்டு தேவதைகளாகச் சேர்ந்து, எட்டு வர்க்கங்களாக இருப்பதனுல் எட்டு தளசக்ரத்தில் அதாவது வஸு கோணத்தில் இரண்டு இரண்டு தேவதைகளாக பூஜிக்கத்தகுந்தவர்கள். அத்துடன் 16 ஸ்வரம் என்ற மாத்ருகாவர்ண ஸ்வரூபிகளானதினுலும் ஷோடசகலா பத்மத்திலும் வஸிக்கிறவர்களாய்க் கொண்டு அரம் என்று சொல்லப்படும் கோணத்தில் அந்தர்பூதாளாக ஆகிருர்கள. அந்த 16 பேர்களுக்குள் இரண்டு பேர்கள் த்ரிகோணத்தில் பிந்துரூபமாக இருக்கிருர்கள். பாக்கி 14 பேர்கள் மூன்று மேகலே, நாலு த்வாரத்தோடுகூடின மூன்று பூபுரம், (ரேகை) பிந்து த்ரிகோணம் இதுகளில் அந்தர்பாவத்தை அடைந்த மன்வச்ரம் என்று சொல்லப்படும் ஸ்தானத்தில் வஸிக்கிருர்கள். இவ்விதம் ஷோடசநித்யா: என்ற தேவதைகளுக்கு ஸ்ரீசக்ரத்தில் அந்தர்பாவமானது சொல்லப்பட்டிருக்கிறது. ஸனந்தன ஸம்ஹிதையில் एतास्तु षोडशनित्यायाः चन्द्रकलायाः चक्रविद्यायाः अंगभूताः (ஏதாஸ்து ஷோடஶநித்யாயா: சந்த்ரகலாயா: சக்ரவித்யாயா: அங்கபூதா:)(ஏதாஸ்து ஷோடசநித்யாயா: சந்த்ரகலாயா: சக்ரவித்யாயா: அங்கபூதா:) என்ற வாக்யத்தை அனுஸரித்து ஷோடசநித்யா: என்ற தேவதைகள்

ஸ்ரீசக்ரவித்யையில் அங்கபாவத்தை யடைந்து பஞ்சதசாக்ஷரீ என்ற மஹாமந்த்ரத்திலும் அந்தர் பாவத்தை அடைகின்றார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸனத்குமார ஸம்ஹிதையிலும் ஸ்ரீசக்ர வித்யையில் ஷோடசநித்யாள் என்ற தேவதைகளுக்கு அங்கபாவம்தான் சொல்லப்பட்டது. எட்டுவிதமான வசினீ முதலான தேவதைகள், 16 விதமான ஷோடச நித்யாள் என்ற தேவதைகள், 12 யோகினிகள், கந்தா கர்ஷணீ முதலான 4 தேவதைகள் இவர்களை நான்கு பக்கத்திலும் வைத்து நடுவில் த்ரிகோணம் எழுதி அதன் நடுவில் பிந்துவைப்போட்டு பிந்துவின் மத்தியில் மஹாத்ரிபுரஸுந்தரியின் பீஜாக்ஷரத்தை எழுதி பூஜிக்கவேண்டிய ப்ரகாரங்களை ஸனத்குமார ஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறபடியால், ஷோடச நித்யாள் என்ற தேவதைகளுக்கு ஸ்ரீசக்ர வித்யையில் அங்கபாவம் ஸ்பஷ்டமாக ஏற்படுகின்றது. இவ்விதம் வஸிஷ்டர், ஸனந்தர், ஸனகர், ஸனத்குமாரர், சுகப்ரம்ம ஸ்வாமி ஐந்து பேர்கள் மூலமாக ஸ்ரீவித்யை என்ற வைதிகமான மகாவித்யையை லோகத்தில் பரமேச்வரன் ப்ரகாசப்படுத்தினார் அதற்கு தேவியினுடைய நிர்ப்பந்தமே காரணமாகும். பரமேச்வரன் கருணாமூர்த்தியானாலும் வைதிக மார்க்கத்தில் அதிகாரமில்லாத ப்ராணிகளைக் குறித்து அவர்களும் ச்ரேயஸ்ஸை அடையவேண்டுமென்ற எண்ணத்துடன் நிர்மாணம் செய்த 64 தந்த்ரங்களில் வைதிகர்களும் வ்யாமோஹத்தால் ப்ரவிருத்தித்துவிட்டார்களே என்ற கவலையுடன் பரமேச்வரன் மனங்கலங்கி நிற்கும்பொழுது பராசக்தியினுடைய பிரேரணையின் பேரில் மறுபடி அந்தந்த தந்த்ரங்களில் சொல்லபட்டிருக்கும் அந்தந்த ஸித்திகளையும் உபாஸகன் எதிர்பார்க்காமலிருக்கும் காலத்திலேயே உபஸகனுக்கு அளிக்கக்கூடிய சக்தியுள்ள ஸ்வதந்த்ரமான தேவியினுடைய தந்த்ரத்தை அதாவது ஸ்ரீவித்யையை (அடுத்த ச்லோகத்தில் சொல்லப்படும்

மஹா வித்யையை) வஸிஷ்டர் முதலான மஹான்கள் மூலமாக லோகத்தில் ப்ரசுரப்படுத்தி ப்ராணி களுக்கு நன்மையைச் செய்தார். இத ஞல் வைதிகமான மஹாவித்யையில் ஐஹிகமான ஸித்திகளும் எதிர்பார்க்காமலே ஏற்படக்கூடும். ஐஹிகமான ஸித்தியை கொடுக்கும் தந்த்ர சாஸ்த்ரங் களின் மூலம் ஆமுஷ்மிகமான பலத்தை அடையமுடி யாது. இவ்விதம் தந்த்ர சாஸ்த்ரங்கள் ஐஹிக ஸித்திக்கு காரணமானதினுல் சூத்ர ஜாதிகளை யும் மூர்த்தாபிஷிக்தர்களையும் (ஸங்கர ஜாதிகளையும்) மாத்ரம்தன் அதிகாரியாக அபேக்ஷிக்குமே யன்னி யில் ப்ராம்மண, க்ஷத்ரிய, வைச்யன் என்ற த்ரைவர்ணி கர்களை அதிகரியாக அபேஷிக்காது. த்ரை வர்ணி கர்களுக்கு வைதிகமான மேற்படி வித்யையில் தான் ஸமய மதத்தை அனுஸரித்த சுபாகம பஞ்சகத்தை அனுஸரித்து ஆராதனம் செய்வதில் அதிகாரம் என் பது ஸித்தமாகிறது.

முன் ச்லோகத்தில் பரமேச்வரன் பராசக்தியி னுடைய நிர்ப்பந்தத்தால் ஸனகர், ஸனந்தர், ஸனத் குமாரர், சுகப்ரம்மம், வஸிஷ்டர் என்ற ஐந்து மஹர் ஷிகள் மூலமாக " சுபாகம பஞ்சகம்" என்ற தேவியி னுடைய சாஸ்த்ரத்தை பூலோகத்தில் ப்ரசுரித்தார் என்று சொல்லப்பட்டது. அந்த தந்த்ரமானது மாயா சம்பரம் முதலான 64 தந்த்ரங்களிலும் சொல் லப்பட்ட ஸமஸ்தமான ஸித்திகளையும் மந்த்ர ஜாபி களுக்கு கொடுக்கும் விஷயத்தில் முக்ய ஸாதனமான தினுல் அந்த தந்த்ரத்தை வேதத்தில் அதிகாரமுள்ள த்ரைவர்ணிகர்கள் அறிந்து உபாஸிக்கவேண்டிய தவ ச்யமானதினுல் தேவி தந்த்ரம் என்ற மேற்படி வித் யையை பகவத்பாதாள் போதிக்கிருர்கள்.

---

## 32. தேவியின் மந்த்ரம்.

शिवश्शक्तिः कामः क्षितिरथ रविश्शीत किरणः
स्मरो हंसश्शक्रस्तदनुच परामारहरयः ।
अमीहृल्लेखाभिः तिसृभिः अवसानेषु घटिताः
भजन्ते वर्णास्ते तवजननि नामावयवताम् ॥ ३२ ॥

𑌶𑌿𑌵𑌶𑍍𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌕𑌾𑌮𑌃 𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌰𑌥 𑌰𑌵𑌿𑌶𑍍𑌶𑍀𑌤 𑌕𑌿𑌰𑌣𑌃
𑌸𑍍𑌮𑌰𑍋 𑌹𑌂𑌸𑌶𑍍𑌶𑌕𑍍𑌰𑌸𑍍𑌤𑌦𑌨𑍁𑌚 𑌪𑌰𑌾𑌮𑌾𑌰𑌹𑌰𑌯𑌃 ।
𑌅𑌮𑍀𑌹𑍃𑌲𑍍𑌲𑍇𑌖𑌾𑌭𑌿𑌃 𑌤𑌿𑌸𑍃𑌭𑌿𑌃 𑌅𑌵𑌸𑌾𑌨𑍇𑌷𑍁 𑌘𑌟𑌿𑌤𑌾𑌃
𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌵𑌰𑍍𑌣𑌾𑌸𑍍𑌤𑍇 𑌤𑌵𑌜𑌨𑌨𑌿 𑌨𑌾𑌮𑌾𑌵𑌯𑌵𑌤𑌾𑌮𑍍
॥ ௩௨ ॥

சிவச்சக்தி: காம: க்ஷிதிரத ரவிச்சீத கிரண:
ஸ்மரோ ஹம்ஸச்சக்ரஸ்ததநுச பராமாரஹரய: ।
அமீஹ்ருல்லேகாபி: திஸ்ருபி: அவஸாநேஷு கடிதா:
பஜந்தே வர்ணாஸ்தே தவஜநநி நாமாவயவதாம் ॥ 32 ॥

हे जननि (𑌹𑍇 𑌜𑌨𑌨𑌿) (ஹே ஜநநி) = ஹே தாயே
शिवः (𑌶𑌿𑌵𑌃) (சிவ:) = ககாரமென்ன
शक्तिः (𑌶𑌕𑍍𑌤𑌿𑌃)(சக்தி:) = ஏகாரமென்ன
कामः (𑌕𑌾𑌮𑌃) (காம:) = ஈகாரமென்ன
क्षितिः (𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌃) (க்ஷிதி:) = லகாரமென்ன
अथ (𑌅𑌥) (அத) = மறுபடியும்
रविः (𑌰𑌵𑌿𑌃) (ரவி:) = ஹகாரமென்ன
शीतकिरणः (𑌶𑍀𑌤𑌕𑌿𑌰𑌣𑌃) (சீதகிரண:) = ஸகாரமென்ன

स्मरः (ஸ்மர:) (ஸ்மர:) = ககாரமென்ன

हंसः (ஹம்ஸ:) (ஹம்ஸ:) = ஹகாரமென்ன

शक्रः (ஶக்ர:) (சக்ர:) = லகாரமென்ன

तदनुच (ததநு ச) (ததநுச) = அதற்கப்பாலும்

परामारहरयः (பராமாரஹரய:) (பராமாரஹரய:) } परा ஸகாரமென்ன
मराः ககாரமென்ன
हरयः லகாரமென்ன

अमीवर्णाः (அமீவர்ணா:) (அமீவர்ணு:) = இந்த அக்ஷரங்கள்

अवसानेषु (அவஸாநேஷு) (அவஸாநேஷு) = முடிவுகளில்

तिसृभिः (திஸ்ருபி:) (திஸ்ருபி:) = மூன்ருன

हल्लेखाभिः (ஹ்ருல்லேகாபி:) (ஹ்ருல்லேகாபி:) = ஹ்ரீம்காரங்களால்

घटितास्सन्तः (கடிதாஸ்ஸந்த:) (கடிதாஸ்ஸந்த:) = சேர்க்கப்பட்டவைகளாகக்கொண்டு

तव (தவ) (தவ) = உன்னுடைய

नामावयवतां (நாமாவயவதாம்) (நமா:வயவதாம்) = மஹாத்ரிபுர ஸுந்தரீ மஹா மந்த்ரத்தில் ப்ரதீகமாகும் தன்மையை

भजन्ते (பஜந்தே) (பஜந்தே) = அடைகின்றதுகள்.

தாத்பர்யம்:—ககாரம், ஏகாரம், ஈகாரம், லகாரம் என்ற நான்கு அக்ஷரங்களும் சேர்ந்து முதல் பாகமாகும். ஹகாரம், ஸகாரம், ககாரம், ஹகாரம், லகாரம்

என்ற ஐந்து அக்ஷரங்களும் சேர்ந்து இரண்டாவது பாகமாகும். ஸகாரம், ககாரம், லகாரம் என்ற மூன்று அக்ஷரங்களும் சேர்ந்து மூன்ருவது பாகமாகும். இந்த மூன்று பாகங்களின் முடிவுகளில் ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரங்களை சேர்த்துக்கொண்டால் பதினைந்து அக்ஷரங்களாக ஆகிவிடுகின்றன. இதை ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ என்ற மஹாவித்யையாக சொல்லுவார்கள் முதல் பாகத்தை அக்னிகண்டம் என்றும், இரண்டாவது பாகத்தை ஸூர்யகண்டமென்றும், மூன்ருவது பாகத்தை சந்த்ரகண்டம் என்றும் அறியவும். ஒரு கண்டம் முடிந்து மற்ருெரு கண்டம் ஆரம்பிக்கு முன் எல்கையை காட்டும் அடையாளமாக ஒவ்வொரு க்ரந்திகள் ஏற்பட்டிருக்கின்றன. அக்னிகண்டம், ஸூர்யகண்டம் இவ்விரண்டிற்கும் நடுவில் எல்கையைக் காட்டும் அடையாளத்தை ருத்ரக்ரந்தி என்று சொல்வார்கள். அந்த ஸ்தானத்தில்தான் ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரம் ஏற்பட்டது. அவ்விதமே ஸூர்யகண்டத்திற்கும் சந்த்ரகண்டத்திற்கும் நடுவில் எல்கையைக் காட்டும் அடையாளத்தை விஷ்ணுக்ரந்தி என்று சொல்வார்கள். ஸோமகண்டத்திற்கும் பிற்பாடு சந்த்ரகலாகண்டம் என்று ஒரு கண்டம் உண்டு. அது நாலாவது கண்டமாகும். புவனேச்வரியினுடைய பீஜாக்ஷரமான ஒரே அக்ஷரம்தான் அந்த கண்டத்தில் சேர்ந்தது. அந்த அக்ஷரத்தை குருமுகமாகத்தான் தெரிந்துகொள்ளவேண்டும். சந்த்ர கண்டத்திற்கும், சந்த்ரகலாகண்டத்திற்கும் எல்கையைக் காட்டும் அடையாளத்தை ப்ரம்மக்ரந்தி என்று சொல்லுவார்கள். அதை ஸூசிப்பிப்பதற்காகவே சந்த்ரகண்டமாகிய மூன்ருவது கண்டத்தின் முடிவிலும் ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரம் ஏற்பட்டது. இவ்விதம் லோகமாதாவான பரதேவதையினுடைய மாத்ருகா மந்த்ரம் என்ற த்ரிபுரஸுந்தரீ மந்த்ரமானது மூன்று கண்டமாக பிரிக்கப்பட்டிருக்கின்றது என்பதை அறியவும். त्रिखण्डो मातृका मन्त्र: सोमसूर्यानलात्मक:

(𑌤𑍍𑌰𑌿𑌖𑌣𑍍𑌡𑍋 𑌮𑌾𑌤𑍃𑌕𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌸𑍋𑌮𑌸𑍂𑌰𑍍𑌯𑌾 𑌨𑌲𑌾𑌤𑍍𑌮𑌕𑌃) (த்ரிகண்டோ மாத்ருகா மந்த்ர: ஸோம ஸூர்யா நலாத்மக:) என்ற சாஸ்த்ரங்கள் அதில் ப்ரமாணமாகும். இந்த சாஸ்த்ரமானது மேற்சொன்ன மஹாமந்த்ரத்தை அவரோஹண க்ரமமாக, சந்த்ரன், ஸூர்யன், அக்னி என்று பிரித்திருக்கிறது. ஆரோஹண க்ரமத்தில் அக்னி, ஸூர்யன், சந்த்ரன் என்று அறியவும்.

சந்த்ரகலா கண்டத்தையோ, ஸத்குருவினுடைய உபதேசமூலமாகத்தான் தெரிந்துகொள்ளவேண்டும் என்ற நிபந்தனையை அனுஸரித்து, शिवः शक्तिः कामः (𑌶𑌿𑌵𑌃 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌕𑌾𑌮𑌃) (சிவ: சக்தி: காம:) என்ற ச்லோகத்தில் அந்த சந்த்ரகலா கண்டமானது ப்ரகாசப் படுத்தப்படவில்லை என்பதை அறியவும்.

त्रिखण्डो मातृकामन्त्रः सोमसूर्या नलात्मकः ॥

𑌤𑍍𑌰𑌿𑌖𑌣𑍍𑌡𑍋 𑌮𑌾𑌤𑍃𑌕𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌸𑍋𑌮𑌸𑍂𑌰𑍍𑌯𑌾 𑌨𑌲𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 ॥

த்ரிகண்டோ மாத்ருகாமந்த்ர: ஸோமஸூர்யா நலாத்மக: ॥

சந்த்ர கண்டம், ஸூர்ய கண்டம், அக்னி கண்டம் என்று மூன்று கண்டமாத்ரம் அவரோஹண க்ரமத்தை அனுஸரித்து சொல்லப்பட்டிருக்கிறது.

क, ए, ई ल, ह्रीं (𑌕, 𑌏, 𑌈, 𑌲, 𑌹𑍍𑌰𑍀𑌂) (க, ஏ, ஈ, ல, ஹ்ரீம்) முதல் கண்டமாகும். அதுதான் அக்னி கண்டமாகும். हसकहलह्रीं (𑌹𑌸𑌕𑌹𑌲𑌹𑍍𑌰𑍀𑌂)(ஹஸகஹலஹ்ரீம்) என்பது இரண்டாவது கண்டமாகும். அதுதான் ஸூர்யகண்டமாகும் सकलह्रीं (𑌸𑌕𑌲𑌹𑍍𑌰𑍀𑌂)(ஸகலஹ்ரீம்) என்பது மூன்ருவது கண்டமாகும். அதுதான் சந்த்ர கண்டமாகும். இவ்விதம் க்ரமமாக अनल सूर्य सोमात्मकं (𑌅𑌨𑌲 𑌸𑍂𑌰𑍍𑌯 𑌸𑍋𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌂) (அநல ஸூர்ய

ஸோமாத்மகம்) என்ற மஹாமந்த்ரத்தை அவரோ
ஹண க்ரமத்தை அனுஸரித்து, सोमसूर्यानलात्मकं (ஸோம
ஸூர்யாநலாத்மகம்) ( ஸோமஸூர்யாநலாத்மகம் )
என்று त्रिखण्डो मातृका मन्त्रः (த்ரிகண்டோ மாத்ருகா மந்த்ர:)
(த்ரிகண்டோ மாத்ருகா மந்த்ர:) என்ற வாக்யத்தால்
சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கண்டத்திற்
கும் முடிவில் புவநேச்வரியினுடைய பீஜாக்ஷரமான
ह्रीं (ஹ்ரீம்) (ஹ்ரீம்) என்ற ஹ்ருல்லேகையை ग्रन्थि
(க்ரந்தி) (க்ரந்தி) ஸ்தானத்தில் குறிப்பிடவேண்டும்
என்று முன்பு சொல்லப்பட்டது. அதை அனுஸ
ரித்து இரண்டு கண்டங்களின் நடுவில் க்ரந்தியின்
ஸ்தானத்தில் புவனேச்வரி பீஜாக்ஷரத்தை உச்சரிக்க
வேணடும் என்று இருக்குமானுல் சந்த்ரகண்டமான
सकलह्रीं (ஸகலஹ்ரீம்)(ஸகலஹ்ரீம்) என்ற கண்டத்திற்
கும் புவனேச்வரி பீஜாக்ஷரத்தை शिवः शक्तिः कामः
(சிவ: சக்தி: காம:) (சிவ: சக்தி: காம:) என்ற ச்லோ
கத்தில் பரமாசார்யாள் குறிப்பிட்டிருக்கிறபடியால்,
அதற்குப் பிறகும் ஒரு கண்டம் இருக்கத்தான் வேண்
டும் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. அதைத்தான்
சந்த்ரகலாகண்டம் என்று சொல்லப்படுகிறது. அத
னுடைய ஸ்வரூபத்தை பஹிரங்கமாக உச்சரிக்கவோ
எழுதவோ கூடாது. आचार्यवान् पुरुषो वेद (ஆசார்யவான்
புருஷோ வேத) (ஆசார்யவாங் புருஷோ வேத)
என்ற ச்ருதியை அனுஸரித்து, மஹா குருவை "तद्विद्धि
प्रणिपातेन परिप्रश्नेन सेवया'' (தத்வித்தி ப்ரணிபாதேந பரி
ப்ரச்நேந ஸேவயா) (தத்வித்தி ப்ரணிபாதேந பரி
ப்ரச்நேந ஸேவயா) என்றபடி ப்ரணிபாதம், ப்ரச்நம்,
ஸேவை, இவைகளின் மூலம் நன்ருக உபாஸித்து
அவர்களுடைய உபதேச மூலமாகத்தான் அறிந்து
கொள்ளவேண்டும் என்பதே ரொம்பவும் கோப்ய

மான (ரஹஸ்யமான) ஸம்ப்ரதாயமாகும். ஸ்ரீவித்யா ரஹஸ்யமாயும் ஆகும். त्रिखण्डो मातृका मन्त्रः (த்ரிகண்டோ மாத்ருகா மந்த்ர:) (த்ரிகண்டோ மாத்ருகா மந்த்ர:)என்ற வாக்யத்தில் மூன்று கண்டமாக மாத்ருகா மந்த்ரத்தைப் பிரித்திருப்பதினுல், ஞான சக்தி, இச்சா சக்தி, க்ரியா சக்தி என்ற மூன்றுவிதமான பராசக்தி ஸ்வரூபமே அந்த மஹாமந்த்ரமாகும் என்பதும் வெளியாகிறது. அத்துடன் ஜாக்ரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி என்ற மூன்று விதமான அவஸ்தைகளையும் அந்த மூன்றுவிதமான அவஸ்தைகளுக்கு அபிமானிகளான விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்ற மூன்றுவிதமான த்வம் பதார்த்தங்களும், அவ்விதமே அந்த மூன்றுவித அவஸ்தைகளுக்கும் காரணமான ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும், மாத்ருகா மஹாமந்த்ர ஸ்வரூபத்தில் அடங்கிவிட்டன. த்ரிகுணுத்மகம், அவஸ்தா த்ரிதயாத்மகம், த்வம் பதார்த்த ஸ்வரூபம். சக்தி த்ரயாத்மகம், அக்னி, ஸூர்ய சந்த்ராத்மகம் என்ற ஒரு மஹத்வம் அந்த மஹாமந்த்ரத்தில் அடங்கியிருக்கிறது. அதைப் போலவே अकार,उकार, मकार (அகாரம், உகாரம், மகாரம்) (அகாரம், உகாரம், மகாரம்) என்ற மூன்று வர்ணுத்மகமான सवर्ण प्रणव (ஸவர்ண ப்ரணவ) (ஸவர்ண ப்ரணவ) ரூபமாகவும் அந்த மாத்ருகா மந்த்ரத்தை வித்வான்கள் அறியவும்.

இந்த மஹாமந்த்ரத்தை மூன்று கண்டங்களாகப் பிரித்து, அந்த மூன்று கண்டங்களையும் மூன்று விதமான அவஸ்தைகளாகச் சொன்னதிலிருந்தே நாலாவது கண்டமானது நாலாவதான துரீயமான அவஸ்தையென்றே ஏற்படுகிறது. துரீயமான நிலை அதிகோப்யமானதுபோல், நாலாவது கண்டமும் அதி கோப்யமாகவே இருந்துவரவேண்டும் என்பதே பகவத்பாதாளுடைய அபிப்ராயமாக ஆகும். அதனு

லேயே நாலாவது கண்டத்தை இந்த மஹாமந்த்ரத்தில் ப்ரகாசப்படுத்தவில்லை. நாலாவது அவஸ்தையான துரீய நிலையில் அனுபவகோசரமாகும் வஸ்துவோ தத்பதத்தின் லக்ஷ்யார்த்தமாகிய சுத்த பரப்ருஹ்மமேயாகும். மூன்றுகண்ட ரூபமான மஹாமந்த்ரத்திலோ மூன்று அவஸ்தைகளிலும் அனுபவகோசரமான விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்று உபாதி பேதத்தால் கல்பிக்கப்பட்ட பேதத்தோடு கூடின த்வம்பதத்தின் லக்ஷ்யார்த்தமாகிற கூடஸ்த சைதன்யமேயாகும். நாலாவது கண்டத்தோடு இந்த மூன்று கண்டத்தையும் சேர்த்து அனுஸந்தானம் செய்தால் மஹாவாக்ய அர்த்த அனுஸந்தானத்தின் பலத்தை அடையலாம். அதனால் ஜீவப்ருஹ்ம ஐக்யம் என்ற பரமதத்துவத்தை ப்ரகாசப்படுத்துவதே இந்த மஹாமந்த்ரத்தின் தாத்பர்யமாகும்.

शिव: शक्ति: काम: (ശിവഃ ശക്തിഃ കാമഃ) (சிவ: சக்தி: காம:) என்ற ச்லோகத்தில் சிவ: சக்தி: என்றது முதலான பதங்களால் ककार, एकार (കകാരം, ഏകാരം) (ககாரம், ஏகாரம்) என்றது முதலான மஹாமந்த்ரத்திலுள்ள வர்ணங்கள்தான் என்று அர்த்தம் செய்தோம். அதில் என்ன ப்ரமாணம் என்று விசாரித்தாலோ, சாஸ்த்ரந்தான் ப்ரமாணமாகும். சாஸ்த்ரத்தில் லக்ஷித லக்ஷணை என்று சப்தார்த்த நிர்ணயத்தில் ஒரு உபாயமானது சொல்லப்பட்டிருக்கிறது. द्विरेफ (ദ്വിരേഫം) (த்விரேபம்) என்ற ஒரு பதம் இருக்கிறது. அதாவது அந்த பதத்தில் இரண்டு ரகாரம் இருக்கின்றன. அந்த பதத்திற்கு மேலாக தோன்றுகிற பொருளோ (அர்த்தமோ) இரண்டு ரகாரம் என்று தானாகும். லக்ஷணையாகவோ அந்த பதத்திற்கு ரர, ரர, ரர என்று ஜங்காரம் செய்து சப்திக்கின்ற மதுகரம் என்று சொல்லப்படும் வண்டு என்று அர்த்தமாகும்.

சாங்தோக்ய உபநிஷத்தில் असौ वा आदित्यो देवमधु(𑌅𑌸𑍌 𑌵𑌾 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵𑌮𑌧𑍁) (அஸௌ வா ஆதித்யோ தேவமது) என்ற மதுவித்யா ப்ரகரணத்தில் ஆதித்ய மண்டலத்தைதேவமது என்று தேவாள் பூஜிக்கக்கூடிய தேனுக சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ப்ரகரணத்தில் வேத மந்த்ரங்களை த்விரேபம் என்ற சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த இடத்தில் द्विरेफ् (𑌦𑍍𑌵𑌿𑌰𑍇𑌫𑌂) (த்விரேபம்) என்ற பதத்திற்கு லக்ஷணை யாக புஷ்பங்களினின்றும் தேனை அபஹரிக்கும் வண்டு என்பது லக்ஷணையாகக் குறிக்கப்படும் அர்த்த மாகும். அதாவது द्विरेफ् (𑌦𑍍𑌵𑌿𑌰𑍇𑌫𑌂) (த்விரேபம்) என்ற பதத்திற்கு லக்ஷிதமான பொருள் மதுகர மாகும். மது வித்யையிலோ வேதமந்த்ரங்கள் கர் மாக்களாகிற புஷ்பங்களிலிருந்தும் அபூர்வம் என்ற ரஸத்தை க்ரஹித்து ஸமஷ்டியாக த்யுலோகத்திற்கும் பூலோகத்திற்கும் நடுவில் குறுக்காக வளர்ந்திருக்கும் மூங்கில்போல் பாஸித்துவரும் ஆகாசத்தில் மேற் சொன்ன வேதமந்த்ரங்களாகிற த்விரேபம் என்ற வண்டுகளால் ஸ்தாபித்து ரக்ஷிக்கப்பட்டுவரும் தேனுடைதான் ப்ரத்யக்ஷமாக பாஸித்துவரும் ஸூர்யமண்டலம் என்று வர்ணித்துவரும் ப்ரகரணத்திலே, வேத மந்த்ரங்களை த்விரேபம் என்ற பதத்தின் அர்த்தமாக உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டுமானுல் த்விரேபம் என்ற பதத்திற்கு வண்டுகள் என்பதே லக்ஷிதமான அர்த்தம். அந்த வண்டுகள் புஷ்பத்திலிருந்தும் ரஸத்தை ஸ்வீகரித்து தேனுடை செய்வது போல், வேதமந்த்ரங்களும் கர்மகுஸுமங்களிலிருந்து அபூர்வ ரஸத்தை ஸ்வீகரித்து ஸூர்யமண்டலமாகிய தேனுடையை உண்டுபண்ணுகிறது என்பதில் வண்டுகளுடைய ஸாத்ருச்யத்தை வேதமந்திரங்களுக்கு ஸம்பாதித்து த்விரேபத்தினுடைய லக்ஷிதார்த்தமான வண்டுகளுக்கு ஸத்ருசமான வேதமந்த்ரத்தில் த்விரேப பதத்திற்கு கல்பிக்கப்படுகிற லக்ஷணையானது

லக்ஷித லக்ஷணையென்று சொல்லப்படும். லக்ஷித லக்ஷணை என்பதற்கு இதுவே உதாஹரணமாகும். அதுபோல் शिवः शक्तिः (ശിവഃ ശക്തിഃ) (சிவ: சக்தி:) என்ற பதங்களை லக்ஷித லக்ஷணையை அனுஸரித்து, வர்ண பரமாக (அக்ஷரபரமாக) அர்த்தத்தை தெரிந்து கொள்ளவேண்டும்.

த்ரிபுரஸுந்தரி மஹாமந்த்ரத்திலோ, பதினாறு அக்ஷரங்கள் அடங்கியிருக்கின்றன. அந்த பதினாறு அக்ஷரங்களும் பதினாறு விதமான நித்யதேவதைகளாக ஆகிறார்கள். அதில் பதினாருவது அக்ஷரமோ சந்த்ரகலாரூபமாக ஆனதினால், सादा परा (സാദാ പരാ) (ஸாதா பரா) என்ற கலையாகச் சொல்லப்படும். அந்த கலையானது केवल चिदेकरस परब्रह्म रूपं (കേവല ചിദേകരസ പരബ്രഹ്മ രൂപം) (கேவல சிதேகரஸ பரப்ரஹ்ம ரூபம்) ஆகவே சொல்லப்படுகிறது. அந்த பதினாருவதான அக்ஷரரூபமான கலைக்கு மற்ற பதினைந்து அக்ஷரரூபமான நித்யதேவதைகள் அங்கங்களாகச் சொல்லப்படுகிறார்கள்.

அந்த பதினாருவது அக்ஷரரூபிணியான கலையோ, பதினாறு தளங்களோடு கூடின விசுத்தி சக்ரம் என்ற ஸ்தானத்தில் சாயா ரூபமாக (நிழல் ரூபமாக) விளங்கிவருகிறது. இதனால் சிவ: சக்தி: என்ற பதங்களுக்குள் சக்தி: என்ற பதத்திற்கு ஸாக்ஷாத் பரா சக்தியை போதிக்கும் சக்தி இருந்தாலும், அந்த பரா சக்தியை ப்ரதிபாதிக்கும் பதினாருவது சந்த்ரகலா கண்டமென்ற பீஜாக்ஷரத்தில் லக்ஷணையைக் கல்பித்துக்கொண்டு, அந்த அக்ஷரத்திற்கு மற்ற பதினைந்து நித்யதேவதைகளான அங்கதேவதைகளை ப்ரதிபாதிக்கும் அக்ஷரங்களில் அங்காங்கி பாவ ஸம்பந்தத்தை முன்னிட்டு லக்ஷணையைக் கல்பித்துக்கொண்டு அந்தந்த பதங்களால் மந்த்ர வர்ணங்களையும் குறிப்பிட்டுக்கொள்ளவேண்டும்.

அதாவது, மாத்ருகா வர்ணங்களுக்குள் எந்த வர்ணமானுலும் அந்த வர்ணம் பராசக்தியையே போதிக்குமானதினுல் மற்ற வர்ணங்களிலும் தேவதையைச் சொல்லும் சப்தங்களுக்கே அக்ஷரங்களின் லக்ஷணையைக் கல்பித்துக்கொண்டு, அந்தந்த தேவதைகளைச் சொல்லுகிற அக்ஷரங்கள் அவைகள் என்று தெரிந்துகொள்ளவேண்டியது.

இந்த நாலாவது கண்டமென்ற சந்த்ரகலையென்ற பீஜாக்ஷரமோ, ஸத்சிஷ்யனுயும் குருபக்தனுயும் உள்ள உத்தமாதிகாரிக்குத்தான் உபதேசிக்கவேண்டிய தத்வமாகும். ஆனுல் வ்யாக்யானங்களிலும் அந்த சந்த்ரகலையை ப்ரகாசப்படுத்தாதபோனுல் குருக்கள்தான் எப்படி தெரிந்துகொள்ளமுடியும்? அவர்கள்தான் மற்றவர்களுக்கு எப்படி உபதேசம் செய்யமுடியும் என்று விசாரிக்கும் பக்ஷத்தில், ரொம்பவும் கோப்யம் என்று வைத்துக்கொண்டிருந்தால் அந்த தத்வம் ஒருவருக்கும் உபாதேயமாகவே ஆய் விடாமல் போய்விடுமோ என்ற பயத்தால் பராம்பிகையினுடைய அனுக்ரஹத்தை முன்னிட்டுக் கொண்டு அந்த சந்த்ரகலையையும் ப்ரகாசப்படுத்துகிறோம். இதிலிருந்து அறிந்துகொண்டவர்களானுல் அவர்கள் புண்யவான்களே. புராதனுளான ஸ்ரீவித்யா உபாஸகாள் அவர்களை அங்கீகாரம் செய்தே தீருவார்கள். துஷ்க்ருதம் செய்த பாபிகளானுல் நாம் ப்ரகாசப்படுத்தினுலும் அதை அறிந்துகொள்ள அவர்களுக்கு முடியாதுதான். ஆகையால் அதை ப்ரகாசப்படுத்தவேண்டியதுதான்.

அதாவது அந்த கலையோ, सकार रेफ, ईकार बिंदु (സകാര രെഫ, ഈംകാര ബിംദു) (சகார ரேப, ஈகார பிந்து) ரூபமே. இந்த அக்ஷரத்தைச் சேர்த்தால் शिव: शक्ति: (ശിവഃ ശക്തിഃ) (சிவ: சக்தி) என்று சொல்லப்பட்ட ச்லோகத்தால் ஸ்ரீவித்யா ஷோடசாக்ஷரீ என்ற

மஹாமந்த்ரமானது ப்ரகாசப்படுத்தப்பட்டதாக ஆகிறது. நான்காவது கலையாகிய மேற்சொன்ன பீஜாக்ஷரம் இல்லாதபோனால் शिवः शक्तिः (ஶிவஃ ஶக்திஃ) (சிவ: சக்தி:) என்ற ச்லோகத்தால் பஞ்சதசீ என்ற மஹாமந்த்ரம் ப்ரகாசப்படுத்தப்பட்டதாக ஆகிறது. இந்த மஹாமந்த்ரம் பதினாறு அக்ஷரங்கள் அடங்கியதானாலும், பதினாறு அக்ஷரங்களும் பதினாறு விதமான சக்திகளானதினாலும் சுக்லபக்ஷ ப்ரதமைமுதல் பௌர்ணமி முடிய ஏற்பட்ட பதினைந்து திதி ரூபமாகவும் ஆகிறபடியாலும், சந்த்ரகலைகள் ஸ்வரூபமாக ஆகி, சந்த்ரகலா சாஸ்த்ரத்தில் ப்ரதிபாதிக்கப்பட்ட தேவதைகளாக ஆகிறார்கள். ஜோதிஸ் சாஸ்த்ரங்களில் ப்ரதமை முதல், ப்ரதிபாதிக்கப்படுகிற கலைகள் ஒவ்வொன்றாக வ்ருத்தியாகிக்கொண்டு வருகிற க்ரமத்தை அனுஸரித்து ப்ரக்ருதத்திலும் திதி க்ரமமாக ஒவ்வொரு தினத்திலும் பௌர்ணமி வரையிலும் கலை வ்ருத்தி ஆகி, பௌர்ணமி தினத்தில் ஸம்பூர்ண கலையுடன் அம்பாள் பாஸித்துவருகிறாள் என்பது சந்த்ர கலா வித்யையின் ரஹஸ்யமாகும்.

க்ருஷ்ண பக்ஷத்தில் ஸூர்யமண்டலத்திலும், சுக்லபக்ஷத்தில் சந்த்ரமண்டலத்திலும் தேவியானவள் மேற்சொன்ன க்ரமமாக பாஸித்து வருகிறாள். ஸூர்யனுக்கும் சந்த்ரனுக்கும் எந்த கலையில் பிரிவு ஏற்படுகிறதோ அன்று பௌர்ணமி என்றும், எந்த கலையில் ஸூர்யனுக்கும் சந்த்ரனுக்கும் அத்யந்தம் சேர்க்கை ஏற்படுகிறதோ அன்று அமாவாஸ்யை என்றும் ஜோதிஸ் சாஸ்த்ர ஸித்தாந்தமானதினால், அதை அனுஸரித்து பௌர்ணமி தினத்தில் சந்த்ரனுக்கும் ஸூர்யனுக்கும் வ்யவதானம் (பிரிவு) ஏற்பட்ட காரணத்தால், அந்த பௌர்ணமி தினத்தன்று பதினைந்து கலைகளாகவும், அமாவாஸ்யை தினத்தில் ஸூர்யனுக்கும் சந்த்ரனுக்கும் ஸம்பந்தம் ஏற்பட்டிருப்பதனால் பிரதமை முதல் சதுர்தசி முடிய பதி

ஞன்கு கலைகளாகவும், சந்த்ரனும் ஸூர்யனும் இரு கலைகளாகவும், ஆக பதினாறு கலைகளாகச் சொல்லப் படும். இதனால் பஞ்சதசீ என்ற வித்யையை உப தேசம் செய்துகொண்டவர்களுக்கு அந்த வித்யை ஸித்திப்பதற்கு சுக்லபக்ஷம் விசேஷம் என்றும், ஷோடசீ என்ற மஹாவித்யை உபதேசம் செய்து கொண்டவர்களுக்கு அந்த வித்யையை ஸித்தி செய்துகொள்ள க்ருஷ்ணபக்ஷம் விசேஷம் என்றும் ஸித்தமாகிறது. க்ருஷ்ணபக்ஷத்தில் ஸூர்யமண்ட லத்தில் தேவி பாஸித்து வருவதினால் உபாஸகர்கள் பகலில் ஆராதனம் செய்யவேண்டும் என்றும், சுக்ல பக்ஷத்தில் சந்த்ரமண்டலத்தில் தேவி பாஸித்து வரு கிறதினால் இரவில் ஆராதனம் செய்யவேண்டுமென் றும் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது.

இந்த शिवः शक्तिः कामः (𑌶𑌿𑌵𑌃 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌕𑌾𑌮𑌃) (சிவ: சக்தி: காம:) என்ற ச்லோகத்தால் பகவத்பாதாள் ப்ரகாசப்படுத்தியிருக்கும் ஸ்ரீவித்யை ஒன்றே ஸகல புருஷார்த்தங்களையும் உபாஸகர்களுக்கு அளிப்பதில் வல்லமையுடையது. ஸர்வலோக ரக்ஷகனை மஹா விஷ்ணுவும் இந்த ச்லோகத்தில் ப்ரகாசப்படுத்திய வித்யையினாலேதான், மன்மதனை எரித்த பரமேச் வரனையும், மன்மதனுக்கு ஆளாகச் செய்துவிப்பதில் ஸாமர்த்யமுள்ளவராக ஆனார். இதை हरिस्त्वामाराध्य (𑌹𑌰𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯) (ஹரிஸ்த்வாமாராத்ய) என்ற ச்லோகத்தில் கவனித்துக்கொள்ளவேண்டும்.

தவிரவும், न गायत्र्याः परं जप्यं (𑌨 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌃 𑌪𑌰𑌂 𑌜𑌪𑍍𑌯𑌂) (ந காயத்ரயா: பரம் ஜப்யம்) என்ற சாஸ்த் ரத்தை அனுஸரித்து காயத்ரீ மந்த்ரத்திற்கு மேலான மந்த்ரமே இல்லை என்பது ஸித்தமாகும். அந்த காயத்ரீ மந்த்ரமும் தற்காலத்தில் மூன்று பாதங்க ளோடு கூடினதாகத்தான் இருந்துவருகிறது. அந்த

மஹா மந்த்ரத்தின் நான்காவது பாதமானது ரொம்பவும் கோப்யமாகவே இருந்துவருகிறதென்பதும், அந்த மஹா மந்த்ரத்தை ஜபம் செய்துவரும் புண்யவான்களுடைய கோஷ்டியில் ப்ரஸித்தமானது. ஸம்பூர்ண காயத்ரீயை ஜபம் செய்யும் பெரியோர்களைப் பார்ப்பதே அரிதாகிவிட்டது. அந்த ஸம்பூர்ணமான காயத்ரீயை மூன்று தடவை ஜபம் செய்வதும், ஒரு தடவை ஸ்ரீவித்யை என்ற பஞ்சதசீயை ஜபம் செய்வதும் ஸமானமாகவே ஆகிறது. அக்காரணத்தாலும் ஸ்ரீவித்யை மஹாமந்த்ரம் உயர்ந்ததே என்பதை யாரும் ஒப்புக்கொள்ளக்கூடும். ஸ்ரீவித்யை என்ற பஞ்சதசீயோ முன்பு त्रिखण्डो मातृका मन्त्रः (த்ரிவண்டோ மாதரகா மந்த்ர:) (த்ரிகண்டோ மாத்ருகா மந்த்ர:) என்ற சாஸ்த்ரத்தை அநுஸரித்து மூன்று கண்டமாக பிரிக்கப்பட்டிருக்கிறது. முதலாவது கண்டம் அக்னி கண்டமாகவும், இரண்டாவது ஸூர்யகண்டமாகவும், மூன்றுவது சந்த்ரகண்டமாகவும் முன்பு சொன்னோம்.

அந்த மஹாமந்த்ரத்தில் ஒவ்வொரு கண்டத்திலும், ஸம்பூர்ண காயத்ரீ மஹாமந்த்ரத்திற்கு அந்தர்பாவத்தை மஹான்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். அதில் தேவி ஸம்பந்தமான உபநிஷத்துக்களே ப்ரமாணங்களாக ஆகும். அதின் ப்ரகாரத்தை அறியவும்.

அதாவது, ओं तत्सदिति निर्देशः, ब्रह्मणः त्रिविदः स्मृतः (ஓம் தத்ஸதிதி நிர்தேஶ: ப்ரஹ்மண: த்ரிவித: ஸ்ம்ருத:) (ஓம் தத்ஸதிதி நிர்தேச:, ப்ரஹ்மண: த்ரிவித: ஸ்ம்ருத:) என்ற ஸ்ம்ருதியை அனுஸரித்தும், तदिति ब्रह्म शाश्वतं (ததிதி ப்ரஹ்ம ஶாஶ்வதம்) (ததிதி ப்ரஹ்ம சாச்வதம்) என்ற ச்ருதியை அனுஸரித்தும் तत् (தத்) (தத்) என்ற பதமானது பரப்ரும்மத்தை போதிக்கின்றது என்பதை அறிந்துகொள்ளவும். காயத்ரீ மஹா மந்த்ரத்திலோ तत् (தத்) (தத்) என்ற பதம் முதலாவதான

பதமாகும். மேற்சொன்ன ச்ருதி, ஸ்ம்ருதிகளை அனு ஸரித்து, காயத்ரீ மஹா மந்த்ரத்திலுள்ள तत् (தக) (தத்) என்ற முதல் பதத்தால் பரப்ருஹ்மத்தையே க்ர ஹித்துக்கொள்ள வேண்டுமென்பது ஸித்தமாகிற தல்லவா? ஸ்ரீவித்யா பஞ்சதசீ என்ற மஹாமந்த்ரத் திலோ முதல் அக்ஷரம் ககாரமே. कं ब्रह्म (கං ஸ்ஹூ) (கம் ப்ரஹ்ம) என்ற ச்ருதியை அனுஸரித்தும் कामयते कामी, जायते, स एषनिरंजनः। कामः ककारं आप्नोति। (காமயதெ காமீ, ஜாயதெ, ஸ ஷஷநிரஂஜநஃ। காமஃ ககாரஂ ஆப்நோதி) (காமயதே காமீ, ஜாயதே, ஸ ஏஷநிரஞ் ஜந: காம: ககாரம் ஆப்னோதி) என்ற ச்ருதியை அனுஸரித்தும், ககாரத்திற்கு ஸர்வ ஜகத்தை ஸ்ருஷ் டிக்க இச்சையுள்ள காமேச்வரன் என்ற பரப்ரும் மமே அர்த்தம் என்று தெரிகிறது. ஸ்ரீவித்யையிலும் முதல் அக்ஷரத்தால் பர்ப்ரும்மமானது ப்ரதிபாதிக்கப் படுகிறது. காயத்ரீயிலும் முதல் பதத்தால் பரப்ரும் மமே ப்ரதிபாதிக்கப்படுகிறது. அதனால் वर्णएवतु भगवान् उपवर्षः (வணாவஹவது ஹமவாநு உவவஷஃ) (வர்ணஏவது பகவாந் உபவர்ஷ:) என்ற சாஸ்த் ரத்தை அனுஸரித்து, வர்ணம் என்ற அக்ஷரத்திற்கு வேறாக பதம் என்பது இல்லாததினால், ஸ்ரீவித்யா பஞ்சதசியிலுள்ள முதல் எழுத்தான ககாரத்தில் காயத்ரீயிலுள்ள முதல் பதமான तत् (தக) (தத்) என்பதற்கு அந்தர்பாவத்தை வித்வான்கள் அறிந்து கொள்ளவும்.

அவ்விதமே, காயத்ரீ மஹா மந்த்ரத்தில் सवितुः (ஸவிதுஃ) (ஸவிது:) என்ற பதம் இரண்டாவது பதமாகும். அந்த பதத்திற்கு ஜகத்தினுடைய ப்ரஸ வம், (உத்பத்தி) அதற்கு பரம காரணமான யோநி என்பதையும் அறிந்துகொள்ளவும். महद्योनिः (மஹதெ்யாநிஃ) (மஹத்யோநி:) என்ற சாஸ்த்ர ரீதியாக ஜகத்

காரண பூதையான யோகமாயை என்ற அர்த்தம் வெளியாகிறது. वरेण्यं (வரேண்யம்) (வரேண்யம்) என்ற பதத்திற்கு ச்ரேஷ்டம் என்று அர்த்தத்தை அறியவும். இதனால் ஸர்வ ஜகத்திற்கும் மூலகாரண மாயும், அக்காரணத்தால் ச்ரேஷ்டமாயுமுள்ள சக்தி யானது सवितु: वरेण्यं (ஸவிதுஃ வரேண்யம்) (ஸவிது: வரேண்யம்) என்ற பதங்களால் போதிக்கப்படு கிறது. तत् (தத்) (தத்) என்ற பதத்திற்கோ முன்பே ப்ருஹ்மம் என்று பொருள் வர்ணித்தோம். सवितु: वरेण्यं (ஸவிதுஃ வரேண்யம்) (ஸவிது: வரேண்யம்) என்ற இரண்டு பதங்களாலேயோ ஜகத்காரண மான ச்ரேஷ்டமான சக்தி என்பதை ப்ரகாசப் படுத்தினோம். மூன்று பதங்களாலும் சக்த்யபின்ன மான சிவன் என்பது காயத்ரீ மஹாமந்த்ரத்தில் வெளியாகிறது. ஸ்ரீவித்யா பஞ்சதசியிலோ இரண் டாவது அக்ஷரம் ए (ஏ) (ஏ) என்பது. அந்த ஏ என்பது ஸ்ரீவித்யா ஸித்தாந்த ப்ரகாரம் த்ரிகோண ரூபிணியான காமேச்வரீ என்ற சக்தி என்றே பொரு ளாகும். காயத்ரீ மந்த்ரத்திலுள்ள सवितु: वरेण्यं (ஸவிதுஃ வரேண்யம் (ஸவிது: வரேண்யம்) என்ற இரண்டு பதங்களால் எந்த சக்தி சொல்லப்படு கிறதோ அதே சக்தியே ஸ்ரீவித்யா மந்த்ரத்திலுள்ள இரண்டாவது அக்ஷரமான ए (ஏ) (ஏ) என்ற வர் ணத்தால் போதிக்கப்படுகிறது. அதனால் காயத்ரீ மந்த்ரத்திலுள்ள सवितु: वरेण्यं (ஸவிதுஃ வரேண்யம்) (ஸவிது: வரேண்யம்) என்ற இரண்டு பதங்களுக்கு ஸ்ரீவித்யா மந்த்ரத்திலுள்ள ए (ஏ) (ஏ) என்ற அக்ஷ ரத்தில் அந்தர்பாவத்தைத் தெரிந்துகொள்ளவேண் டும். காயத்ரீ மந்த்ரத்தில் மூன்று பதங்களால் போதிக்கப்பட்ட சக்த்யபின்னமான சிவத்தை ஸ்ரீவித்யா மந்த்ரத்தின் இரண்டு அக்ஷரங்களாலேயே போதிக்கிறார்கள்.

காயத்ரீ மந்த்ரத்தில் நான்காவது பதம் भर्गः (𑌭𑌰𑍍𑌗𑌃) (பர்க:) என்பது. ஶ்ரீவித்யா மந்த்ரத்தில் மூன்றுவது எழுத்தான ई (𑌈𑌂) (ஈ) என்பது அகாராதி ஸ்வரம் என்று சொல்லப்படுகிற பதினாறு எழுத்துக்களுக்குள் நான்காவது அக்ஷரமாகும். भर्जदाहे (𑌭𑌰𑍍𑌜𑌦𑌾𑌹𑍇) (பர்ஜதாஹே) என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து, ஜன்ம மரணரூபமான ஸம்ஸாரம் என்ற பவபந்தத்திலிருந்தும் உபாஸகனை விடுதலை செய்துவைக்கும் மஹிமை உள்ளது என்ற பொருள் வெளியாகிறது. இதனால் காயத்ரீ மஹா மந்த்ரத்தில் நான்கு பதங்களால் संसारबन्ध विमोचक: सर्वजगत्कारण श्रेष्ठ शक्त्यभिन्नः परमेश्वरः (𑌸𑌂𑌸𑌾𑌰𑌬𑌨𑍍𑌧 𑌵𑌿𑌮𑍋𑌚𑌕𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑌗𑌤𑍍𑌕𑌾𑌰𑌣 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌭𑌿𑌨𑍍𑌨𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃) (ஸம்ஸார பந்த விமோசக: ஸர்வஜகத்காரண ச்ரேஷ்ட சக்த்ய பிந்ந: பரமேச்வர:) என்ற தாத்பர்யம் வெளியாகிறது. ஶ்ரீவித்யா மந்த்ரத்திலும் ஸ்வரத்தில் நான்காவது எழுத்தானலும், மந்த்ரத்தில் மூன்றுவது எழுத்தான ई (𑌈𑌂) (ஈ) என்பது ஸம்ஸார விச்சேதத்தை பக்தனுக்கு செய்துவைக்கும் பராசக்தியினுடைய தத்வத்தை போதிக்கிறபடியால் भर्गः (𑌭𑌰𑍍𑌗𑌃) (பர்க:) என்ற பதம் ई (𑌈𑌂) (ஈ) என்ற அக்ஷரத்தில் அந்தர்பாவத்தை அடைந்துவிட்டது. देवो मध्यवर्ती (𑌦𑍇𑌵𑍋 𑌮𑌧𑍍𑌯𑌵𑌰𑍍𑌤𑍀) (தேவோ மத்யவர்தீ) என்ற ச்ருதியை அனுஸரித்து ஸர்வாந்தர்யாமீ என்று देवस्य (𑌦𑍇𑌵𑌸𑍍𑌯) (தேவஸ்ய) என்ற பதத்திற்கு அர்த்தமாகும். ஶ்ரீவித்யா மந்த்ரத்தில் ई (𑌈𑌂) (ஈ) என்ற அக்ஷரமானது தஹர ஆகாச ரூபிணியான பராசக்தியைச் சொல்லும் பீஜாக்ஷரமானதினால், देवस्य (𑌦𑍇𑌵𑌸𑍍𑌯) (தேவஸ்ய) என்ற பதத்திற்கும் ई (𑌈𑌂) (ஈ) என்ற பதத்தில் அந்தர்பாவத்தை அறியவும்.

तत् (தத்) (தத்) என்ற பதத்திற்கு, क (க) (க) என்ற எழுத்திலும், सवितु: वरेण्यं (ஸவிது: வரேண்யம்) (ஸவிது: வரேண்யம்) என்ற இரண்டு பதங்களுக்கு ए (ஏ) (ஏ) என்ற எழுத்திலும். भर्ग: देवस्य (பர்க: தேவஸ்ய) (பர்க: தேவஸ்ய) என்ற இரண்டு பதங்களுக்கு ई (ஈ) (ஈ) என்ற பதத்திலும் அந்தர் பாவத்தை அறியவும்.

धीमहि (தீமஹி) (தீமஹி) என்று காயத்ரீயில் ஒரு பதம் இருக்கிறது. धी, महि (தீ, மஹி) (தீ, மஹி) என்று இரண்டு பதமாக பிரித்துக்கொள்ளவேண்டும். धी: धारक: (தீ: தாரக:) (தீ: தாரக:) என்ற ச்ருதியை அனுஸரித்தும், धत्ते इति धी: (தத்தே இதி தீ:) (தத்தே இதி தீ:) என்ற ஸமாஸத்தை அனுஸரித்தும், ஸர்வ ஜகத்தையும் தரிக்கும் பொருள் என்ற தாத்பர்யம் வெளியாகிறது. ஸர்வ ஜகத்தையும் தரிக்கிற மாதா வாகிய பராசக்தியே துரீயமான ई (ஈ) (ஈ) என்ற பீஜாக்ஷரத்தால் போதிக்கிறபடியால், धी (தீ) (தீ) என்ற பதத்திற்கும் ई (ஈ) (ஈ) என்ற அக்ஷரத்திலேயே அந்தர்பாவத்தை அறிந்துகொள்ளவும்.

महि (மஹி) (மஹி) என்ற காயத்ரீயிலுள்ள பதத்திற்கு ப்ருத்வீ (பூமி) என்று அர்த்தம். ப்ருத்வீ என்பதினால் மற்ற ஜலம் முதலான பூதங்களையும் உபலக்ஷணமாக க்ரஹித்துக்கொள்ளவேண்டும். அதனால் ஐந்து பூதங்களுடைய பரிணாமமாகிய ஸகல ஜகத்தாக பாஸித்துவரும் பொருள் என்பது வெளியாகிறது.

அந்த தாத்பர்யத்தை ஸ்ரீவித்யா மந்த்ரத்தில் நான்காவது எழுத்தான ப்ருத்வீ பீஜமான ल (ல) (ல) காரத்தால் அறிந்துகொள்ளவேண்டும். இதனால் காயத்ரீ பதமான महि (மஹி) (மஹி) என்பதற்கு ஸ்ரீவித்யையின் நான்காவது அக்ஷரமான ल (ல) (ல) காரத்தில் அந்தர்பாவம் ஆகிறது.

धियोयोनः प्रचोदयात् (𑌧𑌿𑌯𑍋𑌯𑍋𑌨𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍) (தியோயோந: ப்ரசோதயாத்) என்ற காயத்ரீயிலுள்ள பதங்களுக்கு ப்ராணிகளுடைய புத்தியை நிர்விசேஷ மான ப்ரும்மதத்வம் என்ற விஷயத்தில் எந்த பர மாத்மா ஏவுகிறுரோ, அதாவது நிர்விகல்பமான ப்ரும்ம விஷயக ஞானத்திற்குக் காரணமான பொருள்; மோக்ஷம் என்ற பரமபுருஷார்த்தத்திற்கு ஸாதனமான ஞானத்தைக் கொடுக்கும் பரமபுருஷன் என்றே அதன் பொருளாகும். காயத்ரீயினுடைய நான்கா வது பாதமும் परोरजसे सावदों (𑌪𑌰𑍋𑌰𑌜𑌸𑍇 𑌸𑌾𑌵𑌦𑍋𑌮𑍍) (பரோரஜஸே ஸாவதோம்) என்பதே. ரஜோகுணம முதலான மூன்றுவிதமான குணங்களுக்கும் அதீத மான பரம்பொருள் ப்ரணஸ்வரூபமே. அந்த பரம் பொருளோ, வேதத்திற்கு லக்ஷணுவ்ருத்தியை ஆச்ர யித்து பொருளாக ஆகக்கூடியது; சக்தியை அனு ஸரித்து பொருளாக ஆகக்கூடாதது என்பதே நான் காவது பாதத்தின் அர்த்தமாகும் மூன்ருவது பாதத் தையும் நான்காவது பாதத்தையும் சேர்த்து அர்த்தம் செய்தால் நிர்விசேஷ ப்ரும்ம ஸாக்ஷாத்காரத்திற்கு காரணபூதமான பொருள் என்பது வெளியாகிறது. இவ்விதம் தாத்பர்யமுள்ள காயத்ரீ மஹாமந்த்ரத்தின் மூன்ருவது நான்காவது பாதங்கள் இரண்டும் ஸ்ரீவித்ய பஞ்சதசியில் ह्रीं (ஹ்ரீம்) (ஹ்ரீம்) என்ற ஹ்ருல்லேகையில் அந்தர்பாவத்தை அடைந்திருக் கிறது. அந்த பீஜாக்ஷரத்திலோ ஹகாரம், ரேபம் இரண்டும் சேர்ந்து ஹ்ருதயத்தை போதிக்கின்றன. அந்த ஹ்ருதயத்தில் வஸிக்கும் பராசக்தியை ஈகார மும் பிந்துவும் போதிக்கின்றன. ஹ்ருதயாகாசவாஸிநீ யான ஜகதீச்வரிதான் ப்ராணிகளுடைய புத்தியை நிர் விசேஷ ப்ரும்மத்தினிடத்தில் ப்ரேரணை செய்ய வேண்டுமே யன்னில் வேறு பாஹ்ய தேவதை களுக்கு சக்தி கிடையாது. அதனுல் காயத்ரீயின் மூன்று நான்கு பாதங்களுக்கு ஹ்ருல்லேகையில் அந் தர்பாவமென்பது ஸமஞ்ஜஸமாகும்.

இவ்விதம் எந்த காமேச்வரன், காமேச்வரீ என்ற பராசக்தியோடு கூடினவனே, ஸர்வஜகத்திற்கும் மூல காரணமான வஸ்துவோ, भवबन्ध विमोचक: (ഭവബന്ധ വിമോചകഃ) (பவபந்த விமோசக:) பவபந்தத்திலிருந்து விடுவிக்கிறவனே, ஸர்வாந்தர்யாமியோ, ஸர்வ ஜகத்தையும் தரிக்கிறவனே, ப்ருத்வி முதலான ஐந்து பூதங்களின் விகாரமான த்ருச்ய ப்ரபஞ்சத்தை உருவமாக உடைத்தான காரணத்தால் விராட் ரூபியாகவும் ஆகிறானே, குணாதீதமான நிர்குண நிஷ்கள, நிரஞ்ஜன, நிர்விசேஷ ப்ரும்மஸாக்ஷாத்காரத்தை ப்ராணிகளுக்கு உபாஸன மூலமாக கொடுக்கிறவனே, ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற த்ரிமூர்த்தியுமோ, அந்த பரம்பொருளே நான் ஆகிறேன் என்ற அநுபவமே காயத்ரீ மந்த்ரத்தின் அர்த்தமானதினால், ஸம்பூர்ண காயத்ரீயின் அர்த்தமாகிய இந்த தாத்பர்யத்தை ஸ்ரீவித்யா பஞ்சதசீ மஹாமந்த்ரத்தில் முதல் கூடமான அக்னிகண்டம் என்ற ஐந்து அக்ஷரங்களில் மேலே விவரித்தபடி அடக்கப்பட்டபடியால், அவ்விதமே இரண்டாவது கூடமாகிய ஸூர்யகண்டத்திலும், மூன்றாவது கூடமாகிய ஸோமகண்டத்திலும் ஸம்பூர்ண காயத்ரீக்கு அந்தர்பாவம் ஏற்படக்கூடுமானதினால், ஒரு ஆவர்த்தி பஞ்சதசீயை ஜபம் செய்த மாத்ரத்தில் ஸம்பூர்ண காயத்ரீயை மூன்று ஆவர்த்தி ஜபம் செய்த பலன் ஸித்திக்கிறபடியால் பஞ்சதசீ என்ற ஸ்ரீவித்யையின் மஹிமையானது எவ்வளவு மேன்மை தங்கியது என்பதை ச்ரேயஸ்ஸை விரும்புகிற ஆஸ்திகோத்தமர்கள் அறியவும். மோக்ஷத்திற்கு ஹேதுவான வித்யை ஸ்ரீவித்யையேதானாகும். ஸ்ரீ என்ற சப்தத்திற்கு முக்தி என்ற பொருளை க்ரஹித்துக்கொண்டால், முக்தியைக் கொடுக்கும் வித்யை ஸ்ரீவித்யைதான் என்பதை லகுவாக அறிந்துகொள்ளலாம். ஆத்மவித்யை, மஹாவித்யை, ப்ரும்மவித்யை என்றும்; இந்த வித்யைக்கு அநேக ப்ரகாரமாக காரணப் பெயர்களும் உண்டு. இந்த வித்யைக்கு

ஸமானமாக மற்ற ஒரு வித்யையும் ஆகாது. ஸகல விதமான ஸௌபாக்யத்தையும் அடைந்து நோயற்ற வாழ்வாக தீர்க்ககாலம் ஜீவித்து மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடையவும் இந்த வித்யைதான் முக்கிய காரணமாகும. ஆகையால் இஹலோகத்திலும் பரலோகத்திலும் ச்ரேயஸ்ஸை விரும்பும் ஸஜ்ஜனங்கள் இந்த வித்யையை பரம குருமுகமாக ஸ்வீகரித்து கொண்டு உபாஸித்துவரவேண்டியது அவச்யமாகும்.

### 33. ஸ்ரீதேவியின் மந்த்ரம்.

स्मरं योनिं लक्ष्मींत्रितयमिद मादौ तवमनोः
निधायैके नित्ये निरवधि महाभोगरसिकाः ।
भजन्ति त्वां चिन्तामणिगुणनिवद्धाक्षवलयाः
शिवाग्नौ जुह्वन्तः सुरभिघृत धाराहुतिशतैः ॥ ३३ ॥

𑌸𑍍𑌮𑌰𑌂 𑌯𑍋𑌨𑌿𑌂 𑌲𑌕𑍍𑌷𑍀𑌂𑌤𑍍𑌰𑌿𑌤𑌯𑌮𑌿𑌦 𑌮𑌾𑌦𑍌 𑌤𑌵𑌮𑌨𑍋𑌃
𑌨𑌿𑌧𑌾𑌯𑍈𑌕𑍇 𑌨𑌿𑌤𑍍𑌯𑍇 𑌨𑌿𑌰𑌵𑌧𑌿 𑌮𑌹𑌾𑌭𑍋𑌗𑌰𑌸𑌿𑌕𑌾𑌃 ।
𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌗𑍁𑌣𑌨𑌿𑌬𑌦𑍍𑌧𑌾𑌕𑍍𑌷𑌵𑌲𑌯𑌾𑌃
𑌶𑌿𑌵𑌾𑌗𑍍𑌨𑍌 𑌜𑍁𑌹𑍍𑌵𑌨𑍍𑌤𑌃 𑌸𑍁𑌰𑌭𑌿𑌘𑍃𑌤 𑌧𑌾𑌰𑌾𑌹𑍁𑌤𑌿
𑌶𑌤𑍈𑌃 ॥ ௩௩ ॥

ஸ்மரம் யோநிம் லக்ஷ்மீந்த்ரிதயமித மாதௌ தவமநோ:
நிதாயைகே நித்யே நிரவதி மஹாபோகரஸிகா: ।
பஜந்தி த்வாம் சிந்தாமணிகுணநிபத்தாக்ஷவலயா:
சிவாக்நௌ ஜுஹ்வந்த: ஸுரபிக்ருத தாராஹுதி
சதை: ॥ 33 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே பராசக்தியே !
ஹே பகவதி)

नित्ये (𑌨𑌿𑌤𑍍𑌯𑍇) (நித்யே) = என்றும் அழியாத மஹிமையுள்ள பரதேவதையே

निरवधि महाभोगरसिका: (நிரவதி மஹாபோக ரஸிகா:) (நிரவதி மஹாபோக ரஸிகா:) = அளவற்ற ப்ரும்மாநந்த ரஸத்தை ஆஸ்வாதநம் செய்யும் மஹாயோகீச்வரர்களான

एके धन्या: (ஏகே தந்யா:) (ஏகே தந்யா:) = சில புண்யவான்கள்

चिन्तामणिगुण निबद्धाक्षवलया: सन्त: (சிந்தாமணிகுண நிபத்தாக்ஷவலயா: ஸந்த:) (சிந்தாமணிகுண நிபத்தாக்ஷவலயா: ஸந்த:) = ஸூத்ரத்தில் (கயிற்றில்) கோர்க்கப்பட்ட சிந்தாமணிமயமான, அதாவது தாம்ரமணிமயமான ஜபமாலையை கையில் தரித்துக் கொண்டிருப்பவர்களாகக்கொண்டு

तव (தவ) (தவ) = உன்னுடைய

मनो: (மநோ:) (மநோ:) = முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட பஞ்சதசீ என்ற மஹா மந்த்ரத்திற்கு

आदौ (ஆதௌ) (ஆதௌ) ஆரம்பத்தில்

स्मरं (ஸ்மரம்) (ஸ்மரம்) = காமபீஜமான க்லீம் என்றபீஜாக்ஷரத்தையும்

योनिं (யோநிம்) (யோநிம்) = புவனேச்வரி பீஜாக்ஷரமான ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரத்தையும்

लक्ष्मीं (லக்ஷ்மீம்) (லக்ஷ்மீம்) = லக்ஷ்மீ பீஜமான ஶ்ரீம் என்ற பீஜாக்ஷரத்தையும்

इदं त्रितयं (இதம் த்ரிதயம்) (இதம் த்ரிதயம்) = ஆக இந்த மூன்று பீஜாக்ஷரங்களையும்

निधाय (நிധாய) (நிதாய) = அவரோஹண க்ரமமாக உச்சரிக்கும் காரணத்தால் ஸௌபாக்ய பஞ்சதசீயாகச் செய்துகொண்டு

शिवाग्नौ (ஶிவாக்னௌ) (சிவாக்நௌ) = த்ரிகோணமாகிய வேதிகையில் ஸ்தாபிக்கப்பட்ட காரணத்தால் சிவாக்நி என்ற பெயருடன் கூடிய சிதக்நியில்

सुरभिघृतधाराहुति शतैः (ஸுரபிக்ருத தாராஹுதி ஶதை:) (ஸுரபிக்ருத தாரா ஹுதி சதை:) = பசுவின் நெய்யால் செய்யப்பட்ட அநேகவிதமான ஆஹுதிகளால்

जुह्वन्तः (ஜுஹ்வந்த:) (ஜுஹ்வந்த:) = ஹோமமூலமாக உன்னை த்ருப்தி செய்துவைக்கிறவர்களாய்க்கொண்டு

त्वां (த்வாம்) (த்வாம்) = உன்னை (இவ்விதம்)

भजन्ति (பஜந்தி) (பஜந்தி) = ஸேவிக்கின்றார்கள்.

தாத்பர்யம் :— முன் ச்லோகத்தில் சுத்த பஞ்சதசீ என்ற ஸ்ரீவித்யையானது ப்ரகாசப்படுத்தப்பட்டது. இந்த ச்லோகத்திலோ, ஸௌபாக்ய பஞ்சதசீ என்ற ஸ்ரீவித்யையானது ப்ரகாசப்படுத்தப்படுகிறது. இந்த வித்யையானது பரம தரித்ரனையும் ராஜாதிராஜனாக செய்யக்கூடிய வல்லமையுள்ளது. இந்த மஹாமந்த்ரத்தை தாம்ர மணியால் கட்டப்பட்ட ஜபமாலையை கையில் வைத்துக்கொண்டு ஜபமும் செய்யவேண்டும் आवहन्ती वितन्वाना(ஆவஹந்தீ விதந்வாநா)(ஆவஹந்தீ விதந்

வாநா) என்ற ச்ருதியை அனுஸரித்து பசுவின் நெய் யால் 𑌗𑍃𑌹𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿 (𑌗𑍃𑌹𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿) (க்ருஹ்யாக்நி) க்ருஹ்யாக்னி யில் ஹோமம் செய்யவேண்டும். இந்த மஹாமந்த்ரத்தி லுள்ள அக்ஷரங்களை அனுஸரித்து ஒவ்வொரு அக்ஷரத் திற்கும் லக்ஷம் ஆவர்த்தி புரச்சரணை ஏற்பட்டது. ஹோமம் செய்யும் காலத்தில் த்ரிகோண ஆகாரமாக வேதி போட்டு அதில் அக்னியை ஸ்தாபனம் செய்ய வேண்டும். அதற்கு சிவாக்னி என்று பெயர் விளங்கி வரும். அந்த அக்னியில் மேற்சொன்னபடி இந்த ஸௌபாக்ய பஞ்சதசீ என்ற மஹாமந்த்ரத்தால் ஆஹுதி செய்யவேண்டும். இவ்விதம் மஹா யோகி களான புண்யவான்கள் தேவியை உபாஸித்து ஆதி காரிக புருஷர்களாக பாஸித்து வருகிறார்கள். பலகா மனை இல்லாமல் இந்த உபாஸனை செய்தால் மோக்ஷத் தையும் அடையலாம். ஸர்வ ரோகத்தையும் நிவர்த்தி செய்துவைப்பதில் இந்த மஹாமந்த்ரம் வல்லமை யுள்ளது. மஹாலக்ஷ்மீ கடாக்ஷம் எப்பொழுதும் க்ருஹத்தில் நிறைந்திருக்கும்படி செய்யும் சக்திவாய்ந் தது. ஒவ்வொரு க்ருஹத்திலும் இந்த வித்யை யானது உபாஸிக்கப்பட்டுவந்தால் ஸகலவிதமான ஸௌபாக்யத்திற்கும் குறைவில்லாமல் மேன்மேலும் அபிவ்ருத்தியடையும்படி நேர்ந்து அமானுஷமான திவ்ய போகத்தையும் அனுபவித்துக்கொண்டு நோயற்ற வாழ்வுடன் நீடித்து ஜீவிக்கலாம். தர்ம ஸ்தாபனம் செய்வதற்கு இந்த புண்யபூமியில் அவத ரித்த ராம, க்ருஷ்ணாதிகளான உத்தமபுருஷர்களும், இந்த ஸௌபாக்ய பஞ்சதசீ என்ற ஸ்ரீவித்யையை உபாஸித்தவர்கள் என்று தெரியவருகிறது. ஸ்ரீராமன் ராவணனைக் கொன்று தன் மனைவியான ஸீதையைத் தன் வசப்படுத்திக்கொண்டது இந்த வித்யையினாலே தான்—ஸ்ரீமத் பாகவதத்திலும் ஸ்யமந்தக உபாக்யா னத்தில், ஸ்ரீ க்ருஷ்ணபகவானும் ஸ்யமந்தகமணிக் காக ஜாம்பவானோடு யுத்தம் செய்து ஸ்யமந்தகமணி யையும் ஜாம்பவதீ என்ற ஸ்த்ரீ ரத்னத்தையும் தன்

கைவசப்படுத்திக்கொண்டார் என்பதும் இந்த வித்யையினாலேதான். இவ்விதம் அநேகவிதமான உபாக்யானங்கள் மூலம் இந்த வித்யையின் பெருமை வெளியாகிறபடியால், இந்த வித்யையை ரொம்பவும் பெரிதான ராஜவித்யை என்றே சொல்லவேண்டும்.

## 34. பூர்வ கௌளம்.

शरीरं त्वं शंभोः शशिमिहिर वक्षोरुहयुगम्
तवात्मानं मन्ये भगवति नवात्मानमनघम् ।
अतःशेषः शेषीत्ययं उभयसाधारणतया
स्थितः संबन्धो वां समरसपरानन्दपरयोः ॥ ३४ ॥

𑌶𑌰𑍀𑌰𑌂 𑌤𑍍𑌵𑌂 𑌶𑌂𑌭𑍋𑌃 𑌶𑌶𑌿𑌮𑌿𑌹𑌿𑌰 𑌵𑌕𑍍𑌷𑍋𑌰𑍁𑌹𑌯𑍁𑌗𑌮𑍍
𑌤𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿 𑌨𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌨𑌘𑌮𑍍 ।
𑌅𑌤𑌃𑌶𑍇𑌷𑌃 𑌶𑍇𑌷𑍀𑌤𑍍𑌯𑌯𑌂 𑌉𑌭𑌯𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌤𑌯𑌾
𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍋 𑌵𑌾𑌂 𑌸𑌮𑌰𑌸𑌪𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌪𑌰𑌯𑍋𑌃
॥ ௩௪ ॥

சரீரம் த்வம் சம்போ: சசிமிஹிர வக்ஷோருஹயுகம்
தவாத்மாநம் மந்யே பகவதி நவாத்மாநமநகம்।
அத:சேஷ: சேஷீத்யயம் உபயஸாதாரணதயா
ஸ்தித: ஸம்பந்தோ வாம் ஸமரஸபராநந்தபரயோ: ॥ 34 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே பராசக்தியே!
ஹே பகவதி)

त्वं (𑌤𑍍𑌵𑌂) (த்வம்) = நீ

शंभोः (𑌶𑌂𑌭𑍋𑌃) (சம்போ:) = ஆநந்தபைரவமூர்த்திக்கு

शरीरं (𑌶𑌰𑍀𑌰𑌂) (சரீரம்) = சரீரம்போல்

विभासि (𑌵𑌿𑌭𑌾𑌸𑌿) = விளங்குகிறாய்
(விபாஸி)

नवात्मानं (𑌨𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂) (நவாத்மாநம்) = நவவ்யூஹ ஸ்வரூபியான ஆநந்த பைரவமூர்த்தியி னுடைய சரீரத்தை

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

शशिमिहिर वक्षोरुहयुगं (𑌶𑌶𑌿𑌮𑌿𑌹𑌿𑌰 𑌵𑌕𑍍𑌷𑍋𑌰𑍁𑌹𑌯𑍁𑌗𑌂) (சசிமிஹிர வக்ஷோருஹ யுகம்) = சந்த்ர ஸூர்யாளை இரண்டு ஸ்தனங்களாக உடைத்தானதாயும்

अनघं (𑌅𑌨𑌘𑌂) (அநகம்) = பரிசுத்தமானதாயுமுள்ள

आत्मानं (𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂) (ஆத்மாநம்) = சரீரமாகவே

मन्ये (𑌮𑌨𑍍𑌯𑍇) (மந்யே) = நினைக்கிறேன்.

यतः (𑌯𑌤𑌃) (யத:) = யாதொரு காரணத்தால்

एवं (𑌏𑌵𑌂) (ஏவம்) = இவ்விதமோ

(அதாவது உன்னுடைய சரீரம் ஆநந்தபைரவருடைய சரீரமாகவும் ஆநந்தபைரவருடைய சரீரம் உன் சரீரமாகவும் விளங்குகிறதோ)

अतः (𑌅𑌤𑌃) (அத:) = அக்காரணத்தால்

समरसपरानन्दपरयोः (𑌸𑌮𑌰𑌸𑌪𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌪𑌰𑌯𑍋𑌃) (ஸமரஸபராநந்த பரயோ:) = ஒருவருக்கொருவர் ஸமரஸமான பாவத்தோடு கூடின நிரதிசயமான ஆநந்தரூபியான ஆநந்த பைரவி என்ற தேவி என்ன, ஆநந்தபைரவன்

என்ற சிவன் என்ன! இவர்களாகிய பரவஸ்துக்களான

वां (𑌵𑌾𑌂) (வாம்) = உங்களிருவர்களுக்கும்

शेषः शेषी इति (𑌶𑍇𑌷𑌃 𑌶𑍇𑌷𑍀 𑌇𑌤𑌿) (சேஷ: சேஷீ இதி) = சேஷன் சேஷி என்ற பாவமானது

उभयसाधारणतया (𑌉𑌭𑌯𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌤𑌯𑌾) (உபயஸாதாரணதயா) = உங்க ளிருவர்களுக்கும் பொதுவாக இருககும் காரணத்தால்

अयं (𑌅𑌯𑌂) (அயம்) = இந்த

संबन्धः (𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌃) (ஸம்பந்த:) = ஸம்பந்தமானது

स्थितः (𑌸𑍍𑌥𑌿𑌤𑌃) (ஸ்தித:) = உங்க ளிருவர்களுக்கும் நித்யமாகவே இருந்து வருகிறது.

தாத்பர்யம்:—இந்த ச்லோகத்தில் பரமாசார்யாள் தேவியை பகவதி என்று ஸம்போதனம் செய்திருக்கும் அபிப்ராயத்தை அறியவும்.

उत्पत्तिं च विनाशंच, भूतानां आगतिं गतिम् ।
वेत्तिविद्यां अविद्यांच, सवाच्यो भगवानिति ॥

𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌵𑌿𑌨𑌾𑌶𑌂𑌚, 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌆𑌗𑌤𑌿𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ।
𑌵𑍇𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂𑌚, 𑌸𑌵𑌾𑌚𑍍𑌯𑍋 𑌭𑌗𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 ॥

உத்பத்திம்ச விநாசம்ச, பூதாநாம் ஆகதிம் கதிம்।
வேத்திவித்யாம் அவித்யாம்ச, ஸவாச்யோ பகவாநிதி ॥

என்ற புராண வசனத்தை அனுஸரித்து, ஜகத்தினுடைய உத்பத்தி ஸ்தானமென்ன, லயஸ்தானமென்ன

ஸ்திதி காலத்தில் ப்ராணிகள் கர்மானுஸாரமாக லோகாந்த்ரம் போகிறது அங்கிருந்து திரும்பிவருகிறது என்ற கதி என்ன, ஆகதி என்ன ; பந்தத்திற்கு ஹேதுவான அவித்யை என்ன; மோக்ஷத்திற்கு ஹேதுவான வித்யை என்ன, இந்த ஆறையும் பக: என்ற பதத்தால் வித்வான்கள் சொல்வார்கள். இந்த ஆறு தத்வத்தையும் ஸர்வக்ஞையான பராசக்தி ஒருவள் தான் நன்ருக அறிந்தவள். இந்த ஆறையும் அறிந்த காரணத்தால் भगः अस्याः अस्ति इति (ഭഗഃ അസ്യാഃ അസ്തി ഇതി) (பக: அஸ்யா: அஸ்தி இதி) என்ற ஸமாஸத்தைக்கொண்டு भगवति (ഭഗവതി) (பகவதி) என்ற பராசக்தியைப் பார்த்து பகவத்பாதாள் ஸம்போதனம் செய்திருக்கிருர்கள். தவிரவும், भगः (ഭഗഃ) (பக:) என்ற சப்தத்தால் த்ரிகோண ரூபமான சக்ரமும் சொல்லப்படும். ஒன்பதுவிதமான த்ரிகோண சக்ரம் தேவியினுடைய ஸ்வரூபம் என்று चतुर्भिः श्रीकण्ठैः (ചതുർഭിഃ ശ്രീകണ്ഠൈഃ) (சதுர்பி: ஸ்ரீகண்டை:) என்ற ச்லோகத்தில் சொல்லியிருப்பதினுல், த்ரிகோண ரூபமான ஒன்பது சக்ர ஸ்வரூபிணியான பராசக்தியே என்றும், பகவதி என்ற ஸம்போதனத்தின் அபிப்பிராயமாகும். இந்த ச்லோகத்தில் ஆநந்தபைரவ மூர்த்தியான காமேச்வர தத்வத்திற்கும், ஆநந்த பைரவி என்ற பராசக்திக்கும் ஒருவருக்கொருவர் குணப்ரதான பாவமானது, அதாவது, ஒரு தத்வம் ப்ரதானமாக இருக்கும்பொழுது மற்ருென்று அப்ரதானமாயும், மற்ருென்று ப்ரதானமாக இருக்கும்பொழுது, இன்னொன்று அப்ரதானமாகவும் உள்ள பாவம்தான் குணப்ரதான பாவம் என்று சொல்லப்படும். இதைத்தான் சேஷ சேஷி பாவம் என்று வித்வான்கள் சொல்வார்கள். ஆனுல் த்வைதிகளுடைய சேஷ சேஷி பாவ ஸம்பந்தம்போல் இல்லை. அவர்களுக்கு என்றும் சேஷன் சேஷன் தான்; சேஷி சேஷிதான். சேஷன் சேஷியாகாது, சேஷியும் சேஷனுக ஆகாது—ப்ரக்ரு

தத்திலோ பரஸ்பரம் சேஷ சேஷி பாவம் ஒப்புக் கொள்ளப்படுகிறது. ஆகையால் ப்ரஸித்தமான சேஷ சேஷி வாதிகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட சேஷ சேஷி பாவத்திற்கு விலக்ஷணமான சேஷ சேஷி பாவம்தான் இங்கே சொல்லப்பட்டது. இந்த ஸம் பந்தத்தை ஆநந்தபைரவமூர்த்திக்கும், ஆநந்தபைரவி என்ற தேவிக்கும் சொல்லவேண்டுமானுல் ஒன்பது விதமான த்ரிகோண சக்ரத்தை அவலம்பித்துத்தான் ப்ரதிபாதிக்கவேண்டும். அந்த ஒன்பதுவிதமான த்ரி கோணத்திலோ, நான்கு யோநிகளை காமேச்வரன் என்றும், ஐந்து யோநிகளை காமேச்வரீ என்றும், ஸ்ரீசக்ர உத்தாரண ச்லோகத்திலேயே ப்ரகாசப்படுத் தப்பட்டிருக்கின்றன. ஸ்ரீவித்யாதந்த்ர ஸித்தாந்தத் தில் ஆநந்தபைரவர் என்ற காமேச்வரனிடத்தில் ஆநந்தபைரவி என்ற காமேச்வரிக்கு ஐக்யத்தையும் ஆநந்தபைரவி என்ற காமேச்வரியினிடத்தில் ஆநந்த பைரவமூர்த்தியான காமேச்வரனுக்கு ஐக்யத்தையும் ஒப்புக்கொள்ளவேண்டும்.

காமேச்வரனை நவவ்யூஹ ஸ்வரூபி என்று முன்பு சொல்லப்பட்டது. வ்யூஹம் என்ருல் ராசி, அதாவது கூட்டம் என்று சொல்லப்படும். ஒன்பது விதமான ராசியானது காமேச்வரனுடைய விபூதி யாக சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறதினுல், காமேச்வரனுக்கு நவாத்மா என்று பெயர் ஏற்பட் டிருக்கிறது. நவவ்யூஹஸ்வரூபி என்று அதன் பொரு ளாகும். அந்த ஒன்பதுவிதமான வ்யூஹமோ,

कालव्यूहः कुलव्यूहो, नामव्यूह स्तथैवच ।
ज्ञानव्यूहस्तथाचित्तव्यूहःस्यात्तदनंतरम् ॥
नादव्यूहस्तथाबिंदु व्यूहःस्यात्तदनंतरम् ।
कलाव्यूयस्तथाजीव व्यूहःस्यादितितेनव ॥

𑌕𑌾𑌲𑌵𑍍𑌯𑍂𑌹𑌃 𑌕𑍁𑌲𑌵𑍍𑌯𑍂𑌹𑍋, 𑌨𑌾𑌮𑌵𑍍𑌯𑍂𑌹
𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑌚 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍍𑌯𑍂𑌹 𑌸𑍍𑌤𑌥𑌾𑌚𑌿𑌤𑍍𑌤 𑌵𑍍𑌯𑍂𑌹𑌃𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤 𑌦𑌨𑌂𑌤𑌰𑌮𑍍 ॥
𑌨𑌾𑌦𑌵𑍍𑌯𑍂𑌹 𑌸𑍍𑌤𑌥𑌾𑌬𑌿𑌂𑌦𑍁 𑌵𑍍𑌯𑍂𑌹𑌃𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌦𑌨𑌂𑌤𑌰𑌮𑍍 ।
𑌕𑌲𑌾𑌵𑍍𑌯𑍂𑌹 𑌸𑍍𑌤𑌥𑌾𑌜𑍀𑌵 𑌵𑍍𑌯𑍂𑌹𑌃𑌸𑍍𑌯𑌾𑌦𑌿 𑌤𑌿𑌦𑍈𑌨𑌵 ॥

காலவ்யூஹ: குலவ்யூஹோ, நாமவ்யூஹ ஸ்ததைவச ।
ஞாநவ்யூஹ ஸ்ததாசித்த வ்யூஹ:ஸ்யாத்த தநம்தரம் ॥
நாதவ்யூஹ ஸ்ததாபிந்து வ்யூஹஸ்யாத்த தநம்தரம் ।
களாவ்யூஹ ஸ்ததாஜீவ வ்யூஹ:ஸ்யாதி திதேநவ ॥

என்ற வாக்யப்படி (1) காலவ்யூஹம்; (2) குலவ்யூஹம்; (3) நாமவ்யூஹம்; (4) ஞானவ்யூஹம்; (5) சித்தவ்யூகம்; (6) நாதவ்யூஹம்; (7) பிந்துவ்யூஹம்; (8) களாவ்யூஹம்; (9) ஜீவவ்யூஹம் என்று ஒன்பது விதமாக வ்யூஹங்களை அறியவும். (1) நிமேஷம் முதல் பரார்த்தம் முடிய சொல்லப்படும் காலமானது பரமேச்வரனுடைய உருவமானதினால் காலங்களின் கூட்டமும் பரமசிவனுடைய சரீரமாக ஆகிறது. (2) குலம் என்றால் ஸ்ரீவித்யா சந்த்ரகலா ஸித்தாந்த ப்ரகாரம் பராம்பிகையினுடைய க்ரஹகோணங்களாகச் சொல்லப்படும். எவ்விதமான க்ரஹகோணங்களிலும் காமேச்வரனுடைய க்ரஹகோணங்களும் அடக்கப்பட்டிருப்பதினால் காமேச்வரனை குலவ்யூஹம் என்று வித்வான்கள் சொல்வார்கள். (3) நாமா முதல் பூமாவரையிலும் பூமவித்யா ப்ரகரணத்தில் சொல்லப்பட்ட தத்வங்கள் பரமசிவனுடைய ப்ரதீகமானதினால் நாமவ்யூஹமாகவும் காமேச்வரனுடைய ஸ்வரூபம் ஸித்திக்கின்றது. (4) ஞானத்திற்கு பரமசிவன் அதிதேவதையானதினால், பதார்த்த ஞானமோ வாக்யார்த்த ஞானமோ, லௌகீக ஞானமோ, வைதீக ஞானமோ ஸகலவிதமான ஞானங்களும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு காமேச்வரனுக்கு சரீரமாக ஆகிறது. (5) அஹங்காரம் என்று சொல்லப்படும் சித்

தங்களுக்கு காமேச்வரன் அபிமானியான தேவதை யானதினுல் சித்தவ்யூஹமும் காமேச்வரனுடைய ஸ்வ ரூபமே. (6) பூரகம், ரேசகம், கும்பகம் என்று மூன்று ப்ரகாரமாக பிரித்துச் சொல்லப்பட்டிருக்கும் ப்ராணுயாமத்தை மோக்ஷோபாயமாகக் கைகொண்ட ராஜயோகிகள் கும்பக ப்ராணுயாமம் செய்யும் காலத் தில் ப்ராணுயாமத்தின் ஸித்தியை ஸூசிப்பிக்கும் சரீ ரத்திற்குள் உண்டாகும் ஸாமான்ய விசேஷ நாதங் கள் காமேச்வரனுடைய சரீரமென்று யோகசாஸ்த் ரங்களில் சொல்லப்படடிருப்பதினுல் நாதவ்யூஹமும் காமேஸ்வரனுடைய சரீரமாக ஆகிறது. (7) பாதி சந்த்ரகலேரூபமான இரண்டு ரேகைகளை ஒன்ருகச் சேர்ப்பதே பிந்துவாகும். அந்த பிந்துவில் ஒரு பாதி ரேகை ஸதாசிவ தத்வமானதினுல் பிந்து வ்யூஹமும் காமேச்வரனுடைய சரீரமே (8) ஷோடச கலைக ளும் அதாவது ப்ராணன், ச்ரத்தை, ப்ருத்வி, அப் தேஜஸ், வாயு, ஆகாசம், இந்த்ரியம், மனஸ், அன்னம், வீர்யம், மந்த்ரம், கர்ம, தபஸ், லோகம், நாம என்று ப்ரச்ன உபநிஷத்தில் சொல்லப்பட்டபடி காமேச்வர னுடைய சரீரமாகும். அந்த உபநிஷத்தில் பரமசிவ னுக்கு ஷோடசகலாபுருஷன் என்ற ப்ரஸித்தமான நாமா ஏற்பட்டிருக்கிறது. (9) அக்னியிலிருந்து பொரி கள் உண்டாவதுபோல் பரமேச்வரனிடமிருந்தும் ஜீவ கோடிகள் அம்சம்போலொத்த அம்சங்களாக சொல் லப்பட்டிருக்கிறபடியால் ஜீவன்களுடைய ஸமூகமும் காமேச்வரனுடைய ஸ்வரூபமாகும். இவ்விதம் ஒன் பது விதமான வ்யூஹமே காமேச்வரனுடைய சரீர மாகிய காரணத்தால் காமேச்வரனை நவாத்மா என்று மேற்கண்ட ச்லோகத்தில் பரமாசார்யாள் போதிக் கின்ருர்கள். அந்த காமேச்வரனை காமேச்வரியி னிடத்தில் ஐக்யம் செய்தும், காமேச்வரியை காமேச் வரனிடத்தில் ஐக்யம் செய்தும், இருவருர்களுக்கும் குணப்ரதான பாவத்தை இந்த ச்லோகமானது ப்ரகா சம் செய்கிறது.

காமேச்வரனுக்கு ப்ரதான்யத்தை ஒப்புக் கொண்டு காமேச்வரியை காமேச்வரனிடத்தில் அந் தர்பாவப்படுத்தும்பொழுது சந்த்ரன், ஸூர்யன் இரு வர்களும் காமேச்வரனுடைய ஙண்களாக விளங்கிவரு கிறார்கள். அந்த காமேச்வரிக்கு ப்ரதான்யத்தை ஒப் புக்கொண்டு காமேச்வரனை காமேச்வரியினிடத்தில் அந்தர்பாவப்படுத்தும்பொழுது, சந்த்ரன், ஸூர்யன் இருவர்களும் அந்த காமேச்வரியினுடைய இரண்டு குச மண்டலங்களாக பாஸித்துவருகிறார்கள். இந்த ச்லோகத்தினால் ஆதி தம்பதியான பரமேச்வரன் பர மேச்வரி இருவர்களுக்கும் உள்ள அன்யோன்ய பாவ மானது சொல்லப்படுகிறது.

இந்த ச்லோகத்தை ஜபம் செய்துவரும் குடும் பத்தில் ஸ்த்ரீ புமான்களுக்கு பரஸ்பரம் அன்யோன்ய பாவம் த்ருடமாகி, அநுராகத்துடன் நீடித்து வாழ்ந்து ஸ்த்ரீ தத்வத்தைச் சார்ந்த ஜீவனுக்கும், புருஷ தத்வத் தைச் சார்ந்த ப்ரும்மத்திற்கும் ஐக்யம் க்ரமமாக ஸித் தித்து அந்த ஸ்த்ரீ புருஷர்கள் இருவர்களும் மோக்ஷா நந்தத்தை க்ரமமாக அனுபவிக்க அர்ஹர்களாக ஆகு வார்கள். கார்ஹஸ்த்ய தர்மத்தை உயர்ந்ததாகவே இந்த ச்லோகத்திலிருந்தும் அறிந்துகொள்ளவேண் டும். வேதோக்த கர்மாக்களைச் செய்யும் காலங்களில் புருஷர்களுக்கு ப்ராதான்யமும், ஸ்த்ரீகளுக்கு அப்ரா தான்யமும், மற்ற குடும்ப விஷயத்தில் ஸ்த்ரீகளுக்கு ப்ராதான்யமும், புருஷர்களுக்கு அப்ராதான்யமும் ஏற்படவேண்டியது அவச்யமானதினால், அவ்வித மான பாவங்களை அந்தந்த காலங்களில் ஸ்வீகரித்துக் கொண்டு பரஸ்பரம் அநுராகத்துடன் குடும்பத்தில் இருந்துவருவதினாலும், ஆயாஸமின்றி ஈச்வரானுக்ர ஹத்தினால் ஞானம் ஏற்பட்டு மோக்ஷத்தையும் அடையலாம் என்பதும் இந்த ச்லோகத்தின் தாத்பர்யமாகும்.

---

## 35. ஆக்ஞா சக்ராதிரூப ஸகல தத்வமய ரூபிணியான தேவியின் வர்ணனை.

मनस्त्वं व्योमत्वं मरुदसि मरुत्सारथिरसि
त्वमापः त्वं भूमिः त्वयिपरिणतायांनहिपरम् ।
त्वमेव स्वात्मानं परिणमयितुं विश्ववपुषा
चिदानन्दाकारं शिवयुवति भावेन विभृषे ॥ ३५ ॥

𑌮𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮𑌤𑍍𑌵𑌂 𑌮𑌰𑍁𑌦𑌸𑌿 𑌮𑌰𑍁𑌤𑍍𑌸𑌾𑌰𑌥𑌿𑌰𑌸𑌿
𑌤𑍍𑌵𑌮𑌾𑌪𑌃 𑌤𑍍𑌵𑌂 𑌭𑍂𑌮𑌿𑌃 𑌤𑍍𑌵𑌯𑌿𑌪𑌰𑌿𑌣𑌤𑌾𑌯𑌾𑌂𑌨𑌹𑌿𑌪𑌰𑌮𑍍 ।
𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌰𑌿𑌣𑌮𑌯𑌿𑌤𑍁𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌵𑌪𑍁𑌷𑌾
𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌕𑌾𑌰𑌂 𑌶𑌿𑌵𑌯𑍁𑌵𑌤𑌿 𑌭𑌾𑌵𑍇𑌨 𑌵𑌿𑌭𑍃𑌷𑍇
॥ ௩௫ ॥

மநஸ்த்வம் வ்யோமத்வம் மருதஸி மருத்ஸாரதிரஸி
த்வமாப: த்வம் பூமி: த்வயிபரிணதாயாம்நஹிபரம் ।
த்வமேவ ஸ்வாத்மாநம் பரிணமயிதும் விச்வவபுஷா
சிதாநந்தாகாரம் சிவயுவதி பாவேந பிப்ருஷே ॥ 35 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே !

मनः (𑌮𑌨𑌃) (மந:) = ஆக்ஞா சக்ரத்திலுள்ள மனஸ் தத்வமானது

त्वं (𑌤𑍍𑌵𑌂) (த்வம்) = நீயே

व्योम (𑌵𑍍𑌯𑍋𑌮) (வ்யோம) = விசுத்தி சக்ரத்திலுள்ள ஆகாச தத்வமும்

त्वं (𑌤𑍍𑌵𑌂) (த்வம்) = நீயே

मरुत् (𑌮𑌰𑍁𑌤𑍍) (மருத்) = அநாஹதசக்ரத்திலுள்ள வாயுதத்வமும் ஆக

त्वं असि (𑌤𑍍𑌵𑌂 𑌅𑌸𑌿) (த்வம் அஸி) = நீதான் இருக்கிறாய்.

मरुत्सारथिः (𑌮𑌰𑍁𑌤𑍍𑌸𑌾𑌰𑌥𑌿𑌃) (மருத்ஸாரதி:) = ஸ்வாதிஷ்டான சக்ரத்திலுள்ள வாயுவுக்கு ஸகாவான அக்னி தத்வமாகவும்

त्वं असि (𑌤𑍍𑌵𑌂 𑌅𑌸𑌿) (த்வம் அஸி) = நீதான் ஆகிறாய்.

आपः (𑌆𑌪𑌃) (ஆப:) = மணிபூரக சக்ரத்திலுள்ள ஜலதத்வமும்

त्वं (𑌤𑍍𑌵𑌂) (த்வம்) = நீயே

भूमिः (𑌭𑍂𑌮𑌿𑌃) (பூமி:) = மூலாதார சக்ரத்திலுள்ள ப்ருத்வீ தத்வமும்

त्वं (𑌤𑍍𑌵𑌂) (த்வம்) = நீயே

त्वयि (𑌤𑍍𑌵𑌯𑌿) (த்வயி) = காரணசக்தியாகிய நீ

परिणातायांसत्यां (𑌪𑌰𑌿𑌣𑌾𑌤𑌾𑌯𑌾𑌂𑌸𑌤𑍍𑌯𑌾𑌂) (பரிணுதாயாம்ஸத்யாம்) = ப்ரபஞ்ச ரூபமாக பரிணமிக்கும்பொழுது

परं (𑌪𑌰𑌂) (பரம்) = உனக்கு வேறான வஸ்து ஒன்றுமே

नहि (𑌨𑌹𑌿) (நஹி) = இல்லை

त्वमेव (𑌤𑍍𑌵𑌮𑍇𑌵) (த்வமேவ) = நீதான்

चिदानन्दाकारं (𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌕𑌾𑌰𑌂) (சிதாநந்தாகாரம்) = சிதாநந்தன் என்ற ஆநந்த பைரவனுடைய உருவமாகிய

| | |
|---|---|
| स्वमात्मानं (𑌸𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂) (ஸ்வமாத்மாநம்) | = உன்னுடைய அகண்டமான ஸ்வருபத்தை |
| विश्ववपुषा (𑌵𑌿𑌶𑍍𑌵𑌵𑌪𑍁𑌷𑌾) (விச்வவபுஷா) | = ஸகல ஜகத்சரீரமாக |
| परिणमयितुं (𑌪𑌰𑌿𑌣𑌮𑌯𑌿𑌤𑍁𑌂) (பரிணமயிதும்) | = பரிணமிக்கும்படி செய்வதற்கு |
| शिवयुवतिभावेन (𑌶𑌿𑌵𑌯𑍁𑌵𑌤𑌿𑌭𑌾𑌵𑍇𑌨) (சிவயுவதி பாவேன) | = காமேச்வரனுடையஸஹசரீ, தர்மபத்னீ என்ற பாவமாக |
| बिभृषे (𑌬𑌿𑌭𑍃𑌷𑍇) (பிப்ருஷே) | = மனதில் பரிக்கிருய், அதாவது, காமேச்வரனுடைய தர்மபத்னியாக இருக்கும் தன்மையை மனதில் நினைத்துக்கொள்கிருய். |

தாத்பர்யம் :—உத்தரகௌலமதத்தை விஸ்தாரப் படுத்த பகவத்பாதாள் ஆரம்பம் செய்கிருர்கள். உத்தரகௌலம் என்றுல் ஸமயாசாரத்திற்கு ஸமானமானது. ஆந்த்ரமான பூஜாவிதானத்தையே முக்ய மாக குறிப்பிட்டுச் சொல்வதே உத்தரகௌலமத மாகும். சரீரத்திற்குள் மூலாதாரம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டாநம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை, ப்ரம்மரந்த்ரம் என்ற சக்ரங்களிருக்கின்றன. ப்ரம்ம நாடி என்ற ஸுஷும்னு நாடிக்குள் ப்ராண வாயுவை ஸஞ்சரிக்கும்படி செய்கிற சக்தியுள்ள ராஜயோகிகளுக்கு இந்த சக்ரங்கள் அனுபவகோசரமாகக் கூடியவைகள். நான்கு தளங்களோடுகூடின தாமரைப் புஷ்பம்போலுள்ள சக்ரமே மூலாதாரம் என்று சொல்லப்படும். அது குதஸ்தானத்தில் அமைக்கப்பட்டுள்ளது. ஆறு தளங்களோடுகூடின தாமரைப் புஷ்பம் போலுள்ள சக்ரமே மணிபூரக சக்ரமாகும். அந்த சக்ரம் நாபி ஸ்தானத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது.

எட்டு தளங்களோடு கூடின தாமரைப் புஷ்பம் போலுள்ள சக்ரம் ஸ்வாதிஷ்டான சக்ரம் என்று சொல்லப்ட்டும். அது குதஸ்தானத்திற்கும் நாபி ஸ்தானத்திற்கும் நடுமத்தியில் அமைக்கப்பட்டுள்ளது.

பத்து தளங்களோடு கூடின தாமரைப் புஷ்பம்போலொத்தது அனுஹத சக்ரமாகும். அது ஹ்ருதய தேசத்திலுள்ளது. பன்னிரண்டு தளங்களோடு கூடின தாமரைப் புஷ்பம்போலொத்தது விசுத்தி சக்ரமாகும். அது கண்ட தேசத்திலுள்ளது. இரண்டு தளத்தோடுகூடின தாமரைப் புஷ்பம்போலொத்தது ஆக்ஞா சக்ரமாகும். அது இரண்டு புருவங்களுக்கும் நடுமத்தியி லுள்ளது. ஆயிரந்தளங்களோடு கூடின தாமரைப் புஷ்பத்துக்கு ஸமானமாயுள்ளது ப்ரும்ம ரந்த்ரம் என்று சொல்லப்படும். அது மூர்த்தா என்ற ஸ்தானத்திலுள்ளது (மண்டை உச்சியிலுள்ளது) மூலாதாரத்தில் ப்ருத்வீ தத்வமும், மணிபூரகத்தில் ஜல தத்வமும், ஸ்வாதிஷ்டாநத்தில் அக்னி தத்வமும், அநாஹதத்தில் வாயு தத்வமும், விசுத்தியில் ஆகாச தத்வமும், ஆக்ஞாசக்ரத்தில் மனஸ் தத்வமாகவும் தத்வங்கள் விளங்கிவருகின்றன. இதே ப்ரகாரம் ஸமஷ்டியான விராட் புருஷனுடைய சரீரமென்ற இந்த லோகத்தில் முக்யமான ஸ்தலங்களைத் தெரிந்துகொள்ளலாம். மூலாதார ஸ்தானத்தில் லிங்காக்ருதியாக ப்ருத்வி தத்வம் விளங்கிவரும் க்ஷேத்ரமோ, அதாவது பார்த்திவலிங்கம், காளஹஸ்தி க்ஷேத்ரம். மணிபூரகம் என்ற ஜலதத்வம் ஜம்புகேச்வரம் ஸ்வாதிஷ்டாநம் என்ற அக்னிதத்வம் திருவண்ணுமலை. அனுஹதம் என்ற வாயு தத்வம் ஆவடையார்கோவில். விசுத்தி என்ற ஆகாச தத்வம் சிதம்பர க்ஷேத்ரம். மனஸ் தத்வம் என்ற ஆக்ஞா சக்ரமே வாராணஸீ என்ற காசி க்ஷேத்ரமாகும். காரிய காரண அதீதமான தத்வம் ப்ரம்மரந்த்ரத்திலுள்ளது. அதுதான் த்வாதசாந்தம் என்று சொல்லப்படும் ஹாலாஸ்ய க்ஷேத்ரமாகும்,

ஸர்வேச்வரியான பராம்பிகை என்ற ஆனந்த பைரவியும், ஆநந்தபைரவன் என்ற காமேச்வரனும் ஒரே தத்வம் என்று முன் ச்லோகத்தில் சொல்லப் பட்டது. சிவனும் சக்தியும் ஒரே தத்வம் என்பது தான் வேதாநுஸாரியான சாபத தந்த்ரத்தின் ஸித் தாந்தமாகும்.

லோகத்தில் காரியம், காரணம் என்று இரு வகைப் பொருள் ப்ரஸித்தமானது. ம்ருதபிண்டம் (மண்) காரணம். கட, சராவாதிகள் (பானை, குடம்) கார்யம், கடசராவாதிகளை கார்ய பரிணாமமென்றும், பிண்டாகாரமான ம்ருத்தை காரண பரிணாமமென்றும் சொல்லப்படும். சுத்தமான ம்ருத்தோ கார்யத்திலும் சேர்ந்ததல்ல, காரணத்திலும் சேர்ந்ததல்ல. கார்ய காரண விலக்ஷணமான சுத்தமான தத்வமாகும். கார்ய பரிணாமத்திற்கோ, காரண பரிணாமத்தில் அந்தர்பாவத் தைச் செய்து, காரணமாக பரிணமிப்பதற்கு உண் டான உபாதியையும் தள்ளி, சுத்தமான ஸ்வரூபத்தில் ஸஞ்சரிக்கிறவர்களே வேதாந்திகள் என்று சொல்லப் படுவார்கள். ஸ்ரீ வித்யா தந்த்ரத்திலோ சிவன் என்று சொல்லப்படும் தத்வமானது, ஸத், சித், ஆனந்தம் என்று உபநிஷத்துகளில் சொல்லப்பட்ட தத்வம் தான். எந்த ப்ரம்மத்தை உபநிஷத்துக்கள் லக்ஷண வ்ருத்தியை அவலம்பித்தோ, அல்லது அந்த தர்மத்தை நிராகரித்தோ, போதிக்கின்றதுகளோ அந்த ப்ரும்ம தத்வம்தான் நிஷ்கள பரசிவ ஸ்வரூபம் என்று சொல்லப்படும். பராசக்தி என்று சொல்லப்படும் பர தேவதையோ அந்த நிஷ்கள பரசிவ ஸ்வருபத்தைக் காட்டிலும் வேறல்ல. ஆனால், நிஷ்கள பரசிவா பின்னமான தேஜஸ்ஸானது சிவனை புருஷனைப்போல் பாவிக்கச் செய்து, தான் சிவனுடைய ஸஹதர்ம சாரிணிபோல் ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்த தான் எண்ணுவதும், ப்ருத்வி, அப், தேஜஸ், வாயு, ஆகாசம், மனஸ் என்ற தத்வங்களில் அடங்கிய ஸமஸ்த ஜகத்

தாக அதாவது கார்ய ப்ரபஞ்சமாக தனது ஸ்வரூ
பத்தை பரிணமிக்கும்படி செய்யவேண்டும் என்ற
எண்ணமும் ஒரு லீலைதான். சிவன், சக்தி, ப்ரபஞ்
சம் என்று மூன்று தத்வங்களை முதலில் க்ர
ஹித்துக் கொள்ளவேண்டும். கடம், ம்ருத் பிண்
டம், ம்ருத் என்ற மூன்றுமே இதற்கு
உதாரணமாகும். கார்ய வஸ்துவானது ப்ர
பஞ்சமாகும். காரண வஸ்துவானது சக்தியாகும்.
கார்ய காரண விகாரமற்ற நிஷ்கள ப்ரும்மமே
சிவனாகும். கார்ய வஸ்துவோ, காரணத்தைக் காட்டி
லும் வேறில்லாததினால், கார்ய ப்ரபஞ்சத்தை காரண
சக்தியாகிய பராசக்தியினிடத்தில் அந்தர்பாவப்
படுத்தி கார்ய வஸ்து என்பது இல்லாத காரணத்தால்
காரணம் என்ற வ்யவஹாரத்தையும் பாதித்துவிட்டு
காரணம் என்ற வ்யவஹாரம் போனபிறகு அந்த சித்
சக்தியானவள் நிஷ்கள பரசிவ ஸ்வரூபமாகவே
பாஸித்துவரும் காரணத்தால் முடிவில் நிஷ்கள பர
சிவமே அவசேஷமாக மிஞ்சும் காரணத்தைக்கொண்
டும் அந்த நிஷ்கள பரமசிவமே அஹ் (அஹம்) (அஹம்)
என்ற பதத்தின் பொருள் என்ற தாத்பர்யத்தை நிர்
தாரணம் செய்துகொண்டு ஸோஹ் (ஸோஹம்) (ஸோஹம்)
பாவனையை அப்யாஸத்திற்கு கொண்டு வருகிற
உபாஸகர்களுக்கு ஸஹஸ்ர கமலம் என்றும் த்வாத
சாந்தம் என்றும் பூலோக சிவலோகம் என்றும் ப்ரம்
மரந்த்ரம் என்றும் ஹாலாஸ்யம் என்றும் வர்ணிக்கப்
படும் சந்த்ரமண்டலத்தில் சிவாபின்னமான சக்த்ய
பின்னமான சிவனோ, சக்தியோ, எவ்விதமானாலும்
ஸரி, நிஷ்களமாயும் நிரஞ்ஜனமாயும், குணாதீதமாயும்
கார்ய காரண விபாக விதுரமாயும், ஸத்தாயும், சித்தா
யும், ஆநந்தமாயும், சாந்தமாயும், ப்ரக்ஞானகனமாயும்
சிவமாயுமுள்ள பரஞ்ஜோதிஸ்ஸில் ஸாக்ஷாத்காரம்
ஸித்தித்து ஜீவன்முக்தி ஸுகத்தையும், ப்ராரப்த சரீர
பதனத்திற்குப் பிற்பாடு விதேஹமுக்தி ஸுகத்தையும்
அனுபவிக்கக்கூடிய அர்ஹர்களாக உபாஸகர்கள் ஆக

லாம் என்ற மஹிமையை இந்த ச்லோகம் ப்ரதிபாதிக்கிறபடியால், तत्त्वमसि (தத்வமஸி) (தத்வமஸி) என்றது முதலான மஹாவாக்யத்தோடு இந்த ச்லோகத்தை ஸமானமாகக் கருதி, புண்யஜனங்கள் வைராக்யத்துடன் ஏகாந்தமான தேசத்தில் ஸுகாஸனத்தில் அமர்ந்துகொண்டு லய, விக்ஷேபம் என்ற மனதினுடைய தோஷங்களைத் தள்ளி, சப்தம் முதலான விஷயாதிகளில் ச்ரோத்ரம் முதலான இந்த்ரியங்களை ப்ரவ்ருத்திக்கச் செய்யாமல் செய்துகொண்டு ஸகலவிதமான ஜகத்தையும் ப்ருத்வி முதல் மனது வரையிலுமுள்ள ஆறு தத்வங்களில் அடக்கி, அந்த ஆறு தத்வங்களையும், சிவயுவதிஎன்ற பாவத்தை யடைந்த காரண சக்தியிலடக்கி, அந்த காரண சக்தியை அகண்டமாகச் செய்து அதில் अहं (அஹம்) (அஹம்) பதார்த்தத்தை முழுக்கச் செய்யும் ஸமாதியில் ஈடுபடவேண்டும் என்ற ரஹஸ்யமானது போதிக்கப்படுகிறது. தேவீ ஸந்தர்சனத்திற்கோ, அதன் மூலம் தேவீ ஸாயுஜ்யத்திற்கோ, இந்த ச்லோகத்தை பாராயணம் செய்வது ரொம்பவும் அந்தரங்க உபாயமாகும். பஞ்சபூதங்களையும் பஞ்சீகரண ப்ரக்ரியையை அனுஸரித்து பஞ்சீகரணம் செய்தால், ஒவ்வொரு பூதத்திலும் ஐந்து ஐந்து தத்வங்க ளடங்கியிருப்பதினால் அந்த க்ரமத்தை அனுஸரித்து, ஐந்து பூதங்களிலும் 25 தத்வங்கள் இருந்துவருகிறபடியாலும் மனது என்பதில் ஞானேந்த்ரியம் ஐந்து, கர்மேந்த்ரியம் ஐந்து, சப்தாதி விஷயம் ஐந்து, மொத்தம் பதினைந்து தத்வங்களடக்கப்பட்டு மனதையும் சேர்த்து 16 தத்வங்களாக ஆகிறபடியால் இந்த ஆறு தத்வங்களையும் கவனித்தால், 41 தத்வங்கள் வெளியாகிறபடியால் அந்த தத்வ ஸங்க்யையை அனுஸரித்து ஒவ்வொரு தத்வத்திற்கும் ஒவ்வொரு லக்ஷம் ஆவர்த்தி ப்ரகாரம் 41 லக்ஷம் ஆவர்த்தி இந்த ச்லோகத்தை அர்த்தம் தெரிந்தோ, தெரியாமலோ, மூடபக்தியோடோ ஞான பக்தியோடோ, பாராயணம் செய்து முடித்தால்

உடன் ஆநந்தபைரவர், ஆநந்தபைரவி என்ற ஆதி தம்பதிகளை ப்ரத்யக்ஷமாக தர்சனம் செய்யலாம் என்பது ஸித்தம்.

## 36. ஆக்ஞாசக்ரத்தின் மஹிமை.

तवाज्ञा चक्रस्थं तपनशशिकोटिद्युतिधरं
परं शंभुंवन्दे परिमिळितपार्श्वं परचिता ।
यमाराध्यन् भक्त्या रविशशिशुचीनां अविषये
निरालोकेलोके निवसतिहिभालोकभुवने ॥ ३६ ॥

𑌤𑌵𑌾𑌜𑍍𑌞𑌾 𑌚𑌕𑍍𑌰𑌸𑍍𑌥𑌂 𑌤𑌪𑌨𑌶𑌶𑌿𑌕𑍋𑌟𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌧𑌰𑌂
𑌪𑌰𑌂 𑌶𑌂𑌭𑍁𑌂𑌵𑌨𑍍𑌦𑍇 𑌪𑌰𑌿𑌮𑌿𑌳𑌿𑌤𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌂 𑌪𑌰𑌚𑌿𑌤𑌾 ।
𑌯𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯𑌨𑍍 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌰𑌵𑌿𑌶𑌶𑌿𑌶𑍁𑌚𑍀𑌨𑌾𑌂 𑌅𑌵𑌿𑌷𑌯𑍇
𑌨𑌿𑌰𑌾𑌲𑍋𑌕𑍇𑌲𑍋𑌕𑍇 𑌨𑌿𑌵𑌸𑌤𑌿𑌹𑌿𑌭𑌾𑌲𑍋𑌕
𑌭𑍁𑌵𑌨𑍇 ॥ ௩௬ ॥

தவாக்ஞா சக்ரஸ்தம் தபநசசிகோடித்யுதிதரம்
பரம் சம்பும் வந்தே பரிமிளித பார்ச்வம் பரசிதா ।
யமாராத்யன் பக்த்யா ரவிசசிசுசீநாம் அவிஷயே
நிராலோகேலோகே நிவஸதிஹி பாலோகபுவநே ॥ 36 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே !

यं (𑌯𑌂) (யம்) = எந்த காமேச்வரனை

भक्त्या (𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾) (பக்த்யா) மிகவும் ப்ரேமையோடு

आराध्यन् (𑌆𑌰𑌾𑌧𑍍𑌯𑌨𑍍) (ஆராத்யந்) = த்யானம் செய்கிற புருஷன்

रविशशिशुचीनां (𑌰𑌵𑌿𑌶𑌶𑌿𑌶𑍁𑌚𑍀𑌨𑌾𑌂) (ரவிசசிசுசீநாம்) = லோகத்தை பாஸிக்கச் செய்கிற சந்த்ரன், ஸூர்யன், அக்னி என்ற மூன்று பேர்களாலும்

अविषये (𑌅𑌵𑌿𑌷𑌯𑍇) (அவிஷயே) = பாஸ்யம் ஆகாததாயும் (ப்ரகாசப்படுத்த தகாததாயும்)

निरालोके (𑌨𑌿𑌰𑌾𑌲𑍋𑌕𑍇) (நிராலோகே) = ஆலோகம் என்ற தன் ஸ்வரூபத்திற்கு வேறான ஒளி அற்றதாயும்

अलोके (𑌅𑌲𑍋𑌕𑍇) (அலோகே) = லோக விலக்ஷணமாயும் இருக்கிற

भालोकभुवने (𑌭𑌾𑌲𑍋𑌕𑌭𑍁𑌵𑌨𑍇) (பாலோகபுவநே) = பரஞ் ஜோதிர்மயமான லோகத்தில் (அதாவது உன்னுடைய ஸாயுஜ்ய பதவியில்)

हि (𑌹𑌿) (ஹி) = யாதொரு காரணத்தால்

निवसति (𑌨𑌿𑌵𑌸𑌤𑌿)(நிவஸதி) = வஸிக்கின்றானோ

तस्मात् (𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍) (தஸ்மாத்) அக்காரணத்தினால்

तपनशशिकोटिद्युतिधरं (𑌤𑌪𑌨𑌶𑌶𑌿𑌕𑍋𑌟𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌧𑌰𑌂) (தபநசசிகோடி த்யுதிதரம்) = கோடிக்கணக்கான சந்த்ர ஸூர்யாளுடைய காந்தியை தரிக்கிறவனையும்

परचिता (𑌪𑌰𑌚𑌿𑌤𑌾) (பரசிதா) = ஸகுண நிர்குண சக்திகளால்

परिमिलित पार्श्वं (𑌪𑌰𑌿𑌮𑌿𑌳𑌿𑌤 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌂) (பரிமிளித பார்ச்வம்) = அலங்கரிக்கப்பட்ட இடது வலது பார்ச்வத்தோடு கூடினவனையும்

तव (𑌤𑌵) (தவ) = உன் ஸம்பந்தமான

आज्ञाचक्रस्थं (𑌆𑌜𑍍𑌞𑌾𑌚𑌕𑍍𑌰𑌸𑍍𑌥𑌂) (ஆக்ஞாசக்ரஸ்தம்) = ஆக்ஞா சக்ரத்தில் அதாவது இரு புருவங்களுக்கும் நடு மத்தியிலுள்ள ஸ்தானத்தில் டாஸிக்கிறவனுயும் உள்ள

तं (𑌤𑌂) (தம்) = அந்த

परं शंभुं (𑌪𑌰𑌂 𑌶𑌂𑌭𑍁𑌂) (பரம் சம்பும்) = ச்ரேஷ்டனுன காமேச்வரனே

अहं (𑌅𑌹𑌂) (அஹம்) = நான்

वन्दे (𑌵𑌨𑍍𑌦𑍇) (வந்தே) = நமஸ்கரிக்கிறேன்.

தாத்பர்யம் :—இந்த ச்லோகமும் உத்தர கௌல மதத்தை அனுஸரித்து தேவி ஸாயுஜ்ய பதவியை அடைய அந்தரங்கமான உபாயத்தைச் சொல்லும் ச்லோகமாகும். அந்த உபாயமோ, வ்யஷ்டி சரீரத்தில் இரண்டு புருவங்களுக்கும் நடுவிலுள்ள ஆக்ஞா சக்ரம் என்ற சக்திபீடத்தில் காமேச்வரனே உபாஸிப்பதேதானுகும். ஸமஷ்டி சரீரத்திலோ, வாராணஸீ என்ற காசீ க்ஷேத்ரத்தில் விச்வநாதமூர்த்தியை ஆராதிப்பதேயாகும். ஜீவனுக்கு ஈச்வரனுடைய தர்சனம் ஏற்பட்டு அந்த ஜீவனே இன்ன இன்ன விதமாக நடந்துகொள்ளவேண்டும் என்று ஈச்வரன் கட்டளேயிடுவதே ஆக்ஞாசக்ரத்தில் ஏற்படும் ஆச்சர்யமாகும். இந்த க்ரந்த கர்த்தாக்களான பகவத்பாதாள் தனது குருவான பூஜ்ய கோவிந்த பகவத்பாதாளுடைய ஆக்ஞையை அதாவது உபநிஷத்துக்கள் ப்ரம்மஸூத்ரம், பகவத்கீதை முதலானவைகளுக்கு பாஷ்யம் செய்யவேண்டும் என்ற கட்டளேயை நிறைவேற்றுவதற்காக உபநிஷத்துக்களுடைய அபிப்ராயத்தை இன்னதுதான் என்று அறிந்துகொள்ளும் பொருட்டு பரமேச்வரனே ஸந்திக்க காசீ க்ஷேத்ரம் சென்று அங்கு சில காலம் வஸித்து, பரமேச்வரனே

ஸந்தித்து, உபநிஷத்துக்கள் எந்த பரமேச்வரனுடைய வாக்குகளோ அந்த பரமேச்வரனுடைய அபிப்ராயம் இன்னதுதான் என்பதையும் அறிந்துகொண்ட பிற்பாடு பதரிகாச்ரமம் சென்று, உபநிஷத்துக்களுக்கும் மற்ற ப்ரம்மஸூத்ரம் முதலானவைகளுக்கும் பாஷ்யம் செய்ததாக ஸ்ரீ சங்கர விஜயம் மூலமாக தெரிய வருகிறது. அதனால் ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் ஸங்க்ரமணம், (ஸந்திப்பு) ஏற்பட்டு ஜீவனிடம் ஈச்வரனுடைய ஆக்ஞை ப்ரகாசிக்கும் சக்ரமே ஆக்ஞா சக்ரமென்று சொல்லப்படும். அதில் காமேச்வரன என்ற சைவமான ஜோதிஸ் ப்ரகாசித்துவருகின்றது. அந்த மஹாலிங்கம் இரண்டு சக்திகளாலும், இரண்டு பார்ச்வங்களிலும் அலங்கரிக்கப்பட்டுவருகிறது. ஸகுண சக்தி, நிர்குண சக்தி என்று தேவீபாகவதம் முதலான க்ரந்தங்களில் அந்த சக்திகளைப் பற்றி விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. காசீ க்ஷேத்ரத்திலும், துர்க்கை, விசாலாக்ஷி என்று அந்த இரண்டு சக்திகள்தான் ப்ரஸித்தமாக விளங்கிவருகின்றன. அவ்விதமான சக்திகளோடுகூட அந்த காமேச்வரனே, கோடி ஸூர்யன், கோடி சந்த்ரன் இவர்களுடைய ப்ரகாசம் போல் பாஸித்துவருகிறார். இந்த பரமேச்வரனை உபாஸிக்கிறவர்கள் ஸூர்யன், சந்த்ரன், அக்னி முதலான அவபாஸகமான ஜோதிஸ்ஸுகளுக்கு பாஸ்யமாகாத்தான ஸ்தானத்தை அடைகிறார்கள். அந்த ஸ்தானத்தைத்தான்,

न तत्र सूर्यो भाति नचंद्रतारकं
नेमाविद्युतो भान्ति कुतोयं अग्निः ।
तमेव भान्तं अनुभाति सर्वं
तस्य भासा सर्वं इदं विभाति ॥

ந தத்ர ஸூர்யோ பாதி நசந்த்ரதாரகம்
நேமாவித்யுதோ பாந்தி குதோயம் அக்நி:।

𑌤𑌮𑍇𑌵 𑌭𑌾𑌨𑍍𑌤𑌂 𑌅𑌨𑍁𑌭𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂
𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 𑌇𑌦𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 ॥

ந தத்ர ஸூர்யோ பாதி நசந்த்ரதாரகம்
நேமாவித்யுதோ பாந்தி குதோயம் அக்நி: ।
தமேவ பாந்தம் அநுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வம் இதம் விபாதி ॥

என்ற ச்ருதியும்,

नतद्भासयते सूर्यः नशशांको नपावकः ।
यद्गत्वा ननिवर्तन्ते तद्धाम परमं मम ॥

𑌨𑌤𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 𑌨𑌶𑌶𑌾𑌂𑌕𑍋 𑌨𑌪𑌾𑌵𑌕𑌃 ।
𑌯𑌦𑍍𑌗𑌤𑍍𑌵𑌾 𑌨𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮 ॥

நதத்பாஸயதே ஸூர்ய: நசசாங்கோ நபாவக: ।
யத்கத்வா நநிவர்தந்தே தத்தாம பரமம் மம ॥

என்ற ஸ்ம்ருதியும் போதிக்கின்றன. அந்த ஸ்தானமோ, ஸ்வயம்ப்ரகாசமான ஸ்தானமானதினால், ஸூர்யன் முதலிய கார்ய ஜோதிஸ்ஸுகளுக்கு பாஸ்யமாக ஆகாது. வேறு ப்ரகாசங்களுக்கு ப்ரகாச்யமாக ஆகாமல், எப்பொழுதும் ப்ரகாசித்துக்கொண்டுவரும் வஸ்துவே ஸ்வயம்ப்ரகாச வஸ்துவென்று வேதாந்த நூல்களில் சொல்லப்படும். ஆத்மாவோ ஸூர்யன் முதலான ப்ரகாச வஸ்துக்களுக்கு ப்ரகாச்யமாக ஆகிறதில்லை. ஆகிலும் எப்பொழுதும் அவனவனுக்கு அவனவனுடைய ஆத்மா ப்ரத்யக்ஷமாகவே பாஸித்துக்கொண்டுவருகிறது. அதனால் ஆத்ம தத்வத்தை ஸ்வயம் ஜோதிஸ் என்று சொல்லவேண்டும். அந்த ஆத்மதத்வ ஸ்வரூபிணியான ஸாக்ஷாத் பராம்பிகையும் ஸ்வயம்ஜோதிஸ்வரூபமே. அந்த தேவியினுடைய ஸ்வரூபத்தை ஸூர்யன் முதலான கார்ய ஜோதிஸ்ஸுகளுக்கு ப்ரகாசம் செய்துவைக்க சக்தியே கிடை

யாது. அந்த ஸூர்யன் முதலான கார்ய ஜோதிஸ்கள் லோகத்தை ப்ரகாசிக்கச் செய்யும் ஸாமர்த்தியத்தையும் பரஞ்ஜோதி ஸ்வரூபிணியான பராசக்தியின் கடாக்ஷ பாதத்தினால்தான் அடைந்தவர்கள். அதனால் தேவியினுடைய ஸ்வரூபத்தில் கார்ய ஜோதிஸ்ஸூக்கள் ப்ரவ்ருத்திக்கவே ப்ரவ்ருத்திக்காது. அந்த தேவியினுடைய ஸ்வஸ்தானமோ ஸஹஸ்ரகமலம் என்று சொல்லப்படும் ப்ரம்மரந்த்ரமே ஆகும். அந்த ஸ்தானத்தில் ஆக்ஞாசக்ரத்தில் காமேச்வரனை உபாஸித்த ஸாதகர்கள் தேவியினுடைய பரஸ்வரூபத்தை தர்சனம் செய்து தேவீ ஸாயுஜ்யத்தை அடைகிறார்கள். தேவீ ஸாயுஜ்யத்தை அடைவதற்கு ஆக்ஞாசக்ரத்தில் சிவஸ்வரூபத்தை பஜனம் செய்வதேதான் முக்யமான உபாயமாகும். தேவியினுடைய அருகில் வருவதற்கே சென்ற அநேககோடி ஜன்மாக்களில் சிவாராதனமோ, குருகுல வாஸமோ செய்து ஆகவேண்டும் என்று ஞானஸம்பந்தர் முதலான மஹாகவிகள்,

शिक्षामवाप्यमहतीं निकटे गुरूणां
जन्मान्तरेषु च परं शिवमर्चयित्वा ।
हे मीनाक्षि पुण्यपरिपाकवशात् त्वदंघ्रिं
प्राप्तस्य कस्यचिदुदेति चिदात्म बोधः ॥

𑌶𑌿𑌕𑍍𑌷𑌾𑌮𑌵𑌾𑌪𑍍𑌯𑌮𑌹𑌤𑍀𑌂 𑌨𑌿𑌕𑌟𑍇 𑌗𑍁𑌰𑍂𑌣𑌾𑌂
𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍇𑌷𑍁 𑌚 𑌪𑌰𑌂 𑌶𑌿𑌵𑌮𑌰𑍍𑌚𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 ।
𑌹𑍇 𑌮𑍀𑌨𑌾𑌕𑍍𑌷𑌿 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌰𑌿𑌪𑌾𑌕𑌵𑌶𑌾𑌤𑍍 𑌤𑍍𑌵𑌦𑌂𑌘𑍍𑌰𑌿𑌂
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌦𑍁𑌦𑍇𑌤𑌿 𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮 𑌬𑍋𑌧𑌃 ॥

சிக்ஷாமவாப்யமஹதீம் நிகடே குரூணாம்
ஜன்மாந்தரேஷு ச பரம் சிவமர்சயித்வா ।
ஹே மீனாக்ஷி புண்யபரிபாகவசாத் த்வதம்க்ரிம்
ப்ராப்தஸ்ய கஸ்யசிதுதேதி சிதாத்ம போத: ॥

என்றபடி நிரூபணம் செய்திருக்கிருர்கள். ஆகையால் முக்திக்கு அந்தரங்க ஸாதனமான ப்ரம்மவித்யைக்கு அதிதேவதையான பராம்பிகையை ஸஹஸ்ரகமலத்தில், விராட் சரீரத்தில், ஹாலாஸ்ய க்ஷேத்ரத்தில் ப்ரத்யக்ஷமாக தர்சனம் செய்யவேண்டுமானுல் ஆக்ஞா சக்ரத்தில் வெளியில் வாராணஸீ என்ற காசீ க்ஷேத்ரத்தில் பரசம்பு என்ற சப்தத்தால் சொல்லப்படும் ஈச்வரனை ஸகுண, நிர்குண சக்திகளோடு சேர்த்து பரம பக்தியுடன் (அதாவது, துர்கை, புவனேச்வரி என்ற சக்திகளோடு சேர்த்து) ஆராதிக்கவேண்டியது என்று தேவீ ஸாயுஜ்யத்திற்குக் காரணமான உபாஸனு விசேஷத்தை பகவத்பாதாள் நிரூபிக்கின்ருர்கள்.

### 37. விசுத்தி சக்ரத்தின் மஹிமை.

विशुद्धौ ते शुद्धस्फटिकविशदं व्योमजनकं
शिवं सेवेदेवीमपि शिवसमान व्यवसितां ।
ययोः कांत्या यांत्याः शशिकिरणसारूप्यसरणेः
विधूतान्तर्ध्वान्ता विलसति चकोरीव जगती ।' ३६ ॥

𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑍌 𑌤𑍇 𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌵𑌿𑌶𑌦𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮𑌜𑌨𑌕𑌂
𑌶𑌿𑌵𑌂 𑌸𑍇𑌵𑍇𑌦𑍇𑌵𑍀𑌮𑌪𑌿 𑌶𑌿𑌵𑌸𑌮𑌾𑌨 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾𑌂 ।
𑌯𑌯𑍋𑌃𑌕𑌾𑌂𑌤𑍍𑌯𑌾𑌯𑌾𑌂𑌤𑍍𑌯𑌾𑌃𑌶𑌶𑌿𑌕𑌿𑌰𑌣𑌸𑌾𑌰𑍂𑌪𑍍𑌯𑌸𑌰𑌣𑍇𑌃
𑌵𑌿𑌧𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌾 𑌵𑌿𑌲𑌸𑌤𑌿 𑌚𑌕𑍋𑌰𑍀𑌵 𑌜𑌗𑌤𑍀
॥ ௩௭ ॥

விசுத்தௌ தே சுத்தஸ்படிகவிசதம் வ்யோமஜநகம்
சிவம் ஸேவேதேவீமபி சிவஸமாந வ்யவஸிதாம் ।
யயோ: காம்த்யா யாம்த்யா: சசிகிரணஸாருப்யஸரணே:
விதூதாந்தர்த்வாந்தா விலஸதி சகோரீவ ஜகதீ ॥ 37 ॥

हे भगवति (ஹே ஹமவதி) = ஹே பராசக்தியே!
(ஹே பகவதி)

ते (தெ) (தே) = உன்னுடைய ஸ்தானமான

विशुद्धौ (விஶுத்³தௌ) (விசுத்தௌ) = விசுத்தி சக்ரத்தில்

शुद्धस्फटिकविशदं (ஶுத்³த⁴ஸ்ப²டிக விஶத³ம்) (சுத்தஸ்படிக விசதம்) = நிர்மலமான ஸ்படிகம் போல் பிரகாசிக்கின்றவனையும்

व्योमजनकं (வ்யோமஜநகம்) (வ்யோமஜநகம்) = ஆகாச தத்வத்திற்கு காரணமாயும் விளங்குகிற

शिवं (ஶிவம்) (சிவம்) = பரமேச்வரனையும்

शिवसमानव्यवसितां (ஶிவஸமாநவ்யவஸிதாம்) (சிவஸமாநவ்யவஸிதாம்) = பரமேச்வரன் எவ்விதம் நிச்சயம் செய்கிறாரோ அதேமாதிரி நிச்சயத்தோடு கூடினவளான

देवीं (தே³வீம்) (தேவீம்) = பரதேவதையான

त्वां अपि (த்வாம் அபி) (த்வாம் அபி) = உன்னையும்

सेवे (ஸேவே) (ஸேவே) = பஜிக்கிறேன்.

ययो: (யயோ:) (யயோ:) = எந்த காமேச்வரன் காமேச்வரி இருவர்களுடைய

शशिकिरणसारूप्य सरणे: (ஶஶிகிரணஸாரூப்ய ஸரணே:) (சசிகிரண ஸாரூப்ய ஸரணே:) = சந்த்ர கிரணத்தின் ஸாத்ருச்யமடையும் வழியோடு கூடினதாயும்

यान्त्या: (யாஞ்த்யா:) (யாந்த்யா:) = வெளியில் ப்ரஸரிக்கிற தாயுமுள்ள

कान्त्या: (காஞ்த்யா:) (காந்த்யா:) = ஜோதிஸ்ஸிலிருந்து

जगती (ஜமதீ) (ஜகதீ) = லோகமானது

विधूतान्तर्ध्वान्ता सती (விமூதாஞ்யூாஞா ஸதீ) (விதூதாந்தர்த் வாந்தா ஸதீ) = நாசத்தை யடைந்த உள் இருட்டு என்ற அக்ஞா னத்தோடு கூடினதாய்

चकोरीव (அகொரீவ) (சகோரீவ) = பெண் சகோர பக்ஷியை போல்

विलसति (விலஸதி) (விலஸதி) = விளங்கிவருகிறதோ

தாத்பர்யம் :—முன் ச்லோகத்தில் ஆக்ஞா சக்ரத்தில் மனது என்ற தத்வத்திற்கு அதிஷ்டான தேவதையான பரசம்புவினுடைய த்யான மஹிமை சொல்லப்பட்டது. அந்த மனதை உபாதியாக உடைத்தான பரசம்புவென்ற ஆத்மாவினிடமிருந்து तस्माद्वा एतस्मात् आत्मन: आकाश: संभूत: (தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மந: ஆகாஶ: ஸம்பூத:) (தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மந: ஆகாச:ஸம்பூத:) என்ற ச்ருதியை அனுஸரித்து ஆகாசமானது உண்டாகிறபடியால் காரண கார்ய க்ரமத்தை அனுஸரித்து விசுத்தி சக்ரத்தில் ஆகாச தத்வத்திற்கு அதிஷ்டான தேவதையான பார்வதி பரமேச்வராளுடைய த்யான மஹிமையானது சொல்லப்படுகிறது. உபாஸகர்களுடைய கண்டதேசத்திலுள்ள பன்னிரண்டு தளத்தோடுகூடின சக்ர விசேஷமே, விசுத்தி சக்ரம் என்று சொல்லப்படும். அந்த சக்ரத்தில் நிர்மல

மான ஸ்படிகம்போல் பரமேச்வரன் விளங்கிவருகிறார். பரமேச்வரனைப்போலவே தேவியான பார்வதியும் பாஸித்துவருகிறாள். அந்த இருவர்களும் எல்லா விஷயத்திலும் ஒரே விதமான அபிப்ராயத்தோடு கூடினவர்கள். ஆகாச தத்வமும் அவர்களுடைய ஸந்நிதியில் தான் ஆவிர்பவித்தது. சந்த்ர கிரணமானது உத்கடமாக விளங்க ஆரம்பித்த ஸமயத்தில் சகோரபக்ஷிகள் ராத்ரியிலுள்ள இருட்டிலிருந்தும் விடுதலையடைந்து எவ்விதம் ஸந்தோஷமடையுமோ, அதுபோலவே விசுத்தி சக்ரத்திலுள்ள பார்வதி பரமேச்வராளுடைய ஆநந்தமயமான ஜோதிஸ்ஸால் ஸகல ஜகத்துமே தன் தன் ஹ்ருதயத்திலுள்ள மூலாக்ஞானமென்ற இருளை த்வம்ஸம் செய்துகொண்டு ஆநந்தத்தை யடைகிறது. हार्दसन्तमसापहा (𑌹𑌾𑌰𑍍𑌦𑌸𑌨𑍍𑌤𑌮𑌸𑌾𑌪𑌹𑌾) (ஹார்தஸந்தமஸாபஹா) என்ற லலிதா த்ரிசதியிலுள்ள நாமாவையே இந்த ச்லோகத்தில் நயனம் செய்து கொள்ளலாம், சந்த்ரனும், ஸூர்யனும் ஒன்று சேர்ந்துவிட்டால் அன்று இரவில் ப்ரகாசம் இல்லாததுபோல் சந்த்ரனுடைய ஸ்தானத்திலுள்ள பார்வதியும், ஸூர்யனுடைய ஸ்தானத்திலுள்ள பரமேச்வரனும் ஒன்று சேர்ந்து விசுத்தி சக்ரத்தில் பாஸிப்பதை த்யானம் செய்தால் மற்ற ஆநந்தங்கள் சோஷித்துப்போய் ஸமஷ்டியாக பேராநந்தம் ஸாதகர்களுக்கு பொங்க ஆரம்பித்து அவர்கள் ஸந்தோஷிக்கிறார்கள். சகோர பக்ஷிகளுக்கு சந்த்ரிகை இல்லாதபோனால் ஜீவனம் எவ்விதம் துர்லபமோ அதுபோல் விசுத்தி சக்ரத்தில் பார்வதி பரமேச்வராளுடைய ஆநந்தமயமான காந்தியே ஸகல ப்ராணிகளுக்கும் ஜீவனோபாயமாகும். அதில் एषह्येव आनन्दयाति (𑌏𑌷𑌹𑍍𑌯𑍇𑌵 𑌆𑌨𑌨𑍍𑌦𑌯𑌾𑌤𑌿) (ஏஷஹ்யேவ ஆநந்தயாதி) என்ற ச்ருதியே ப்ரமாணமாகும்.

ஆகையால் விசுத்தி சக்ரத்தில் பார்வதி பரமேச்வராளுடைய உபாஸனமானது ரொம்பவும் முக்ய

மானது. விராட்புருஷனுடைய சரீரத்தில் விசுத்தி சக்ரம் என்பது சிதம்பரக்ஷேத்ர மாகும். ஆனால் ஹ்ருதயாகாசம் என்று சிதம்பரத்தைச் சொல்லுகிறார்களே என்றாலோ, விசுத்திசக்ரத்தைத்தான் ஹ்ருதயாகாசம் என்று சொல்லவேண்டும்.

அனாஹத சக்ரமானது வக்ஷஸ் என்ற ஸ்தானத்தில் அமைக்கப்பட்டுள்ளது. அந்த வக்ஷஸ்ஸுக்கு மேல்பாகத்திலுள்ளது ஹ்ருதயமானதினால் கண்டதேசத்திற்கு ஸமீபத்தில்தான ஹ்ருதய தேசமும் ஸித்திக்கக்கூடும். ஆகையால் விசுத்தி சக்ரத்தில் ஆகாச தத்வத்தைப் போதிப்பதினால் ஹ்ருதயாகாசத்தைச் சொல்வதாகத்தான் ஆகும். பஹிர் தேசத்தில் ஹ்ருதயாகாசமாகிய சிதம்பர க்ஷேத்ரத்தில் கனகஸபையில் சிவகாமசுந்தரீ என்ற பரதேவதையோடு சேர்த்தே சித் ஸபேசன் என்ற காமேச்வரனை ப்ராணிகள் தர்சனம் செய்வதும் லோகத்தில் அனுபவத்தில் இருந்துவருகிறது. அந்த அனுபவத்தை ஒட்டியே அந்தர்தேசத்திலும் "விசுத்தி சக்ரம ஹ்ருதயாகாசத்தில் சிவை, சிவன் இருவர்களையும் சேர்த்தே பஜிக்கிறேன்" என்று பரமாசார்யாள் சொல்கிறார்கள். அந்தர்முகாளானால், அந்தர்தேசத்திலேயே விசுத்திசக்ரத்தில் மேற்சொன்னபடி உபாஸிக்கலாம். பஹிர்முகாளானால் பாஹ்ய தேசத்தில் சிதம்பர க்ஷேத்ரத்தில் ஸபாபதியை தர்சனம் செய்து வருவதே மேற்சென்ன உபாஸனமாகும். அந்த உபாஸனத்தினுடைய ஸித்திக்கு அடையாளமோ, காலக்ரமமாக ஏற்படும் அகண்டமான ஒரு ஜோதிஸ் தர்சனமாவதுதான். அந்த ஜோதிஸ் உதித்த மாத்திரத்திலேயே அக்ஞான நிவர்த்தியும் உபாஸகர்களுக்கு ஸித்திக்கிறது, அது ஸித்தித்துவிட்டால் பரமபுருஷார்த்தமாகிய ப்ரம்மபாவாபத்தியானது உபாஸகர்களுக்கு ஹஸ்தகதமாக ஆகிவிடுகிறது.

---

## 38. அநாஹத சக்ரத்தின் மஹிமை.

समुन्मीलत्संवित् कमलमकरन्दैकरसिकम्
भजे हंसद्वन्द्वं किमपि महतां मानसचरम् ।
यदालापादष्टादशगुणितविद्यापरिणतिः
यदादत्ते दोषाद्गुणमखिलमद्भ्यःपय इव ॥ ३८ ॥

𑌸𑌮𑍁𑌨𑍍𑌮𑍀𑌲𑌤𑍍𑌸𑌂𑌵𑌿𑌤𑍍 𑌕𑌮𑌲𑌮𑌕𑌰𑌨𑍍𑌦𑍈𑌕𑌰𑌸𑌿𑌕𑌮𑍍
𑌭𑌜𑍇 𑌹𑌂𑌸𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌂 𑌕𑌿𑌮𑌪𑌿𑌮𑌹𑌤𑌾𑌂 𑌮𑌾𑌨𑌸𑌚𑌰𑌮𑍍 ।
𑌯𑌦𑌾𑌲𑌾𑌪𑌾𑌦𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌗𑍁𑌣𑌿𑌤𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑌰𑌿𑌣𑌤𑌿𑌃
𑌯𑌦𑌾𑌦𑌤𑍍𑌤𑍇 𑌦𑍋𑌷𑌾𑌦𑍍𑌗𑍁𑌣𑌮𑌖𑌿𑌲𑌮𑌦𑍍𑌭𑍍𑌯𑌃𑌪𑌯 𑌇𑌵
॥ ௩௮ ॥

ஸமுந்மீலத்ஸம்வித் கமலமகரந்தைகரஸிகம்
பஜேஹம்ஸத்வந்த்வம் கிமபிமஹதாம் மாநஸசரம் ।
யதாலாபாதஷ்டாதசகுணிதவித்யாபரிணதி:
யதாதத்தே தோஷாத்குணமகிலமத்ப்ய:பய இவ ॥ 38 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே !

समुन्मीलत्संवित् कमलमकरन्दैकरसिकं (𑌸𑌮𑍁𑌨𑍍𑌮𑍀𑌲𑌤𑍍𑌸𑌂𑌵𑌿𑌤𑍍 𑌕𑌮𑌲𑌮𑌕𑌰𑌨𑍍𑌦𑍈𑌕𑌰𑌸𑌿𑌕𑌂) (ஸமுந்மீலத்ஸம்வித் கமலமகரந்தைகரஸிகம்) = நன்ருய் விகஸித்த (மலர்ந்த) யாதொரு ஞானமாகிய தாமரைப் புஷ்பமுண்டோ அதனுடைய ஆநந்தம் என்ற மகரந்தத்தை, அதாவது புஷ்ப ரஸத்தை தான் ஒருவஞக இருந்து கொண்டு அனுபவிக்கிற தாயும்

महतां (𑌮𑌹𑌤𑌾𑌂) (மஹதாம்) = ஞானிகளுடைய

मानसचरं (𑌮𑌾𑌨𑌸𑌚𑌰𑌂) (மாநஸசரம்) = மனதாகிற மானஸ ஸரஸில் ஸஞ்சரிக்கிறதாயும்

किमपि (𑌕𑌿𑌮𑌪𑌿) (கிமபி) = இன்ன விதமான மஹிமையுள்ளது என்று வாக்கினுல் வர்ணிக்க முடியாததாயும் உள்ள

हंसद्वन्द्वं (𑌹𑌂𑌸𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌂) (ஹம்ஸத்வந்த்வம்) = இரண்டு ஹம்ஸ பக்ஷிகளை

भजे (𑌭𑌜𑍇) (பஜே) = ஸேவிக்கின்றேன்.

यदालापात् (𑌯𑌦𑌾𑌲𑌾𑌪𑌾𑌤𑍍) (யதாலாபாத்) = எந்த இரண்டு ஹம்ஸங்களுடைய சப்தங்களிலிருந்தும்

अष्टादशगुणितविद्यापरिणतिः (𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌗𑍁𑌣𑌿𑌤 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑌰𑌿𑌣𑌤𑌿𑌃) (அஷ்டாதசகுணித வித்யாபரிணதி:) = பதினெட்டு விதமான கலைகளுடைய உருவம் ப்ரகாசிக்கிறதோ

यत् (𑌯𑌤𑍍) (யத்) = யாதொரு ஹம்ஸத்வந்த்வமானது

दोषात् (𑌦𑍋𑌷𑌾𑌤𑍍) (தோஷாத்) = தோஷத்தையும்

अखिलं गुणं (𑌅𑌖𑌿𑌲𑌂 𑌗𑍁𑌣𑌂) (அகிலம் குணம்) = எல்லா விதமான ஸத்குணமாகவே

अद्भ्यः (𑌅𑌦𑍍𑌭𑍍𑌯𑌃) (அத்ப்ய:) = ஜலத்திலிருந்து பிரித்து வேறாக

पय: इव (வயஃ உவ) (பய: இவ) = பாலைத் தனியாக (ப்ரஸித்தமான ஹம்ஸங்கள்) எடுத்துவிடுவது போல

आदत्ते (ஆதத்தே) (ஆதத்தே) = க்ரஹிக்கிறதோ.

தாத்பர்யம் :—ஆகாச தத்வத்திற்குப் பிறகு அதிலிருந்தும் आकाशाद्वायुः (ஆகாஶாத்வாயுஃ)(ஆகாசாத்வாயு:) என்ற ச்ருதியை அனுஸரித்து உண்டான வாயு தத்வத்திற்கு அதிஷ்டானமாகிய அநாஹத சக்ரத்தில் காமேச்வரன், கமேச்வரி இருவர்களையும் ஹம்ஸமாக த்யானம் செய்யவேண்டும் என்று இந்த ச்லோகத்தால் பகவத்பாதாள் ப்ரதிபாதிக்கின்றார்கள். हंसःसोहं सोहंहंसः (ஹம்ஸஃஸோஹம் ஸோஹம்ஹம்ஸஃ) (ஹம்ஸ:ஸோஹம் ஸோஹம் ஹம்ஸ:) என்ற अजपाविद्या (அஜபாவித்3யா) (அஜபாவித்யா) என்ற வித்யையின் பெருமை இந்த ச்லோகத்தால் வெளியாகிறது. அநாஹத சக்ரத்தில் நன்றாய் மலர்ந்த தாமரை புஷ்பம்போல் த்ருடமான ஜீவ ப்ரும்ம ஐக்ய ஞானத்தை நிரூபணம் செய்கிறார்கள். அந்த ஞானமாகிய தாமரை புஷ்பத்தின் ரஸத்தை அனுபவிக்கிற ஹம்ஸங்கள் லோகத்தில் ப்ரஸித்தமான ஹம்ஸங்களல்ல. அலௌகிகமான காமேச்வரன், கமேச்வரீ என்ற ஹம்ஸத்வந்த்வம்தான் அந்த புஷ்ப ரஸத்தை அனுபவிக்கும் சக்தியோடு கூடினது.

अहं ब्रह्मास्मि (அஹம் ப்3ரஹ்மாஸ்மி) (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்ற ஞானத்தில் பெருகுகிற ஸ்வரூபாநந்தத்தை காமேச்வரன், காமேச்வரீ இருவர்களும் பானம் செய்து நர்த்தனம் செய்கிறார்கள் என்பதே அதன் முக்யமான கருத்தாகும். ப்ரம்ம நிஷ்டர்கள் ஆத்மாவை ப்ரும்மமென்று அனுஸந்தானம் செய்யும்

பொழுதெல்லாம் ப்ரக்ருதத்தில் ஹம்ஸத்வந்த்வம் என்று சொல்லப்படும் காமேச்வரனும் காமேச்வரியும் பரமாஹ்லாதத்தை அடைந்து, அந்த ப்ரம்ம நிஷ்டனை க்ருத க்ருத்யனுகச் செய்துவிட ஸங்நத்தாளாக ஆகிருர்கள். ஆகையால், ஞானமாகிய புஷ்பத்தின் ரஸத்தை அனுபவிக்கும் ஹம்ஸத்வந்த்வம் ப்ரக்ருதத்தில் த்யேயமான பொருளாகும். அந்த ஹம்ஸத்வந்த்வமோ அநாஹத சக்ரத்தில் வாஸம் செய்துவருகிறது. அநாஹத சக்ரம் ஹ்ருதய தேசத்தை ஒட்டினது. அந்த இரண்டு ஹம்ஸங்களும் ஒன்றுக்கொன்று ஸம்பாஷணை செய்துகொள்வது என்பதுதான் பதினெட்டுவிதமான வித்யைகள் என்று சொல்லப்படும். ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வணவேதம் என்ற நான்கு வேதங்கள் ; சிக்ஷா, கல்பம், வ்யாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம் என்ற ஆறு அங்கங்கள், தர்ம சாஸ்திரம், புராணம், மீமாம்ஸா, ந்யாயம், மாயா வித்யை, ஸ்ரீவித்யை, அபரவித்யை, பரவித்யை என்று பதினெட்டு வித்யைகளாகும். இந்த வித்யைகள் தான் அந்த ஹம்ஸத்வந்த்வத்தின் ஆலாபங்களாகும் இல்லாவிடில், வித்யை என்ருல் ப்ரம்ம வித்யைதான். ப்ரக்ருதத்தில் ஸ்ரீவித்யை என்று சொல்லப்படும். மோக்ஷத்திற்கு ஹேதுவான வித்யையைத்தான் வித்யை என்று சொல்லவேண்டும். ஆகையால் ஸ்ரீ வித்யை ஒன்றுதான் வித்யையாக ஆகுமே தவிர, மற்ருென்றும் வித்யையாகவே ஆகாது. ஸ்ரீவித்யையிலோ பதினுறு அக்ஷரங்கள் அடங்கிய ஷோடசீ என்பது ரொம்பவும் முக்கியமானதாக ஆகும். அந்த வித்யையை அப்யஸிக்கறவர்களுக்கு வித்யா குருவும், வித்யா ப்ரதிபாத்யமான தேவியும் தவிர, உபாஸ்யமான வஸ்து வேருென்றுமே யில்லே. ஸ்ரீ வித்யா தீக்ஷை செய்துகொண்டவர்கள் கற்றவர்களுக்கு நமஸ்கரிக்கக் கூடாது என்பதே ஸ்ரீவித்யா தந்த்ர ஸித்தாந்தமாகும். அந்த பதினுறு அக்ஷரமுள்ள மஹா

மந்த்ரத்தை ஜபம் செய்யுங்காலத்தில் இடைவிடாமல் குருவும், தேவியும், பாஸித்துவருகிற காரணத்தால் பதினெட்டு விதமாக பாஸிக்கிற வித்யை என்று ஏற்படுகிறபடியால் அந்த ஷோடசீ என்ற ஸ்ரீவித்யையையே ப்ரக்ருதத்தில் अष्टादशगुणितविद्या(𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌗𑍁𑌣𑌿𑌤𑌵𑌿𑌦𑍍𑌯𑌾) (அஷ்டாதசகுணிதவித்யா) என்ற பதத்தினால் சொல்லப்பட்டதாக ஆகிறது. அதனால் ஸ்ரீவித்யோபாஸகாள் அந்தர்முகமாக இருந்துகொண்டு இரண்டு ச்ரோத்ரங்களையும் (காது) பிதானம் செய்துகொண்டு (மூடிக்கொண்டு) அநாஹத சக்ரத்தில் ஏற்படும் சப்தத்தைக் கவனித்தால், ஆரம்பத்தில் அந்த சப்தம் அவ்யக்தமானாலும் கொஞ்ச காலம் அப்யஸ்தமானால், ஸ்ரீவித்யா ஷோடாசீயிலுள்ள அக்ஷரங்களும், வித்யா குருவின் ஸ்வரூபமும், தேவியினுடைய ஸ்வரூபமும் சப்தமூலமாக ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கப்படும். அக்காரணத்தைக் கொண்டு அந்த ஹம்ஸத்வந்த்வத்தினுடைய ஆலாபம் अष्टादशगुणितविद्यापरिणामं(𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌗𑍁𑌣𑌿𑌤𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌂) (அஷ்டாதசகுணிதவித்யாபரிணமம்) என்று சொல்லப்படும். அந்த ஹம்ஸத்வந்த்வமோ, லோகத்தில் ப்ரஸித்தமான ஹம்ஸங்களைப் போலவே ஸ்வபாவமுள்ளது. ஜலத்தில் பாலைக் கலந்தாலும், ஜலத்திலிருந் தும் பாலைத் தனியாக, லோகப்ரஸித்தமான ஹம்ஸம் பிரித்து க்ரஹித்துவிடும். அது போலவே இந்த ஹம்ஸத்வந்த்வமும், தோஷமும் குணமும் கலந்திருக்கும் புருஷனிடம், தோஷத்தைத் தள்ளி குணத்தை மட்டுமே க்ரஹிக்கும் ஸ்வபாவமுள்ளவை. ஆனால் ப்ராக்ருதமான ஹம்ஸத்தைக்காட்டிலும், அப்ராக்ருதமான இந்த ஹம்ஸத்வந்த்வத்திற்கு ஸ்வபாவத்தினாலேயே வைலக்ஷண்யத்தையும் ஒப்புக்கொள்ள வேண்டும். ப்ராக்ருதமான ஹம்ஸமோ, ஜலத்தையும் பாலையும் ஒன்றாக கலந்திருக்கும் ஸந்தர்ப்பத்தில் ஜலத்தை விட்டு பாலை மட்டும் தனியாகப் பிரித்துவிடும்

அன்னியில் ஜலத்தையே பாலாகச் செய்துவிடாது. இந்த அப்ராக்ருதமான ஹம்ஸமோ, தோஷமும் குணமும் சேர்த்திருக்கும் இடத்தில் தோஷத்தைத் தள்ளி குணத்தை க்ரஹிப்பதுமட்டுமல்ல; தோஷத்தையும் குணமாகச் செய்யும் ஸ்வபாவமுள்ளது. ஆகையால் அனுஹத சக்ரத்தில் அஜபாவித்யையினுல் இந்த ஹம்ஸத்வந்த்வத்தை த்யானம் செய்கிற ஸாதகர்களுக்கு பாபங்களெல்லாம் புண்யமாகவே ஆகிவிடும். புண்யத்திற்கோ ஸுகத்தைக் கொடுக்கும் ஸ்வபாவம் ஏற்பட்டது. இந்த உபாஸகர்களுக்கு மேன் மேலும், शतगुणोत्तरितं (ஶதகு³ணோத்தரிதம்) (சதகுணேத்தரிதம்) என்ற நூறு நூறு மடங்கு மேலான ஆநந்த ஆதிக்யம் அனுபவ கோசரமாக ஆகுமென்பதில் ஆக்ஷேபணையில்லை. ஆகையால் அநாஹத சக்ரத்தில் ஹம்ஸத்வந்த்வத்தை உபாஸிக்கவேண்டியது அவச்யமாகும். ஹம்ஸம் என்ற பதத்தில் ஹகாரத்தால் பரமேச்வரனும், ஸாதா என்ற கலையிலிருந்தும் ஸகாரம் ஏற்பட்டதினுல் ஸகாரத்தால் ஹம்ஸீ என்ற தேவியும், பரமேச்வரனுக்கும், பரமேச்வரீக்கும் சேர்ந்து வாசஸ்தானமாகிய மஹா பிந்துவே ஹகாரத்திற்கும், ஸகாரத்திற்கும் நடுமத்தியிலுள்ள அநுஸ்வாரமாகவும் ஏற்பட்டிருப்பதினுல், அந்த ஹம்ஸத்வந்தவத்தை அனுபவிக்கிறவர்கள் மஹாபிந்து மத்யஸ்தையான காமேஸ்வர அபின்னேயான காமேச்வரியை உபாஸிக்கிறவர்களாக ஆகுவார்கள். விராட் புருஷனுடைய சரீரத்திலோ, இந்த ஹ்ம்ஸத்வந்த்வ உபாஸனத்திற்கு ஏற்பட்ட ஸ்தானம் வாயுலிங்கமான ஆவுடையார்கோவில் என்ற க்ஷேத்ரம் என்பதை அறிந்துகொள்ளவும். தினந்தோறும், க்ரஹாதிகளிலும் பத்து தளத்தோடு கூடின பத்மம் போட்டு, தீபத்தை பசுவின் நெய்யினுல் ஏற்றி ஹம்ஸத்வந்த்வத்தை அஜபாவித்யையினுல் அதில் ஆவாஹநம் செய்து, ஷோடசோபசார பூஜைகளையும் செய்து

விட்டு, அஜபாவித்யையினுடைய அக்ஷர ஸங்க்யையை அநுஸரித்து ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் லக்ஷம் ஆவர்த்தி ப்ரகாரம் இந்த ச்லோகத்தை ஜபம் செய்து ஸித்தி செய்தவர்களுக்கு சிகிஜ்வாலா ரூபனுன காமேச்வரன் என்ற ஹம்ஸமும், சிகிநீயான காமேச்வரீ என்ற ஹம்ஸீயும் ப்ரத்யக்ஷமாக ஆகி, அந்த உபாஸகனுக்கு வேண்டிய வரன்களையும் அளித்து அவனை க்ருதார்த்தனுகச் செய்வார்கள். இந்த வித்யை ஹம்ஸ வித்யையானதினுல் இதை அவலம்பித்தவனுக்கு எல்லா வஸ்துவிலும் உள்ள ஸாராம்சத்தை க்ரஹிக்கும் ஸ்வபாவம் வ்ருத்தியாக வேண்டியதன்னில் தோஷ க்ராஸம் கூடாது. இதுதான் இதற்கு முக்கியமான நியாயமாகும். ஆனுல் இந்த ஹம்ஸத்வந்த்வத்தையோ ஸ்வாநுபவத்தைக் கொண்டு அனுபவிக்க வேண்டுமன்னியில், இது இன்னவிதமான உருவமுள்ளது, இன்னவிதமான மஹிமையுள்ளது, இன்னதுதான் இது செய்யும் என்று ஒரு சப்தத்தால் நன்கு நிரூபிக்கமுடியாது. இதனுல், अथातः आदेशो नेति नेति। अस्थूलं, अनणु अह्रस्वं अदीर्घं (അഥാതഃ ആദേശോ നേതി നേതി। അസ്ഥൂലം, അനണു, അഹ്രസ്വം, അദീർഘം) (அதாத: ஆதேசோ நேதி நேதி। அஸ்தூலம், அநணு, அஹ்ரஸ்வம், அதீர்கம்) என்ற ச்ருதியை அனுஸரித்தும், नसत्तन्नासदुच्यते ॥ (നസത്തന്നാസദുച്യതേ) (நஸத்தந்நாஸதுச்யதே) என்ற ஸ்ம்ருதியை அனுஸரித்தும் त्वयिफलंत्यतन्निरसनेन (ത്വയിഫലംത്യതന്നിരസനേന) (த்வயிபலம்த்யதந்நிரஸநேந) என்ற புராண வசனத்தை அனுஸரித்தும் அவித்யையினுல் அந்த ஹம்ஸத்வந்த்வனிடத்தில் கல்பிக்கப்பட்ட த்வைதத்தை நிஷேதம் செய்கிறது மூலம் அந்த ஹம்ஸத்வந்த்வத்தை சிஷ்யாளுக்கு குருக்கள் உபதேசம் செய்ய முடியுமன்னியில், இதுதான் அந்த ஹம்ஸ த்வந்த்வம் என்று தொட்டுக்காட்டி உபதேசிக்க முடி

யாது. அதனுலேயே அந்த ஹம்ஸத்வந்த்வம் अखण्डचिदेक रसं प्रत्यगभिन्नं निर्विशेषं (𑌅𑌖𑌣𑍍𑌡𑌚𑌿𑌦𑍇𑌕𑌰𑌸𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌭𑌿𑌨𑍍𑌨𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌂) (அகண்டசிதேகரஸம், ப்ரத்யக பிந்நம், நிர்விசேஷம்) என்பது ஸித்தமாகிறது.

---

## 39. ஸ்வாதிஷ்டான சக்ரத்தின் ப்ரபாவம்.

तवस्वाधिष्ठाने हुतवहं अधिष्ठाय निरतं
तमीडे संवर्तं जननि महतीं तां च समयाम् ।
यदा लोके लोकान् दहति महसि क्रोधकलिते
दयार्द्रा या दृष्टिः शिशिरं उपचारं रचयति ॥ ३९ ॥

𑌤𑌵𑌸𑍍𑌵𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑍇 𑌹𑍁𑌤𑌵𑌹𑌂 𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌨𑌿𑌰𑌤𑌂
𑌤𑌮𑍀𑌡𑍇 𑌸𑌂𑌵𑌰𑍍𑌤𑌂 𑌜𑌨𑌨𑌿 𑌮𑌹𑌤𑍀𑌂 𑌤𑌾𑌂 𑌚 𑌸𑌮𑌯𑌾𑌮𑍍 ।
𑌯𑌦𑌾 𑌲𑍋𑌕𑍇 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌦𑌹𑌤𑌿 𑌮𑌹𑌸𑌿 𑌕𑍍𑌰𑍋𑌧𑌕𑌲𑌿𑌤𑍇
𑌦𑌯𑌾𑌰𑍍𑌦𑍍𑌰𑌾 𑌯𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌶𑌿𑌶𑌿𑌰𑌂 𑌉𑌪𑌚𑌾𑌰𑌂 𑌰𑌚𑌯𑌤𑌿
॥ ௩௯ ॥

தவ ஸ்வாதிஷ்டாநே ஹுதவஹம் அதிஷ்டாய நிரதம்
தமீடே ஸம்வர்தம் ஜநநி மஹதீம் தாம் ச ஸமயாம் ।
யதா லோகே லோகாந் தஹதி மஹஸி க்ரோதகலிதே
தயார்த்ரா யா த்ருஷ்டி: சிசிரம் உபசாரம் ரசயதி ॥39॥

हे जननि (𑌹𑍇 𑌜𑌨𑌨𑌿) (ஹே ஜநநி) = ஹே லோகமாதாவான பராசக்தியே!
तव (𑌤𑌵) (தவ) = உன் ஸம்பந்தமான
स्वाधिष्ठाने (𑌸𑍍𑌵𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑍇) (ஸ்வாதிஷ்டாநே) = ஸ்வாதிஷ்டான சக்ரத்தில், அதாவது எட்டு

தளத்தோடு கூடின தாமரைப் புஷ்பம்போலொத்த ஸ்தானத்தில் உள்ள

हुतवहं (𑌹𑍁𑌤𑌵𑌹𑌂) (ஹுதவஹம்) = அக்னி தத்வத்தை

अधिष्ठाय (𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯) (அதிஷ்டாய) = அவலம்பித்துக்கொண்டு

निरतं (𑌨𑌿𑌰𑌤𑌂) (நிரதம்) = எப்பொழுதும் பாஸிக்கிறதான

तं (𑌤𑌂) (தம்) = அந்த

संवर्तं (𑌸𑌂𑌵𑌰𑍍𑌤𑌂) (ஸம்வர்தம்) = ப்ரளயகாலாக்னி ஸ்வரூபமான காமேச்வரனையும்

महतीं (𑌮𑌹𑌤𑍀𑌂) (மஹதீம்) = மஹத் சப்தத்தின் பொருளான காரணத்தால் மஹா பூஜ்யையான

तां (𑌤𑌾𑌂) (தாம்) = அந்த

समयां च (𑌸𑌮𑌯𑌾𑌂 𑌚) (ஸமயாம் ச) = ஸமயமத ஸித்தமான பராசக்தியையும்

ईडे (𑌈𑌡𑍇) (ஈடே) = ஸ்தோத்ரம் செய்கிறேன்.

यदालोके (𑌯𑌦𑌾𑌲𑍋𑌕𑍇) (யதாலோகே) = எந்த காமேச்வரனுடைய ஆலோகமாகிய பார்வையான

महसि (𑌮𑌹𑌸𑌿) (மஹஸி) = தேஜஸ்ஸானது

क्रोधकलितेसति (𑌕𑍍𑌰𑍋𑌧𑌕𑌲𑌿𑌤𑍇𑌸𑌤𑌿) (க்ரோத கலிதே ஸதி) = கோபத்தால் வ்யாபரிக்கப் பட்டதாக இருந்து கொண்டு

लोकान् (𑌲𑍋𑌕𑌾𑌨𑍍)(லோகாந்) = ஸகல புவனங்களேயும்

दहति सति (𑌦𑌹𑌤𑌿 𑌸𑌤𑌿) (தஹதி ஸதி) = பஸ்மமாகச் செய்து கொண்டு வரும்பொழுது

या (𑌯𑌾) (யா) = மணிபூரக சக்ரத்திலுள்ள எந்த பரதேவதையின் ஸம்பந்தமான

दयार्द्रा (𑌦𑌯𑌾𑌰𑍍𑌦𑍍𑌰𑌾) (தயார்த்ரா) = கருணும்ருதத்தால் நினேக்கப்பட்டதான

दृष्टि: (𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃) (த்ருஷ்டி:) = கடைக்கண் பார்வையானது

शिशिरं उपचारं (𑌶𑌿𑌶𑌿𑌰𑌂 𑌉𑌪𑌚𑌾𑌰𑌂) (சிசிரம் உபசாரம்) = சைத்ய உபசாரத்தைச் செய்து

रचयति (𑌰𑌚𑌯𑌤𑌿) (ரசயதி) = லோகங்களே யெல்லாம் ரக்ஷிக்கிறதோ.

தாத்பர்யம் :—वायोरग्निः (𑌵𑌾𑌯𑍋𑌰𑌗𑍍𑌨𑌿𑌃) (வாயோரக்நி:) என்ற ச்ருதியை அனுஸரித்து, வாயு தத்வத்திற்குப் பிற்பாடு அக்னி தத்வத்திற்கு ஆச்ரயமான அஷ்டதள பத்மம் (எட்டுதள தாமரைப்பூ) என்ற ஸ்வாதிஷ்டான சக்ரத்தில், காமேச்வரன், காமேச்வரீ என்ற ஆதிதம்பதிகளின் உபாஸனத்தை இந்த ச்லோகத்தில் பகவத்பாதாள் ப்ரதிபாதிக்கின்ருர்கள். விராட் புருஷனுடைய சரீரத்திலோ அருணசலம் என்று

சொல்லப்படும் திருவண்ணுமலை என்ற க்ஷேத்ரமே ஸ்வாதிஷ்டான சக்ரம் என்று அறியவும் அந்த ஊரில் தேஜோலிங்கம் என்பதும் லோகப்ரஸித்த மானது. ஸ்வாதிஷ்டான சக்ரத்திலும் அக்னிதத்வம் தான் விளங்கிவருகிறது. அக்னி ஸ்வரூபமாக ஸம் ஹார கர்த்தாவான ருத்ரன் அங்கு விளங்கிவருகிருர். அந்த பரமேச்வரனுக்கு ஸம்வர்த்தாக்னி என்று ப்ர ஸித்தமான பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஸமயா என்று சொல்லப்படும் தேவியானவள் ஜல தத்வத்திற்கு ஆதாரமான மணிபூரகத்தில் அதிகமாக வஸிக்கிறவ ளானுலும், அடிக்கடி ஸ்வாதிஷ்டான சக்ரத்திற்கு வந்து ஸம்வர்த்தாக்னி என்ற பெயரோடு கூடின காமேச்வரன் என்ற தனது பர்த்தாவோடு ஸ்வா திஷ்டான சக்ரத்தில் வஸிப்பதுமுண்டு. அந்த தரு ணத்தை அனுஸரித்து பகவத்பாதாள் இருவர்களையும் சேர்த்தே அங்கே உபாஸிக்கவேண்டுமென்று சொல் கிருர்கள். ஸ்வாதிஷ்டான சக்ரத்திலுள்ள ஸம்வர்த் தாக்னி என்ற காலாக்னி ருத்ரனுனவன் தனது நெற்றிக்கண்ணைத் திறந்து பார்க்கும்பொழுதுதான் ப்ரளயகாலம் என்று சொல்லப்படும் அத்த ஸமயத் தில் இந்த காமேச்வரன் கோபத்தை அடைந்து தன் னுடைய பார்வையினுல் சைவமான தேஜஸ்ஸில் ஸகல ஜகத்தும் பஸ்மமாக ஆகிவிடுகிறதானுலும் பர தேவதையானவள் கருணும்ருதபூரிதமான தன் த்ருஷ் டியால் ப்ரஜைகளை சைத்ய உபசாரம் செய்து ஜீவிக் கச் செய்கிருள். சிவாபராதத்தால் பஸ்மீபாவத்தை அடையும் மனிதன் தேவியினுடைய கடாக்ஷ பாதத் தில் உஜ்ஜீவிக்கலாம். हरनेत्राग्नि संदग्धकामसंजीवनौषधिः ॥ (ஹரநேத்ராக்நி ஸந்தக்தகாமஸஞ்ஜீவநௌஷதி:) (ஹரநேத் ராக்நி ஸந்தக்தகாமஸஞ்ஜீவநௌஷதி:) என்ற லலிதா ஸஹஸ்ரநாமாவளியிலுள்ள ஒரு நாமாவே இதற்கு அத்தாக்ஷியாக ஆகும். ''பரமேச்வரன் நெற்றிக்கண் ணுல் மன்மதனை எறித்த பிற்பாடு, காமனுடைய தர்மபத்னியான ரதிதேவியானவள் பார்வதி பரமேச்

வரனுடைய கல்யாணகாலத்தில் பார்வதியிடம் சரணு கதியடைந்து தன் பர்த்தாவை ஜீவிக்கச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டதன் பேரில் பர தேவதையானவள் அந்த காமனை மறுபடியும் ஜீவிக்கச் செய்துவிட்டாள்" என்று அந்த நாமாவளியின் பொருளாகும். தேவியினுடைய கருணையாகிய அம்ருதத்தால் பூரிதமான த்ருஷ்டிக்கு பாத்ரபூதனாக ஆகிவிட்டால், அந்த மனிதனுக்கு மரணமே இல்லை. அதிலும் மணிபூரக சக்ரத்தில் தேவியினுடைய ஸ்வரூபத்தை யோகிகள் ஸாக்ஷாத்கரித்துக் கொண்டு, பராம்பிகையினுடைய தயாத்ருஷ்டியினால் பார்க்கப்பட்ட காரணத்தினால்தான் அந்த யோகிகள் சிரஞ்ஜீவிகளாக இருந்துவருகிறார்கள். சிரஞ்ஜீவியாகவோ, கல்பஜீவியாகவோ ஆவதற்கு இந்த உபாஸனமே முக்யமான உபாயமாகும்.

———

## 40 மணிபூரக சக்ரத்தின் ப்ரபாவம்.

तटित्वन्तं शक्त्या तिमिरपरिपन्थिस्फुरणया
स्फुरन्नानारत्नाभरणपरिणद्धेन्द्रधनुषम् ।
तव श्यामं मेघं कमपि मणिपूरैकशरणम्
निषेवे वर्षन्तं हरमिहिरतप्तं त्रिभुवनम् ॥ ४० ॥

𑌤𑌟𑌿𑌤𑍍𑌵𑌨𑍍𑌤𑌂 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑌿𑌮𑌿𑌰𑌪𑌰𑌿𑌪𑌨𑍍𑌥𑌿𑌸𑍍𑌫𑍁𑌰𑌣𑌯𑌾
𑌸𑍍𑌫𑍁𑌰𑌨𑍍𑌨𑌾𑌨𑌾𑌰𑌤𑍍𑌨𑌾𑌭𑌰𑌣𑌪𑌰𑌿𑌣𑌦𑍍𑌧𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌧𑌨𑍁𑌷𑌮𑍍 ।
𑌤𑌵 𑌶𑍍𑌯𑌾𑌮𑌂 𑌮𑍇𑌘𑌂 𑌕𑌮𑌪𑌿 𑌮𑌣𑌿𑌪𑍂𑌰𑍈𑌕𑌶𑌰𑌣𑌮𑍍
𑌨𑌿𑌷𑍇𑌵𑍇 𑌵𑌰𑍍𑌷𑌨𑍍𑌤𑌂 𑌹𑌰𑌮𑌿𑌹𑌿𑌰𑌤𑌪𑍍𑌤𑌂 𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵𑌨𑌮𑍍
॥ ௪௰ ॥

*தடித்வந்தம் சக்த்யா திமிரபரிபந்திஸ்புரணயா*
*ஸ்புரந்நாநாரத்னுபரணபரிணத்தேந்த்ர தனுஷம் ।*
*தவ ச்யாமம் மேகம் கமபி மணிபூரைகசரணம்*
*நிஷேவே வர்ஷந்தம் ஹரமிஹிரதப்தம் த்ரிபுவநம் ॥40॥*

हे भगवति (ஹெ ஹமவதி) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே!

मणिपूरैकशरणं (உணிவூைரெக ஶரணம்) (மணிபூரைக சரணம்) = மணிபூரக சக்ரத்தையே முக்யமான க்ரஹமாக உடைத்தானதாயும்

तिमिरपरिपन्थिस्फुरणया (திமிர பரிபஹ்ஸ்ஃபுரணயா) (திமிரபரிபந்திஸ்புரணயா) = மணிபூரக சக்ரத்திலுள்ள இருட்டிற்கு சத்ருவான ப்ரகாசத்தை உடைத்தான

शक्त्या (ஶக்த்யா) (சக்த்யா) = சக்தி விசேஷத்தால்

तडित्वन्तं (தடித்வந்தம்) (தடித்வந்தம்) = மின்னலோடு கூடினதாயும்

स्फुरन्नानारत्नाभरणपरिणद्धेन्द्रधनुषम् (ஸ்ஃபுரந்நாநாரத்நா ஹரணபரிணத்தேந்த்ர யதநுஷம்) (ஸ்புரந்நாநாரத்னுபரணபரிணத்தேந்த்ரதநுஷம்) = ப்ரகாசிக்கின்ற அநேக விதமான ரத்னங்களால் உண்டு பண்ணப்பட்ட ஆபரண விசேஷங்களால் புலப்படும் இந்த்ர தனுஸ்ஸோடு கூடினதாயும்

हरमिहिरतप्तं (ஹரமிஹிரதப்தம்) (ஹரமிஹிரதப்தம்) = காலாக்னி ருத்ரனுகிய ப்ரளயகால ஸூர்யனுல் தபிக்கச் செய்யப்பட்ட

त्रिभुवनं (த்ரிபுவநம்) (த்ரிபுவநம்) = மூன்று லோகத்தையும்

वर्षन्तं (வர்ஷந்தம்) (வர்ஷந்தம்) = அம்ருத வர்ஷத்தில் குளிரச் செய்கிறதாயும்

श्यामं (ஶ்யாமம்) (ச்யாமம்) = நீலவர்ணமாயும்

कमपि (கமபி) (கமபி) = வர்ணிக்கமுடியாததாயும் உள்ள

तव (தவ) (தவ) = உன்னுடைய

मेघं (மேகம்) (மேகம்) = மேக ஸ்வரூபமான ஸதாசிவ தத்வத்தை

निषेवे (நிஷேவே) (நிஷேவே) = ஸேவிக்கின்றேன்.

தாத்பர்யம் :—ஜலதத்வமாகிய மணிபூரகசக்ரத்தில் பரதேவதையினுடைய ஸ்வரூபத்யானமானது இந்த ச்லோகத்தால் வர்ணிக்கப்படுகிறது. இந்த சக்ரத்தில் ஆறு தளமுள்ள தாமரைப் புஷ்பம்போல் பாஸித்து வரும் ஸதாசிவ தத்வம் விளங்கிவருகிறது. இந்த ரூபமும் பராசக்தியினுடைய ஸ்வரூபந்தான். சக்தியினுடைய ஸ்வரூபத்தில் சிவஸ்வரூபம் அடங்கியதென்பது ஆங்காங்கு முன்பு சொல்லப்பட்டிருக்கின்றது. அந்த ஸ்வரூபத்தை ஒரு மேகமாக வைத்து த்யானம் செய்யவேண்டுமாக பரமாசார்யாள் போதிக்கின்றார்கள். மேகமோ, ஸூர்யகிரணங்களால் தபிக்கச் செய்யப்பட்ட லோகத்தை மழையினால் குளிரச் செய்யும். தேவியினுடைய ஸ்வரூபமான ஸதாசிவ தத்வம் என்ற மேகமும், ப்ரளய காலத்தில் 100 வருஷம் விடாது காலாக்னி ருத்ரன் என்ற ஸூர்யனால் மூன்று லோகமும் தபிக்கச்செய்யப்படுகிறது என்று புராணங்களில் சொல்லியிருக்கப்பட்ட நியமத்தை அனுஸரித்து அவ்விதமான தாபத்தையும் நிவர்த்தி செய்கின்றது.

அம்ருத வர்ஷத்தால் மூன்று லோகத்தையும் குளிரச் செய்யும் சக்தியுள்ள மகா மேகமென்று த்யேய மான ப்ரக்ருத தத்வத்தை அனுஸந்தானம் செய்ய வேண்டும். இவ்விதம் த்யானம் செய்கிறவர்களுக்கு தேவியினுடைய ப்ரஸாதத்தால் ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதிதெய்விகம் என்ற மூன்றுவிதமான தாபங்களினின்றும் நிவர்த்தி ஏற்பட்டு ஸுகானுபவம் ஏற்படும். பூர்வபாப கர்மாக்களால் ஏற்படும் வ்யாதி கள் ஆதிதெய்விகம் என்று சொல்லப்படும். சரீரத்தி லுள்ள தாதுவைஷம்யத்தால் ஏற்படும் வ்யாதிகள் ஆத்யாத்மிகம் என்று சொல்லப்படும். ஜலம் நெருப்பு முதலான பூதங்களால் ஏற்படும் வ்யாதிகள் ஆதிபௌதிகம் என்று சொல்லப்படும். இம்மூன்று வித தாபங்களையும் தன்னிடம் வராமல் செய்து கொள்ள இச்சிக்கும் ப்ராணிகள், இந்த ச்லோகத்தில் சொல்லியபடி தேவியின் ஸ்வரூபமாகிய ஸதாசிவ மேகத்தை த்யானம் செய்துகொள்ள வேண்டும். மேகம் மின்னலோடு கூடினதாக விளங்கிவரும். ஆனால் லோகத்தில் பார்க்கப்படும் மேகத்திலுள்ள மின்னலோ, ஸ்திரமாக இராது. தெரிந்து தெரிந்து மறையும். மணிபூரகசக்ரத்தில் ஸதாசிவ தத்வத்தில் காணப்படும் மின்னலோ ஸ்திரமான மின்னலாகும். இந்த மின்னலுடைய ஸ்தானத்தில்தான் பராசக் தியை அனுஸந்தானம் செய்யவேண்டும். மணிபூரக சக்ரமானது தாமிஸ்ரம் (இருட்டுமயம்) என்று சொல் லப்பட்டிருக்கிறது. அந்த கடுமையான இருட்டும், தேவி ஆவிர்பவித்தவுடன் நாசமாகிவிடுகிறது. மணி பூரக சக்ரத்திலுள்ள இருட்டிற்கு சத்ருவான ப்ரகா சத்துடன் கூடியவள் பராசக்தி என்று அறியவும். இதைத்தான் तिमिरपरिपन्थिस्फुरणया शक्त्या (திமிரபரிபந்திஸ்புரணயா ஶக்த்யா)(திமிர பரிபந்திஸ்புரணயா சக்த்யா) என்பது மூலமாக பரமாசார்யாள் ப்ரகாசப் படுத்துகிறார்கள். ஸதாசிவ மேகத்திற்கு, பராசக்தி ஸ்திரமான மின்னலாக பாஸிக்கின்றாள். அங்குள்ள

இருட்டானது அழிந்துவிடுகிறது. லோகத்திலுள்ள மேகத்தில் காணப்படும் மின்னலைக் காட்டிலும் ஸதாசிவ மேகத்திலுள்ள பராசக்தி என்ற மின்னலுடைய விசேஷத்தையோ உபாஸகர்கள் அறியக்கூடும். இந்த மின்னலில் 'ஸ்திர நிலை' என்பது முக்ய விசேஷமாகும். இதனுல் அக்ஞான நிவர்த்தியும் த்யானத்தின் பலம் என்பது ஸூசிப்பிக்கப்படுகிறது, அதிகமான வர்ஷத்தை வர்ஷிக்கும் ஸமயத்தில் வில் காணப்படும். தங்கமயமாக அவ்வில் பாஸிக்கும். இதை இந்த்ர தனுஸ் என்று சொல்வார்கள். ஸதாசிவ மேகத்திலும் அதுபோலொத்த வில்லானது காணப்படுகிறது. பராசக்தியான பரதேவதை, ப்ரகாசிக்கின்ற அநேகவிதமான ரத்னங்களால் இழைக்கப்பட்ட பல ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாக இருந்துவருகிருள். தேவியினுடைய இரண்டு பார்ச்வங்களிலும் அமைக்கப்பட்டிருக்கும் ரத்னமயமான திவ்யமான ஆபரணங்களின் சோபையை கவனிக்கும்பொழுது, தேவியினுடைய இடது பாதத்திலிருந்து சிரஸ் வரையிலும் த்ருஷ்டியைச் செலுத்தி, அங்கிருந்து ப்ரதக்ஷிணமாக வலது பாதத்தில் த்ருஷ்டியைக் கொண்டுவந்தால், அந்த ஆபரண சோபையானது வளைவாகத் தென்படக் கூடுமானதால், அதைப் பார்க்கும் பொழுது ரத்னமயமான மாலைபோல் தோன்றுவதைக்கொண்டும், ஸதாசிவ மேகமானது சக்தி தத்வத்தில் அடங்கியதாலும், ஸதாசிவ மேகத்தில் இந்த்ர தனுஸ்போல் தேவியின் ஆபரணங்கள் விளங்குகின்றது. லோகத்திலுள்ள மேகத்தில் காணப்படும் இந்த்ர தனுஸ்ஸானது தங்கமயமாகக் காணப்பட்டாலும், அதிலிருந்து தங்கம் அகப்படாது. ஸதாசிவ மேகத்தில் காணப்படும் இந்த்ர தனுஸ்ஸோ, உண்மையிலேயே ஸ்வர்ண சோபையானதினுல், மேற்சொன்னபடி த்யானம் செய்கிறவர்களுக்கு, ஸ்வர்ணமாகவும், ரத்னமாகவும் அம்பாள் வர்ஷிக்கின்ருள்

என்பதில் ஸந்தேகமில்லை. இவ்விதம் வில்லை த்யானம் செய்வதால் ஸாதகர்களுக்கு லக்ஷ்மீ கடாக்ஷமும் ஏற்படுகிறது. இவ்வித மஹிமையுள்ள ஸதாசிவ தத்வம் என்ற தேவியினுடைய ஸ்வரூபமாகிய மேகத்தை யாரால்தான் வர்ணிக்க முடியும்! இவ்விதம் மணிபூரகசக்ரத்தில் ஸதாசிவ தத்வத்தை நீருண்ட மேகமாகவும், பராசக்தியை மின்னலாகவும், பராசக்தியினுடைய ஆபரண சோபையை இந்த்ர தனுஸ்ஸாகவும் த்யானம் செய்கிற புண்ய புருஷனுக்கு லக்ஷ்மீகடாக்ஷம், தாபத்ரய நிவர்த்தி, அக்ஞான நிவர்த்தி என்ற முக்யமான அநேக பலன்கள் ஸித்திக்கும்.

---

## 41. மூலாதார சக்ரத்தின் மஹிமை.

तवाधारे मूले सह समयया लास्यपरया
नवात्मानं मन्ये नवरस महाताण्डवनटम् ।
उभाभ्यामेताभ्यामुदयविधिमुद्दिश्य दयया
सनाथाभ्यां जज्ञे जनकजननीमज्जगदिदम् ॥ ४१ ॥

𑌤𑌵𑌾𑌧𑌾𑌰𑍇 𑌮𑍂𑌲𑍇 𑌸𑌹 𑌸𑌮𑌯𑌯𑌾 𑌲𑌾𑌸𑍍𑌯𑌪𑌰𑌯𑌾
𑌨𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌨𑌵𑌰𑌸 𑌮𑌹𑌾𑌤𑌾𑌣𑍍𑌡𑌵𑌨𑌟𑌮𑍍 ।
𑌉𑌭𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍇𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍁𑌦𑌯𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌦𑌯𑌯𑌾
𑌸𑌨𑌾𑌥𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌜𑌜𑍍𑌞𑍇 𑌜𑌨𑌕𑌜𑌨𑌨𑍀𑌮𑌜𑍍𑌜𑌗𑌦𑌿𑌦𑌮𑍍 ॥ ௪௧ ॥

தவாதாரே மூலே ஸஹஸமயயா லாஸ்யபரயா
நவாத்மானம் மந்யே நவரஸ மஹாதாண்டவநடம் ।
உபாப்யாமேதாப்யாமுதயவிதிமுத்திச்ய தயயா
ஸநாதாப்யாம் ஜஜ்ஞே ஜநகஜநநீமஜ்ஜகதிதம் ॥ 41 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே!

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

मूले आधारे (𑌮𑍂𑌲𑍇 𑌆𑌧𑌾𑌰𑍇) (மூலே ஆதாரே) = த்ரிகோண ரூபமான மூலாதார சக்ரத்தில்

लास्यपरया (𑌲𑌾𑌸𑍍𑌯𑌪𑌰𑌯𑌾) (லாஸ்யபரயா) = ந்ருத்யம் செய்வதில் தாத்பர்யமுள்ள

समयया (𑌸𑌮𑌯𑌯𑌾) (ஸமயயா) = ஸமயா என்ற பெயரோடு கூடின தேவியோடு

सह (𑌸𑌹) (ஸஹ) = கூட

नवरसमहाताण्डवनटम् (𑌨𑌵𑌰𑌸𑌮𑌹𑌾𑌤𑌾𑌣𑍍𑌡𑌵𑌨𑌟𑌮𑍍) (நவரஸமஹாதாண்டவ நடம்) = ச்ருங்காரம் முதலான ஒன்பதுவிதமான ரஸங்களோடு கூடின மேலான தாண்டவத்தை அபிநயம் செய்துகொண்டு வருகிற

नवात्मानं (𑌨𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂) (நவாத்மாநம்) = மஹாபைரவர் என்ற உன் ஸ்வரூபத்தை

मन्ये (𑌮𑌨𑍍𑌯𑍇) (மந்யே) = சிந்திக்கின்றேன்

इदं (𑌇𑌦𑌂) (இதம்) = இந்த

जगत् (𑌜𑌗𑌤𑍍) (ஜகத்) = லோகமானது

उदयविधिं (𑌉𑌦𑌯𑌵𑌿𑌧𑌿𑌂) (உதயவிதிம்) = மறுபடியும் உண்டாகிற ப்ரகாரத்தை

उद्दिश्य (𑌉𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯) (உத்திச்ய) = உத்தேசித்து

दयया (𑌦𑌯𑌯𑌾) (தயயா) = கருணையால்

| | | |
|---|---|---|
| सनाथाभ्यां (ஸ நாதாப்யாம்) (ஸநாதாப்யாம்) | = | பரஸ்பரம் சேர்ந்து கொண்ட |
| एताभ्यां (ஏதாப்யாம்) (ஏதாப்யாம்) | = | இந்த |
| उभाभ्यां (உபாப்யாம்) (உபாப்யாம்) | = | மஹாபைரவர், மஹா பைரவி இருவர்கள் மூலமாக |
| जनकजननीमत् (ஜநகஜநநீமத்) (ஜனகஜநநீமத்) | = | தாய் தகப்பனேடு கூடினதாக |
| जज्ञे (ஜஜ்ஞே) (ஜக்ஞே) | = | உண்டாகிறது. |

தாத்பர்யம்:—ஆறுவிதமான சக்ரங்களுக்குள் மூலாதாரமென்பது முதல் சக்ரமாகும். இந்த சக்ரமோ த்ரிகோண ரூபம். இதில் மஹாபைரவர் என்ற திருநாமத்துடன் ஸதாசிவ தத்வமும், ஸமயா என்ற பெயரால் விளங்கும் ஆனந்தபைரவீ என்ற பராசக்தியும், ஒருவருக்கொருவர் சேர்ந்துகொண்டு நர்த்தனம் செய்துகொண்டு வருகிறுர்கள் என்பது சாஸ்த்ரத்தின் ஸித்தாந்தமாகும். ஸ்த்ரீகளால் செய்யப்படும் நர்த்தனத்திற்கு லாஸ்யம் என்றும், புருஷர்களால் செய்யப்படும் நர்த்தனத்திற்கு தாண்டவம் என்றும் பரத சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. லாஸ்யம் என்ற நடனத்தில் ஸமயா என்ற ஆநந்தபைரவீயானவள் மிகவும் ஸமர்த்தையாக பாஸித்துவருகிறுள். மஹா பைரவரோ, அவ்விதமே தாண்டவத்தில் ஸமர்த்தராக இருந்துவருகிறுர். இந்த நித்ய தம்பதிகள் ஒருவருக்கொருவர் சேர்ந்துகொண்டு நடனம் செய்வதினுல் ச்ருங்காரம் முதலான ஒன்பது ரஸங்களும் பெருகிவருகிறது. ச்ருங்காரம், வீரம், ஹாஸ்யம், அத்புதம், பீபத்ஸம், ரௌத்ரம், பயானகம், கருணை, சாந்தி என்று நவரஸங்கள் உள்ளன.

பைரவர், பைரவி இவ்விருவர்களுடைய திவ்ய நடனத்தில் இந்த ஒன்பதுவிதமான ரஸங்களும் வெளியாகிறது ஸமயாசாரத்தை அவலம்பித்து, அந்தர்முகாளாக இருந்துகொண்டு, மூலாதாரம் முதல் ப்ரம்மரந்த்ரம் வரையிலும் உள்ள சக்ரங்களில் ஸஞ்சரிக்கும் சக்தி உள்ள ராஜயோகிகளுக்கு இந்த ஒன்பது விதமான ரஸானுபம் ஏற்படுகிறது இந்த ஒன்பது விதமான ரஸானுபவத்தைக் காட்டிலும் பத்தாவதாக பக்திரஸம் என்று ஓர் ரஸமானது சொல்லப்படும். இந்த ரஸம் ரொம்பவும் மேலானது. ஆகையால், மூலாதார சக்ரத்தில் ஆனந்தபைரவர், ஆனந்தபைரவீ என்ற நித்ய தம்பதிகளை பரம பக்தியுடன் ப்ராணிகள் அனுஸந்தானம் செய்யவேண்டியது அவச்யமாகும்.

அதில், ஆநந்தபைரவர், ஆநந்தபைரவீ என்ற இருவர்களையும் ஸமானமான கௌரவத்துடன் த்யானம் செய்யவேண்டும். இருவர்களுக்கும் ஐந்துவிதத்தில் ஸமானமான கௌரவத்தைக் கொடுக்கவேண்டும். இருக்குமிடம், இருப்பு, செய்கை, ஸௌந்தர்யம், பெயர், இந்த ஐந்திலும் ஸமான கௌரவம் இவ்விருவர்களுக்கும் ஏற்படுகிறது. இருக்குமிடம் ஒன்றுதான் என்பது तवाधारेमूले ([illegible]) (தவாதாரே மூலே) என்பதின்மூலம் ஏற்படுகிறது. அவர்களுடைய இருப்போ, அம்பாள் லாஸ்யத்திலும், பைரவர் தாண்டவத்திலும் ஈடுபட்டிருப்பதே ஆகும். செய்கையோ, காலாக்னி ருத்ரனுல் மஹா ப்ரளயத்தில் சாம்பலாக்கப்பட்ட லோகத்தை மறுபடியும் உண்டு பண்ணவேண்டிய நிமித்தம் ஆநந்தபைரவீ தாயாகவும், பைரவர் தகப்பனுராகவும் இருந்துகொண்டு லோகத்தை ஸ்ருஷ்டிப்பதே. பைரவருடைய ஸ்வரூபமும், பைரவியினுடைய ஸ்வரூபமும் ஒரே ஸ்வரூபமாகவும் சிகப்பு வர்ணமாகவும் பாஸித்து வருகின்றன. தேவியினுடைய ஸ்வரூபத்தை சிகப்பாகவும்,

பைரவருடைய ஸ்வரூபத்தை ஸ்படிகம்போல் வெளுப்பாகவும் ஆங்காங்கு இதிஹாஸங்களில் வர்ணிக்கப்பட்டிருந்தாலும், त्वयाहृत्वावामं (த்வயாஹ்ருத்வாவாமம்) (த்வயாஹ்ருத்வாவாமம்) என்ற ச்லோகத்தால் தேவியினுடைய ஸ்வரூபத்தில் பைரவருடைய ஸ்வரூபம் அடங்கிவிட்டதென்று தெரிகிறபடியால், இருவர்களுடைய ஸ்வரூபமும், செம்பருத்தம் புஷ்பம்போல் சிவப்பாக பாஸிக்கக்கூடியதை முன்னிட்டு ரூபத்திலும் ஸமான கௌரவம் இருவர்களுக்கும் ஏற்பட்டிருக்கிறது. அவ்விதமே முன் ச்லோகத்தில் பைரவரை तटित्वान् (தடித்வான்)(தடித்வாங்) என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால், தேவிக்கு तटिद्वती (தடித்வதீ) (தடித்வதீ) என்ற பெயர் ஸித்திக்கக் காரணம் இருப்பதைக்கொண்டு பெயரிலும் ஸாம்யம் இருக்கிறது.

இவ்விதம் மூலாதார சக்ரம் இருவர்களுக்கும் அதிஷ்டானமானதினாலும்; நடனம் இருவர்களுடைய அவஸ்தையானதினாலும்; ஜகத் ஸ்ருஷ்டி இருவர்களுடைய செய்கையானதினாலும், ரக்திமை இருவர்களுடைய ரூபமானதினாலும்; தடித் இருவர்களுடைய பெயரானதினாலும்; ஐந்து விதத்திலும் பைரவர் பைரவி இருவர்களுக்கும் ஸமான கௌரவம் ஏற்படும் காரணத்தைக்கொண்டு, ஸமப்ரதானமாக இருவர்களையும் வைத்து மூலாதார த்ரிகோண சக்ரத்தில் மஹாபிந்து ஸ்தானத்தில் இந்த இரு தேவதைகளையும் ஒரு தத்வமாகச் செய்து, உபாஸிக்கிற தனக்கும் அந்த தேவதைக்கும் ஐக்யத்தை அனுஸந்தானம் செய்துகொண்டு உபாஸகர்கள் த்யானம் செய்ய வேண்டுமென்பது வெளியாகிறது. மூலாதார த்ரிகோண சக்ரத்தில் பிந்துரூபமாக விளங்கிவரும் தேவதையைத்தான் குண்டலினீ சக்தி என்று சாக்தர்கள் வர்ணிப்பார்கள். குண்டலினீ சக்திககுத்தான் கௌளினீ என்ற பெயரும் லலிதா ஸஹஸ்ரநாமத்தில்

சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விதமான ஸ்வரூபத்தை த்யானம் செய்வதினால் உபாஸகர்கள் ஆறு விதமான சக்ரத்தையும் பேதித்துக்கொண்டு, த்வாதசாந்தம், ஸஹஸ்ரகமலம், ப்ரம்ம்ரந்த்ரம் என்று சொல்லப்படும் ஸ்தானத்திற்குச் சென்று, காமேச்வரன் காமேச்வரீ என்ற இருவர்களுடைய அகண்டமான ஸ்வரூபத்தை தர்சனம் செய்து பேரானந்தத்தை அடைவதில் அதிகாரியாக ஆகிறார்கள் இந்த ச்லோகத்தில் சொல்லியபடி வைதிக மார்க்கத்திற்கு விரோதமில்லாமல் உபாஸனம் செய்துவருகிறவர்களுக்கு பராசக்தி, பரமேச்வரன் இவ்விருவர்களுடைய திவ்ய ஸாக்ஷாத்காரமானது ஜீவதசையிலேயே ஸித்திக்கக்கூடும். அதனால் இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற உபாஸனம், நித்ய தம்பதிகளுடைய திவ்ய தர்சனத்திற்கு ஏற்பட்டதாகும்.

---

## 42. தேவியின் கிரீட வர்ணனை.

गतैर्माणिक्यत्वं गगनमणिभिः सान्द्रघटितम्
किरीटं ते हैमं हिमगिरिसुते कीर्तयति यः ।
स नीडे यच्छायाच्छुरणशबलं चन्द्रशकलम्
धनुः शौनासीरं किमिति न निबध्नाति धिषणाम् ॥ ४२ ॥

𑌗𑌤𑍈𑌰𑍍𑌮𑌾𑌣𑌿𑌕𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌗𑌗𑌨𑌮𑌣𑌿𑌭𑌿𑌃 𑌸𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌘𑌟𑌿𑌤𑌮𑍍
𑌕𑌿𑌰𑍀𑌟𑌂 𑌤𑍇 𑌹𑍈𑌮𑌂 𑌹𑌿𑌮𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇 𑌕𑍀𑌰𑍍𑌤𑌯𑌤𑌿 𑌯𑌃 ।
𑌸 𑌨𑍀𑌡𑍇 𑌯𑌚𑍍𑌛𑌾𑌯𑌾𑌚𑍍𑌛𑍁𑌰𑌣𑌶𑌬𑌲𑌂 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑌕𑌲𑌮𑍍
𑌧𑌨𑍁𑌃 𑌶𑍌𑌨𑌾𑌸𑍀𑌰𑌂 𑌕𑌿𑌮𑌿𑌤𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌧𑌿𑌷𑌣𑌾𑌮𑍍
॥ ௪௨ ॥

கதைர் மாணிக்யத்வம் ககநமணிபி: ஸாந்த்ரகடிதம்
கிரீடம் தே ஹைமம் ஹிமகிரிஸுதே கீர்தயதி ய: ।
ஸ நீடே யச்சாயாச்சுரணசபலம் சந்த்ரசகலம்
தநு: சௌநாஸீரம் கிமிதி ந நிபத்நாதி திஷணாம் ॥ 42 ॥

| | | |
|---|---|---|
| हे हिमगिरिसुते (ഹേ ഹിമഗിരിസുതേ)(ஹே ஹிமகிரி ஸுதே) | = | ஹே பர்வதராஜனின் பெண்ணான பரதேவதே! |
| माणिक्यत्वं (മാണിക്യത്വം) (மாணிக்யத்வம்) | = | பலவிதமான ரத்னங்களாகும் தன்மையை |
| गतैः (ഗതൈഃ) (கதை:) | = | அடைந்த |
| गगनमणिभिः (ഗഗനമണിഭിഃ) (ககனமணிபி:) | = | பன்னிரண்டு ஸூர்யன்களால் |
| सान्द्रघटितं (സാന്ദ്രഘടിതം) (ஸாந்த்ரகடிதம்) | = | நிபிடமாக இழைக்கப்பட்டதாயும் |
| हैमं (ഹൈമം) (ஹைமம்) | = | தங்கமயமாயும் (உள்ள) |
| ते (തേ) (தே) | = | உன்னுடைய |
| किरीटं (കിരീടം) (கிரீடம்) | = | கிரீடத்தை |
| यः (യഃ) (ய:) | = | எந்த கவியானவன் |
| कीर्तयति (കീർത്തയതി) (கீர்தயதி) | = | வர்ணிக்கின்ருனே |
| सः (സഃ) (ஸ:) | = | அந்த வித்வான் |
| नीडेयच्छायाच्छुरणशबलं (നീഡേയച്ഛായാച്ഛുരണശബളം)(நீடேயச் சாயாச்சுரணசபலம்) | = | தங்கமயமான கிரீடத்தினுடைய ஸந்தி பாகங்களில் வைத்திழைக்கப்பட்ட நவரத்னங்களு |

டைய சோபையின் ஸம்பந்தத்தால் விசித்ரவர்ணமாயுள்ள

चन्द्रशकलं (அந்த்ரமகலம்) (சந்த்ரசகலம்) = சந்த்ரகலேயை

शौनासीरं (ஶௌநாஸீரம்) (சௌநாஸீரம்) = இந்த்ரனுடைய

धनुः (யநு:) (தநு:) = வில்

इति (உதி) (இதி) = என்று

धिषणां(யிஷணாம்)(திஷணும்)= தன் புத்தியை

ननिबध्नातिकिं (நநிபய்நாதிகிம்) (நநிபத்னுதிகிம்) = ஸமாதானம் செய்து கொள்ள மாட்டானு என்ன? (அப்படித்தான் தீர்மானித்துக் கொள்வான்)

தாத்பர்யம் :— சென்ற 41 ச்லோகங்களால் ஸமயாசாரம் என்ற பரம தத்வத்தை அனுஸரித்து தேவியினுடைய ஸ்வரூபத்தை விசாரித்துவிட்டு, இந்த ச்லோகம் முதல், ஸமயா என்று பெயருள்ள பகவதியினுடைய தலேயிலுள்ள கிரீடம் முதல் பாதாரவிந்தம் வரை வர்ணிக்கின்ருர். இந்த ச்லோகத்தில் தேவியினுடைய கிரீடம் வர்ணிக்கப்படுகிறது.

தேவர்களுக்குள், த்வாதசாதித்யாள் என்று சில வகுப்புண்டு. ஒவ்வொரு மாதத்திற்கும் ஒவ்வொரு ஸூர்யன் அதிகார பதவியை செலுத்திவருகிருன். இவ்விதம் பன்னிரண்டு மாதத்திற்கும் ஏற்பட்ட ஸூர்யனேத்தான் த்வாதசாதித்யாள் என்று சொல்

கிறது. அவர்களோ, லோகமாதாவான பரதேவதையை உபாஸித்து மேன்மையை அடைவதிலேயே பரம உத்ஸாஹத்தோடு கூடியவர்கள். அதிலும், தேவியினுடைய ஸமீபத்திலிருந்து தேவியை பூஜிக்க உத்ஸாஹமுள்ளவர்கள். தேவியோ பரப்ரம்ம மஹிஷியானதினுல் மிகவும் ரஹஸ்யமான ஸ்தானத்தில் இருக்கவேண்டிய நிபந்தனையை அனுஸரித்து அந்தப் புரத்திலேயே இருந்துவருகிருள். இவ்விதமிருக்கும் பொழுது த்வாதசாதித்யாள் என்ற தேவர்கள் புருஷர்களானதினுல் தேவியினுடைய ஸாமீப்யத்தை அடையமுடியாமல், மிகுந்த வருத்தத்தை அடைந்தார்கள். தூர நின்று தேவியை பரோக்ஷமாக உபாஸிப்பதிலோ, அவர்களின் மனம் த்ருப்தியடையவில்லை. அதற்காக அவர்கள் மஹா தபஸ்ஸைச் செய்து, தபஸ்ஸின் பயனுக எந்த ஸமயத்தில் எந்த ரூபத்தை வேண்டுமானுலும் எடுத்துக்கொள்ளும் சக்தியை அடைந்து, வைடூர்ய கோமேதக புஷ்பராகம் முதலான நவரத்னங்களாக உருவத்தை எடுத்துக் கொண்டார்கள். இவ்விதம் ரத்னங்களாக தங்கள் உருவத்தை எடுத்துக்கொண்டு, தேவியினுடைய சிரஸ்ஸில் விளங்கிவருகிற தங்கமயமான கிரீடத்திலும் இழைக்கப்பட்டு விளங்கிவருகிருர்கள். அம்பாளுடைய கிரீடத்தில் பாஸித்துவரும் ரத்னங்களை த்வாதசாதித்யாள் என்று அறியவேண்டும். இவ்விதம் மஹிமை தங்கிய பரதேவதையினுடைய கிரீடத்தை எந்த வித்வான் வர்ணனை, செய்ய ஆரம்பிக்கின்ருனே அந்த வித்வான் மேற்சொல்லுகிற ப்ரகாரம், தன் புத்தியை தீர்மானித்துவிடுகிருன். தேவியோ சந்த்ர கலாதரை. தேவியினுடைய கிரீடத்தில் வளைவாக அர்த்த சந்த்ரன் பாஸித்துவருகிருன். கிரீடத்தில் இழைக்கப்பட்ட நவரத்னங்களுடைய சோபை சந்த்ர கலையில் ஸம்பந்தப்பட்டு, சந்த்ரகலை விசித்ர வர்ணங்களோடு கூடினதாக விளங்குகிறது. இதைப் பார்க்கும்பொழுது வித்வான்கள் இது சந்த்ரகலையல்ல;

இந்த்ரனுடைய வில் என்று எண்ணினூர்கள். வெளுப்பான சந்த்ரகலேயில், கிரீடம் தங்கமயமான தினூல், அதனுடைய சோபையும் கிரீடத்தில் இழைக்கப்பட்டிருக்கும் நவரத்னங்களுடைய சோபையும், சந்த்ரகலேயில் ஸம்பந்தப்பட்ட காரணத்தால் சந்த்ர கலேயானது விசித்ர வர்ணமுள்ளதாக ஆகிவிட்டது. அக்காரணத்தால் தேவியினுடைய கிரீடத்தை வர்ணிக்க யத்னம் செய்த வித்வான்கள், கிரீடத்தில் காணப்பட்ட சந்த்ரகலேயை இந்த்ர தனுஸ் என்று எண்ணினூர்கள் என்பது ந்யாயமாகும். சந்த்ரகலேயை சந்த்ரகலே என்று அறிந்தும், இது இந்த்ர தனுஸ் என்று வித்வான்கள் உத்ப்ரேக்ஷை செய்தார்கள். அல்லது, சந்த்ரகலேயைப் பார்த்து இது சந்த்ரகலே யில்லே, இந்த்ர தனுஸ்தான் என்று சந்த்ரகலேயை மறைத்துப் பேசினூர்கள். அல்லது சந்த்ரகலேயைப் பார்த்து இது சந்த்ரகலேயா, இந்த்ர தனுஸ்ஸா என்று ஸந்தேஹப்பட்டார்கள். அல்லது சந்த்ரகலேயைப் பார்த்து, சந்த்ரகலேக்கும் மேலானதான இந்த்ர தனுஸ் என்று வெகுமானத்துடன் பேசினூர்கள் என்று பலவிதமாக, चन्द्रशकलं, शौनासीरं धनुः हति धिषणांनिबध्नाति (அந்த்ரஶகலம், ஶௌநாஸீரம் யநு: உதி யிஷணாம் நிபத்நாதி) (சந்த்ரசகலம், சௌநாஸீரம் தநு: இதி திஷணும்நிபத்நாதி) என்ற பதங்களால் அபிப்ராயங் கள் தோன்றுகின்றன.

---

இதனூல், இந்த ச்லோகத்தில் உத்ப்ரேக்ஷாலங்காரம், ஸந்தேஹாலங்காரம், அபந்ஹவாலங்காரம் அதிசயோக்தி: என்ற அலங்காரம் என்ற ப்ரகாரம் நான்குவிதமான அலங்காரங்கள் அம்பாளுடைய கிரீட வர்ணனே ச்லோகத்தில் அடங்கியிருக்கிறது. அந்த கிரீடத்தில் இழைக்கப்பட்டிருக்கும் ரத்னங்கள் த்வாதசாதித்யாள் என்ற தேவர்கள் என்று சொன்ன தினூல், அவர்கள் எதிர்பார்த்த ப்ரகாரம் தேவியினுடைய அத்யந்த ஸமீபத்திலிருந்துகொண்டு தேவியை

த்யானம் செய்கிறார்கள் என்று வெளியாகிறது. இதனால் தேவர்கள்கூட அம்பிகையினுடைய உபாஸனத்தை ப்ரதானமாக நினைத்து, தனது தேவபாவத்தையும் மறைத்துக்கொண்டு, ஜடமான ரத்ன பாவத்தை அடைந்து தேவியினுடைய ஸமீபத்தில் இருந்துகொண்டு பரதேவதையை உபாஸித்து வருகிறார்கள் என்று தெரிகிறபடியால், கேவலம் மரண தர்மத்தோடு கூடிய மனிதர்கள் அவச்யம் தேவியினுடைய உபாஸனத்தில் ஈடுபட்டு, ஜன்ம ஸாபல்யத்தை அடையவேண்டும் என்று தெரிகிறது.

இந்த ச்லோகமானது ஜலரோக நிவர்த்தியில் கைகண்ட ப்ரயோகமாகும். தங்கத் தகட்டில் சதுரஸ்தமான ரேகை, அதை ஒட்டி சதுஷ்கோண ரேகை, நடுவில் ரं, ரं, ரீं ரீं(ரං,ரං,ரீං ரீං) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி, 45 தினங்கள் பூஜித்து, இந்த ச்லோகத்தை தினந்தோறும் 25,000 ஆவர்த்தி பாராயணம் செய்யவேண்டும். அரிசி மாவில் ஓமத்தைக் கலந்து இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யுங் காலத்தில் அபிமந்த்ரணம் செய்து, ரோகமுள்ளவர்களை சாப்பிடச் சொல்லவும். தினந்தோறும் பூஜைக்கு பக்ஷ்ய போஜ்யாதிகளுடன் ம்ருஷ்டான்னம் நிவேதனம் செய்யவேண்டும். இவ்விதம் ஒரு மண்டலம் பூஜை செய்த பிறகு யந்த்ரத்தை ரோகமுள்ளவர்கள் தரித்துக்கொள்ளவேண்டும்.

---

## 43. அம்பாளுடைய கேச ஸமூஹ வர்ணனை.

धुनोतु ध्वान्तं नस्तुलितदलितेन्दीवरवनम्
घनस्निग्धश्लक्ष्णं चिकुरनिकुरुम्बं तव शिवे ।
यदीयं सौरभ्यं सहजमुपलब्धुं सुमनसो
वसन्त्यस्मिन्मन्ये वलमथनवाटीविटपिनाम् ॥ ४३ ॥

𑌧𑍁𑌨𑍋𑌤𑍁 𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌂 𑌨𑌸𑍍𑌤𑍁𑌲𑌿𑌤𑌦𑌲𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍀𑌵𑌰𑌵𑌨𑌂
𑌘𑌨𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌶𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌣𑌂 𑌚𑌿𑌕𑍁𑌰𑌨𑌿𑌕𑍁𑌰𑍁𑌮𑍍𑌬𑌂 𑌤𑌵 𑌶𑌿𑌵𑍇।
𑌯𑌦𑍀𑌯𑌂 𑌸𑍌𑌰𑌭𑍍𑌯𑌂 𑌸𑌹𑌜𑌮𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑍁𑌂 𑌸𑍁𑌮𑌨𑌸𑍋
𑌵𑌸𑌨𑍍𑌤𑍍𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑍇 𑌬𑌲𑌮𑌥𑌨𑌵𑌾𑌟𑍀𑌵𑌿𑌟𑌪𑌿𑌨𑌾𑌮𑍍
॥ ௪௩ ॥

துநோது த்வாந்தம் நஸ்துலிததலிதேந்தீவரவநம்
கநஸ்நிக்தச்லக்ஷ்ணம் சிகுரநிகுரும்பம் தவ சிவே।
யதீயம் ஸௌரப்யம் ஸஹஜமுபலப்தும் ஸுமநஸோ
வஸந்த்யஸ்மிந்மந்யே வலமதநவாடீவிடபிநாம் ॥ 43 ॥

| | | |
|---|---|---|
| हे शिवे (𑌹𑍇 𑌶𑌿𑌵𑍇) (ஹே சிவே) | = | ஹே பார்வதி! |
| तुलितदलितेन्दीवरवनं (𑌤𑍁𑌲𑌿𑌤𑌦𑌲𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍀𑌵𑌰𑌵𑌨𑌂) (துலிததலிதேந்தீவர வநம்) | = | விகஸித்த (மலர்ந்த) நீலோத்பல புஷ்பங்களுடைய கூட்டத்திற்கு ஸமானமாயும் |
| घनस्निग्धश्लक्ष्णं (𑌘𑌨𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌶𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌣𑌂) (கநஸ்நிக்தச்லக்ஷ்ணம்) | = | நிபிடமாயும், பசை உள்ளதாயும், ம்ருதுவாயுமுள்ள |
| तव (𑌤𑌵) (தவ) | = | உன்னுடைய |
| चिकुरनिकुरुम्बं (𑌚𑌿𑌕𑍁𑌰𑌨𑌿𑌕𑍁𑌰𑍁𑌮𑍍𑌬𑌂) (சிகுர நிகுரும்பம்) | = | கேச ஸமூஹமானது |
| नः (𑌨𑌃) (ந:) | = | எங்களுடைய |
| ध्वान्तं (𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌂) (த்வாந்தம்) | = | உள் இருட்டை |
| धुनोतु (𑌧𑍁𑌨𑍋𑌤𑍁) (துநோது) | = | போக்கடிக்கட்டும். |

यदीयं (𑌯𑌦𑍀𑌯𑌂) (யதீயம்) = எந்த கேச ஸமூஹத்தி லுள்ளதாயும்

सहजं(𑌸𑌹𑌜𑌂)(ஸஹஜம்) = இயற்கையாயும் உள்ள

सौरस्यं (𑌸𑍌𑌰𑌸𑍍𑌯𑌂) (ஸௌரப்யம்) = வாஸனையை

उपलब्धुं (𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍁𑌂) (உபலப்தும்) = தான் அடைவதற்கு

वलमथनवाटीविटपिनाम् (𑌵𑌲𑌮𑌥𑌨𑌵𑌾𑌟𑍀𑌵𑌿𑌟𑌪𑌿𑌨𑌾𑌮𑍍) (வலமதநவாடீ விடபிநாம்) = தேவேந்த்ரனுடைய உத்யான வனத்தில் விளங்கும் கல்ப வ்ருக்ஷங்களுடைய

सुमनसः (𑌸𑍁𑌮𑌨𑌸𑌃) (ஸுமநஸ:) = புஷ்பங்கள்

अस्मिन् (𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍)(அஸ்மிந்) = இந்த கேச பாகத்தில்

वसन्ति (𑌵𑌸𑌨𑍍𑌤𑌿)(வஸந்தி) = வஸிக்கின்றதுகள்

इति (𑌇𑌤𑌿) (இதி) = என்று

मन्ये (𑌮𑌨𑍍𑌯𑍇) (மந்யே) = எண்ணுகின்றேன்.

தாத்பர்யம் :—தேவியினுடைய கேச ஸமூஹங்களுக்கு நீலோத்பல புஷ்பங்களுடைய கூட்டத்தையே உதாஹரணமாக எடுத்துக்கொள்ளவேண்டும். உதாஹரணமாக எடுத்துக்கொள்ளப்படும் நீலோத்பல புஷ்பங்களுடைய கூட்டமும், மலர்ந்ததாகவே இருக்க வேண்டும். அவைகள்போல் அம்பாளுடைய கேச ஸமூஹங்கள் பாஸித்துவருகின்றன. அத்துடன், ஒரு கேசத்திற்கும் மற்ரொரு கேசத்திற்கும் இடையில்லாது நிபிடமாகவும் விளங்குகிறது. ஸுகந்தமான தைலம் தடவியதுபோல் இயற்கையாகவே

பசை உள்ளதாயும் ம்ருதுவாயும், கேசங்கள் பாஸித்துவருகிறது. இவ்விதமான கேச ஸமூஹங்களுக்கோ, நல்ல வாஸனையும் இயற்கையாகவே ஏற்பட்டிருக்கிறது. புஷ்பங்களுக்கு உள்ள வாஸனைகள் தேவியினுடைய கேச ஸமூஹத்தை அண்டி ஸம்பாதித்துக்கொண்டது என்று தெரிந்துகொள்ளவேண்டும். தேவலோகத்தில் இந்த்ரனுடைய உத்யான வனத்திலுள்ள கல்ப வ்ருக்ஷங்களுடைய புஷ்பங்களுக்கு நல்ல வாஸனை ஏற்படுவதற்காகவே, இந்த்ரனுடைய ஆக்ஞையை அனுஸரித்து, அப்புஷ்பங்கள் தேவியினுடைய கேச பாகத்தில் வாஸம் செய்கின்றன. தேவியினுடைய கேசஸமூஹத்திற்கு இயற்கையாகவே ஏற்பட்ட வாஸனைகளையோ யாராலும் வர்ணிக்கமுடியாது அபாரமானது. தேவியின் கேசஸமூஹத்தில் அப்புஷ்பங்கள் அலங்கரிக்கப்பட்ட காரணத்தால்தான் கல்பவ்ருக்ஷங்களுடைய புஷ்பங்களுக்கே வாஸனை ஏற்பட்டது. மற்ற புஷ்பங்களும் புஷ்ப ஜாதியில் கல்ப வ்ருக்ஷங்களுக்கு ஸமானமானதினால், தேவியினுடைய கேச ஸமூஹத்திலிருந்தும் வாஸனையை ஸம்பாதித்துவந்த கல்ப வ்ருக்ஷங்களை ஆச்ரயித்து, அவைகளும் கொஞ்சம் வாஸனையை யாசித்துக்கொண்டு அவைகளும் வாஸனை உள்ளதாக விளங்குகின்றது. அஹங்காரத்தால் கல்பவ்ருக்ஷங்களை யாசிக்காத புஷ்பங்களுக்கு வாஸனையேயில்லை. இந்த ச்லோகத்தால் அம்பாளுடைய கேச ஸமூஹத்திற்கு இயற்கையாகவே நல்ல வாஸனை உண்டு; புஷ்பத்தின் சேர்க்கையால் இல்லை என்று வெளியாகிறது.

ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்தில், ஸாக்ஷாத் பரமேச்வரனும், நக்கீரர் என்ற பரம பக்தரும், விவாதம் செய்துகொண்டிருக்கும் ஸமயத்தில், மீனாக்ஷி பரதேவதையின் கேச ஸமூஹத்திற்கு வாஸனை இயற்கையினாலா, சேர்க்கையினாலா என்று விவாதமேற்பட, ஸுந்தரேச்வரர், இயற்கையினால் என்று சொல்ல, நக்கீரர்

என்ற பக்தர் மீனாக்ஷியானாலும், அல்லது மற்ற எந்த தேவதையானாலும், கேசஸமூஹத்திற்கு வாஸனை சேர்க்கையினால்தான் என்று வாதம் செய்த கதையை ஆஸ்திகர்கள் அறியக்கூடும். "ஸௌந்தர்யலஹரீ" என்ற இந்த முக்யமான ஸ்தோத்ரத்திற்கு கர்த்தா வான நமது பரமாசார்யாளே, ஸாக்ஷாத் கைலாஸவாஸி யானபரமேச்வரன்தான் என்பதற்கு இந்த ச்லோகமே அத்தாக்ஷியாகும். பரமேச்வரனே, ஹாலாஸ்யமாஹாத் ம்யத்தில், மீனாக்ஷியினுடைய கேசத்திற்கு இயற்கை யாகவே வாஸனை என்று வாதித்தார். இங்கு ஆசார் யாளும், यदीयं सौरभ्यं सहजमुपलब्धुं (𑌯𑌦𑍀𑌯𑌂 𑌸𑍌𑌰𑌭𑍍𑌯𑌂 𑌸𑌹𑌜𑌮𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑍁𑌂) (யதீயம் ஸௌரப்யம் ஸஹஜ முபலப்தும்) என்ற வாக்யத்தால் सहजं (𑌸𑌹𑌜𑌂) (ஸஹஜம்) என்ற பதத்தால், அம்பாளுடைய கேச ஸமூஹத்திலுள்ள வாஸனை 'இயற்கை' என்று வர் ணிக்கின்றார். ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்திலும், இங்கு "ஸௌந்தர்யலஹரீ"யிலும் அம்பாளுடைய கேச ஸமூஹத்தின் வாஸனையைப்பற்றி ஒரே விதமாகவே சொல்லியிருக்குங்காரணத்தால் அதே பரமேச்வரன் தான் பரமாசார்யாள் என்பதற்கு வேறு அத்தாக்ஷி யும் வேண்டுமோ! இந்த ச்லோகத்திற்கு வ்யாக் யானம் செய்துவருகிற பாஸ்கரராயர் என்ற மஹா னுபாவனே, இந்த ச்லோகத்தில் உத்ப்ரேக்ஷா அலங் காரம் என்று எழுதி இருக்கிறார்கள். அதாவது கேச ஸமூஹத்தில் வாஸனை ஏற்படுவதற்காக புஷ்பங்களை தரித்துக்கொள்வதன்னியில் புஷ்பங்களுக்கு வாஸனை கேச ஸமூஹத்தால் ஏற்படுவதென்பது ஸரியல்ல. கேச ஸமூஹத்திற்கு சேர்க்கையினால்தான் வாஸனை ஏற்படவேண்டும்; இயற்கையினால் இல்லை; கேசஸமூ ஹத்தை வர்ணிக்கும்பொழுது அதைப் பெருமை யாகச் சொல்வதற்காக க்ரந்த கர்த்தாவான ஆசார் யாள் அம்பாளுடைய கேசஸமூஹத்தைப் பெருமை யாகப் பேசுவதற்கு உத்ப்ரேக்ஷை செய்திருக் கிறார்கள் என்று அபிப்ராயப்படுகிறார். இதை

விசாரிக்கும்பொழுது நக்கீரரே பாஸ்கரராயராக மறு படியும் அவதரித்திருக்கிறுரோ என்றும் தோன்று கிறது. अम्बापराधतोमुक्तिं नकीरोनैव गच्छति। अम्बापराधतो भूयः मुक्तिमापद्विजोत्तमः (𑌅𑌮𑍍𑌬𑌾𑌪𑌰𑌾𑌧𑌤𑍋𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌂 𑌨𑌕𑍍𑌕𑍀𑌰𑍋𑌨𑍈𑌵 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿। 𑌅𑌮𑍍𑌬𑌾𑌪𑌰𑌾𑌧𑌤𑍋 𑌭𑍂𑌯𑌃 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑌦𑍍𑌵𑌿𑌜𑍋𑌤𑍍𑌤𑌮𑌃) (அம்பாபராததோமுக்திம் நக்கீரோ நைவ கச்சதி। அம்பாபராததோ பூய: முக்திமாபத்விஜோத்தம:) என்ற ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்திலுள்ள வாக்யத்தி னுல், மீனுக்ஷியினுடைய கேசஸமூஹத்திற்கு இயற் கையாக வாஸனை இல்லை என்று சொன்ன அப ராதத்தால், நக்கீரர் முக்தியை அந்த ஜன்மாவிலடைய முடியாமல் மறுபடியும் ப்ராம்மணுேத்தமனுக பிறந்து தேவியினுடைய ஆராதனத்தை மிகவும் விஸ்தார மாகச் செய்து, ஸகல சாஸ்த்ரங்களிலும் பரம நிபுண னுக ஆகி பரதேவதையினுடைய ப்ரத்யக்ஷ தர்சனத் தைச் செய்து, பாஸ்கரராயர் என்ற பெயரால் விளங்கி க்ருதார்த்தராக ஆனுர். தேவியினுடைய கேச ஸமூஹத்தை அநுபவித்துவருகிற பரமேச் வரன் சொல்வது ஸரியாக ஆகுமா? அல்லது அனு பவிக்காது சொல்லும் பாஸ்கரராயர் சொல்வது ஸரி யாகுமா? என்று விவேகிகள் அறியவும். பரமாசார் யாள் அம்பாளுடைய கேசஸமூஹத்தினுடைய வாஸ னையை सहजं (𑌸𑌹𑌜𑌂) (ஸஹஜம்) என்ற விசேஷ ணத்தால் விசேஷித்துச் சொல்லியிருப்பதே, முன் சொன்ன விசாரத்திற்குக் காரணமாகும். ஸ்ரீமத் பாகவதம் முதலான க்ரந்தத்தில் க்ருஷ்ணுவதார கட் டத்தில், க்ருஷ்ணனை வர்ணிக்கும்பொழுது, गळशोभिकौस्तुभं (𑌗𑌳𑌶𑍋𑌭𑌿𑌕𑍌𑌸𑍍𑌤𑍁𑌭𑌂) (களசோபி கௌஸ்துபம்) என்று விசேஷணம் காணப்படுகிறது. பகவானு டைய கழுத்தில் சோபிக்கின்ற கௌஸ்துபமணி என்று அந்த ப்ரகரணத்தில் ஸ்ரீதராசார்ய ஸ்வாமிக ளவர்கள் அர்த்த வர்ணனை செய்கிறுர்கள். கௌஸ்

துப மணியினுல் பகவானுடைய கழுத்திற்கு சோபை யில்லை, கௌஸ்துபமணிதான் சோபையை ஸம் பாதித்துக்கொள்வதற்கு புவனஸௌந்தரனுன பகவா னுடைய கழுத்தை ஆச்ரயித்தது என்று அபிப்ராய மானது வெளியாகிறது. இதை ஆலோசித்துப் பார்த் தால், கல்ப வ்ருக்ஷத்தினுடைய புஷ்பங்களால் அம்பா ளுடைய கேசத்திற்கு வாஸனையில்லை; அம்பாளு டைய கேசஸமூஹத்திற்கு இயற்கையான வாஸனை தான்; புஷ்பங்கள்தான், தான் வாஸனையை ஸம்பாதித் துக்கொளவதற்கு அம்பாளுடைய கேச ஸமூஹத்தை ஆச்ரயித்தது என்ற அபிப்ராயந்தான் உசிதம்போல் தோன்றுகிறது.

தவிர, மலர்ந்த நீலோத்பல புஷ்பங்களுடைய கூட்டத்தை அம்பாளுடைய கேச ஸமூஹத்திற்கு த்ருஷ்டாந்தமாகச் சொல்லியிருப்பதினுலேயே, நீலோத்பல புஷ்பம்போல் அம்பாளுடைய கேச ஸமூ ஹம் நல்ல வாஸனையுள்ளது என்பது வெளியாகிறது. இதனுலும் தேவியினுடைய கேச ஸமூஹத்தின் வாஸனை இயற்கைதான் என்பதை அறியலாம். இந்த விசேஷணத்தால் உபமாலங்காரம் சொல்லப் படுகிறது.

முன் சொல்லியபடி உத்ப்ரேக்ஷாலங்காரமும், நீலோத்பல புஷ்ப த்ருஷ்டாந்தத்தால் உபமாலங் காரமும் ஆக இரண்டு அலங்காரம் இந்த ச்லோகத் தால் வெளியாகிறது. இவ்விதம் தேவியினுடைய கேச ஸமூஹத்தை த்யானம் செய்கின்றவர்களுக்கு மோக்ஷத்திற்கு ஹேதுவான சுத்த வாஸனை மேலிட்டு, பந்தத்திற்கு ஹேதுவான மலின வாஸனைகள் நசித்து விடுகிறது. வாஸனுக்ஷயம் என்ற மஹாபலமும் இந்த உபாஸனத்தால் ஸித்திக்கும்.

*இந்த ச்லோகமானது ஸர்வஜன வச்யத்தில் உபயோகமுள்ள தாகும். தங்கமயமான மோதிரத்தில் ஸ்ரீ (ஸ்ரீம்) (ப்ரும்)*

என்ற பீஜாக்ஷரத்தை எழுதி பூஜை செய்யவேண்டும். தினம் 25,000 ஆவர்த்திவீதம் 45 நாள் இந்த ச்லோகத்தை ஜபம் செய்ய வேண்டும். ம்ருஷ்டான்ன நெய்வேத்யம் செய்யவேண்டும். ஸர்வ ரோக நிவர்த்தியிலும் உபயோகப்படுத்தலாம். தங்கத் தகட்டில் சதுஷ்கோணம் போட்டு, நடுவில் ஸ்ரீ (ஶ்ரீம்) (ஸ்ரீம்) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி ஜபிக்கவும். ஒரு மண்டலம் முடிந்த பிறகு யந்த்ரத்தை தாரணம் செய்துகொள்ளவேண்டியது. ரோக நிவர்த்தியோடு ஸர்வ ஜயமும் ஸித்திக்கும்.

---

## 44. தேவியின் ஸீமந்த (மஹிடு) வர்ணனை.

तनोतु क्षेमं नस्तव वदनसौन्दर्यलहरी
परीवाहः स्रोतः सरणिरिव सीमन्तसरणिः ।
वहन्ती सिन्दूरं प्रबलकबरीभारतिमिर-
द्विषां बृन्दैर्बन्दीकृतमिव नवीनार्ककिरणम् ॥ ४४ ॥

𑌤𑌨𑍋𑌤𑍁 𑌕𑍍𑌷𑍇𑌮𑌂 𑌨𑌸𑍍𑌤𑌵 𑌵𑌦𑌨𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌲𑌹𑌰𑍀
𑌪𑌰𑍀𑌵𑌾𑌹𑌃 𑌸𑍍𑌰𑍋𑌤𑌃 𑌸𑌰𑌣𑌿𑌰𑌿𑌵 𑌸𑍀𑌮𑌨𑍍𑌤𑌸𑌰𑌣𑌿𑌃 ।
𑌵𑌹𑌨𑍍𑌤𑍀 𑌸𑌿𑌨𑍍𑌦𑍂𑌰𑌂 𑌪𑍍𑌰𑌬𑌲𑌕𑌬𑌰𑍀𑌭𑌾𑌰𑌤𑌿𑌮𑌿𑌰-
𑌦𑍍𑌵𑌿𑌷𑌾𑌂 𑌬𑍃𑌨𑍍𑌦𑍈𑌰𑍍𑌬𑌨𑍍𑌦𑍀𑌕𑍃𑌤𑌮𑌿𑌵 𑌨𑌵𑍀𑌨𑌾𑌰𑍍𑌕𑌕𑌿𑌰𑌣𑌮𑍍 ॥ ௪௪ ॥

தனோது க்ஷேமம் நஸ்தவ வதனஸௌந்தர்யலஹரீ
பரீவாஹ: ஸ்ரோத: ஸரணிரிவ ஸீமந்தஸரணி: ।
வஹந்தீ ஸிந்தூரம் ப்ரபலகபரீபாரதிமிர-
த்விஷாம் ப்ருந்தைர்பந்தீக்ருதமிவ நவீனார்ககிரணம் ॥ 44 ॥

| | |
|---|---|
| हे देवि (𑌹𑍇 𑌦𑍇𑌵𑌿) (ஹே தேவி) | = ஹே பரதேவதையே! |
| तव (𑌤𑌵) (தவ) | = உன்னுடைய |
| वदनसौन्दर्यलहरी,परीवाहः स्रोतः सरणिरिव (𑌵𑌦𑌨𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌲𑌹𑌰𑍀, 𑌪𑌰𑍀𑌵𑌾𑌹𑌃 𑌸𑍍𑌰𑍋𑌤𑌃 𑌸𑌰𑌣𑌿𑌰𑌿𑌵) (வதநஸெளந்தர்யலஹரீ, பரீவாஹ: ஸ்ரோத: ஸரணிரிவ) | = முகத்தின் ஸெளந்தர்ய ரஸத்தினுடைய ப்ரவாஹ ~~த்தின்~~ப் பெருக்கின் போக்கு மார்க்கம் போலிருக்கின்றதாயும் |
| प्रबलकबरीभारतिमिरद्विषां वृन्दैः (𑌪𑍍𑌰𑌬𑌲𑌕𑌬𑌰𑍀𑌭𑌾𑌰𑌤𑌿𑌮𑌿𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌾𑌂 𑌬𑍃𑌨𑍍𑌦𑍈𑌃) (ப்ரபலகபரீபாரதிமிர த்விஷாம் ப்ருந்தை:) | = பலிஷ்டமான கேசபாகங்களாகிய இருட்டு ரூபமான சத்ருக்களுடைய கூட்டங்களால் |
| बन्दीकृतमिवस्थितं (𑌬𑌨𑍍𑌦𑍀𑌕𑍃𑌤𑌮𑌿𑌵 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂) (பந்தீக்ருதமிவ ஸ்திதம்) | = ஜயிலறையில் அடைக்கப்பட்டது போலிருக்கின்றதாயும் |
| नवीनार्ककिरणम् इव (𑌨𑌵𑍀𑌨𑌾𑌰𑍍𑌕𑌕𑌿𑌰𑌣𑌮𑍍 𑌇𑌵) (நவீநார்க கிரணம் இவ) | = பாலஸூர்ய கிரணம் போல் பாஸிக்கின்றதாயும் இருக்கிற |
| सिन्दूरं (𑌸𑌿𑌨𑍍𑌦𑍂𑌰𑌂) (ஸிந்தூரம்) | = குங்குமத்தை |
| वहन्ती (𑌵𑌹𑌨𑍍𑌤𑍀) (வஹந்தீ) | = வஹிக்கின்றதாயுமிருக்கிற |

सीमन्तसरणिः (ஸீமந்தஸரணிஃ) = மஹிடு பிளந்துகொண்
(ஸீமந்தஸரணி:) டிருக்கும் மார்க்கமானது

नः (நஃ) (ந:) = எங்களுடைய

क्षेमं (க்ஷேமம்) (க்ஷேமம்) = யோக க்ஷேமத்தை

तनोतु (தநோது) = விஸ்தாரப்படுத்தட்டும்.
(தநோது)

தாத்பர்யம் :—உத்தம ஸ்த்ரீகள் தனது சிரஸ்ஸில் புருவத்தினுடைய நடுவிற்கு நேரில் கேச பாகங்களை இரு புரத்திலும் வாரிவிட்டுக்கொண்டு, நடு சிரஸ்ஸில் ஒரு வழிபோல் அலங்கரித்துக்கொள்கிற வழக்கமுண்டு. இதைத்தான் ஸம்ஸ்க்ருதத்தில் सीमन्तसरणि (ஸீமந்தஸரணி) (ஸீமந்தஸரணி) என்றும், தமிழில் மஹிடு என்றும் சொல்கிற வழக்கமுண்டு. அதைப் பார்க்கும்பொழுது, தேவியினுடைய முகத்திலுள்ள ஸௌந்தர்ய ரஸத்தின் ப்ரவாஹப் பெருக்கிற்கு ஏற்பட்டிருக்கும் போக்கு வாய்க்காலோ என்று தோன்றுகிறது. सीमन्तसिन्दूरं (ஸீமந்தஸிந்தூரம்) (ஸீமந்தஸிந்தூரம்) என்று மஹிடில் குங்குமத்தை அம்பாள் அலங்கரித்துக்கொண்டிருக்கிருள். குங்குமமோ, சிவப்பாயும் வர்துளமாயும் இருந்துவருகிறது. அதின் இருபக்கத்திலும் விளங்குகின்ற கேச ஸமூஹங்களைப் பார்த்தாலோ, இருளைப்போல் கருப்பாக இருந்துவருகின்றது. குங்குமத்தின் ஸ்வரூபத்தைக் கவனித்தாலோ, உதய காலத்திலுள்ள ஸூர்யன்போல் ப்ரகாசித்து வருகின்றது. இருட்டுகளுக்கு ஸூர்யனிடத்தில் சத்ருபாவம் உண்டென்பது ப்ரஸித்தமானது. இருட்டுகள்தான் ஒன்றுகூடிச் சேர்ந்து வைரத்தால் பாலஸூர்யனை நடுவில் சிக்கிக்கச் செய்துகொண்டு, இரண்டு பக்கங்களிலும் ஸூர்யன் அங்குமிங்கும் ஓடாமல் வளைத்து, ஜயிலில் அடைக்

கப்பட்டதுபோல், பாலஸூர்யனை பரவசப்படுத்தி வருகின்றதுகளோ என்று சொல்லக்கூடியதாக இருக்கின்றது. ஸீமந்தஸரணியிலுள்ள குங்குமத்தை பாலஸூர்யனாகவும், இரு பார்ச்வங்களிலுமுள்ள கேச ஸமூஹங்களை ஸூர்யனுக்கு சத்ருவான இருட்டாகவும் பாவிக்கவேண்டும். அவ்விதமான பாலஸூர்யனைப் போல் பாஸித்துவருகின்ற ஸிந்தூரத்தை வஹிக்கின்ற தேவியினுடைய ஸீமந்தஸரணியே ப்ரக்ருதத்தில் த்யேயமான வஸ்துவாகும். இவ்விதம் த்யானம் செய்கிற ஸாதகர்களுடைய யோகக்ஷேமத்தை அம்பாள் தானாகவே வஹிக்கின்றாள். அடையப்படாததான வஸ்துக்களை அடைவது யோகம் என்று சொல்லப்படும். அடையப்பட்ட வஸ்துவை ரக்ஷிப்பது க்ஷேமம் என்று சொல்லப்படும். யோகம், க்ஷேமம் இரண்டையும் உபாஸகர்களுக்குக் கவலையில்லாமல் தானே வஹிக்கின்றாள். ஸீமந்தஸரணியிலுள்ள ஸிந்தூரத்தை பாலஸூர்யனாக த்யானம் செய்கிறதினின்றும் ஸாதகர்களுக்கு மோக்ஷஸாதனமான ஞானமும் உதிக்குமென்று தெரிகிறது. கேச பாகங்களை இருளாக வர்ணித்ததிலிருந்தும் அனாதிகால ஸித்தமான அக்ஞானம் ப்ரபலமானதினால், உதித்த ஞானமும் அக்ஞானத்தால் பராபவத்தை அடைந்ததுபோல் அப்யாஸ காலத்தில் தோன்றிவந்தாலும், காலக்ரமேண, மேற்சொன்னபடி தேவியை உபாஸிக்கிறவர்கள், அக்ஞானம் ஒழிந்து, க்ருதார்த்தர்களாக ஆகுவார்கள். ஸீமந்தஸரணியை ப்ரவாஹத்தின் போக்கு வாய்க்கால் என்று உத்ப்ரேக்ஷை செய்ததினால், உத்ப்ரேக்ஷாலங்காரமும்; ஸிந்தூரத்தை ஸூர்ய கிரணம் என்று சொன்னதினால் ஸம்பாவனையும்; கேசபாகத்தில் இருட்டு என்பதை ஆரோபணம் செய்ததினால், ரூபகாலங்காரமும்; இந்த ச்லோகத்தால் பாஸிக்கின்றன. இந்த ச்லோகத்தில் சொல்லிய ப்ரகாரம் தேவியின் ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறவர்கள், தன் குடும்ப விஷயமான யோகக்ஷேமத்திற்கு யாதொரு

கவலையையும் அடையவேண்டாம். भानुमण्डलमध्यस्था (𑌭𑌾𑌨𑍁𑌮𑌣𑍍𑌡𑌲𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌥𑌾) ( பாநுமண்டலமத்யஸ்தா ) என்ற லலிதா ஸஹஸ்ரநாமத்திலுள்ள நாமாவளியை அனுஸரித்து, ஸூர்யமண்டலத்தினுடைய நடுவில் பரதேவதை விளங்கிவருகிறபடியால், இவ்விதம் தேவியை த்யானம் செய்துகொண்டு இந்த ச்லோகத்தை ஆவர்த்தி செய்து உபாஸனை செய்கிறவர்கள் ராஜபோகத்தை அனுபவிப்பார்கள் என்பது ஸித்தம்.

இந்த ச்லோகத்தால் ஸர்வஜன வச்யமும், ஸகல க்ஷேமமும், ஸகல கார்ய ஸித்தியும் உண்டாகும். மஞ்சள் குங்குமத்தில் क्लीम् (𑌕𑍍𑌲𑍀𑌮𑍍) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி பூஜித்து 12 நாள், தினம் 25,000 வீதம் இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்து, அந்த மஞ்சள் குங்குமத்தை நெற்றியில் தரித்துக்கொண்டால் ஸர்வஜன வச்யம். தங்கத் தகட்டில் எழுதி தரித்துக்கொண்டால் ஸர்வ ரோக நிவர்த்தி.

---

## 45. அம்பாளுடைய முன் நெற்றி மயிர்களின் வர்ணனை.

अरालैः स्वाभाव्यादलिकलभसश्रीभिरलकैः
परीतं ते वक्त्रं परिहसति पङ्केरुहरुचिम् ।
दरस्मेरे यस्मिन् दशनरुचिकिञ्जल्करुचिरे
सुगन्धौ माद्यन्ति स्मरदहनचक्षुर्मधुलिहः ॥ ४५ ॥

𑌅𑌰𑌾𑌲𑍈𑌃 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑍍𑌯𑌾𑌦𑌲𑌿𑌕𑌲𑌭𑌸𑌶𑍍𑌰𑍀𑌭𑌿𑌰𑌲𑌕𑍈𑌃
𑌪𑌰𑍀𑌤𑌂 𑌤𑍇 𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑌰𑌿𑌹𑌸𑌤𑌿 𑌪𑌙𑍍𑌕𑍇𑌰𑍁𑌹𑌰𑍁𑌚𑌿𑌮𑍍 ।
𑌦𑌰𑌸𑍍𑌮𑍇𑌰𑍇 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑌶𑌨𑌰𑍁𑌚𑌿𑌕𑌿𑌞𑍍𑌜𑌲𑍍𑌕𑌰𑍁𑌚𑌿𑌰𑍇
𑌸𑍁𑌗𑌨𑍍𑌧𑍌 𑌮𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑍍𑌮𑌰𑌦𑌹𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌮𑌧𑍁𑌲𑌿𑌹𑌃
॥ ௪௫ ॥

அராலை: ஸ்வாபாவ்யா தலிகலபஸஶ்ரீபிரலகை:
பரீதம் தே வக்த்ரம் பரிஹஸதி பங்கேருஹருசிம் ।
தரஸ்மேரே யஸ்மிந் தசநருசிகிஞ்ஜல்கருசிரே
ஸுகந்தௌ மாத்யந்தி ஸ்மரதஹநசக்ஷுர்மதுலிஹ: ॥ 45 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே!

दरस्मेरे (𑌦𑌰𑌸𑍍𑌮𑍇𑌰𑍇) (தரஸ்மேரே) = கொஞ்சம் மலர்ந்தது போல் புன்சிரிப்போடு கூடினதாயும்

दशनरुचिकिञ्जल्करुचिरे (𑌦𑌶𑌨𑌰𑍁𑌚𑌿𑌕𑌿𑌞𑍍𑌜𑌲𑍍𑌕𑌰𑍁𑌚𑌿𑌰𑍇) (தசநருசி கிஞ்ஜல்கருசிரே) = பற்களுடைய காந்திகளாகிற கேஸரங்களால் அழகாயும்

सुगन्धौ (𑌸𑍁𑌗𑌨𑍍𑌧𑍌) (ஸுகந்தௌ) = தாமரஸ புஷ்பத்தின் வாஸனையோடு கூடினதாயும் உள்ள

यस्मिन् (𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍) (யஸ்மிந்) = யாதொரு முககமலத்தில்

स्मरदहनचक्षुर्मधुलिहः (𑌸𑍍𑌮𑌰𑌦𑌹𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌮𑌧𑍁𑌲𑌿𑌹𑌃) (ஸ்மர தஹநசக்ஷுர் மதுலிஹ:) = மன்மதனை எரித்த பரமேச்வரனுடைய கண்களாகிய ப்ரமரங்கள்

माद्यन्ति (𑌮𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌿) (மாத்யந்தி) = ஆனந்தத்தை அடைகின்றதோ

स्वाभाव्यात् (𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑍍𑌯𑌾𑌤𑍍) (ஸ்வர்பாவ்யாத்) = இயற்கையிலேயே

अरालैः (𑌅𑌰𑌾𑌲𑍈𑌃) (அராலை:) = வக்ரமான

| | | |
|---|---|---|
| अलिकलभसश्रीभिः (அலிகல ஃபஶ்ரீஹி:) (அலிகல பஸஶ்ரீபி:) | = | குட்டி வண்டுகளுடைய சோபையைப்போலொத்த சோபையோடு கூடினதுகளான |
| अलकैः (அலகை:) (அலகை:) | = | முன் நெற்றி மயிர்களால் |
| परीतं (பரீதம்) (பரீதம்) | = | வ்யாபரிக்கப்பட்ட |
| ते (தே) (தே) | = | உன்னுடைய |
| तत्वक्त्रं (தத்வக்த்ரம்) (தத்வக்த்ரம்) | = | அந்த முகமானது |
| पङ्केरुहरुचिम् (பங்கேருஹருசிம்) (பங்கேருஹ ருசிம்) | = | தாமரைப் புஷ்பத்தின் காந்தியை |
| परिहसति (பரிஹஸதி) (பரிஹஸதி) | = | பரிஹாஸம் செய்கின்றது. |

தாத்பர்யம் :—தேவியினுடைய நெற்றிக்குச் சமீபத்தில் சிரஸ்ஸில் பாஸிக்கும் ஸூக்ஷ்மமான கேசங்கள் புஷ்பத்தினுடைய ரஸத்தை க்ரஹிக்கும் வண்டுகளுடைய குட்டிகள்போல் பாஸித்துவருகின்றன. அம்பாளுடைய முகமாகிய மலர்ந்த தாமரஸ புஷ்பத்தில் ரஸத்தை க்ரஹிக்க வண்டுகளுடைய குட்டிகள் வந்து சூழ்ந்துகொண்டிருக்கின்றனவோ என்றும் அதைப் பார்க்கத் தோன்றுகிறது. இவ்விதம் வண்டுகளின் குட்டிகளைப் போல் பாஸிக்கின்ற அளகங்களால் (முன் நெற்றி மயிர்களால்) வ்யாபரிக்கப்பட்ட தேவியின் முகத்திலுள்ள காந்தியானது மலர்ந்த தாமரஸ புஷ்பத்தின் காந்தியையும் கீழாகச் செய்துவிடுகிறது. கொஞ்சம் விகஸித்த தாமரஸ

புஷ்பம்போல், புன்சிரிப்பால் அலங்கரிக்கப்பட்டு வருகின்றன. தாமரஸ புஷ்பங்களுடைய நடுவில் கிஞ்சல்கங்கள் என்ற கேஸரங்கள் விளங்குவதுபோல், தேவியினுடைய முகமாகிய தாமரஸப் புஷ்பத்தில், தேவியின் பற்களுடைய காந்திகள் கேஸரங்களாக விளங்கி வருகின்றன. தாமரஸ புஷ்பத்திலுள்ள மதுவை (ரஸத்தை) அபஹரிக்க வண்டுகள் புஷ்பத்தில் ஸஞ்சாரம்செய்யும். அதுபோல் அம்பிகையினுடைய முகமாகிய தாமரஸப் புஷ்பத்திலும், மன்மதனை எரித்த பரமேச்வரனுடைய கண்களே ப்ரமரங்கள்போல் சஞ்சரிக்கின்றன. இதனுல் பரமேச்வரன் மன்மதனை எரித்தவராக இருந்தாலும், தேவியினுடைய முகத்தைப் பார்த்தமாத்ரத்தால், பரமேச்வரன் மன்மதனை எரிக்கவில்லை; பரமேச்வரன்தான் மன்மதனுல் பராஜயத்தை யடைந்தாரோ என்று தோன்றுகிறது. லோகத்தில் ஸாமான்யமான ஸ்த்ரீகளின் முகமே பார்த்த புருஷர்களுக்கு மோஹத்தை உண்டுபண்ணக் கூடியது. தேவியினுடைய முகம் அவ்விதமான மஹிமை உள்ளது என்பதைச் சொல்லவும் வேண்டுமா? தாமரஸப் புஷ்பத்தினுடைய காந்தியை அம்பாளுடைய முக கமல காந்தியானது பரிஹஸிக்கிறதென்று உத்ப்ரேக்ஷையாகச் சொல்லப்படுகிறது. அம்பாளுடைய அளகங்களுக்கு குட்டி வண்டுகளுடைய காந்தியை உபமானமாகச் சொல்லப்படுகிறது. அம்பாளுடைய பல் வரிசைகளின் காந்தியை தாமரஸப் புஷ்பத்தின் கிஞ்சல்கங்களாக ஆரோபணம் செய்யப்படுகிறது. பரமேச்வரனுடைய கண்களை ப்ரமரங்களாகவும் நிரூபணம் செய்யப்படுகிறது. இவ்விதம் உத்ப்ரேக்ஷை, உபமானம், ரூபகம் என்ற அலங்காரங்கள் இந்த ச்லோகத்தில் அடங்கியிருக்கிறது. இந்த ச்லோகத்தை பாராயணம் செய்துகொண்டு தேவியினுடைய முகத்தை பத்மமாக த்யானம் செய்கிறவர்களுக்கு பத்மத்தில் வஸிக்கும் மஹாலக்ஷ்மியினுடைய பூர்ணகடாக்ஷம் ஏற்படும். அஷ்ட லக்ஷ்மியையும்

நமது க்ரஹத்தில் வஸிக்கச் செய்ய இந்த ச்லோக த்யானமே ஓர் பெரிய உபாயமாகும்.

தங்கத் தகட்டில் சதுஷ்கோணம் போட்டு, நடுவில் सं, सं, सं (ஸ‍ம், ஸ‍ம், ஸ‍ம்) (ஸம், ஸம், ஸம்) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி, 45 தினங்கள் பூஜித்து, இந்த ச்லோகத்தை தினந்தோறும் 25,000 ஆவர்த்தி பாராயணம் செய்யவேண்டும். தினம் பூஜைக்கு பாயஸம் நைவேத்யம் செய்யவேண்டும். இவ்விதம் ஒரு மண்டலம் பூஜை செய்த பிறகு யந்த்ரத்தை தரித்துக்கொள்ளவேண்டும். மேற் சொன்னபடி அனுஷ்டித்தவன் சொன்ன வாக் பலிக்கும்.

---

## 46. தேவியினுடைய நெற்றி வர்ணனை.

ललाटं लावण्यद्युतिविमलमाभाति तव य-
द्द्वितीयं तन्मन्ये मकुटघटितं चन्द्रशकलम् ।
विपर्यासन्यासादुभयमपि संभूय च मिथः
सुधालेपस्यूतिः परिणमति राकाहिमकरः ॥ ४६ ॥

𑌲𑌲𑌾𑌟𑌂 𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌵𑌿𑌮𑌲𑌮𑌾𑌭𑌾𑌤𑌿 𑌤𑌵 𑌯-
𑌦𑍍𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 𑌤𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑍇 𑌮𑌕𑍁𑌟𑌘𑌟𑌿𑌤𑌂 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑌕𑌲𑌮𑍍 ।
𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌾𑌸𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌦𑍁𑌭𑌯𑌮𑌪𑌿 𑌸𑌂𑌭𑍂𑌯 𑌚 𑌮𑌿𑌥𑌃
𑌸𑍁𑌧𑌾𑌲𑍇𑌪𑌸𑍍𑌯𑍂𑌤𑌿𑌃 𑌪𑌰𑌿𑌣𑌮𑌤𑌿 𑌰𑌾𑌕𑌾𑌹𑌿𑌮𑌕𑌰𑌃
॥ ௪௬ ॥

லலாடம் லாவண்யத்யுதிவிமலமாபாதி தவ ய-
த்த்விதீயம் தந்மந்யே மகுடகடிதம் சந்த்ரசகலம் ।
விபர்யாஸந்யாஸாதுபயமபி ஸம்பூய ச மித:
ஸுதாலேபஸ்யூதி: பரிணமதி ராகாஹிமகர: ॥ 46 ॥

हे भगवति (ஹெ ஹமவதி) = ஹே பராசக்தியே!
(ஹே பகவதி)

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

यत् (𑌯𑌤𑍍) (யத்) = யாதொரு

ललाटं (𑌲𑌲𑌾𑌟𑌂)(லலாடம்) = நெற்றியானது

लावण्यद्युतिविमलं (𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌵𑌿𑌮𑌲𑌂)(லாவண்யத்யுதிவிமலம்) = ஸௌந்தர்யமாகிய சந்த்ரிகையினால், அம்ருதமயமாக

आभाति (𑌆𑌭𑌾𑌤𑌿) (ஆபாதி) = நாலா பக்கத்திலும் பாஸித்துவருகிறதோ

तत् (𑌤𑌤𑍍) (தத்) = அதை

मकुटघटितं (𑌮𑌕𑍁𑌟𑌘𑌟𑌿𑌤𑌂) (மகுடகடிதம்) = கிரீடத்தில் கட்டித் தொங்கவிடப்பட்ட

द्वितीयं (𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂) (த்விதீயம்) = இரண்டாவதான

चन्द्रशकलं (𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑌕𑌲𑌂) (சந்த்ரசகலம்) = சந்த்ரகலையாக

मन्ये (𑌮𑌨𑍍𑌯𑍇) (மங்யே) = எண்ணுகிறேன்.

यस्मात्(𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍)(யஸ்மாத்) = யாதொரு காரணத்தால்

उभयमपि (𑌉𑌭𑌯𑌮𑌪𑌿) (உபயமபி) = இரண்டும்

विपर्यासन्यासात् (𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌾𑌸𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍) (விபர்யாஸங்யாஸாத்) = திருப்பி வைக்கப்பட்டதினால்

मिथः (𑌮𑌿𑌥𑌃) (மித:) = ஒன்றுக்கொன்று

संभूय (𑌸𑌂𑌭𑍂𑌯)(ஸம்பூய) = சேர்ந்து

सुधालेपस्यूतिः (𑌸𑍁𑌧𑌾𑌲𑍇𑌪𑌸𑍍𑌯𑍂𑌤𑌿𑌃) (ஸுதாலேபஸ்யூதி:) = நிபிடமான அம்ருதரஸத்தோடு கூடின

च (அ) (ச) = அத்யற்புதமான
राकाहिमकरः(ராகாஹிமகர:) = பௌர்ணிமையிலுள்ள
(ராகாஹிமகர:) பூர்ண சந்த்ரனாக
परिणमति (பரிணமதி) = பரிணமிக்கின்றதோ.
(பரிணமதி)

தாத்பர்யம் :—உத்தம ஸ்த்ரீகளுடைய நெற்றியானது இரண்டு பார்ச்வங்களிலும் கொஞ்சம் வளைந்ததாகக் காணப்படும். பரதேவதைக்கும் இவ்விதம் நெற்றி இருக்கிறதென்பதைச் சொல்லவும் வேண்டுமா! தேவியினுடைய நெற்றியைப் பார்க்கும் பொழுது கீழ்முகமாக நோக்கியிருக்கும் சந்த்ர கலையோ என்றும் பாஸிக்கின்றது. நெற்றியிலுள்ள அளவிட முடியாததான ஸௌந்தர்யமே சந்த்ரிகையாகவும் விளங்குகிறது. நெற்றியை ஒட்டி சிரஸ்ஸில் அலங்கரிக்கப்பட்ட நவரத்னமயமான கிரீடத்திலோ, ஊர்த்வ முகமாக மற்றொரு சந்த்ரகலை பாஸித்துவருகின்றது. இவ்விதம் கிரீடத்தில் ஓர் சந்த்ரகலையும், ஸௌந்தர்ய நிதியான நெற்றியில் ஓர் சந்த்ரகலையுமாக இரண்டு சந்த்ரகலையை தேவி தரிக்கின்றாளோ என்று தோன்றுகிறது. கிரீடத்தில் விளங்கும் ஊர்த்வமுகமான சந்த்ரகலையை அதோமுகமாகத் திருப்பிவைத்து, அதோமுகமாக விளங்கிவரும் நெற்றியாகிய சந்த்ரகலையை, ஊர்த்வமுகமாக பாவித்து இரண்டையும் ஒன்றாகச் சேர்த்தால், பௌர்ணமியில் உள்ள பரிபூர்ண சந்த்ரன்போல் விளங்கிவரும், அம்ருத ரஸத்தால் நிரப்பப்பட்ட சந்த்ரமண்டலமாக அது விளங்கிவரும் என்பது உபாஸகர்களுக்கு அனுபவ ஸித்தமானது. நெற்றியாகிய சந்த்ரகலைக்குள்ள ஸௌந்தர்யம் என்ற சந்த்ரிகைக்கு ஸமானமான சந்த்ரிகை கிரீடத்திலுள்ள இயற்கையான சந்த்ரிகைக்கு இல்லாததால்தானோ, கிரீடத்திலுள்ள சந்த்ரிகையை ஊர்த்வமுகமாகவும், அம்பாளுடைய நெற்றியாகிய சந்த்ரகலையை அதோமுகமாக

வும் இரண்டும் ஒன்ருகச் சேராமல் விளங்கிவருகிற தோ என்றும் தோன்றுகிறது. இரண்டும் சேர்ந்தால் பூர்ண சந்த்ரமண்டலம்தான் என்று கவி உத்ப்ரேக்ஷை செய்கிருர். இவ்விதம் தேவியினுடைய நெற்றியை அதோமுகமான சந்த்ரகலையாக த்யானம் செய்கிறவர் கள், மனதைத் தன் வசத்தில் அடக்கக்கூடிய சக்தி உள்ளவர்களாக ஆகிருர்கள். चन्द्रमामनसोजात: (சந்த்ரமா மனஸோ ஜாத:) (சந்த்ரமாமநஸோஜாத:) என்ற ச்ருதியை அனுஸரித்து மனதிற்கு சந்த்ரன் அதிர்ஷ் டான தேவதையானதினுல், தேவியினுடைய லலா டத்தில் சந்த்ரகலா த்ருஷ்டியைச் செய்து உபாஸிக் கின்றவர்களுக்கு ஊர்த்வ முகமாயுள்ள சந்த்ரகலை அதோமுகமாக ஆனதுபோல், ஜீவனுக்கு அடங்காத மனதும் வணங்கி, அவர்களுக்கு ஸ்வாதீனமாக ஆகி விடும். மனதைத் தன் வசத்தில் வைத்துக்கொண் டிருப்பவர்கள், க்ருதார்த்தர்களாக ஆகுவார்கள் என் பதில் ஆக்ஷேபணையே இல்லை. அத்துடன், இரண்டு சந்த்ரகலையையும் ஒன்றுக்கொன்று சேர்த்துவைத்து பூர்ண சந்த்ரனுக த்யானம் செய்கிறவர்களுடைய விஷயத்தில், என்றும் பௌர்ணமாவாஸையாகவே இருந்துவரும். அவர்கள் இச்சித்தால், அமாவாஸை யிலும் பூர்ண சந்த்ரனைப் பார்க்கலாம்.

புராதனமான மஹான்களுக்குள் ரத்னகேட தீக்ஷிதர் என்ற வித்வான், வெகு காலங்களுக்குமுன் இப்பாரத பூமியை அலங்கரித்துவந்தார். அவர் தேவியினு டைய ப்ரஸாதத்தை பரிபூர்ணமாக அடைந்தவர். இந்த ச்லோகத்தில் சொல்லியபடி தேவியினுடைய நெற்றியாகிய சந்த்ரகலையையும், தேவியினுடைய கிரீ டத்திலுள்ள சந்த்ரகலையையும் திருப்பிவைத்து பூர்ண சந்த்ரனுக பாவனை செய்து உபாஸித்த மஹிமையி னுல் தேவி ப்ரத்யக்ஷமாகி, அவருடைய அபீஷ்டத் தைப் பூர்த்தி செய்ததாகத் தெரிகிறது. அந்த மஹானுபாவன், வேலூர் நகரத்தை ஆண்டுவந்த

சின்னபோம்பா என்ற அரசனுடைய ஆஸ்தானத்தில் ஸமஸ்தான வித்வானாகவும் இருந்துவந்தார். ராஜனுடன், அமாவாஸை தினத்தில், ஓர் சமயம் ஸம்பாஷித்துக்கொண்டிருக்கும்பொழுது, "இன்று பௌர்ணமி" என்று தவரிப் பேசிவிட்டார். ராஜன் "இன்று அமாவாஸை யல்லவா" என்று கேட்டதற்கு "பௌர்ணமிதான்" என்று மறுபடியும் உரைத்துச் சொன்னார். ராஜனுக்கு இதில் நம்பிக்கையே ஏற்படவில்லை. 'ஸூர்யன் அஸ்தமித்த பிறகு பார்க்கலாம்" என்று சொல்லிவிட்டுத் தன் க்ரஹத்திற்கு வந்துவிட்டார். க்ரஹத்தில் வந்து தேவியினிடம் "ராஜனிடம் நான் தவரிப் பேசிவிட்டேன். ராஜாபராதம் வராது என்னை நீ ரக்ஷிக்கவேண்டும்" என்று ப்ரார்த்தித்துக்கொண்டு, இந்த ச்லோகத்தை த்யானம் செய்து நமஸ்கரித்தார். "பயம் வேண்டாம்" என அம்பாளுடைய உத்தரவும் ஏற்பட்டது. ராஜனும் அஸ்தமன காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். சுமார் ஐந்து மணிக்கே அம்ருதத்தைப் பெருகவிட்டுக்கொண்டு உதயமான பூர்ண சந்த்ரமண்டலமும் ராஜனால் காணப்பட்டது. ராஜன் பரமாச்சர்யத்தை அடைந்தான். அந்த வித்வானையும் பெருமானப்படுத்தி தனக்கு மேலான பதவியில் வைத்து ஆதரித்தான் என்று இதிஹாஸமூலமாக இக்கதை வெளியாகிறது. இந்த ச்லோகத்தின் பெருமை இவ்வளவுதான் என்று யாராலும் குறிப்பிட முடியாது.

இந்த ச்லோகத்தால், புத்ரோத்பத்திக்கு எற்பட்ட ப்ரயோகம் சொல்லப்படுகிறது. ஸகல கார்யமும் ஜயமுண்டாகும். பீஜாக்ஷரம் ஹ்ரீம் (ஹ்ரீ) தினம் 25,000 வீதம் 45 நாள் பாராயணம், பூஜை செய்யவேண்டும். பிறகு யந்த்ரத்தைத் தரித்துக்கொள்ளவேண்டும்.

---

## 47. அம்பாள் புருவங்களின் வர்ணனை.

भ्रुवौ भुग्ने किञ्चिद्भुवनभयभङ्गव्यसनिनि
त्वदीये नेत्राभ्यां मधुकररुचिभ्यां धृतगुणम् ।
धनुर्मन्ये सव्येतरकरगृहीतं रतिपतेः
प्रकोष्ठे मुष्टौ च स्थगयति निगूढान्तरमुमे ॥ ४७ ॥

𑌭𑍍𑌰𑍁𑌵𑍌 𑌭𑍁𑌗𑍍𑌨𑍇 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑍍𑌭𑍁𑌵𑌨𑌭𑌯𑌭𑌙𑍍𑌗𑌵𑍍𑌯𑌸𑌨𑌿𑌨𑌿
𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑍇 𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌮𑌧𑍁𑌕𑌰𑌰𑍁𑌚𑌿𑌭𑍍𑌯𑌾𑌂
𑌧𑍃𑌤𑌗𑍁𑌣𑌮𑍍 ।
𑌧𑌨𑍁𑌰𑍍𑌮𑌨𑍍𑌯𑍇 𑌸𑌵𑍍𑌯𑍇𑌤𑌰𑌕𑌰𑌗𑍃𑌹𑍀𑌤𑌂 𑌰𑌤𑌿𑌪𑌤𑍇𑌃
𑌪𑍍𑌰𑌕𑍋𑌷𑍍𑌠𑍇 𑌮𑍁𑌷𑍍𑌟𑍌 𑌚 𑌸𑍍𑌥𑌗𑌯𑌤𑌿 𑌨𑌿𑌗𑍂𑌢𑌾𑌨𑍍𑌤𑌰𑌮𑍁𑌮𑍇
॥ ௪௭ ॥

ப்ருவௌ புக்நே கிஞ்சித்புவநபயபங்கவ்யஸநிநி
த்வதீயே நேத்ராப்யாம் மதுகாருசிப்யாம் த்ருதகுணம் ।
தனுர்மந்யே ஸவ்யேதரகரக்ருஹீதம் ரதிபதே:
ப்ரகோஷ்டே முஷ்டௌ ச ஸ்தகயதி நிகூடாந்தரமுமே ॥ 47 ॥

भुवनभयभङ्गव्यसनिनि (𑌭𑍁𑌵𑌨𑌭𑌯𑌭𑌙𑍍𑌗𑌵𑍍𑌯𑌸𑌨𑌿𑌨𑌿)(புவநபய பங்கவ்யஸநிநி) = ப்ராணிகளுடைய ஆபத்தைப் போக்கடிக்கும் விஷயத்தில் கவலை உள்ளவளான
हे उमे (𑌹𑍇 𑌉𑌮𑍇) (ஹே உமே) = ஹே பார்வதியே
त्वदीये (𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑍇)(த்வதீயே) = உன்னுடைய
किञ्चित् (𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍)(கிஞ்சித்) = கொஞ்சம்
भुग्ने (𑌭𑍁𑌗𑍍𑌨𑍇) (புக்நே) = வளைந்ததான
भ्रुवौ (𑌭𑍍𑌰𑍁𑌵𑍌)(ப்ருவௌ) = புருவங்களை

मधुकररुचिभ्यां (𑌮𑌧𑍁𑌕𑌰𑌰𑍁𑌚𑌿𑌭𑍍𑌯𑌾𑌂) (மதுகர ருசிப்யாம்) = வண்டுகளுடைய காந்தியைப்போலொத்த காந்தியோடு கூடினதான

नेत्राभ्यां (𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌂) (நேத்ராப்யாம்) = இரண்டு கண்களால்

धृतगुणम् (𑌧𑍃𑌤𑌗𑍁𑌣𑌮𑍍) (த்ருதகுணம்) = கட்டப்பட்ட நாண்கயிரோடு கூடினதாயும்,

रतिपतेः (𑌰𑌤𑌿𑌪𑌤𑍇𑌃) (ரதிபதே:) = மன்மதனுடைய

सव्येतरकरगृहीतं (𑌸𑌵𑍍𑌯𑍇𑌤𑌰𑌕𑌰𑌗𑍃𑌹𑍀𑌤𑌂) (ஸவ்யேதரகர க்ருஹீதம்) = இடது கையில் வைத்துக் கொள்ளப்பட்டதாயும்

अतः (𑌅𑌤𑌃) (அத:) = அக்காரணத்தால்

प्रकोष्ठे (𑌪𑍍𑌰𑌕𑍋𑌷𑍍𑌠𑍇) (ப்ரகோஷ்டே) = முழங்கையிலிருந்து மணிக்கட்டுவரை கையும்

मुष्टौ च (𑌮𑍁𑌷𑍍𑌟𑍌 𑌚) (முஷ்டௌ ச) = விரல்களுடைய ஸந்தியும்

स्थगयति सति (𑌸𑍍𑌥𑌗𑌯𑌤𑌿 𑌸𑌤𑌿) (ஸ்தகயதி ஸதி) = மறைத்துக் கொண்டிருக்கும்பொழுது

निगूढान्तरं (𑌨𑌿𑌗𑍂𑌢𑌾𑌨𑍍𑌤𑌰𑌂) (நிகூடாந்தரம்) = மறைந்திருக்கும் நடுபாகத்தோடு கூடியதாயும் இருக்கிற

धनुः (𑌧𑌨𑍁𑌃) (தநு:) = வில்

इति (𑌇𑌤𑌿) (இதி) = என்று

मन्ये (𑌮𑌨𑍍𑌯𑍇) (மந்யே) = எண்ணுகின்றேன்.

தாத்பர்யம் :—எப்பொழுதும் தேவியானவள் லோகத்தில் ஒருவிதமான துர்பிக்ஷமும் ஏற்படக் கூடாதென்ற கவலே உள்ளவளாகவே இருந்து வருகிருள். ஏதாவது லோகத்திற்குக் கெடுதல் வந்தாலும் அதைப் போக்கடிப்பதில் மிகவும் கவலே உள்ளவள். கவலேயை அடைந்த மனிதர்களின் புருவங்கள் இரு பார்ச்வத்திலும் கொஞ்சம் அதோமுகமாகவே காணப்படும். அதிலும் உத்தம ஸ்த்ரீகளுக்கு இது இயற்கையானது. ஜகன்மாதாவான பரதேவதைக்கு இவ்விதம் புருவம் விளங்கிவருகிறதென்பதைச் சொல்லவும் வேண்டுமா! இரண்டு புருவங்களும் கீழ்முகமாக, நுனிகள் வளேந்து பாஸித்துவரும் பொழுது, அதை மன்மதனுடைய வில்லாக வர்ணிக்கின்ருர். மன்மதனுடைய வில்லிற்கு வண்டுகளின் வரிசையை நாண்கயிராகச் சொல்லப்பட்டிருக்கிறது. धनुःपौष्पं ([illegible]) (தநு:பௌஷ்பம்) என்ற ச்லோகம் மூலம் இதை அறியலாம். தேவியினுடைய இரண்டு கண்களும் வண்டுகளின் காந்தியைப்போலொத்த காந்தியோடு கூடினதாக விளங்குகின்றன. விசாலமாயும், வண்டுகளின் காந்தியைப்போலொத்த காந்தியோடு பாஸிக்கின்றதுகளாயும் உள்ள இரண்டு கண்களும், இரண்டு புருவங்களாகிய மன்மதனுடைய வில்லிற்கு, வண்டுகளின் வரிசையாகிய நாண் கயிரோ என்று தோன்றுகிறது. வில்லாளிகள் பாணத்தை ஸந்தானம் செய்யாத காலங்களில் தனது இடது கையில் வில்லே வைத்துக்கொண்டிருப்பது வழக்கம். இவ்விதமே மன்மதனுக்கும் வழக்கமுண்டு. இடது கையில் தரிக்கப்பட்ட வில்லோ, மணிக்கட்டிலிருந்து முழங்கைவரை கையாலும், விரல்களுடைய வரிசைகளாலும் மறைக்கப்பட்ட நடுபாகத்தோடு கூடினதாக இருந்துவரும். வில் வளேவானுலும் நாண் கயிரால் பூட்டப்பட்டு, இடது கையில் நடுபாகத்தில் தரிக்கப்பட்டு பிடிக்கப்பட்ட காரணத்தால் நாண்கயிரின் நடுபாகமும், வில்லினுடைய நடுபாகமும் கையால்

மறைக்கப்பட்டிருக்கும். அதனால் இரண்டு கண்களுக்கும் நடுவிலுள்ள மூக்கினுடைய நுனியை கவனிக்கும்பொழுது, கண்களாகிய நாண்கயிரின் நடுவை அது மறைப்பதுபோலும், புருவத்தினுடைய நடுமத்ய பாகமாகிய ப்ரூமத்யத்தைக் கவனிக்கும்பொழுது, வில்லின் நடுபாகம் மறைந்திருப்பதுபோலும் தோன்றுகிறபடியால், மன்மதன் இடது கையில் வைத்திருக்கும் வில்லாக, அம்பாளுடைய புருவம் வர்ணிக்கப்படுகிறது. அம்பாளுடைய முகத்தில் பாஸிக்கும் இரண்டு புருவங்களையும், ஒரே வில்லாக வைத்து வர்ணிக்க வேண்டும். அப்படியானால், இரண்டு பார்ச்வங்களிலும் புருவம் வளைந்திருப்பதால், வில்லினுடைய அக்ரபாகம்போல் பாவிக்கவேண்டும். நடுபாகம், புருவத்தின் நடுபாகத்தால் மறைக்கப்பட்டது போலவும், இரண்டு கண்களும் ஒரே நாண்கயிராக இருப்பதினால், நாண்கயிரின் நடுபாகம் மறைபட்டிருப்பதுபோல், மூக்கினால் அதுவும் மறைபட்டிருப்பதினால், மன்மதனுடைய இடது கையில் தரிக்கப்பட்டிருக்கும் வில்தான் அம்பாளுடைய புருவம் என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் தேவியினுடைய புருவத்தை மன்மதனுடைய வில்லாக உபாஸிக்கின்ற ஸாதகர்களுக்கு காமஜயம் ஏற்படும். புருவங்களை வில்லாக நிரூபணஞ் செய்கின்றபடியால், ரூபகாலங்காரம் என்று சொல்லப்படும். இரண்டு புருவங்களையும் ஒரு வில்லாக வர்ணிக்கின்றபடியால் த்விவசனமான புருவங்களுக்கும், ஏகவசனமான வில்லையும் சேர்த்து ப்ரயோகம் செய்யவேண்டும். புருவங்களை வில் என்று விசேஷித்துச் சொல்லப்படுகிறது. விசேஷணம் என்பது நான்கு வகைப்படும். (1) வ்யாவர்த்தக விசேஷணம் (2) உபரஞ்சக விசேஷணம் (3) உபலக்ஷண விசேஷணம் (4) உபாதான விசேஷணம் என்று அந்த நான்கு பிரிவுகளை அறியவும்.

வ்யாவர்த்தக விசேஷணத்திற்கு, நீலமான உத்பலத்திற்கு நைல்யம் என்பதை விசேஷணமாகச்

சொல்லியிருப்பதே உதாஹரணமாகும். நீலமான உத்பலம் என்பதினால், வெளுப்பு, சிகப்பு முதலிய உத்பலங்களைத் தள்ளும்படி செய்கிறது.

உபரஞ்சக விசேஷணம் என்பது இரண்டு வகைப்படும். ப்ரக்ருதத்தில், புருவங்களை வில்லாக ஆரோபிக்கின்றோம். வில்லை ஆரோப்யம் என்றும் சொல்லவேண்டும். அதில் ஆரோப்யத்தில் ஸம்பந்தப்படுகிற உபர்ஞ்சக விசேஷணத்தை ஓர் வகையாகவும்; ஆரோப்யத்திற்கு விஷயத்தில் ஸம்பந்தப்பட்ட உபரஞ்சக விசேஷணத்தை மற்றொரு வகையாகவும்; இரண்டு வகைப்படும். ஆரோப்யத்தில் ஸம்பந்தப்பட்ட உபரஞ்சக விசேஷணத்திற்கு मुखचन्द्रः (𑌮𑍁𑌖𑌂 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌃) (முகம் சந்த்ர:) என்பது உதாஹரணமாகும். முகத்தை சந்த்ரனென்று ஆரோபிக்கப் படுகிறது. இந்த இடத்தில், முகம் என்பது நபும்ஸக லிங்கமாகும்; சந்த்ரன் புல்லிங்கமாகும். இவ்விதம் லிங்கங்கள் வேறாக இருந்தாலும், முகத்திற்கும் சந்த்ரனுக்கும் விசேஷண விசேஷ்யபாவமானது சொல்லப்படுகிறது. ஆரோப்யத்திற்கு விஷயத்தில் ஸம்பந்தப்பட்ட உபரஞ்சக விசேஷணத்திற்கோ, तिरस्करण्यः जलदाभवन्ति (𑌤𑌿𑌰𑌸𑍍𑌕𑌰𑌣𑍍𑌯𑌃 𑌜𑌲𑌦𑌾𑌭𑌵𑌨𑍍𑌤𑌿) (திரஸ்கரண்ய: ஜலதாபவந்தி) என்பதே உதாஹரணமாகும். அதாவது மேகங்கள் மறைக்கும் ஸ்வபாவமுள்ளவைகளாக ஆகின்றது என்பது அதின் பொருளாகும். மறைக்கின்ற பதார்த்தமும் மேகமும் ஓரே ஸ்வபாவமுள்ள பதார்த்தமானதினால், ஆரோப்யத்திற்கு விஷயமான மேகத்தை ஸம்பந்தித்து அந்த ப்ரயோகம் ஏற்படுகிறபடியால், ஆரோப்யத்திற்கு விஷயத்தில் ஸம்பந்தப்படுகிற உபரஞ்சக விசேஷணத்திற்கு உதாஹரணமாகும்.

"காக்கையோடு கூடின தேவதத்த க்ருஹம்" என்பது உபலக்ஷண விசேஷணத்திற்கு உதாஹரண மாகும்.

"ரக்த ஸ்படிகம்" என்பது உபாதான விசேஷ ணத்திற்கு உதாஹரணமாகும்.

இந்த ஸ்தலங்களில் எந்த இரண்டு பதார்த் தங்களுக்கு விசேஷண விசேஷ்யபாவம் சொல்லு கிருேமோ, அந்த இரண்டு பதார்த்தங்களும் ஸமான மான விபக்தியோடு கூடியதாக இருக்கவேண்டு மென்பதோ, ஸமான லிங்கத்தோடு கூடியதாக இருக்கவேண்டுமென்பதோ என்ற நியமத்திற்கு வ்யபிசாரம் வருகிறபடியால், வெவ்வேறு விபக்தி உள்ள பதங்களுக்கும் வெவ்வேறு லிங்கமுள்ள பதங்களுக்கும் விசேஷண விசேஷ்யபாவம் ஏற் படலாமென்பது ஸித்தமாகிறது. ஆகையால் தேவி யினுடைய இரண்டு புருவங்கள் த்வி வசனமானுலும் வில்லானது ஏக வசனமானுலும் இரண்டு புருவங் களையும் மன்மதனுடைய வில் என்று பாவித்து இரண்டுகளுக்கும் விசேஷண விசேஷ்யபாவ ஸம்பந் தத்தை த்ருடம் செய்துகொண்டு உபாஸிப்பது சாஸ் தர ஸம்மதமாகவே ஆகும்.

**இந்த ச்லோகத்தை தினம் 25,000 வீதம் 25 நாள் பாராய ணம் செய்யவேண்டும். ஸ்வர்ண யந்த்ரம். பீஜாக்ஷரம் ह्रीं, ह्रीं, ह्रीं (ஹ்ரீம், ஹ்ரீம், ஹ்ரீம்) அபீஷ்டநைவேத்யம். யந்த்ரத்தை சிரஸ் ஸில் தரித்துக்கொள்ளவேண்டும்—ஸகல தேவதைகளும் சொன்ன படி நடப்பார்கள்—ஸகல கார்யமும் ஜயிக்கும்.**

---

## 48. தேவியினுடைய நேத்ரங்களின் வர்ணனை

अहः सूते सव्यं तव नयनमर्कात्मकतया
त्रियामां वामं ते सृजति रजनीनायकतया ।
तृतीया ते दृष्टिर्दरदलितहेमाम्बुजरुचिः
समाधत्ते सन्ध्यां दिवसनिशयोरन्तरचरीम् ॥ ४८ ॥

𑌅𑌹𑌃 𑌸𑍂𑌤𑍇 𑌸𑌵𑍍𑌯𑌂 𑌤𑌵 𑌨𑌯𑌨𑌮𑌰𑍍𑌕𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑌯𑌾
𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌮𑌾𑌂 𑌵𑌾𑌮𑌂 𑌤𑍇 𑌸𑍃𑌜𑌤𑌿 𑌰𑌜𑌨𑍀𑌨𑌾𑌯𑌕𑌤𑌯𑌾 ।
𑌤𑍃𑌤𑍀𑌯𑌾 𑌤𑍇 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑍍𑌦𑌰𑌦𑌲𑌿𑌤𑌹𑍇𑌮𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌰𑍁𑌚𑌿𑌃
𑌸𑌮𑌾𑌧𑌤𑍍𑌤𑍇 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌂 𑌦𑌿𑌵𑌸𑌨𑌿𑌶𑌯𑍋𑌰𑌨𑍍𑌤𑌰𑌚𑌰𑍀𑌮𑍍
॥ ௪௮ ॥

அஹ: ஸூதே ஸவ்யம் தவ நயநமர்காத்மகதயா
த்ரியாமாம் வாமம் தே ஸ்ருஜதி ரஜநீநாயகதயா ।
த்ருதீயா தே த்ருஷ்டிர்தரதலிதஹேமாம்புஜருசி:
ஸமாதத்தே ஸந்த்யாம் திவஸநிசயோரந்தரசரீம் ॥ 48 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பரதேவதையே!

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

सव्यं (𑌸𑌵𑍍𑌯𑌂) (ஸவ்யம்) = வலது பக்கத்திலுள்ள

नयनं (𑌨𑌯𑌨𑌂) (நயநம்) = நேத்ரமானது

अर्कात्मकतया (𑌅𑌰𑍍𑌕𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑌯𑌾) (அர்காத்மகதயா) = ஸூர்ய பகவானுடைய ஸ்வரூபமானபடியால்

अहः (𑌅𑌹𑌃) (அஹ:) = பகலை

सूते (𑌸𑍂𑌤𑍇) (ஸூதே) = உண்டுபண்ணுகிறது.

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

वामंनयनं (𑌵𑌾𑌮𑌂𑌨𑌯𑌨𑌂) (வாமம்நயநம்) = இடது கண்ணானது

रजनीनायकतया (𑌰𑌜𑌨𑍀𑌨𑌾𑌯𑌕𑌤𑌯𑌾) (ரஜநீநாயகதயா) = சந்த்ரனுடைய ஸ்வரூபமாக இருக்கிறபடியால்

त्रियामां (𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌮𑌾𑌂) (த்ரியாமாம்) = ராத்ரியை

सृजति (𑌸𑍃𑌜𑌤𑌿) (ஸ்ருஜதி) = ஸ்ருஷ்டிக்கின்றது.

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

तृतीया (𑌤𑍃𑌤𑍀𑌯𑌾) (த்ருதீயா) = மூன்றுவதான

दृष्टि: (𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃) (த்ருஷ்டி:) = கண்ணானது

दरदलितहेमाम्बुजरुचि: (𑌦𑌰𑌦𑌲𑌿𑌤𑌹𑍇𑌮𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌰𑍁𑌚𑌿𑌃) (தரதலிதஹேமாம்புஜருசி:) = கொஞ்சம் மலர்ந்த பொன் தாமரைப்பூவின் சோபையைப்போலொத்த சோபையை உடைத்தானதாகக் கொண்டு

दिवसनिशयो:(𑌦𑌿𑌵𑌸𑌨𑌿𑌶𑌯𑍋𑌃) (திவஸநிசயோ:) = இராப்பகலுடைய

अन्तरचरीम् (𑌅𑌨𑍍𑌤𑌰𑌚𑌰𑍀𑌮𑍍) (அந்தரசரீம்) = நடுவில் நடக்கிற

सन्ध्यां (𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌂) (ஸந்த்யாம்) = காலை, மாலை ஸந்தியை

समाधत्ते (ஸமாதத்தே) = உண்டுபண்ணுகிறது.
(ஸமாதத்தே)

தாத்பர்யம் :—பரமேச்வரன், ஸூர்யன், சந்த்ரன், அக்னி, இம்மூவர்களையும் நேத்ரங்களாக உடைத்தான காரணத்தால், த்ரிநேத்ரன் என்பது ப்ரஸித்தமானது. அந்த பரசிவ ஸ்வரூபம், சக்தி ஸ்வரூபத்தில் அடங்கினதென்பதும் முன்பு சொல்லப்பட்டது. இதனால் தேவியினுடைய ஸ்வரூபத்தைக்காட்டிலும், சிவஸ்வரூபம் வேரில்லாததினால், தேவியே த்ரிநேத்ரையாக விளங்குகிறாள். இதனால் அம்பாளுடைய வலது கண் ஸூர்யனாகவும், இடது கண் சந்த்ரனாகவும், நெற்றிக் கண்ணான மூன்றாவது கண் அக்னியாகவும் வர்ணிக்கப்படுகிறது. பகலுக்கு நாயகன் ஸூர்ய பகவான் என்றும், இரவுக்கு நாயகன் சந்த்ரன் என்றும், இராப்பகலுடைய ஸந்திகளுக்கு நாயகன் அக்னி என்றும் சாஸ்த்ரங்களில் ப்ரஸித்தமானது இதனால் அம்பாளே வலது கண்ணால் பகலையும், இடது கண்ணால் ராத்ரியையும், மூன்றாவது கண்ணால் ப்ராதக்கால ஸந்த்யை ஸாயங்கால ஸந்த்யை என்ற இரண்டு ஸந்த்யா காலத்தையும் ஸ்ருஷ்டிக்கின்றாள் என்று தெரிகிறது. அம்பாளுடைய நெற்றிக்கண் அக்னிபகவான் என்பதற்கு அதின் சோபையே அடையாளமாகும். கொஞ்சம் மலர்ந்த பொன் தாமரைப் புஷ்பத்தின் சோபையைப் போலொத்த சோபை அக்கண்ணில் காணப்படுகிறது. பகல், இரவு என்ற காலமானது தினம், பக்ஷம், மாஸம், அயனம், ஸம்வத்ஸரம் முதலான காலத்தைக் குறிப்பிடுகின்றன. காலத்தையே தன் த்ருஷ்டியினால் ஸ்ருஷ்டிக்கக்கூடிய சக்தியுள்ளவளே பராசக்தி என்று தெரிகிறது. காலத்திற்கும் மூல காரணமான தேவிக்கு காலத்தால் பரிச்சேதமும் இல்லை என்பது ப்ரஸித்தமாகும். காலத்தால் பரிச்சேதம் என்றால், பிறப்பும் இறப்புமேயாகும். இவ்வித மான பரிச்சேதம் பராசக்திக்கு இல்லை என்று ஏற்

படுகிறபடியால் ஜன்ம மரணமற்ற தேவதை தேவி ஒருவளேதான் என்றும் தெரிகிறது. இவ்விதம் தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறவர்களுக்கு மருத்யு பயமும் இல்லை. அக்காரணத்தால் மாத்ரு குக்ஷியில் ப்ரவேசமும் இல்லை என்பது ப்ரஸித்தமாகிறது. ப்ராதஸ்ஸந்தி, ஸாயம்ஸந்தி என்ற ஸந்த்யா காலத்தை ஸ்ருஷ்டிக்கும் தேவதையானதினுல், அதிலும் அந்த ஸந்த்யையை அக்னி ஸ்வரூபமான நெற்றிக் கண்ணுல் ஸ்ருஷ்டிக்கின்றபடியால், அக்னி முகமாகச் செய்யப்படும் அக்னிஹோத்ரம் முதலான ஸகல ஸத்கர்மாக்களிலும் பூஜிக்கப்படும் தேவதை பராசக்திதான் என்றும் தெரிகிறது. அதனுல்தான் பெரியோர்கள் அக்னியில் ஹோமம் செய்யுங்காலத்தில் ஹோமமந்த்ரத்தினுடைய முடிவில் தேவியினுடைய திருநாமமாகிய स्वाहा (ஸ்வாஹா) (ஸ்வாஹா) என்ற நாமத்தை உச்சரித்துக்கொண்டு ஹோமம் செய்கிருர்கள். ஆகையால் ஸத்கர்மாக்களால் பரதேவதையை ஆராதித்துவரும்பெரியோர்கள், தேவியினுடைய நேத்ரத்தை வர்ணிக்கும் இந்த ச்லோகத்தை சொல்லிக்கொண்டு அம்பாளை த்யானம் செய்தால், தான் செய்துவரும் ஸத்கர்மாக்கள் பரம்பரையாக மோக்ஷஸாதனமாயும் ஆகக்கூடும். அதாலும் ஜன்ம மரணமான மஹாரோகத்திலிருந்தும் விடுபட்டவர்களாக ஆகலாம். ஜீவதசையில் நேத்ரரோகம் யாதொன்றும் வராது. இவ்விதமான உபாஸகர்களுடைய குலத்திலேயே யாரும் த்ருஷ்டிஹீனுளாகப் பிறக்க மாட்டார்கள் என்ற மஹாபலன்கள் இந்த உபாஸனத்தால் தெரியவருகிறது.

*இந்த ச்லோக பாராயணத்தால் நவக்ரஹதோஷ நிவாரணம் ஏற்படும். ஸ்வர்ணத் தகட்டில் யந்த்ரம். பீஜாக்ஷரம் ह्रीं (ஹ்ரீம்) தினம் 25,000 வீதம் 9 நாள் பாராயணம் செய்யவேண்டும். பிறகு யந்த்ரத்தை தரித்துக்கொள்ளவேண்டும். கஷ்டகாலம் தீர்ந்து ஸகல ஸௌபாக்யங்களும் உண்டாகும்.*

## 49. தேவியினுடைய த்ருஷ்டியின் வர்ணனை.

विशाला कल्याणी स्फुटरुचिरयोध्या कुवलयैः
कृपाधाराधारा किमपि मधुराभोगवतिका ।
अवन्ती दृष्टिस्ते बहुनगरविस्तारविजया
ध्रुवं तत्तन्नामव्यवहरणयोग्या विजयते ॥ ४९ ॥

𑌵𑌿𑌶𑌾𑌲𑌾 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑍀 𑌸𑍍𑌫𑍁𑌟𑌰𑍁𑌚𑌿𑌰𑌯𑍋𑌧𑍍𑌯𑌾 𑌕𑍁𑌵𑌲𑌯𑍈𑌃
𑌕𑍃𑌪𑌾𑌧𑌾𑌰𑌾𑌧𑌾𑌰𑌾 𑌕𑌿𑌮𑌪𑌿 𑌮𑌧𑍁𑌰𑌾𑌭𑍋𑌗𑌵𑌤𑌿𑌕𑌾 ।
𑌅𑌵𑌨𑍍𑌤𑍀 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌤𑍇 𑌬𑌹𑍁𑌨𑌗𑌰𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌵𑌿𑌜𑌯𑌾
𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌤𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌵𑍍𑌯𑌵𑌹𑌰𑌣𑌯𑍋𑌗𑍍𑌯𑌾 𑌵𑌿𑌜𑌯𑌤𑍇 ॥ ௪௯ ॥

விசாலா கல்யாணீ ஸ்புடருசிரயோத்யா குவலயை:
க்ருபாதாராதாரா கிமபி மதுராபோகவதிகா ।
அவந்தீ த்ருஷ்டிஸ்தே பஹுநகரவிஸ்தாரவிஜயா
த்ருவம் தத்தந்நாமவ்யவஹரணயோக்யா விஜயதே ॥ 49 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே பராசக்தியே!
(ஹே பகவதி)

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

दृष्टिः (𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃) (த்ருஷ்டி:) = நேத்ரமானது

विशाला (𑌵𑌿𑌶𑌾𑌲𑌾) (விசாலா) = விசாலமாயும்

कल्याणी (𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑍀) = மங்களகரமாயும்
(கல்யாணி)

स्फुटरुचिः (𑌸𑍍𑌫𑍁𑌟𑌰𑍁𑌚𑌿𑌃) = நன்ருக ப்ரகாசிக்கிறதா
(ஸ்புடருசி:) யும்

कुवलयै: (கு௱வலுயெ:) (குவலயை:) = நீலோத்பல புஷ்பங்களால்

अयोध्या (ஐயொயூா) (அயோத்யா) = யுத்தம் செய்ய ஸாத்யப்படாததாயும்

कृपाधाराधारा (கூபாயாரா யாரா) (க்ருபாதாரா தாரா) = கருணையாகிய ப்ரவாஹத்திற்கு ஆதாரமாயும்

किमपिमधुरा (கிஉவிஉய௱ரா) (கிமபிமதுரா) = சொல்லமுடியாத அழகோடு கூடினதாயும்

आभोगवतिका (ஆஹொமவதிகா) (ஆபோகவதிகா) = நீளமுள்ளதாயும்

अवन्ती (ஐவஷீ) (அவந்தீ) = கருணையால் பக்தர்களை ரக்ஷிக்கிறதாயும்

बहुनगरविस्तारविजया (஬ஹு௱நமரவிஸூாரவிஜயா) (பஹு௱நகரவிஸ்தார விஜயா) = அநேக ராஜதானிகள் போல் ப்ரகாசிக்கின்றதாயும்

सती (ஸதீ) (ஸதீ) = இருக்கின்றபடியால்

तत्तन्नामव्यवहरणयोग्या (தத்தஹாஉ வூவஹரணயொமூா) (தத்தந்நாமவ்யவஹரண யோக்யா) = அந்தத்த நகரத்தின் பெயர்களால் ஏற்பட்ட வ்யவஹார விஷயத்தில் தகுதி உள்ளதாய்

विजयते (விஜயதெ) (விஜயதே) = ஸர்வோத் க்ருஷ்டமாக விளங்குகின்றது

ध्रुवं (யூ௱வம்) (த்ருவம்) = நிச்சயம்,

தாத்பர்யம் :—விசாலே, கல்யாணீ, அயோத்தி, தாரை, மதுரை, போகவதி, அவந்தி, விஜயா என்ற எட்டு நகரங்கள் இந்த பூலோகத்தில் ப்ரஸித்த மானது. அம்பாளுடைய த்ருஷ்டியும் எட்டுவிதமாக பாஸிக்கின்றபடியால், அந்தந்த நகரத்தின், பெய ராலேயே அம்பாளுடைய த்ருஷ்டியை பரமாசார் யாள் வர்ணிக்கின்றார்கள். உத்தம ஸ்த்ரீகளுடைய த்ருஷ்டியே, இவ்விதம் எட்டுவிதமாக பாஸிக்கும். லோகமாதாவான தேவியினுடைய த்ருஷ்டி இவ்விதம் பாஸிக்கின்றதென்பதைச் சொல்லவும் வேண்டுமா! விசாலா என்ற த்ருஷ்டியானது, உள்ளுக்குள் மலர்ந்த த்ருஷ்டியாகும். அதாவது, பாதிகண் மலர்ந்த தாயும், பாதி மூடியதாயும் இருக்கும் த்ருஷ்டியே. மந்தஹாஸத்துடன் கூடிய த்ருஷ்டி கல்யாணீ த்ருஷ்டி என்று சொல்லப்படும். ஆலஸ்யத்தைக் காட்டும், த்ருஷ்டியானது தாரா த்ருஷ்டி என்று சொல்லப்படும். குறுக்குப்பார்வையான த்ருஷ்டி, மதுரா த்ருஷ்டி எனச் சொல்லப்படும். ஸ்நேஹத்தை வெளிக்காட் டும் த்ருஷ்டி போகவதி என்று சொல்லப்படும். தூக் கத்தை வெளிப்படுத்தும் த்ருஷ்டி அவந்தி என்று சொல்லப்படும். வெள்ளைவிழியின் பார்ச்வத்தில் கரு விழியை வைத்துப்பார்க்கும் திருஷ்டி விஜயா என்று சொல்லப்படும். மன்மதவிகாரத்தை ப்ராணிகளுக்கு உண்டுபண்ணும் த்ருஷ்டி அயோத்யா என்று சொல் லப்படும். இவ்விதம் எட்டுவிதமாக பரதேவதையி னுடைய த்ருஷ்டி வர்ணிக்கப்படுகிறது. அத்துடன் விசாலமாக இருப்பதினால், விசாலே என்றும்; ஆச்ர யித்த ஜனங்களுக்கு மங்களத்தைச் செய்வதினால் கல் யாணீ என்றும்; நீலோத்பல புஷ்பத்தைக் காட்டிலும் அதிக சோபையோடு கூடிக்கொண்டிருப்பதினால் அயோத்தி என்றும்; கருணை நிரம்பி இருப்பதினால் தாரா என்றும்; மதுரமாக இருப்பதினால் மதுரா என் றும்; ஸர்ப்பத்தின் படம்போல் அகண்டும், நீண்டும் இருப்பதினால் போகவதி என்றும்; தீன ஜனங்களை

ரக்ஷிக்கின்றபடியால் அவந்தீ என்றும்; அநேக நகரங்களை உள் அடக்கிக்கொண்டு ப்ரதானமான ராஜதானிபோல் ப்ரகாசிக்கிறபடியால் விஜயா என்றும்; அம்பாளுடைய த்ருஷ்டி பாஸிக்கின்றபடியால் அந்தந்த பெயருள்ள நகரங்களின் மஹிமை எவைகளோ, அவைகளால் தேவியினுடைய த்ருஷ்டியும் பூர்ணமாக நிறைந்திருக்கிறதென்று வர்ணிக்கப்படுகிறது. இந்த எட்டுவிதமான த்ருஷ்டிகளை எல்லா உத்தம ஸ்த்ரீகளிடத்திலும் காணலாம். ஆனால், பரதேவதையினிடத்திலோ விசேஷமாகச் சொல்லவேண்டும். அதாவது, எட்டு த்ருஷ்டிகளையும் க்ரமமாக, ஸம்க்ஷோபணம், ஆகர்ஷணம், த்ராவணம், உன்மாதநம், வச்யம், உச்சாடனம், வித்வேஷணம், மாரணம் என்ற கர்மாக்களில் உபயோகப்படுத்தக்கூடியதாக பாஸித்து வருகின்றன.

விஜயா என்ற த்ருஷ்டியினுடைய ஸ்வரூபம் வெள்ளை முழியினுடைய பார்ச்வ பாகத்தில் கருப்பு விழி நின்று பார்க்கும் ஸமயம் என்று சொன்னோம். இந்த த்ருஷ்டிக்கு ஆகேகரம் எனப் பெயர் உண்டு. இந்த த்ருஷ்டியால் எந்த தேசத்தில், ஜகதீச்வரீ நின்றுகொண்டு சத்ருவை மரிக்கச் செய்தாளோ, அந்த தேசத்திற்குத்தான் விஜயா எனப் பெயர் ஏற்பட்டது. அவ்விதமே, எந்த தேசத்தில் நின்றுகொண்டு, அந்தர் விகாஸ ரூபமான விசாலா என்ற த்ருஷ்டியினால், ஜனஸம்க்ஷோபத்தைச் செய்தாளோ, அந்த தேசத்திற்கு விசாலா என்ற பெயரும்; எத் தேசத்தில் நின்றுகொண்டு மந்தஹாஸத்துடன் கூடிய கல்யாணீ த்ருஷ்டியினால் ஜனங்களை ஆகர்ஷணம் செய்தாளோ அந்த தேசத்திற்கு கல்யாணீ நகரம் என்றும்; குறுக்குப் பார்வையான அயோத்யா த்ருஷ்டியினால் எந்த தேசத்தில் நின்றுகொண்டு சத்ருவை விரட்டினாளோ, அந்த தேசத்திற்கு அயோத்யா என்றும்; எந்த தேசத்தில் நின்றுகொண்டு தன்னுடைய ஆலஸ்யத்தைக் காட்டும் தாரா த்ருஷ்டியினால் சத்ரு ஜனங்களை ஸ்தப்த

மாகச் செய்தாளோ அந்த தேசத்திற்கு தாரா என்றும்; எந்த இடத்தில் நின்றுகொண்டு அழகான த்ருஷ்டியினால் சத்ரு ஜனங்களை வச்யம் செய்தாளோ அந்த தேசத்திற்கு மதுரா என்றும்; எந்த தேசத்தில் நின்று கருணாரஸத்தால் பூரிதமான போகவதீ என்ற த்ருஷ்டியினால் சத்ரு ஜனங்களை உச்சாடனம் செய்தாளோ (சத்ருக்களுக்கு மேல் என்ன செய்வது என்று தோன்றாமல் செய்தாளோ) அந்த தேசத்திற்கு போகவதீ என்றும்; எந்த தேசத்தில் நின்றுகொண்டு முக்தா ரூபமான அவந்தீ த்ருஷ்டியினால் சத்ரு வித்வேஷணம் செய்தாளோ, அந்த தேசத்திற்கு அவந்தி நகரம் என்றும், அம்பாளுடைய திக்விஜய காலத்தில் அந்தந்த தேசத்தில் அந்தந்த கார்யத்தை த்ருஷ்டி மாத்ரத்தால் செய்த ஸாமர்த்யத்தால், அந்தந்த தேசத்திற்கு அந்தந்த பெயர்கள் ஏற்பட்டு, அப்பெயர்கள் பொருத்தமான பெயர்கள் என்று சொல்லும்படி, தேவியினுடைய த்ருஷ்டிகளும் பாஸிக்கிறபடியால் பராசக்தியினுடைய த்ருஷ்டியை, எட்டு ப்ரகாரமாக வர்ணித்து, இவ்விதம் தேவியினுடைய த்ருஷ்டியை உபாஸிக்கிறவர்கள் ஸம்க்ஷோபணம் ஆகர்ஷணம் முதலான எட்டுவிதமான க்ரியைகளில் ஸமர்த்தர்களாக ஆகி, எல்லா லோகத்திலும் ஜயத்துடன் விளங்குவார்கள் என்பது ஸித்தமாகிறது.

இந்த ச்லோகத்தால் நேத்ரதோஷம் நிவர்த்திக்கு ப்ரயோகம் சொல்லப்படுகிறது. பீஜாக்ஷரம், ஸं कं, ट (௨௦, ௲०, ௰०) மஞ்சளில் எழுதி, சுட்டு, நல்லெண்ணெயை விட்டுக் கொழப்பி, அஞ்சனம் போட்டுக்கொண்டால் ஸகலமும் தெரியும்.

---

## 50. தேவியினுடைய கடாக்ஷ வீக்ஷண வர்ணனை

कवीनां सन्दर्भस्तबकमकरन्दैकरसिकम्
कटाक्षव्याक्षेपभ्रमरकलभौ कर्णयुगलम् ।
अमुञ्चन्तौ दृष्ट्वा तव नवरसास्वादतरला-
वसूयासंसर्गादलिकनयनं किञ्चिदरुणम् ॥ ५० ॥

𑌕𑌵𑍀𑌨𑌾𑌂 𑌸𑌨𑍍𑌦𑌰𑍍𑌭𑌸𑍍𑌤𑌬𑌕𑌮𑌕𑌰𑌨𑍍𑌦𑍈𑌕𑌰𑌸𑌿𑌕𑌮𑍍
𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌵𑍍𑌯𑌾𑌕𑍍𑌷𑍇𑌪𑌭𑍍𑌰𑌮𑌰𑌕𑌲𑌭𑍌 𑌕𑌰𑍍𑌣𑌯𑍁𑌗𑌲𑌮𑍍 ।
𑌅𑌮𑍁𑌞𑍍𑌚𑌨𑍍𑌤𑍌 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑌵 𑌨𑌵𑌰𑌸𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌤𑌰𑌲𑌾-
𑌵𑌸𑍂𑌯𑌾𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌾𑌦𑌲𑌿𑌕𑌨𑌯𑌨𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌰𑍁𑌣𑌮𑍍
॥ ௫௦ ॥

கவீநாம் ஸந்தர்பஸ்தபகமகரந்தைகரஸிகம்
கடாக்ஷவ்யாக்ஷேபப்ரமரகலபௌ கர்ணயுகலம் ।
அமுஞ்சந்தௌ த்ருஷ்ட்வா தவ நவரஸாஸ்வாததரலா-
வஸூயாஸம்ஸர்காதலிகநயநம் கிஞ்சிதருணம் ॥ 50 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) = ஹே பராசக்தியே !
(ஹே பகவதி)

कवीनां सन्दर्भस्तबक सकरन्दैकरसिकम् = வித்வான்களுடைய காவ்யரசனையாகிற புஷ்பக் கொத்திலுள்ள தேனை அனுபவிப்பதில் முக்கியமான ஆசை உள்ள
(𑌕𑌵𑍀𑌨𑌾𑌂 𑌸𑌨𑍍𑌦𑌰𑍍𑌭𑌸𑍍𑌤𑌬𑌕 𑌮𑌕𑌰𑌨𑍍𑌦𑍈𑌕𑌰𑌸𑌿𑌕𑌮𑍍)
(கவீநாம் ஸந்தர்பஸ்தபக மகரந்தைகரஸிகம்)

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

कर्णयुगलं (𑌕𑌰𑍍𑌣𑌯𑍁𑌗𑌲𑌂) = இரண்டு காதுகளையும்
(கர்ணயுகலம்)

अमुञ्चन्तौ (𑌅𑌮𑍁𑌞𑍍𑌚𑌨𑍍𑌤𑍌) (அமுஞ்சந்தெள) = விட்டுப்பிரியாமலிருக்கிற தாயும்

नवरसास्वादतरलौ (𑌨𑌵𑌰𑌸𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌤𑌰𑌲𑍌) (நவரஸாஸ்வாததரலெள) = ச்ருங்காரம் முதலான ஒன்பதுவிதமான ரஸங்களை உரிஞ்சிக் குடிப்பதில் ஆசையுள்ளதாயும் இருக்கிற

कटाक्षव्याक्षेपभ्रमरकलभौ (𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌵𑍍𑌯𑌾𑌕𑍍𑌷𑍇𑌪𑌭𑍍𑌰𑌮𑌰𑌕𑌲𑌭𑍌) (கடாக்ஷவ்யாக்ஷேபப்ரமரகலபெள) = கடைக்கண் பார்வை என்றவ்யாஜத்தால் குட்டி வண்டுகள்போல் இருக்கிற இரண்டு நேத்ரங்களையும்

दृष्ट्वा (𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾) (த்ருஷ்ட்வா) = பார்த்து

अलिकनयनं (𑌅𑌲𑌿𑌕𑌨𑌯𑌨𑌂) (அலிகநயனம்) = நெற்றிக்கண்ணனது

असूयासंसर्गात् (𑌅𑌸𑍂𑌯𑌾𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌾𑌤𑍍) (அஸூயாஸம்ஸர்காத்) = பேராசையினல்

किञ्चित् (𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍) (கிஞ்சித்) = கொஞ்சம்

अरुणं (𑌅𑌰𑍁𑌣𑌂) (அருணம்) = சிவப்பாக

भवति (𑌭𑌵𑌤𑌿) (பவதி) = ஆகின்றது.

தாத்பர்யம் :—பரதேவதையினுடைய இரண்டு கண்களும் விசாலமாக நீண்டு இருப்பதினல், கடைக்கண்ணுல் பார்க்தும்பொழுது, இரண்டு காதுகளையும் தொட்டுக் கொண்டிருக்கின்றதுகளோ என்று தோன்றுகிறது. அம்பாளோ, மஹாவித்வான்கள்

தன்னுடைய தத்வத்தை ப்ரதிபாதனம் செய்ய நிர்மாணம் செய்கிற காவ்யம் முதலான ஸ்தோத்ர ஸமூஹத்திலுள்ள ரஸத்தை எப்பொழுதும் இரண்டு காதுகளாலும் பானம் செய்துகொண்டு வருகிருள். தன் பக்தன் தன்னை ஸ்துதிக்கும் காலத்தில், அந்த ஸ்தோத்ரங்கள் புஷ்பக் கொத்துகள்போல் தோன்றுகிறபடியால், அதிலுள்ள நவரஸங்களாகிற மகரந்தத்தை கார்ணம்ருதமாக இருக்கும் காரணத்தால், விடாமல் இரண்டு காதுகளையும் கொடுத்து பக்தர்களுடைய ஸ்தோத்ரங்களைக் கேட்டுக்கொண்டே இருக்கிருள். இவ்விதம் தேவியினுடைய காதுவழியாகச் செல்லும் கவிகளுடைய காவ்யரசனையாகிய புஷ்பக் கொத்துகளிலுள்ள தேனை அம்பாளுடைய கடாக்ஷ வீக்ஷணமாகிய குட்டிவண்டுகள் இரண்டு பக்கத்திலும் தானும் குடிக்க இருந்துவருகிறது. உத்தம ஸ்த்ரீகளுடைய கடாக்ஷங்களோ, காதுவரையிலும் விசாலமாக இருந்துவரும். தேவியினுடைய விஷயத்தில் இம்மஹிமையை வர்ணிக்கவும் முடியாது. கடைக்கண் இயற்கையினலேயே கருப்பாக இருப்பதினல் கடைக்கண் பார்வையும் கருப்பாகவே தோன்றும். அது கருப்பான வண்டுகளின் குட்டிகள்போலும் தோன்றுகின்றன. வண்டுகளுக்கோ, ரஸங்களை ஆஸ்வாதனம் செய்வதில் ரொம்பவும் உத்ஸாஹமுண்டு. தேவியினுடைய காதுகள் மூலம் உள்செல்லும் கவிகளுடைய காவ்யரஸத்தையோ தேவியினுடைய கண்களாகிய குட்டி வண்டுகள் விடாது பானம் செய்கிறது. தேவிக்கோ, மூன்று நேத்ரங்கள் என்று முன் சொல்லப்பட்டது. அதில், இரண்டு நேத்ரங்களுக்குத்தான் தேவியின் காதில் ஸம்பந்தப்பட்டு முன் சொன்ன பாக்யம் கிடைக்கின்றது. நெற்றிக் கண்ணுக்கோ காதைத்தொட பாக்யமில்லாததினல், மற்ற இரண்டு கண்களையும் பார்த்து அஸூயை கொண்டு கோபத்தால் சிவப்பாக ஆகிவிட்டதோ என்று தோன்றுகிறது. நெற்றிக்கண் அக்னி ஸ்வரூபமானதி

ணுல் இயற்கையிலேயே சிவப்பானது. அது சந்த்ர ஸூர்யர்களான இரண்டு கண்களுக்குமுள்ள பாக்யம் தனக்கில்லை என்ற அஸூயையினுல்தான் சிவந்திருக்கிறதென்று கவி உத்ப்ரேக்ஷிக்கின்ருர். இதனுல் பகவதியினுடைய நேத்ரம் காதுவரையிலும் ரச்மிகளால் விசாலமாக இருக்கிறதென்று த்வனிக்கின்றது. காதால் பானம் செய்யவேண்டிய காவ்ய ரஸத்தை நேத்ரங்கள் பானம் செய்கிறதென்பது அதிசயோக்தியாக ஆகும். இதனுல் தேவியினுடைய நேத்ரங்கள் கர்ணுந்த விஸ்தாரத்துடன் கூடியது என்றதை த்யானம் செய்கிறவர்களுக்கு தூரதர்சித்வம் முதலான ஸித்திகள் கைகூடிவரும் என்பது ஸித்தமாகிறது.

இந்த ச்லோகத்தால் வஸூரி முதலான ரோகநிவர்த்திக்கு ப்ரயோகம் சொல்லப்படுகிறது. ஜலத்தில் णम् (ண்ம்) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி, தினம் 25,000 வீதம் 5 நாள் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்து ரோகமுள்ளவனை உட்கொள்ளச் சொல்லவும்.

இந்த ச்லோகத்தை த்யானம் செய்யவும்

कर्णान्तव्याप्तनयनां स्फुरदिन्दीवरप्रभाम् ।
चन्द्रालंकृतधम्मिल्लां भवपत्नीं नमाम्यहम् ॥

𑌕𑌰𑍍𑌣𑌾𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌨𑌯𑌨𑌾𑌂 𑌸𑍍𑌫𑍁𑌰𑌦𑌿𑌨𑍍𑌦𑍀𑌵𑌰𑌪𑍍𑌰𑌭𑌾𑌮𑍍 ।
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌲𑌂𑌕𑍃𑌤𑌧𑌮𑍍𑌮𑌿𑌲𑍍𑌲𑌾𑌂 𑌭𑌵𑌪𑌤𑍍𑌨𑍀𑌂 𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

கர்ணுந்தவ்யாப்தநயனும் ஸ்புரதிந்தீவரப்ரபாம் ।
சந்த்ராலம்க்ருததம்மில்லாம் பவபத்நீம் நமாம்யஹம் ॥

---

## 51. அம்பாளுடைய த்ருஷ்டியின் மஹிமை

शिवे शृङ्गारार्द्रा तदितरजने कुत्सनपरा
सरोषा गङ्गायां गिरिशनयने विस्मयवती ।
हराहिभ्यो भीता सरसिरुहसौभाग्यजननी
सखीषु स्मेरा ते मयि जननि दृष्टिः सकरुणा ॥ ५१ ॥

𑌶𑌿𑌵𑍇 𑌶𑍃𑌙𑍍𑌗𑌾𑌰𑌾𑌰𑍍𑌦𑍍𑌰𑌾 𑌤𑌦𑌿𑌤𑌰𑌜𑌨𑍇 𑌕𑍁𑌤𑍍𑌸𑌨𑌪𑌰𑌾
𑌸𑌰𑍋𑌷𑌾 𑌗𑌙𑍍𑌗𑌾𑌯𑌾𑌂 𑌗𑌿𑌰𑌿𑌶𑌨𑌯𑌨𑍇 𑌵𑌿𑌸𑍍𑌮𑌯𑌵𑌤𑍀 ।
𑌹𑌰𑌾𑌹𑌿𑌭𑍍𑌯𑍋 𑌭𑍀𑌤𑌾 𑌸𑌰𑌸𑌿𑌰𑍁𑌹𑌸𑍌𑌭𑌾𑌗𑍍𑌯𑌜𑌨𑌨𑍀
𑌸𑌖𑍀𑌷𑍁 𑌸𑍍𑌮𑍇𑌰𑌾 𑌤𑍇 𑌮𑌯𑌿 𑌜𑌨𑌨𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌸𑌕𑌰𑍁𑌣𑌾 ॥ ௫௧ ॥

சிவே ச்ருங்காரார்த்ரா ததிதரஜநே குத்ஸநபரா
ஸரோஷா கங்காயாம் கிரிசநயநே விஸ்மயவதீ ।
ஹராஹிப்யோ பீதா ஸரஸிருஹஸௌபாக்யஜநநீ
ஸகீஷு ஸ்மேரா தே மயி ஜநநி த்ருஷ்டி: ஸகருணா ॥ 51 ॥

हे जननि (𑌹𑍇 𑌜𑌨𑌨𑌿) (ஹே ஜநநி) = ஹே தேவியே!
ते (𑌤𑍇)(தே) = உன்னுடைய
दृष्टिः (𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃)(த்ருஷ்டி:) = த்ருஷ்டியானது
शिवे (𑌶𑌿𑌵𑍇) (சிவே) = ஸதாசிவனிடத்தில்
शृङ्गारार्द्रा (𑌶𑍃𑌙𑍍𑌗𑌾𑌰𑌾𑌰𑍍𑌦𑍍𑌰𑌾) (ச்ருங்காரார்த்ரா) = ச்ருங்கார ரஸத்தால் நனைக்கப்பட்டதாயும்
तदितरजने (𑌤𑌦𑌿𑌤𑌰𑌜𑌨𑍇) (ததிதரஜநே) = பரமேச்வரனுக்கு வேறான ப்ராக்ருத ஜனங்களுடைய விஷயத்தில்

कुत्सनपरा (கு௱த்ஸநவரா) (குத்ஸன பரா) = பீபத்ஸ ரஸத்தோடு கூடினதாயும் (அதாவது பீபத்ஸரஸத்தால் ஏற்படும் ஜுகுப்ஸையோடு கூடினதாயும்)

गङ्गायां (ம௱ங்காயாம்) (கங்காயாம்) = ஸபத்னியான கங்கா தேவியினிடம்

सरोषा (ஸரோஷா) (ஸரோஷா) = கோபத்தோடு கூடினதாயும்

गिरिशनयने (கிரிஶநயநே) (கிரிசநயநே) = பரமேச்வரனுடைய நெற்றிக்கண்ணில்

विस्मयवती (விஸ்மயவதீ) (விஸ்மயவதி) = அத்புத ரஸத்தோடு கூடினதாயும்

हराहिभ्य: (ஹராஹிப்ய:) (ஹராஹிப்ய:) = பரமேச்வரனுக்கு அலங்காரமாயுள்ள பாம்புகளிடமிருந்து

भीता (பீதா) (பீதா) = பயரஸத்தோடு கூடினதாயும்

अत: (அத:) (அத:) = அக்காரணத்தால்

सरसिरुहसौभाग्यजननी (ஸரஸிருஹஸௌபாக்யஜநநீ) (ஸரஸிருஹஸௌபாக்ய ஜநநீ) = தாமரஸ புஷ்பத்தினுடையசிவப்புக்கு காரணமாயும் (அதுபோல் சிவந்ததாயும்) வீரரஸத்தோடு கூடினதாயும்

सखीषु (ஸகீஷு) (ஸகிஷு) = ஸகிகளிடம்

| | | |
|---|---|---|
| स्मेरा (ஸ்மேரா) (ஸ்மேரா) | = | ஹாஸ்ய ரஸத்தோடு கூடினதாயும் |
| मयि (மயி) (மயி) | = | என்னிடத்தில் |
| सकरुणा (ஸகருணா) (ஸகருணு) | = | கருணுரஸத்தோடு கூடினதாயும் |
| भवति (பவதி) (பவதி) | = | விளங்குகிறது. |

தாத்பர்யம் :—ச்ருங்காரம், பீபத்ஸம், ரௌத்ரம், அத்புதம், பயானகம், வீரம். ஹாஸ்யம், கருணே என்ற எட்டுவிதமான ரஸங்களும் தேவியினுடைய த்ருஷ்டியில் நிறைந்திருப்பதாக இந்த ச்லோகத்தால் வர்ணிக்கப்படுகிறது. नशान्तं मेनिरे रसं (நசாந்தம் மேநிரே ரஸம்) (நசாந்தம் மேநிரே ரஸம்) என்ற வாக்யத்தால் சிலர் சாந்திரஸத்தை ரஸமாக ஒப்புக்கொள்ளாத காரணத்தைக்கொண்டு, இதை அனுஸரித்து பகவத்பாதாளும் ப்ரக்ருதத்தில் எட்டுவிதமான ரஸங்களை அவலம்பித்து தேவியினுடைய த்ருஷ்டியை வர்ணிக்கிருர்கள். தேவியினுடைய த்ருஷ்டியோ காமேச்வரனைப் பார்க்கும்பொழுது ச்ருங்கார ரஸத்தால் நிரம்பினதாக இருந்துவருகிறது. அதாவது, மன்மதனை எரித்த காமேச்வரனுக்கும் காமவிகாரத்தை உண்டுபண்ணக்கூடியதாக விளங்குகிறது. சிவனுக்கு வேருன புருஷர்களை கவனிக்கும்பொழுதோ பீபத்ஸ ரஸத்துடன் கூடினதாக இருந்துவருகிறது; அதாவது லஜ்ஜையுள்ளதாக இருந்துவருகிறது. பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கு இது இயற்கையானதே. பரமேச்வரன் கங்காதேவியை சிரஸ்ஸில் தரித்துவருகிற காரணத்தால் கங்காதேவியானவள் பராசக்திக்கு ஸபத்னீயாக ஆகிருள். அக்காரணத்தால் கங்காதேவியை கவனிக்கும்பொழுது ரௌத்ர ரஸத்தோடு கூடினதாக அம்பாளுடைய த்ருஷ்டி விளங்குகிறது; அதாவது அளவிட முடியாத கோபத்தை தான் அடைந்திருப்பதை

த்ருஷ்டியினுல் ஸூசிப்பிக்கின்ருள். பரமசிவனுடைய நெற்றிக்கண்ணை கவனித்து பார்க்கும்பொழுது தேவியினுடைய த்ருஷ்டியானது அத்புத ரஸத்தால் நிரம்பினதாக விளங்குகிறது; அதாவது 'ஸர்வலோகத்தையும் ஜயித்த மன்மதனை எரித்த கண்ணல்லவா இந்த நெற்றிக்கண்! இது பெரிய ஆச்சர்யத்தை உண்டு பண்ணக்கூடிய கார்யந்தான். அந்த ஸமயத்தில் பரமேச்வரனுடைய வைராக்யத்தை யாராலும் வர்ணிக்கமுடியுமா? அவ்வித வைராக்யமுள்ள பரமேச்வரனுக்கு இப்பொழுது தன்னிடத்தில் ஏற்பட்டிருக்கும் அனுராகமும் அளவிற்குட்படாமலிருக்கிறதே; வைராக்யத்தை அடைந்த புருஷனுக்கு ஸ்த்ரீகளிடம் அனுராகம் ஏற்படாது ஒன்றுக்கொன்று விருத்தமான ஸ்வபாவமுள்ள வைராக்யம், அனுராகம் இரண்டும் பரமேச்வரனிடத்தில் சேர்ந்திருப்பது மிகவும் ஆச்சர்யத்தை கொடுக்கக்கூடியதல்லவா' என்று நினைக்கக்கூடியதாக இருப்பதால் பரமேச்வரனுடைய நெற்றிக்கண்ணை பார்க்கும்பொழுது தேவியினுடைய த்ருஷ்டியில் அத்புதரஸம் நடனம் செய்கிறது. गिरिशनयने (கிரிஶநயநே) (கிரிசநயநே) என்ற இடத்தில் गिरिशचरिते (கிரிஶசரிதே) (கிரிசசரிதே) என்ற பாடாந்த்ரம் காணப்படுகிறது. அந்த பாடத்தை அனுஸரித்து பரமேச்வரன் செய்த த்ரிபுர ஸம்ஹாரம் என்ற சரித்ரம் இங்கு த்வனிக்கின்றது. இதுவும் மிகுந்த ஆச்சர்யத்தை ப்ராணிகளுக்குக் கொடுக்கக்கூடியதே. பரமேச்வரன் த்ரிபுராஸுரனை ஸம்ஹாரஞ் செய்யுங்காலத்தில் பூமி ரதமாகவும், சந்த்ரன், ஸூர்யன் இவ்விருவர்களும் ரதத்தின் சக்ரங்களாகவும், மஹாமேரு பர்வதம் வில்லாகவும் ஆதிசேஷபகவான் நாண்கயிராகவும், ரதத்தின் சக்ரமாகிய ஸூர்ய மண்டலத்திற்குள் பாஸிக்கும் மஹாவிஷ்ணுவே பாணமாகவும், விஷ்ணுவினுடைய நாபி கமலத்தினின்றும் உண்டான ப்ரும்மாவே ஸாரதியாகவும், ப்ரும்மாவினுடைய நான்கு முகங்களிலிருந்

தும் உண்டான நான்கு வேதங்களும் குதிரைகளாகவும், வேதங்களாகிற குதிரைகளின் சிரஸ்ஸுக்களாகிய உபநிஷத்துகளில் பரமேச்வரன் உட்கார்ந்து கொண்டு யுத்தம் செய்ததாகவும், ஸ்காந்தம் முதலிய மஹாபுராணங்களில் த்ரிபுரஸம்ஹார சரித்ரத்தைப் பற்றி மிகவும் ஆச்சர்யமாக வர்ணிக்கப் பட்டிருக்கின்றது. இதை

मौर्वी मूर्ध्निरथः शरासनशिरः सञ्चारि चक्रद्वयम्
चक्रान्तर्निहितश्शरः तदुदरे सूतः तदास्ये हयाः ।
तेषामेवशिरः पदेषु वसतिः स्वस्येति यस्यश्रुतम्
देवः चित्रपरिच्छदः सभगवान् कुर्यात्सदामङ्गळम् ॥

𑌮𑍌𑌰𑍍𑌵𑍀 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌿𑌰𑌥𑌃 𑌶𑌰𑌾𑌸𑌨𑌶𑌿𑌰𑌃
𑌸𑌞𑍍𑌚𑌾𑌰𑌿 𑌚𑌕𑍍𑌰𑌦𑍍𑌵𑌯𑌮𑍍
𑌚𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌨𑌿𑌹𑌿𑌤𑌶𑍍𑌶𑌰𑌃 𑌤𑌦𑍁𑌦𑌰𑍇
𑌸𑍂𑌤𑌃 𑌤𑌦𑌾𑌸𑍍𑌯𑍇 𑌹𑌯𑌾𑌃 ।
𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑌶𑌿𑌰𑌃𑌪𑌦𑍇𑌷𑍁 𑌵𑌸𑌤𑌿𑌃
𑌸𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌤𑌿 𑌯𑌸𑍍𑌯𑌶𑍍𑌰𑍁𑌤𑌮𑍍
𑌦𑍇𑌵𑌃 𑌚𑌿𑌤𑍍𑌰𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌦𑌃 𑌸𑌭𑌗𑌵𑌾𑌨𑍍
𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌦𑌾𑌮𑌙𑍍𑌗𑌳𑌮𑍍 ॥

*மௌர்வீ மூர்த்நிரத: சராஸநசிர: ஸஞ்சாரி சக்ரத்வயம்*
*சக்ராந்தர்நிஹிதச்சர: ததுதரே ஸூத: ததாஸ்யே ஹயா: ।*
*தேஷாமேவசிர: பதேஷு வஸதி: ஸ்வஸ்யேதி யஸ்யச்ருதம்*
*தேவ: சித்ரபரிச்சத: ஸபகவாந் குர்யாத்ஸதாமங்களம் ॥*

என்ற ச்லோகத்தால் ஸ்காந்தமஹாபுராணத்தில் த்ரிபுராஸுர ஸம்ஹார சரித்ர வர்ணனை மேற்கண்டபடி சொல்லப்பட்டிருக்கிறது. இந்த சரித்ரத்தை அம்பாள் கவனிக்கும்பொழுது, அம்பாளுடைய த்ருஷ்

டியில் அத்புத ரஸமானது நடனம் செய்கிறது. இவ்விதமே பரமசிவன் தனது கழுத்தில் ஆபரணம் போல் அலங்கரித்துக்கொண்டிருக்கும் ஸர்பராஜாக்களைப் பார்க்கும்பொழுது தேவியினுடைய த்ருஷ்டியில் பயரஸம் ஸம்பூர்ணமாக விளங்கிவருகிறது. அவ்விதமே ஸர்ப்பத்தைப் பார்க்கும்பொழுது த்ருஷ்டியில் பயரஸம் பாவிப்பதுபோல், வீரரஸமும் விளங்குகிறது. அதை செந்தாமரை புஷ்பத்தின் ஸௌபாக்யத்திற்கு—சிவப்புவர்ணத்திற்கு—காரணமாக அம்பாளுடைய த்ருஷ்டி விளங்கிவருகிறது என்ற பொருளைப் ப்ரகாசப்படுத்தும் सरसिरुहसौभाग्य जननी (ஸரஸிருஹஸௌபாக்ய ஜநநீ) (ஸரஸிருஹஸௌபாக்ய ஜநநீ) என்ற பதத்தால் பரமாசார்யாள் ப்ரகாசப்படுத்துகிறார்கள். ஸர்ப்பங்களைப் பார்க்கும் ஸமயங்களில் அம்பாளுடைய கண்கள் சிவப்பாக பாஸிக்கிறது என்பது வீரரஸத்தை ஸூசிப்பிக்கின்றது. தன் தோழிகளைப் பார்க்கும்பொழுது மந்தஹாஸம் செய்து கொண்டு பார்ப்பதினால் ஹாஸ்யரஸம் வெளியாகிறது. தேவிக்கு கைங்கர்யம் செய்யும் பக்தகோடிகளைக் கவனிக்கும்பொழுது, அம்பாளுடைய கருணரஸம் பூர்ணமாக பாஸித்து வருகின்றது. இவ்விதமாக பராம்பிகையினுடைய த்ருஷ்டியானது ச்ருங்காரம் முதலான எட்டுவிதமான ரஸங்களால் அலங்கரிக்கப்பட்டு வருவதை த்யானம் செய்துவரும் உபாஸகர்களை, உபாஸனையின் பரிபாக காலத்தில் தேவி கருணாரஸத்தால் பூரிதமான த்ருஷ்டியினால் கடாக்ஷிக்கக் கூடுமானதினால், அதிலிருந்தும் உபாஸகர்கள் ஸகலவிதமான ஸௌபாக்யங்களையும் அடைவார்கள். मैत्रेणेक्षस्व चक्षुषा (மைத்ரேணேக்ஷஸ்வ சக்ஷுஷா) (மைத்ரேணக்ஷஸ்வ சக்ஷுஷா) என்ற ந்யாயப்படி மித்ரபாவத்தோடு மஹான்களுடைய கருண த்ருஷ்டி ப்ரஜைகளிடம் விழவேண்டுமானல், ப்ரஜைகள் எவ்வளவோ புண்ய கர்மாக்களைச் செயதிருக்கவேண்டும். அதிலும்

அப்பெரியோர்களுக்கும் பூஜ்யையயான லோகமாதாவான பராசக்தியினுடைய கருணை த்ருஷ்டியினால் மனிதன் பரசுத்தனாகவேண்டுமானால் எவ்வளவு பாக்யத்தைச் செய்திருக்கவேண்டும்? ஆகையால் கருணை நிரம்பிய தேவியினுடைய கடாக்ஷவீக்ஷணம் தன்னிடத்தில் ஏற்படுவதற்கு இந்த ச்லோகமே முக்யமான உபாயமாகும்.

क्लीं (க்லீம்) என்ற பீஜாக்ஷரத்தை சந்தனத்தில் எழுதி, இந்த ச்லோகத்தை 25000 தடவை ஜபித்து பூசிக்கொள்ள, வச்யமுண்டாகும்.

---

## 52. அம்பாளுடைய நேத்ர வர்ணனை

गते कर्णाभ्यर्णं गरुत इव पक्ष्माणि दधती
पुरां भेत्तुश्चित्तप्रशमरसविद्रावणफले ।
इमे नेत्रे गोत्राधरपतिकुलोत्तंसकलिके
तवाकर्णाकृष्टस्मरशरविलासं कलयतः ॥ ५२ ॥

𑌗𑌤𑍇 𑌕𑌰𑍍𑌣𑌾𑌭𑍍𑌯𑌰𑍍𑌣𑌂 𑌗𑌰𑍁𑌤 𑌇𑌵 𑌪𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌣𑌿 𑌦𑌧𑌤𑍀
𑌪𑍁𑌰𑌾𑌂 𑌭𑍇𑌤𑍍𑌤𑍁𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌪𑍍𑌰𑌶𑌮𑌰𑌸𑌵𑌿𑌦𑍍𑌰𑌾𑌵𑌣𑌫𑌲𑍇 ।
𑌇𑌮𑍇 𑌨𑍇𑌤𑍍𑌰𑍇 𑌗𑍋𑌤𑍍𑌰𑌾𑌧𑌰𑌪𑌤𑌿𑌕𑍁𑌲𑍋𑌤𑍍𑌤𑌂𑌸𑌕𑌲𑌿𑌕𑍇
𑌤𑌵𑌾𑌕𑌰𑍍𑌣𑌾𑌕𑍃𑌷𑍍𑌟𑌸𑍍𑌮𑌰𑌶𑌰𑌵𑌿𑌲𑌾𑌸𑌂 𑌕𑌲𑌯𑌤𑌃 ॥ ௫௨ ॥

கதே கர்ணாப்யர்ணம் கருத இவ பக்ஷ்மாணி தததீ
புராம் பேத்துச்சித்தப்ரசமரஸவித்ராவணபலே ।
இமே நேத்ரே கோத்ராதரபதிகுலோத்தம் ஸகலிகே
தவாகர்ணாக்ருஷ்டஸ்மரசரவிலாஸம் கலயத: ॥ 52 ॥

| | | |
|---|---|---|
| हे गोत्राधरपतिकुलोत्तंसकलिके (𑌹𑍇 𑌗𑍋𑌤𑍍𑌰𑌾𑌧𑌰𑌪𑌤𑌿𑌕𑍁𑌲𑍋𑌤𑍍𑌤𑌂𑌸𑌕𑌲𑌿𑌕𑍇) (ஹே கோத்ராதரபதி குலோத்தம்ஸகலிகே) | = | ஹிமவானுடையவம்சத்தை பரிமளிக்கச் செய்யும் ஹே பரதேவதையே ! |
| तव (𑌤𑌵) (தவ) | = | உன்னுடைய |
| इमे (𑌇𑌮𑍇) (இமே) | = | இந்த |
| नेत्रे (𑌨𑍇𑌤𑍍𑌰𑍇) (நேத்ரே) | = | இரண்டு நேத்ரங்கள் |
| कर्णाभ्यर्णं (𑌕𑌰𑍍𑌣𑌾𑌭𑍍𑌯𑌰𑍍𑌣𑌂) (கர்ணாப்யர்ணம்) | = | காதுகளுடைய ஸமீபத்தை |
| गते (𑌗𑌤𑍇) (கதே) | = | அடைகின்றதுகள். |
| गरुत इव (𑌗𑌰𑍁𑌤 𑌇𑌵) (கருத இவ) | = | பாணங்களுக்கு இருபக்கத்திலும் கட்டப்பட்ட இறக்கைகளைப்போல் |
| पक्ष्माणि (𑌪𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌣𑌿) (பக்ஷ்மாணி) | = | மயிர்களையும் |
| दधती (𑌦𑌧𑌤𑍀) (தததீ) | = | தரிக்கின்றதுகள் |
| पुरां भेत्तुः (𑌪𑍁𑌰𑌾𑌂 𑌭𑍇𑌤𑍍𑌤𑍁𑌃) (புராம் பேத்து:) | = | த்ரிபுரஸம்ஹாரம் செய்த பரமேச்வரனுடைய |
| चित्तप्रशमरसविद्रावणफले (𑌚𑌿𑌤𑍍𑌤𑌪𑍍𑌰𑌶𑌮𑌰𑌸𑌵𑌿𑌦𑍍𑌰𑌾𑌵𑌣𑌫𑌲𑍇) (சித்தப்ரசமரஸவித்ராவண பலே) | = | மனதிலுள்ள சாந்திரஸத்தைப் போக்கடிப்பதையே ப்ரயோஜனமாக உடைத்தானதுகள் (பரமசிவனுடைய மனதிலுள்ள சாந்திரஸத்தைப் போக்கடித்து, ச்ருங்காரரஸத்தை உண்டுபண்ணக் கூடியதுகள்) |

आकर्णाकृष्टस्मरशरविलासं = காதுவரை இழுக்கப்பட்ட மன்மதனுடைய பாணத்தின் ஸௌபாக்யத்தை
(ஆகர்ணாக்ருஷ்டஸ்மரசரவிலாஸம்)(ஆகர்ணாக்ருஷ்டஸ்மரசர விலாஸம்)

कलयत:(கலயத:)(கலயத:) = செய்கின்றதுகள்.

தாத்பர்யம்:—தேவியினுடைய இரண்டு கண்களும் மன்மதனுடைய பாணம்போல் இருந்துவருகின்றன. பாணங்களுக்கு இரண்டு பக்கங்களிலும், இறக்கை கட்டுகின்ற வழக்கமுண்டு. அதுபோல் அம்பாளுடைய கண்களின் குவளையிலுள்ள மயிர்கள் நேத்ரமாகிய பாணத்திற்கு இரண்டு பக்கத்திலும் கட்டப்பட்ட இறக்கைகளோ என்று தோன்றுகிறது. யுத்தவீரர்கள் வில்லில் நாண்கயிரைக் கட்டி, காதுவரையிலும் அந்த பாணத்தை இழுத்துவிடுவார்கள். அதுபோல் அம்பாளுடைய நேத்ரமாகிய பாணங்களும் இரண்டு பக்கத்திலும் காதுவரை விசாலமாக நீண்டு இருக்கிறது. இதைப்பார்க்க, மன்மதனுடைய பாணமோ என்று ஊஹிக்கக்கூடியதாகவே இருக்கிறது. த்ரிபுராஸுரனை ஸம்ஹாரம் செய்த பரமேச்வரனுடைய மனதில் சாந்திரஸம் எப்பொழுதும் நிரம்பியிருப்பது வழக்கம். கார்ஹஸ்த்ய ஸுகத்தினின்றும் விரக்தியடைந்து ஸ்வரூபானந்த அனுபவமே சாந்திரஸமாகும். இவ்விதமான பரமேச்வரனுடைய மனதிலிருக்கும் சாந்திரஸமும் தேவியினுடைய த்ருஷ்டிபட்ட மாத்ரத்தில் தான் விலகிக்கொண்டு, பரமேச்வரனுடைய மனதில் ச்ருங்கார ரஸத்தைக் குடியிருக்கச் செய்கிறது. மன்மதனுடைய பாணத்தால் அடிபட்ட ஜிதேந்த்ரியர்களும், சாந்திரஸ ஆஸ்வாதத்தை விட்டு விட்டு, ச்ருங்கார ரஸத்தில் மூழ்குவார்கள் என்பதற்கு, விச்வாமித்ரர், பராசரர் முதலானவர்களே உதாஹரணமாக

ஆவார்கள். அதுபோல் ப்ராக்ருதத்தில் பரமேச்வரனும், தேவியினுடைய த்ருஷ்டிபட்டமாத்ரத்தில், ச்ருங்காரரஸத்தில் மூழ்கினார். இதனாலும் காதுவரை இழுக்கப்பட்ட மன்மதனுடைய பாணத்தின் ஸௌபாக்யத்தை தேவியினுடைய நேத்ரம் உண்டு பண்ணுகிறதினால், தேவியினுடைய நேத்ரங்கள் மன்மதனுடைய பாணந்தான் என்று தீர்மானிக்கவேண்டியதாக இருக்கிறது. புஷ்பத்தை பாணமாக உடைத்தானவன் மன்மதன். தேவியோ, பர்வதராஜனான ஹிமவானுடைய வம்சத்திற்கு உச்சியில் சூட்டிக்கொள்ளக்கூடிய நல்ல வாஸனையுள்ள புஷ்பமொட்டு மாதிரி விளங்கி வருகிறாள். அதிலும் தேவியினுடைய நேத்ரம் நீலோத்பல புஷ்பத்தின் ஸௌபாக்யத்தையும் ஜயித்தது என்று முன்பு சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதமிருக்கும்பொழுது மன்மதனுடைய பாணம் புஷ்பமல்லவா; தேவியினுடைய நேத்ரங்கள் எவ்விதம் புஷ்பமாகும் என்ற சங்கைக்கே இடமில்லை இவ்விதம் தேவியினுடைய த்ருஷ்டி விசேஷத்தால் மன்மதனுடைய பாணத்தை பாவனை செய்து தேவியை உபாஸிப்பவர்களுக்கு காமஜயம் ஏற்படும்.

यदासर्वेप्रमुच्यन्ते कामायेऽस्य हृदिश्रिताः
अथमर्त्यो अमृतोभवति अत्र ब्रह्म समश्नुते ।

𑌯𑌦𑌾𑌸𑌰𑍍𑌵𑍇𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌾𑌮𑌾𑌯𑍇𑌽𑌸𑍍𑌯 𑌹𑍃𑌦𑌿𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃
𑌅𑌥𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑍋 𑌅𑌮𑍃𑌤𑍋𑌭𑌵𑌤𑌿 𑌅𑌤𑍍𑌰 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ।

யதாஸர்வேப்ரமுச்யந்தே காமாயேஸ்ய ஹ்ருதிச்ரிதா:
அதமர்த்யோ அம்ருதோபவதி அத்ர ப்ரஹ்ம ஸமச்நுதே।

என்ற சாஸ்த்ர மூலம், மனதிலுள்ள காமம் தொலைந்தால், இந்த ஜீவதசையிலேயே ப்ரம்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு முக்தர்களாக ஆகிறார்கள் என்பது தெரிகிறபடியால், ப்ரக்ருதத்தில் தேவியினுடைய த்ருஷ்டிக்

கும் மன்மதனுடைய பாணத்திற்கும் அபேதத்தை அத்யவஸாயம் செய்துகொண்டு பராம்பிகையி னுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிற புண்ய ஜனங்கள், மோக்ஷத்திற்கு விரோதியான காம பாணத்தினின்றும் விடுபட்டவர்களாகி ப்ரம்மஸுகத் தையும் அனுபவிக்கக்கூடிய பாக்யவான்களாக ஆவார்கள்.

இந்த ச்லோகத்தால், கண், காதுகளுக்குள்ள ரோக நிவார ணத்திற்கு ப்ரயோகம் சொல்லப்படுகிறது. விபூதியில் ரं (ரம்) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி, இந்த ச்லோகத்தை 25000 தடவை ஜபித்து விபூதியை இட்டுக்கொண்டால், கண், காதுகளில் உள்ள ரோகம் ஸ்வஸ்தமாகும்.

---

## 53. அம்பாளுடைய நேத்ர ஸௌபாக்ய வர்ணனை

विभक्तत्रैवर्ण्यं व्यतिकरितलीलाञ्जनतया
विभाति त्वन्नेत्रत्रितयमिदमीशानदयिते ।
पुनः स्रष्टुं देवान्द्रुहिणहरिरुद्रानुपरतान्
रजःसत्त्वं बिभ्रत्तम इति गुणानां त्रयमिव ॥ ५२ ॥

விபக்தத்ரைவர்ண்யம் வ்யதிகரிதலீலாஞ்ஜநதயா
விபாதி த்வந்நேத்ரத்ரிதயமிதமீஶாநதயிதே ।
புந: ஸ்ரஷ்டும் தேவாந்த்ருஹிணஹரிருத்ராநுபரதாந்
ரஜ:ஸத்த்வம் பிப்ரத்தம இதி குணாநாம் த்ரயமிவ ॥ ருந ॥

விபக்தத்ரைவர்ண்யம் வ்யதிகரிதலீலாஞ்ஜநதயா
விபாதி த்வந்நேத்ரத்ரிதயமிதமீசாநதயிதே ।
புந: ஸ்ரஷ்டும் தேவாந்த்ருஹிணஹரிருத்ராநுபரதாந்
ரஜ: ஸத்வம் பிப்ரத்தம இதி குணாநாம் த்ரயமிவ ॥ 53 ॥

हे ईशानदयिते (𑌹𑍇 𑌈𑌶𑌾𑌨𑌦𑌯𑌿𑌤𑍇) (ஹே ஈசாநதயிதே) = பரமேச்வரனுடைய ப்ரிய பத்னியான ஹே பரதேவதையே!

व्यतिकरितलीलाञ्जनतया (𑌵𑍍𑌯𑌤𑌿𑌕𑌰𑌿𑌤𑌲𑍀𑌲𑌾𑌞𑍍𑌜𑌨𑌤𑌯𑌾) (வ்யதிகரிதலீலாஞ்ஜநதயா) = விளையாட்டுக்காக தரிக்கப்பட்ட மையோடு கூடிக் கொண்டிருக்கும் காரணத்தால்

विभक्तत्रैवर्ण्यं (𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂) (விபக்தத்ரைவர்ண்யம்) = ஒன்றோடொன்று ஸம்பந்தப்படாமல் விளங்குகின்ற சிவப்பு, வெளுப்பு கருப்பு என்ற மூன்று வர்ணங்களை உடைத்தான

इदं (𑌇𑌦𑌂) (இதம்) = இந்த

त्वन्नेत्रत्रितयं (𑌤𑍍𑌵𑌨𑍍𑌨𑍇𑌤𑍍𑌰𑌤𑍍𑌰𑌿𑌤𑌯𑌂) (த்வந்நேத்ரத்ரிதயம்) = உன்னுடைய மூன்று கண்களும்

उपरतान् (𑌉𑌪𑌰𑌤𑌾𑌨𑍍) (உபரதாந்) = ப்ரளய காலத்தில் உன்னிடத்தில் லீனமாக ஆன

द्रुहिणहरिरुद्रान् (𑌦𑍍𑌰𑍁𑌹𑌿𑌣𑌹𑌰𑌿𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌨𑍍) (த்ருஹிணஹரிருத்ரான்) = ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற

देवान् (𑌦𑍇𑌵𑌾𑌨𑍍) (தேவாந்) = தேவர்களை

पुनः (வ⁻ந:) (புந:) = மறுபடியும்

स्रष्टुं (ஸ்ரஷ்டும்) (ஸ்ரஷ்டும்)= ஸ்ருஷ்டிப்பதற்கு

रजः (ரஜ:) (ரஜ:) = ரஜோகுணம்

सत्त्वं (ஸத்வம்) (ஸத்வம்) = ஸத்வகுணம்

तमः (தம:) (தம:) = தமோகுணம்

इति (இதி) (இதி) = என்ற

गुणानां त्रयं (குணாநாம் த்ரயம்) (குணாநாம் த்ரயம்) = மூன்று குணங்களையும்

बिभ्रदिव (பிப்ரதிவ) (பிப்ரதிவ) = பரிக்கின்றதுபோல்

विभाति (விபாதி) (விபாதி) = விளங்குகின்றது.

தாத்பர்யம் :—இந்த ச்லோகத்தாலும் அம்பாளுடைய கண்களே வர்ணிக்கப்படுகிறது. தேவிக்கு மூன்று நேத்ரங்கள் என்று முன்பு சொல்லப்பட்டது. உத்தம புருஷர்களோ, ஸ்த்ரீகளோ, அவர்களுடைய நேத்ரங்களில் ஸூக்ஷ்மமான சிவப்பு ரேகை காணப்படும். பரதேவதையான தேவியினுடைய நேத்ரத்தில், சிவப்பு ரேகை இருக்கிறதென்பதற்கு ஆக்ஷேபணையே யில்லை. நேத்ரத்தின் குவளங்கள் வெளுப்பென்பது ப்ரஸித்தமானது. லீலார்த்தமாக தேவி கண்களில் மையை அலங்காரமாக தரித்துக்கொண்டிருக்கிருள். இது உத்தம ஸ்த்ரீகளுக்குள்ள அலங்காரமாகும். இதனுல் தேவியினுடைய நேத்ரங்கள் ஒன்ருேடொன்று ஸம்பந்தப்படாத கருப்பு, வெளுப்பு சிவப்பு இம்மூன்று வர்ணங்களோடு கூடிக்கொண்டிருக்கின்றது. கருப்பு வர்ணத்தைக் கவனித்தால், தமோகுணமோ என்றும்; வெளுப்பு வர்ணத்தைக்

கவனித்தால், ஸத்வகுணமோ என்றும்; சிவப்பு வர்ணத்தைக் கவனித்தால் ரஜோகுணமோ என்றும் தோன்றுகிறது. ரஜோகுணத்தை உபாதியாக உடைத்தான தேவதையை ப்ரம்மா என்றும், ஸத்வகுணத்தை உபாதியாக உடைத்தான தேவதை விஷ்ணு என்றும் தமோகுணத்தை உபாதியாக உடைத்தான தேவதை ருத்ரனுமாக, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார கர்த்தாக்கள் என்று சொல்லப்படுவார்கள். மஹாப்ரளய காலத்தில் லோகமே தேவியினுடைய ஸ்வரூபத்தில் லீனமாகப் போனதினால், ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்கிற ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் முதலான தேவர்களுக்கும் உத்யோக மில்லாமலாகி, அவர்களும் தேவியினுடைய ஸ்வரூபத்திலேயே லயித்துவிடுகிறார்கள். மறுபடியும் ஸ்ருஷ்டிகாலம் வரும்பொழுது ப்ரும்மா விஷ்ணு ருத்ரன் முதலான தேவதைகளை அம்பாள் தன் தருஷ்டி மாத்ரத்தால் ஸ்ருஷ்டிக்கிறாள் என்பது சாஸ்த்ர மர்யாதையாகும்.

सकलभुवनमेतत् स्रष्टुकामायदात्वम्
सृजसिजननिदेवान् विष्णुरुद्राऽजमुख्यान् ।
स्थितिलयजननं तैः कारयस्येकरूपा
नखलुतव कथंचित् देवि संसारलेशः ॥

𑌸𑌕𑌲𑌭𑍁𑌵𑌨𑌮𑍇𑌤𑌤𑍍 𑌸𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌕𑌾𑌮𑌾𑌯𑌦𑌾𑌤𑍍𑌵𑌮𑍍
𑌸𑍃𑌜𑌸𑌿𑌜𑌨𑌨𑌿𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌽𑌜𑌮𑍁𑌖𑍍𑌯𑌾𑌨𑍍 ।
𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌲𑌯𑌜𑌨𑌨𑌂 𑌤𑍈𑌃 𑌕𑌾𑌰𑌯𑌸𑍍𑌯𑍇𑌕𑌰𑍂𑌪𑌾
𑌨𑌖𑌲𑍁𑌤𑌵 𑌕𑌥𑌂𑌚𑌿𑌤𑍍 𑌦𑍇𑌵𑌿 𑌸𑌂𑌸𑌾𑌰𑌲𑍇𑌶𑌃 ॥

ஸகலபுவநமேதத் ஸ்ரஷ்டுகாமாயதாத்வம்
ஸ்ருஜஸிஜநநிதேவாந் விஷ்ணுருத்ராஜமுக்யாந் ।
ஸ்திதிலயஜநநம் தை: காரயஸ்யேகரூபா
நகலுதவ கதம்சித் தேவி ஸம்ஸாரலேச: ॥

என்று தேவீபாகவதத்தில், ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டிக்க அம்பாளுக்கு இச்சை எப்பொழுது ஏற்படு

கிறதோ, அப்பொழுது த்ரிமூர்த்திகளை அம்பாள் ஸ்ருஷ்டிப்பதாகவும், அவர்களைக்கொண்டு ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாராதிகளை அம்பாள் ஆக்ஞாபிக்கின்றவளாயும், அதனுல் தேவியினிடம் ஸம்ஸார லேசமே ஒட்டாமல், கூடஸ்தையாகவும், ஸச்சிதானந்தரூபிணீயாகவும் அம்பாள் பாஸித்துவருகிருள் என்று வேதங்களே அம்பாளுடைய மஹிமையை ஸ்தோத்ரம் செய்வதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தின் தாத்பர்யமே, இந்த ஸௌந்தர்யலஹரீயிலுள்ள ச்லோகத்தில் அடங்கியது அம்பாளுடைய நேத்ரங்களில் உள்ள வர்ணங்களைக் கவனிக்கும்பொழுது ரஜோகுணம், ஸத்வகுணம், தமோகுணம் என்ற மூன்று குணங்களை க்ரமமாக உபாதியாக உடைத்தான, ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரும்மாவையும், ஸ்திதி கர்த்தாவான விஷ்ணுவையும், ஸம்ஹார கர்த்தாவான ருத்ரனையும், ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்ருஷ்டிப்பதற்குத்தான் ரஜோகுணம், ஸத்வகுணம், தமோகுணம் என்ற மூன்று குணங்களை அம்பாள் நேத்ரங்களில் தரிக்கின்ருளோ என்று தோன்றுகிறது. ஸ்ருஷ்டி காலத்தில்தான் அம்பாள் நேத்ரத்தில் மை இட்டுக்கொள்வாள் என்றும் த்வனி ஏற்படுகிறது. இவ்விதம் தேவியினுடைய நேத்ர மஹிமையை அறிந்து தேவியினுடைய ஸ்வரூப த்யானம் செய்கிற ஸாதகர்கள், அஞ்ஜன ப்ரயோகத்தால், ஸகல லோகங்களையும் தன் வசம் செய்துகொண்டு, தன் இச்சாமாத்ரத்தால் தனக்கு வேண்டிய வஸ்துக்களை ஸ்ருஷ்டிக்கவோ, ரக்ஷிக்கவோ, தனக்குத் தேவையில்லாத காலத்தில் அழிக்கவோ, சக்தி உள்ளவர்களாக ஆகிருர்கள். भोगमात्रसाम्यलिङ्गाच्च (𑌭𑍋𑌗𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑌾𑌮𑍍𑌯𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌚𑍍𑌚) (போகமாத்ரஸாம்யலிங்காச்ச) என்ற சாரீரக மீமாம்ஸா சாஸ்த்ர ந்யாயத்தால் தன்னுடைய உபபோகாதிகளில், ஈச்வர துல்யாளாக இந்த உபாஸகர்கள் ஆகிருர்கள் என்பதும் இதனுல் தெரியவருகிறது.

இந்த ச்லோகத்தாலும் நேத்ரம், கர்ணம் இவைகளின் ரோக நிவர்த்திக்குப் ப்ரயோகம் சொல்லப்படுகிறது. தீபத்தில் 𑌹𑍍𑌰𑍀𑌮𑍍 (ஹ்ரீம்) என்ற பீஜாக்ஷரத்தைச் சொல்லி தேவியை த்யான ஆவாஹனாதிகளால் பூஜித்து, 45 தினங்கள் தினம் 25000 வீதம் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும்.

முன் ச்லோகத்தில் நேத்ரத்தில் ஆகந்துகமாக வரும் திமிர தோஷ நிவர்த்திக்கு ப்ரயோகம் சொல்லப்பட்டது. இந்த ச்லோகத்தால் பிறவியிலேயே ஏற்பட்ட திமிர தோஷத்தையும் நிவர்த்தி செய்துகொள்ளலாம்.

---

## 54. தேவியின் கண்களுடைய மஹிமையின் வர்ணனை.

पवित्रीकर्तुं नः पशुपतिपराधीनहृदये
दयामित्रैर्नेत्रैररुणधवलश्यामरुचिभिः ।
नदः शोणो गङ्गा तपनतनयेति ध्रुवममुं
त्रयाणां तीर्थानामुपनयसि संभेदमनघम् ॥ ५४ ॥

𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑍀𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌨𑌃 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌪𑌰𑌾𑌧𑍀𑌨𑌹𑍃𑌦𑌯𑍇
𑌦𑌯𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑍈𑌰𑍍𑌨𑍇𑌤𑍍𑌰𑍈𑌰𑌰𑍁𑌣𑌧𑌵𑌲𑌶𑍍𑌯𑌾𑌮
𑌰𑍁𑌚𑌿𑌭𑌿𑌃 ।
𑌨𑌦𑌃 𑌶𑍋𑌣𑍋 𑌗𑌙𑍍𑌗𑌾 𑌤𑌪𑌨𑌤𑌨𑌯𑍇𑌤𑌿 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑌮𑍁𑌂
𑌤𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌮𑍁𑌪𑌨𑌯𑌸𑌿 𑌸𑌂𑌭𑍇𑌦𑌮𑌨𑌘𑌮𑍍
॥ ௫௪ ॥

பவித்ரீகர்தும் ந: பசுபதிபராதீநஹ்ருதயே
தயாமித்ரைர்நேத்ரைரருணதவலச்யாமருசிபி: ।
நத: சோணோ கங்கா தபநதநயேதி த்ருவமமும்
த்ரயாணாம் தீர்த்தாநாமுபநயஸி ஸம்பேதமநகம் ॥ 54 ॥

| | | |
|---|---|---|
| हे पशुपतिपराधीनहृदये (𑌹𑍇 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌪𑌰𑌾𑌧𑍀𑌨𑌹𑍃𑌦𑌯𑍇) (ஹே பசுபதிபராதீன ஹ்ருதயே) | = | பரமேச்வரனுக்கு அடிமையான மனதோடு கூடின பதிவ்ரதா சிரோன்மணியான ஹே பரதேவதையே! |
| दयामित्रैः (𑌦𑌯𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑍈𑌃) (தயாமித்ரை:) | = | மைத்ரமான கருணம்ருதத்தால் நிறைந்ததாயும் |
| प्रत्येकं (𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍇𑌕𑌂) (ப்ரத்யேகம்) | = | ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாமல் |
| अरुणधवलश्यामरुचिभिः (𑌅𑌰𑍁𑌣𑌧𑌵𑌲𑌶𑍍𑌯𑌾𑌮𑌰𑍁𑌚𑌿𑌭𑌿𑌃) (அருணதவலச்யாம ருசிபி:) | = | சிவப்பு,வெளுப்பு,கருப்பு என்ற வர்ணங்களுடன் கூடின மூன்றுவிதமான ரேகைகளால் அலங்கரிக்கப்பட்டதாயும்இருக்கிற |
| नेत्रैः (𑌨𑍇𑌤𑍍𑌰𑍈𑌃)(நேத்ரை:) | = | கண்களால் |
| शोणः नदः (𑌶𑍋𑌣𑌃 𑌨𑌦𑌃) (சோண: நத:) | = | சிவப்பு வர்ணமாயும் மேற்குதிக்கை நோக்கிப் போகிறதாயுமுள்ள, புருஷரூபமான புண்ய நதியான சோணபத்ரா என்ன |
| गङ्गा (𑌗𑌙𑍍𑌗𑌾) (கங்கா) | = | வெளுப்பு வர்ணமாயும் கிழக்கு திக்கைநோக்கிப் போகிற பாகிரதி என்ன |
| तपनतनया (𑌤𑌪𑌨𑌤𑌨𑌯𑌾) (தபநதநயா) | = | ஸூர்யனுடைய பெண்ணும், கருப்பு வர்ண |

| | |
|---|---|
| | முள்ளதாயும், கிழக்கு திக்கைநோக்கிப்போகும் யமுனை என்ன |
| इति (𑌇𑌤𑌿) (இதி) | = என்ற |
| त्रयाणां तीर्थानां (𑌤𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌂) (த்ரயாணும் தீர்த்தாணும்) | = மூன்று புண்ய தீர்த்தங்களுடைய |
| अनघं (𑌅𑌨𑌘𑌂) (அநகம்) | = பாபத்தை நாசம் செய்கிறதான |
| अमुं (𑌅𑌮𑍁𑌂) (அமும்) | = இந்த |
| सम्भेदं (𑌸𑌂𑌭𑍇𑌦𑌂) (ஸம்பேதம்) | = ஸங்கமத்தை |
| नः (𑌨𑌃) (ந:) | = எங்களை |
| पवित्रीकर्तुं (𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑍀𑌕𑌰𑍍𑌤𑍁𑌂) (பவித்ரீகர்தும்) | = பரிசுத்தம் செய்துவைப்பதற்கு |
| उपनयसि (𑌉𑌪𑌨𑌯𑌸𑌿) (உபநயஸி) | = உண்டுபண்ணுகிறாய் (என்பது) |
| ध्रुवं (𑌧𑍍𑌰𑍁𑌵𑌂) (த்ருவம்) | = நிச்சயம். |

தாத்பர்யம் :—இந்த ச்லோகத்தாலும் தேவியின் கண்களுடைய மஹிமையே வர்ணிக்கப்படுகிறது. தேவியினுடைய கண்கள் ஒவ்வொன்றிலும் சிகப்பு கருப்பு வெளுப்பு வர்ணங்களுள்ள மூன்று ரேகைகள் ஒன்றோடொன்று சேராமல் நீளமாயும் : ஸூக்ஷ்மமாயும் பாஸித்துவருகின்றன. ஸூக்ஷ்மமாக கவனித்தால் பதிவ்ரதா சிரோன்மணிகளுடைய த்ருஷ்டியில் இவ்விதம் காணலாம். தேவியோ பசு என்ற சப்தத்தால் சொல்லப்படும் ஸகல ஜீவகோடிகளுக்

கும் நாதனுன பரமேச்வரன் என்ற தன் பர்த்தாவி னிடத்தில் தன் மனதை அடிமைப்படுத்திவிட்டாள். பரமசிவனுடைய தீர்மானம் எதுவோ அதுதான் தேவியின் மனதுக்கும் ஸந்தோஷத்தை உண்டுபண் ணக்கூடியது. அம்பாள் தானுக தன் மனதினுல் ஒன்றையும் செய்யமாட்டாள். இவ்விதம் உத்தம பதிவ்ரதையான தேவியின் நேத்ரங்களில் முன் சொன்னபடி, மிகவும் ஸூக்ஷ்மமான மூன்று ரேகை கள் காணப்படுகிறதென்பதைச் சொல்லவும் வேண் டுமா! இந்த மூன்று ரேகைகளை கவனிக்கும்பொழுது சோணபத்ரா, கங்கை, யமுனை என்ற மூன்று நதி களோ என்று தோன்றுகிறது. சோணபத்ரா என்ற நதி மேற்கை நோக்கிச் செல்லுகிறது. இந்த நதி புருஷ ஸ்வரூபம் என்று புராணங்களில் ப்ரஸித்தமானது. இந்த நதியினுடைய ஜலமோ, மணல்களில் ஸ்வர் ணத்தின் ஸம்பந்தமிருப்பதினுல், தங்கரேக்காக பாஸித்துவரும்; அதாவது சிகப்புநிறமுள்ளதாக இந்த நதியின் ஜலம் ஓடுகிறது. ஹிமயமலையில் உற்பத்தி யாகி கிழக்கை நோக்கி ஓடுகிற கங்கை என்ற ப்ர ஸித்தமான புண்யநதியோ வெளுப்பு வர்ணத்துடன் கூடியதென்பது ப்ரஸித்தமானது கங்கா தீர்த்தம் ஸ்படிகம்போல் நிர்மலமாக இருந்துவரும். ஸூர்ய பகவானுல் உண்டுபண்ணப்பட்ட யமுனையோ, கிழக்கு திக்கைநோக்கி ப்ரவாஹிக்கின்றுள். இதின் ஜலம் கருப்பாக இருக்கும். கிழக்கு திக்கை நோக்கிச் செல்லுகின்ற கங்கை, யமுனை இவ்விருவர்களுக்கும் ஸங்கமம் (ஒன்ருகச் சேரும் தன்மை) ஏற்படக்கூடும். ஆகிலும், மேற்குதிக்கை நோக்கிச் செல்லும் சோண பத்ரைக்கு கங்கை, யமுனை இவர்களோடு எப்படி ஸங்க மம் ஏற்படக்கூடும்? தேவியினுடைய த்ருஷ்டியிலோ, சிகப்பாயும், கருப்பாயும், வெளுப்பாயும் மூன்று ரேகைகள் அதிஸூக்ஷ்மமாகக் காணப்படுகிறபடி யால், இம்மூன்று ரேகைகளையும், சோணபத்ரா, கங்கை, யமுனை என்ற மூன்று நதிகளாக கவி உத்

ப்ரேஷிக்கின்றுர். பக்த ஜனங்கள், அறியாமையால் ஏதாவது துராசாரத்தை அனுஷ்டித்துவிட்டாலும், அவர்களுடைய பாபத்தைப் போக்கடித்து பரிசுத்த மாகச் செய்வதற்கு முன் சொன்ன மூன்று நதிகளை யும் ஸந்திக்கும்படி தன்னுடைய த்ருஷ்டியில் ரேகை என்ற வ்யாஜத்தால் ப்ரகாசப்படுத்துகின்றுளோ என்று நினைக்கக்கூடியதாக இருக்கிறது. அதாவது, முன்சொன்ன மூன்று நதிகள் ஒன்ருென்றும, ஸுரா பானம், ஸ்வர்ணஸ்தேயம், ப்ரம்மஹத்தி, குருதல்பக மனம், தத்ஸம்ஸர்கம் என்ற ஐந்துவிதமான மஹா பாபங்களைச் செய்தவர்களையும் பாபத்தினின்றும் விமுக்தர்களாகச் செய்து பரிசுத்தம் செய்துவைக் கும் ஸ்வபாவமுள்ளவை. மூன்றும் ஒன்ருகச் சேர்ந் தால், அதின் மஹிமையைச் சொல்லவும் வேண்டுமா? ப்ரயாக க்ஷேத்ரத்தில், கங்கை யமுனை இவ்விரண்டு நதிகளின் ஸங்கமத்தைத்தான் காணலாம். கங்கை, யமுனை, சோணபத்ரா இம்மூன்று நதிகளுடைய ஸங்கமத்தை தேவியினுடைய த்ருஷ்டியில்தான் காணமுடியும். தேவியினுடைய கடாக்ஷத்தால் பார்க்கப்பட்ட உபாஸகர்கள் மஹாபரிசுத்தர்கள் என் பது ஸித்தமாகும். இவ்விதமாக தேவியை த்யானம் செய்கிறவர்கள், அக்ஞானத்தால் செய்யப்பட்ட ஸகல பாபங்களிலிருந்தும் விமுக்தர்களாக ஆவார்கள்.

ஸ்த்ரீகளுக்கு கர்ப்பஸம்பந்தமாக ஏற்படும் ஸகல ரோகங் களையும் நிவர்த்திசெய்துவைக்கக்கூடியது. ஸௌ:, ஸௌ: (ஸௌ:, ஸௌ:) என்ற பீஜாக்ஷரத்தை ஸ்வர்ண யந்த்ரத்தில் எழுதி தரித் துக்கொள்ளவும். ஜலத்தில் அபிமந்த்ரணம் செய்து உள்ளுக்குக் கொடுக்கவும். தினம் 25000 வீதம், 5 நாள் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யவேண்டும்.

---

## 55. வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாத அம்பாளின் த்ருஷ்டி வர்ணனை.

निमेषोन्मेषाभ्यां प्रलयमुदयं याति जगती
तवेत्याहुः सन्तो धरणिधरराजन्यतनये ।
त्वदुन्मेषाज्जातं जगदिदमशेषं प्रलयतः
परित्रातुं शङ्के परिहृतनिमेषास्तव दृशः ॥ ५५ ॥

𑌨𑌿𑌮𑍇𑌷𑍋𑌨𑍍𑌮𑍇𑌷𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌲𑌯𑌮𑍁𑌦𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌜𑌗𑌤𑍀
𑌤𑌵𑍇𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 𑌸𑌨𑍍𑌤𑍋 𑌧𑌰𑌣𑌿𑌧𑌰𑌰𑌾𑌜𑌨𑍍𑌯𑌤𑌨𑌯𑍇 ।
𑌤𑍍𑌵𑌦𑍁𑌨𑍍𑌮𑍇𑌷𑌾𑌜𑍍𑌜𑌾𑌤𑌂 𑌜𑌗𑌦𑌿𑌦𑌮𑌶𑍇𑌷𑌂 𑌪𑍍𑌰𑌲𑌯𑌤𑌃
𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌤𑍁𑌂 𑌶𑌙𑍍𑌕𑍇 𑌪𑌰𑌿𑌹𑍃𑌤𑌨𑌿𑌮𑍇𑌷𑌾𑌸𑍍𑌤𑌵 𑌦𑍃𑌶𑌃 ॥ ௫௫ ॥

நிமேஷோந்மேஷாப்யாம் ப்ரலயமுதயம் யாதி ஜகதீ
தவேத்யாஹு: ஸந்தோ தரணிதரராஜந்யதநயே ।
த்வதுந்மேஷாஜ்ஜாதம் ஜகதிதமசேஷம் ப்ரலயத:
பரித்ராதும் சங்கே பரிஹ்ருதநிமேஷாஸ்தவ த்ருச: ॥ 55 ॥

हे धरणिधरराजन्यतनये (𑌹𑍇 𑌧𑌰𑌣𑌿𑌧𑌰𑌰𑌾𑌜𑌨𑍍𑌯𑌤𑌨𑌯𑍇) (ஹே தரணி தரராஜங்யதநயே) = பர்வதராஜனான ஹிமாலயத்தின் புத்ரியான ஹே பரதேவதையே!

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

निमेषोन्मेषाभ्यां (𑌨𑌿𑌮𑍇𑌷𑍋𑌨𑍍𑌮𑍇𑌷𑌾𑌭𑍍𑌯𑌾𑌂)(நிமேஷோங்மேஷாப்யாம்) = கண்ணை மூடுவது, திறப்பது இவைகளிலிருந்தும்

जगती (𑌜𑌗𑌤𑍀) (ஜகதீ) = லோகமானது

प्रलयं (𑌪𑍍𑌰𑌲𑌯𑌂) (ப்ரலயம்) = நாசத்தையும்

उदयं (𑌉𑌦𑌯𑌂) (உதயம்) = ஸ்ருஷ்டியையும்

याति (𑌯𑌾𑌤𑌿) (யாதி) = அடைகின்றது

इति (𑌇𑌤𑌿) (இதி) = என்று

सन्तः (𑌸𑌨𑍍𑌤𑌃) (ஸந்த:) = த்ருஷ்டி ஸ்ருஷ்டி வாதிகளான வித்வான்கள்

आहुः (𑌆𑌹𑍁𑌃) (ஆஹு:) = சொல்லுகிறார்கள்.

अतः (𑌅𑌤𑌃) (அத:) = ஆகையினால்

त्वदुन्मेषात् (𑌤𑍍𑌵𑌦𑍁𑌨𑍍𑌮𑍇𑌷𑌾𑌤𑍍) (த்வதுந்மேஷாத்) = தாங்கள் கண்ணைத்திறந்ததினால்

जातं (𑌜𑌾𑌤𑌂) (ஜாதம்) = உண்டான

इदं (𑌇𑌦𑌂) (இதம்) = இந்த

अशेषं (𑌅𑌶𑍇𑌷𑌂) (அசேஷம்) = ஸமஸ்தமான

जगत् (𑌜𑌗𑌤𑍍) (ஜகத்) = லோகத்தை

प्रलयतः (𑌪𑍍𑌰𑌲𑌯𑌤𑌃) (ப்ரலயத:) = நாசத்திலிருந்தும்

परित्रातुं (𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌤𑍁𑌂) (பரித்ராதும்) = ரக்ஷிப்பதற்கு

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

दृशः (𑌦𑍃𑌶𑌃) (த்ருச:) = கண்கள்

परिहृतनिमेषाः (𑌪𑌰𑌿𑌹𑍃𑌤𑌨𑌿𑌮𑍇𑌷𑌾𑌃) (பரிஹ்ருதநிமேஷா:) = நிமேஷமில்லாமலே (இமைக் கொட்டில்லாமலே) இருக்கின்றதுகள் என்று

शङ्के (𑌶𑌙𑍍𑌕𑍇) (சங்கே) = எண்ணுகிறேன்.

தாத்பர்யம்:—நமது சாஸ்த்ரத்தில், அதிலும் வேதாந்தத்தில், த்ருஷ்டி ஸ்ருஷ்டி வாதம் என்று ஓர் ஸித்தாந்தம் உண்டு. இதுதான் பகவத்பாதாளுடைய ஸித்தாந்தமாகும். அதாவது, கண் திறக்கப்படும் பொழுது லோகம் காணப்படுகின்றது; கண் மூடினால் லோகம் காணப்படுவதில்லை. இது ஸகல ப்ராணி களுக்கும் அனுபவஸித்தமானது. இதனால் கண் திறக்கப்படும்பொழுது லோகத்திற்கு ஸ்ருஷ்டியும், கண் முடப்படும்பொழுது லோகத்திற்கு நாசமும் ஏற்படுவதேதான் த்ருஷ்டி ஸ்ருஷ்டி வாதத்தின் பொருளாகும். இதை ப்ராக்ருத ஜனங்களுடைய வ்யஷ்டியான த்ருஷ்டியில் ஸமன்வயப்படுத்த முடியா தென்று நினைத்து, ஸமஷ்டி த்ருஷ்டியான பரதேவ தையினுடைய த்ருஷ்டியில் பொருத்தமாகிறதென்று நினைத்து, தேவியினுடைய த்ருஷ்டியில் த்ருஷ்டி ஸ்ருஷ்டி வாதத்தை உபயோகப்படுத்தி, அம்பா ளுடைய த்ருஷ்டியின் மஹிமை, வாக்கிற்கும் மன திற்கும் எட்டாதது என்று வர்ணிக்கிறார்கள். "பர்வத ராஜனுடைய புத்ரி" என்று ஸம்போதனம் செய்து அம்பாளை ஆசார்யாள் அழைக்கின்றார். இதனால் "ஹே தாயே! நீ பர்வதராஜனுக்குப் பெண் என்ற வ்யாஜத்தால் உபதேசித்த ரஹஸ்யங்களில், இந்த த்ருஷ்டி ஸ்ருஷ்டி வாதமும் ஒரு தத்வமாக ஆகும். அதிலிருந்தும் நான் தெரிந்துகொண்டுதான் உன்னு டைய த்ருஷ்டியின் மஹிமையைச் சொல்கிறேனே தவிர, நானாக ஒன்றும் சொல்லவில்லை. உன்னுடைய நேத்ரங்களை நீ திறக்கும்பொழுது லோகம் உண்டா கிறது; மூடும்பொழுது லோகம் நசிக்கிறது. இத னால் லோகம் எப்பொழுதும் ஸௌபாக்யத்துடன் விளங்கவேண்டும் என்று நினைத்துத்தானே உன் கண்களை நீ மூடாமலே இருந்து வருகிறாய்" என்று பரமாசார்யாள் ஸ்தோத்ரம் செய்கிறார்கள். பொது வாகவே தேவதைகளுடைய கண்கள் எப்பொழுதும் திறந்துதான் இருக்கும். அதிலும் ஸகல தேவதை

களும் எந்த பரதேவதையினுடைய விபூதிகளோ அந்த பரதேவதையினுடைய த்ருஷ்டிக்கு நிமேஷம் (மூடுதல்) என்பது கிடையாது என்பது அனுபவ ஸித்தமல்லவா! இவ்விதம் தேவி தன் கண்களை இமைக்கொட்டாமலிருந்து வருவதும் ஜகத்தினுடைய ஸ்திதியின் பொருட்டுத்தான. ச்ருதிகளோ, ஜகத்தை, த்ருஷ்டி ஸ்ருஷ்டி வாதத்தை அனுஸரித்து, நச்வரம் எனறு சொல்லுகின்றன. தேவியினுடைய த்ருஷ்டி நிமேஷமில்லாதிருப்பதினுல், ச்ருதிகளால் போதிக்கப்பட்ட ஸித்தாந்தத்தையும் தேவி மாற்றுகிருளோ என்று தோன்றுகிறது தேவியின் த்ருஷ்டிக்கு நிமேஷம் ஏற்பட்டாலல்லவா ஜகத்திற்கு ப்ரளயமேற்படக் கூடும். ஜகத்தை நாசமாகாமல் ரக்ஷிக்க, மூனசொன்னபடி கண்களை மூடாமலே தேவி இருந்து வருவது அவளுடைய பரம கருணையை வெளிப்படுத்துகிறது. தேவியின் கண்கள் மூடப்பட்டால் இந்த லோகமே நசித்துவிடும் என்று அறிந்த மனிதன் அம்பாளை உபாஸிக்காமலிருக்க ந்யாயமில்லை இவ்விதம் தேவியினுடைய த்ருஷ்டிக்கு உன்மேஷ மாத்ரத்தால் ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டிக்கக்கூடிய சக்தியும், நிமேஷ மாத்ரத்தால் ஸம்ஹரிக்கக்கூடிய சக்தியும் இருக்குமேயாஞல் அந்த த்ருஷ்டியினுடைய மஹிமையை யாரால்தான் வர்ணிக்கமுடியும். எந்த பக்தனிடம் அந்த த்ருஷ்டியானது நிமேஷமில்லாமலே விழுகிறதோ, அவனுடைய ஸௌபாக்யமும் மேன்மேலும் வ்ருத்தியாகிக்கொண்டுதான் வரும் என்பதில் ஆக்ஷேபணையில்லை. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமாவளியிலும் उन्मेषनिमेषोत्पन्नविपन्नभुवनावली (உன்மேஷநிமேஷோத்பந்ந விபந்நபுவநாவளீ) (உங்மேஷநிமேஷோத்பங்ந விபங்நபுவனுவளீ) என்ற நாமாவினுல், அம்பாளுடைய த்ருஷ்டியின் மஹிமை வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. பரமாசார்யாளும் இங்கு அம்பாளுடைய த்ருஷ்டியை வர்

ணிப்பதிலும், இதே மூலமாகும். இவ்விதம் தேவி யின் த்ருஷ்டியின் மஹிமையைத் தெரிந்துகொண்டு தேவியை உபாஸிக்கிறவர்கள், ஸ்ருஷ்டி ஸம்ஹார சக்தியோடு கூடினவர்களாக ஆவார்கள்.

இந்த ச்லோகத்தால் சத்ருமாரண ப்ரயோகம் சொல்லப்படு கிறது : பீஜாக்ஷரம் 𑌸𑍍𑌲𑍂𑌂 (ஸ்லூம்) ஸுவர்ண யந்த்ரத்தில் எழுதி தரித்துக்கொள்ளவும். தினம் 25,000 வீதம் 5 தினம் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யவும்.

---

## 56. தேவியினுடைய கண்களின் ஸௌபாக்யமே இந்த ச்லோகத்தாலும் வர்ணிக்கப்படுகிறது

तवापर्णे कर्णेजपनयनपैशुन्यचकिता
निलीयन्ते तोये नियतमनिमेषाः शफरिकाः ।
इयं च श्रीर्बद्धच्छदपुटकवाटं कुवलयं
जहाति प्रत्यूषे निशि च विघटय्य प्रविशति ॥ ५६ ॥

𑌤𑌵𑌾𑌪𑌰𑍍𑌣𑍇 𑌕𑌰𑍍𑌣𑍇𑌜𑌪𑌨𑌯𑌨𑌪𑍈𑌶𑍁𑌨𑍍𑌯𑌚𑌕𑌿𑌤𑌾
𑌨𑌿𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍋𑌯𑍇 𑌨𑌿𑌯𑌤𑌮𑌨𑌿𑌮𑍇𑌷𑌾𑌃 𑌶𑌫𑌰𑌿𑌕𑌾𑌃 ।
𑌇𑌯𑌂 𑌚 𑌶𑍍𑌰𑍀𑌰𑍍𑌬𑌦𑍍𑌧𑌚𑍍𑌛𑌦𑌪𑍁𑌟𑌕𑌵𑌾𑌟𑌂 𑌕𑍁𑌵𑌲𑌯𑌂
𑌜𑌹𑌾𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍂𑌷𑍇 𑌨𑌿𑌶𑌿 𑌚 𑌵𑌿𑌘𑌟𑌯𑍍𑌯 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑌿
॥ ௫௬ ॥

தவாபர்ணே கர்ணேஜபநயநபைசுன்யசகிதா
நிலீயந்தே தோயே நியதமநிமேஷா: சபரிகா: ।
இயம் ச ஸ்ரீர்பத்தச்சதபுடகவாடம் குவலயம்
ஜஹாதி ப்ரத்யூஷே நிசி ச விகடய்ய ப்ரவிசதி ॥ 56 ॥

हे अपर्णे (𑌹𑍇 𑌅𑌪𑌰𑍍𑌣𑍇) (ஹே அபர்ணே) = ஹே பார்வதியே!

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

कर्णेजपनयनपैशुन्यचकिताः (𑌕𑌰𑍍𑌣𑍇𑌜𑌪𑌨𑌯𑌨𑌪𑍈𑌶𑍁𑌨𑍍𑌯𑌚𑌕𑌿𑌤𑌾𑌃) (கர்ணேஜபநயன பைசுன்யசகிதா:) = காதுகளுடைய ஸமீபம் சென்று ரஹஸ்யமாகக் கோழிச் சொல்லிக் கொடுக்கிற நேத்ரங்களினின்றும் பயத்தோடு கூடினதாயும்

अत एव (𑌅𑌤 𑌏𑌵) (அத ஏவ) = அக்காரணத்தால்

अनिमेषाः (𑌅𑌨𑌿𑌮𑍇𑌷𑌾𑌃) (அநிமேஷா:) = இமைக் கொட்டில்லாததாயுமிருக்கிற

शफरिकाः (𑌶𑌫𑌰𑌿𑌕𑌾𑌃) (சபரிகா:) = பெண் மீன்கள்

तोये (𑌤𑍋𑌯𑍇) (தோயே) = ஜலத்தில்

निलीयन्ते (𑌨𑌿𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇) (நிலீயந்தே) = மறைந்துகொள்கின்றது

नियतं (𑌨𑌿𑌯𑌤𑌂) (நியதம்) = நிச்சயந்தான்

इयं (𑌇𑌯𑌂) (இயம்) = இந்த

श्रीश्च (𑌶𑍍𑌰𑍀𑌶𑍍𑌚) (ஸ்ரீச்ச) = கண்களிலுள்ள லக்ஷ்மீ தேவியும்

बद्धच्छदपुटकवाटं (𑌬𑌦𑍍𑌧𑌚𑍍𑌛𑌦𑌪𑍁𑌟𑌕𑌵𑌾𑌟𑌂) (பத்தச்சதபுட கவாடம்) = தளங்களாகிய கதவுகளால் மூடப்பட்ட

कुवलयं (குவலயம்) = நீலோத்பல புஷ்பத்தை
(குவலயம்)

प्रत्यूषे (ப்ரத்யூஷே) = ப்ராதக்காலத்தில்
ப்ரத்யூஷே)

जहाति (ஜஹாதி) (ஜஹாதி) = விட்டுவிடுகிறது

निशि (நிஶி) (நிசி) = இரவில்

विघटय्य (விகடய்ய) = திறந்துகொண்டு
(விகடய்ய)

प्रविशतिच (ப்ரவிஶதிச) = ப்ரவேசிக்கவும் ப்ரவே
(ப்ரவிசதிச) சிக்கின்றது.

தாத்பர்யம் :—உத்தம ஸ்த்ரீகளுடைய கண்களுக்கு நீலோத்பல புஷ்பத்தையும், பெண் மீன்களையும் த்ருஷ்டாந்தமாகக் கவிகள் வர்ணிக்கின்ற வழக்க முண்டு. இதை அனுசரித்து ப்ராக்ருதத்தில் பரதேவ தையின் நேத்ர ஸௌபாக்யமானது மிகவும் மஹிமை தங்கியது என்று சொல்லப்படுகிறது. அதிலும் இந்த ச்லோகமானது, ஹாலாஸ்ய க்ஷேத்ரமென்னும் மதுரா புரிக்கு ஈச்வரியான ஸ்ரீ மீனாக்ஷீதேவியினிடம்தான் பொருத்தமாக அந்வயிக்கப்படும். அந்த க்ஷேத்ரத் தில், பரமசிவனுடைய சூலாயுதத்தால் பூமியில் குத் தப்பட்டு, அண்டகடாகத்திற்கு வெளியிலுள்ள பஞ்சீ கரணம் செய்யப்படாததான ஜலமானது மேல் கொப் பளித்து பரிபூர்ணமாக விளக்கிவரும் ஸ்வர்ண பத்மினீ என்ற புஷ்கரணியில் ஒரு மத்ஸ்யங்கூட காணப்படுவ தில்லை என்பது ஸர்வஜன ப்ரஸித்தமானது. முன் ச்லோகத்திலோ, ஜகதீச்வரியினுடைய கண்கள் மூடப்படாமல் திறந்தே இருந்துவருகிறதென்று சொல்லப்பட்டது கண்கள் மூடினால் லோகத்திற்கு ஸம்ஹாரம் ஏற்பட்டுவிடுமென்ற பயத்தால். ஜகத்தை ரக்ஷிப்பதற்கு, கண்களை மூடாமலே எப்பொழுதும்

தேவி தனது கண்களை திறந்துகொண்டே இருக்கி ருள். இது தேவர்களுக்கே ஸ்வபாவமானது. பெண்மீன்களும் கண்களை இமைக்கொட்டாமலிருந்து வரும். மீனுக்ஷீ பரதேவதையினுடைய கண்களில் இமைக்கொட்டில்லாமல் இருப்பதுபோல், பெண் மீன்களின் கண்களிலும் இமைக்கொட்டில்லாம லிருப்பது ரொம்பவும் அனுசிதம் என்றுமீனுக்ஷீ தேவியினுடைய கண்களுக்குத் தோன்றி, மீனுக்ஷிக்கு ஸமானமாக பெண் மீன்கள் எப்படிவரும் என்பதை, மீனுக்ஷியினிடம் ரஹஸ்யமாகச் சொல்லி, இப் பெண் மீன்களை ஸம்ஹரிக்கும்படிச் சொல்லவேண்டும் என்று ரஹஸ்யமாகக் கோழிச் சொல்லிக்கொடுப்ப தற்கு தேவியின் கண்கள் காதைத் தொட்டுக் கொண்டிருக்கின்றதுகளோ என்று தோன்றுகிறது. "நம்மைப்பபற்றித்தான் காதுகளில், நேத்ரங்கள் போய் கோழிச் சொல்லிக்கொடுக்கிறது" என்று பயந்து, மத்ஸ்யங்கள் எங்கு மீனுக்ஷி நம்மை ஸம்ஹரித்துவிடுவாளோ என்ற பயத்தால் ஜலத்திற்குள் அமுங்கி மேல்வராமலிருக்கின்றது களோ என்று தோன்றுகிறது. இதனுல்தான் முன் சொன்ன புஷ்கரணியில் ஒரு மத்ஸ்யங்கூட காணப் படுவதில்லை.

மத்ஸ்யங்களைப்போல், நீலோத்பல புஷ்பங்களும் மலர்ந்திருக்கும் காலங்களில் தேவியினுடைய நேத் ரங்களுடைய ஸௌபாக்யத்திற்கு ஸமானமான ஸௌபாக்யத்தோடு கூடியதாக விளங்குகிறது. இத ஞல், தேவியினுடைய நேத்ரங்களிலுள்ள லக்ஷ்மீ தேவியானவள் எங்கு தேவி "என் நேத்ரங்களை விட்டு, நீலோத்பல புஷ்பங்களிடம் எப்படிச் செல் வாய்" என்று தன்னை சிக்ஷிப்பளோ என்ற பயத்தால், தேவியினுடைய நேத்ரங்கள் விகஸித்திருக்குங்காலத் தில், நீலோத்பல புஷ்பத்தில் லக்ஷ்மீதேவியானவள் வஸிப்பதில்லை. பகலில் நீலோத்பல புஷ்பங்கள், மல

ராமல் மூடப்பட்ட தளங்களோடு கூடியதாக இருக்கும். தேவியினுடைய நேத்ரங்களோ பகலில் ஜகத்தை ரக்ஷிப்பதற்கு இமைக்கொட்டில்லாமலே மலர்ந்த புஷ்பம்போல் விகஸித்துவருகின்றன. இரவிலோ, தேவி அந்தப்புரத்தில் வஸிக்கிறவளானதினுல் லோகங்களும் ஸ்வகாரணத்தில் லயத்தை அடைந்திருக்கும் நிமித்தம் ரக்ஷிக்கவேண்டிய அவஸரமில்லாததினுல், யோக நித்திரையினுல் தேவியினுடைய கண்கள் மூடப்பட்டிருக்கும். நீலோத்பல புஷ்பங்களோ இரவில் மலர்ந்திருக்கும். இதை கவனிக்கும்பொழுது, தேவியினுடைய கண்கள் திறந்திருக்கும். பகலில் லக்ஷ்மீதேவியானவள் தேவியினுடைய நேத்ரங்களிலேயே வஸிக்கின்றபடியால், நீலோத்பல புஷ்பங்களாகிய லக்ஷ்மீதேவியினுடைய க்ருஹம் இதழ்களாகிய கதவுகளால் சாத்தப்பட்டு, முத்ரை வைத்திருப்பதுபோல் காணப்படுகிறது. இரவில் தேவி நித்ரையிலிருக்கும்பொழுது, :தேவியினுடைய நேத்ரங்களை லக்ஷ்மீதேவியானவள் விட்டு விட்டு, நீலோத்பல புஷ்பமாகிய க்ருஹத்திற்கு வந்து, இதழ்களாகிய கதவுகளைத் திறந்துகொண்டு உள்ளே ப்ரவேசித்திருக்கிருளோ என்று நினைக்கக்கூடியதாக இருக்கிறது. இதையும் தேவியினுடைய நேத்ரங்கள் தேவியினிடம், "ஹே பரதேவதையே! லக்ஷ்மீதேவியானவள் பகலில் தங்களுடைய நேத்ரங்களாகிய எங்களிடம் வஸித்துவிட்டு, இரவில் தங்களுக்குத் தெரியாமல், எங்களையும் வஞ்சித்துவிட்டு நீலோத்பல புஷ்பத்தில் வஸிக்கிருள். காலையில் தாங்கள் நித்ரையிலிருந்தும் ப்ரபோதத்தை அடைவதற்கு முன்பே, நீலோத்பல புஷ்பமாகிய க்ருஹத்தை இதழ்களால் எப்பொழுதுமே பூட்டியிருககும் க்ருஹம் போல் செய்துவிட்டு, எப்பொழுதும் தங்களுடைய நேத்ரமாகிய எங்களிடம் தான். வஸிப்பதுபோல் நடித்துத் தங்களை வஞ்சிக்கின்ருள். லக்ஷ்மீதேவியும் எங்களுக்கு சத்ருதான். ஆகையால் அவளையும் தாங்கள் சிக்ஷிக்க

வேண்டும்" என்று லக்ஷ்மீதேவியினிடத்திலும் தோஷத்தை, தேவியினிடம் காதோடு ரஹஸ்யமாகச் சொல்லுவதற்குத்தான் இரண்டு காதுகள்வரை இரண்டு நேத்ரங்களும் வ்யாபரித்திருக்கிறது. இத ஞல், தேவியினிடமிருந்து பெண் மத்ஸ்யங்கள் கண் களில் இமைக்கொட்டில்லாமலிருப்பதென்ற ஸௌபாக்யத்தையும்; நீலோத்பல புஷ்பங்கள் இர வில் விகஸிக்கும் சோபையையும் யாசித்து அடைந் திருக்குமன்னியில், ஸ்வயமாக அவைகளுக்கு இத்தன்மைகள் இல்லை என்பது ஸித்தமாகிறது. ஆகையால் கண்களில் இமைக்கொட்டில்லாமலிருக் கிறதென்ற பெருமையும், லக்ஷ்மீதேவியினுடைய வாஸ ஸ்தானம் என்ற கௌரவமும், தேவியி னுடைய நேத்ரங்களில்தான் ஏற்பட்டுவருமன்னியில், வேறு யாருக்கும் எவ்விதத்திலும் கிடையாது.

மேற்சொன்னபடி தேவியின் நேத்ர ஸௌபாக் யங்களை அறிந்து, தேவியை உபாஸிக்கின்றவர்கள் இரண்டு கண்களின் நிமேஷத்தால் ஏற்படக்கூடிய திமிர தோஷமோ, ஸம்ஹாரமோ, இவைகளில்லா மல் ஆகி, நித்ய ப்ரகாசத்துடன் கூடினவர்களாயும், அஷ்ட ஐச்வர்யத்திற்கு அதிதேவதையான மஹா லக்ஷ்மிக்குத் தான் இருக்கும் இடத்தை வாஸஸ்தான மாகச் செய்தவர்களாயும் ஆவார்கள் என்பது நிச்சயம்.

*இந்த ச்லோகத்தால் பந்த விமோசனத்திற்கு ப்ரயோகம் சொல்லப்படுகிறது. ஓங்காரத்திற்குள், ய், ய், ய் (யං, யං, யං) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி, 25, நாள் 2500 ஆவர்த்தி வீதம் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யவும். மத்ஸ்யத்தின் தந்தத்தில் பீஜாக்ஷரத்தை எழுதி தரித்துக்கொள்ளவும்.*

---

## 57. தேவியினுடைய கடாக்ஷ மஹிமையின் வர்ணனை.

दृशा द्राघीयस्या दरदलितनीलोत्पलरुचा
दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे ।
अनेनायं धन्यो भवति न च ते हानिरियता
वने वा हर्म्ये वा समकरनिपातो हिमकरः ॥ ५७ ॥

𑌦𑍃𑌶𑌾 𑌦𑍍𑌰𑌾𑌘𑍀𑌯𑌸𑍍𑌯𑌾 𑌦𑌰𑌦𑌲𑌿𑌤𑌨𑍀𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑌰𑍁𑌚𑌾
𑌦𑌵𑍀𑌯𑌾𑌂𑌸𑌂 𑌦𑍀𑌨𑌂 𑌸𑍍𑌨𑌪𑌯 𑌕𑍃𑌪𑌯𑌾 𑌮𑌾𑌮𑌪𑌿 𑌶𑌿𑌵𑍇 ।
𑌅𑌨𑍇𑌨𑌾𑌯𑌂 𑌧𑌨𑍍𑌯𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌨 𑌚 𑌤𑍇 𑌹𑌾𑌨𑌿𑌰𑌿𑌯𑌤𑌾
𑌵𑌨𑍇 𑌵𑌾 𑌹𑌰𑍍𑌮𑍍𑌯𑍇 𑌵𑌾 𑌸𑌮𑌕𑌰𑌨𑌿𑌪𑌾𑌤𑍋 𑌹𑌿𑌮𑌕𑌰𑌃
॥ ௫௭ ॥

*த்ருசா த்ராகீயஸ்யா தரதலிதநீலோத்பலருசா*
*தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி சிவே ।*
*அநேநாயம் தந்யோ பவதி ந ச தே ஹாநிரியதா*
*வநே வா ஹர்ம்யே வா ஸமகரநிபாதோ ஹிமகர: ॥ 57 ॥*

| | |
|---|---|
| हे शिवे (𑌹𑍇 𑌶𑌿𑌵𑍇) (ஹே சிவே) | = ஸமஸ்தமான மங்களத்தையும் கொடுக்கும் ஹே தாயே ! |
| दरदलितनीलोत्पलरुचा (𑌦𑌰𑌦𑌲𑌿𑌤𑌨𑍀𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑌰𑍁𑌚𑌾) (தரதலித நீலோத்பலருசா) | = கொஞ்சம் மலர்ந்த நீலோத்பல புஷ்பத்தின் சோபையைப்போலொத்த சோபையை உடைத்தானதாயும் |
| द्राघीयस्या (𑌦𑍍𑌰𑌾𑌘𑍀𑌯𑌸𑍍𑌯𑌾) (த்ராகீயஸ்யா) | = காதுவரை நீண்டதாயும் உள்ள |

दृशा (ஃரு௱) (த்ருசா) = கடாக்ஷத்தால்

दवीयांसं (ஃவீயாംஸം) (தவீயாம்ஸம்) = உன்னை பக்தி செய்யாமல் உனக்கு வெகு தூரத்திலிருக்கிறவனுயும்

दीनं (ஃநം) (தீனம்) = தரித்ரனுயுமுள்ள

मामपि (ஶாஶவி) (மாமபி) = என்னையும்

कृपया (கரூவயா) (க்ருபயா) = கருணையினுல்

स्नपय (ஸ்நவய) (ஸ்நபய) = ஸ்நானம் செய்துவை.

अयं (அயം) (அயம்) = இந்த அல்பமான நான்

अनेन (அநெந) (அநேந) = உன் கடாக்ஷத்தால்

धन्यः (யநூஃ) (தந்ய:) = தனவானுயும், புண்யவானுயும் ஆவேன்

इयता (உயதா) (இயதா) = இதனுல்

ते (தெ) (தே) = உனக்கு

हानिः (ஹாநிஃ) (ஹாநி:) = குறைவானது

न च (ந வ) (ந ச) = இல்லவேயில்லை.

हिमकरः (ஹிஶகரஃ) (ஹிமகர:) = சந்த்ரனுனவன்

वने वा (வநெ வா) (வநே வா) = காட்டிலோ,

हर्म्येवा (ஹஎ்யெவா) (ஹர்ம்யேவா) = திருமாளிகையிலோ,

समकरनिपातः (ஸஶகரநிவாதஃ) (ஸமகரநிபாத:) = தன் கிரணங்களை ஸமமாகவே வ்யாபரிக்கும்படி செய்கிறவனுக

भवति (ஸவதி) (பவதி) = ஆகின்ருன்.

தாத்பர்யம் :— தேவியினுடைய த்ருஷ்டியே, கொஞ்சம் மலர்ந்த நீலோத்பல புஷ்பம்போல் பாஸித்துவரும். காதுவரை நீண்டதாயும் விளங்கி வருகிறது. இவ்வித மஹிமை தங்கிய த்ருஷ்டியினுடைய கடாக்ஷபாதம் தன்னிடம் ஏற்பட வேண்டுமென்று ஆசார்யாள் ப்ரார்த்திக்கின்றார்கள். "ஹே தாயே! கருணையாகிய அம்ருதத்தால் நிறைந்த உன் கடாக்ஷத்தால் என்னையும் நீ ஸ்நானம் செய்துவைக்க வேண்டும். ப்ரும்மாதி தேவர்களும் உன்னை பக்தி செய்து, உன்னுடைய அருகிலேயே இருந்து வருகின்றார்கள். நானோ உன் பக்தி யாது என்பதே தெரியாதவன்; வெகுதூரத்திலும் இருந்துவருகிறேன். உன் அருகில் வருவதற்கும் எனக்கு யோக்யதையில்லை. நான் பரம தரித்ரன். உன் கடாக்ஷபாதம் என்னிடம் விழுந்தால் நான் மஹா தனிகனும் புண்யவானும் ஆகிவிடுவேன். அது நிச்சயந்தான். அதனால் உனக்கு யாதொரு குறைவும் வராது. 'நீ புண்யம் செய்யவில்லையே, என்னிடம் பக்தியுமில்லையே; உன்னை நான் எப்படி தன்யனாகச் செய்வது' என்று கேட்கக்கூடாது. புண்யம் செய்தவனோ பாபம் செய்தவனோ எல்லா ஜீவனும் உனக்கு ஸமமல்லவா. சந்த்ரனுடைய கிரணங்கள், காட்டிலும் வீட்டிலும் ஸமமாகத்தானே வ்யாபரிக்கின்றது. சந்த்ரனே காடு, வீடு என்ற விஷமபுத்தி இல்லாமல் தன் கிரணங்களை ஸமத்வபுத்தியோடு எங்கும் வ்யாபரிக்கச் செய்வானேயானால், லோகமாதாவான உனக்கு உன் குழந்தைகளிடம் பாபி, புண்யவான் என்ற தாரதம்யமில்லாமல் உன் கடாக்ஷத்தை செலுத்துவது உனக்கு அலங்காரமில்லையா? ஆகையால் என்னிடமுள்ள புண்ய பாபத்தை கவனிக்காமல் உன் கடாக்ஷாம்ருதத்தால் என்னை நனைத்துக்ருதார்த்தனாகச் செய்ய வேண்டும்" என்று பரமாசார்யாள் ப்ரார்த்திக்கின்றார்கள். தாயாருக்கு, குழந்தைகளிடமுள்ள குணதோஷங்களை விசாரித்து தாரதம்யத்தைப் பார்ப்பது

ஸ்வபாவமல்ல. ஸாமன்யமான ஸ்த்ரீகளுக்கே இவ்விதம் ஸ்வபாவமிருக்குமேயானால் ஸ்ரீமாதாவான பரதேவதையினிடம் இவ்விதமான ஸ்வபாவம் குடியிருந்து வருவதற்குக் கேட்கவும் வேண்டுமா! இவ்விதமான பாவனையோடு தேவியைப் பூஜிக்கிறவர்கள் தேவீ கடாக்ஷத்தால் பரிசுத்தர்களாக ஆகி, மஹா புண்யவான்களாயும், தனிகர்களாகவும் ஆவார்கள் என்பது ஸித்தமாகிறது.

ஸகல ஸௌபாக்யங்களும் உண்டாகும். பீஜாக்ஷரம் ह्रीं, ह्रीं (ஹ்ரீம், ஹ்ரீம்) தினம் 25000 வீதம் 6 நாள் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யவும். ஸ்வர்ண யந்த்ரம்.

---

## 58. தேவியினுடைய பாளியின் வர்ணனை.

अरालं ते पालीयुगलमगराजन्यतनये
न केषामाधत्ते कुसुमशरकोदण्डकुतुकम् ।
तिरश्चीनो यत्र श्रवणपथमुल्लङ्घ्य विलस
न्नपाङ्गव्यासङ्गो दिशति शरसंधानधिषणाम् ॥ ५८ ॥

𑌅𑌰𑌾𑌲𑌂 𑌤𑍇 𑌪𑌾𑌲𑍀𑌯𑍁𑌗𑌲𑌮𑌗𑌰𑌾𑌜𑌨𑍍𑌯𑌤𑌨𑌯𑍇
𑌨 𑌕𑍇𑌷𑌾𑌮𑌾𑌧𑌤𑍍𑌤𑍇 𑌕𑍁𑌸𑍁𑌮𑌶𑌰𑌕𑍋𑌦𑌣𑍍𑌡𑌕𑍁𑌤𑍁𑌕𑌮𑍍।
𑌤𑌿𑌰𑌶𑍍𑌚𑍀𑌨𑍋 𑌯𑌤𑍍𑌰 𑌶𑍍𑌰𑌵𑌣𑌪𑌥𑌮𑍁𑌲𑍍𑌲𑌙𑍍𑌘𑍍𑌯 𑌵𑌿𑌲𑌸-
𑌨𑍍𑌨𑌪𑌾𑌙𑍍𑌗𑌵𑍍𑌯𑌾𑌸𑌙𑍍𑌗𑍋 𑌦𑌿𑌶𑌤𑌿 𑌶𑌰𑌸𑌂𑌧𑌾𑌨𑌧𑌿𑌷𑌣𑌾𑌮𑍍
॥ ௫௮ ॥

அராலம் தே பாளீயுகளமகராஜந்யதநயே
ந கேஷாமாதத்தே குஸுமசரகோதண்டகுதுகம் ।
திரச்சீநோ யத்ர ச்ரவணபதமுல்லங்க்ய விலஸ-
ந்நபாங்கவ்யாஸங்கோ திசதி சரஸம்தாநதிஷணாம் ॥58॥

हे अगराजन्यतनये (𑌹𑍇 𑌅𑌗𑌰𑌾𑌜𑌨𑍍𑌯𑌤𑌨𑌯𑍇) (ஹே அகராஜந்யதநயே) = பர்வத ராஜனுடைய புத்திரியான ஹே பரதேவதையே !

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

अरालं (𑌅𑌰𑌾𑌲𑌂) (அராலம்) = வளைவாக இருக்கும்

पालीयुगलं (𑌪𑌾𑌲𑍀𑌯𑍁𑌗𑌲𑌂) (பாளீயுகளம்) = காதுகளுக்கும் கண்களுக்கும் நடுவிலுள்ள ப்ரதேசமானது

कुसुमशरकोदण्डकुतुकं (𑌕𑍁𑌸𑍁𑌮𑌶𑌰𑌕𑍋𑌦𑌣𑍍𑌡𑌕𑍁𑌤𑍁𑌕𑌂) (குஸுமசரகோதண்டகுதுகம்) = மன்மதனுடைய வில்லின் ஸௌந்தர்யத்தை

केषां (𑌕𑍇𑌷𑌾𑌂) (கேஷாம்) = எவர்களுக்குத்தான்

न आधत्ते (𑌨 𑌆𑌧𑌤𑍍𑌤𑍇) (ந ஆதத்தே) = உண்டுபண்ணுது (எல்லா ஜனங்களுக்கும் இவ்விதமான ப்ராந்தியை உண்டு பண்ணும்)

यस्मात् (𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍) (யஸ்மாத்) = யாதொரு காரணத்தால்

यत्र (𑌯𑌤𑍍𑌰) (யத்ர) = எந்த பாளீ (காதிற்கும் கண்ணுக்கும் நடுவில் வளைவாக இருக்கும்) என்ற ப்ரதேசத்தில்

तिरश्चीन: (𑌤𑌿𑌰𑌶𑍍𑌚𑍀𑌨𑌃) (திரச்சீந:) = குறுக்காய் திரும்பி ப்ரகாசிக்கின்ற

अपाङ्गव्यासङ्गः (ஃவாஜ்ஙவ்யா ஸஜ்ஃ) (அபாங்கவ்யா ஸங்க:) = கடைக்கண் பார்வை யானது

श्रवणपथं (ஶ்ரவணவதம்) (ச்ரவணபதம்) = காதுகளின் வழியையும்

उल्लङ्घ्य (உல்லங்க்ய) (உல்லங்க்ய) = தாண்டி

विलसन् (விலஸந்) (விலஸங்) = ப்ரகாசிக்கின்ற தாய்க் கொண்டு

शरसन्धानधिषणां (ஶரஸந்தாநதிஷணாம்) (சரஸந்தாந திஷணும்) = மன்மதன் பாணப்ரயோகம் செய்கிறுன் என்ற புத்தியை

दिशति (திஶதி) (திசதி) = கொடுக்கின்றதோ!

தாத்பர்யம்:—அம்பாளுடைய, கண்களுக்கும் காதுகளுக்கும் நடுவில் வளைவாக காணப்படும் ப்ரதேசமானது பாளீ என்று சொல்லப்படும். உத்தம ஸ்த்ரீகளிடம் இவ்விதம் வளைவாகவும் ஸூக்ஷ்மமான கேசங்களால் அலங்கரிக்கப்பட்டதாகவும் காணப்படும். இவ்விதமே தேவியினிடத்திலும், இந்த ப்ரதேசம் மிகவும் அழகு தங்கியதாகவும், வளைவாகவும் காணப்படுகின்றது. இதைப் பார்க்கும்பொழுது மன்மதனுடைய வில்லோ என்ற சங்கையை எல்லா ஜனங்களும் அடைந்தே ஆகவேண்டும் தேவியினுடைய கடைக்கண் பார்வையானது குறுக்காக (பார்ச்வத்தில் திருப்பப்பட்டதாக) இருக்கும்பொழுது காதையும் அதிக்ரமித்து தீர்க்கமாக இருப்பதினுலும், அப்பார்வையானது வளைவான பாளீ என்ற ப்ரதேசத்தின் நடுவில் ஸம்பந்தப்பட்டிருப்பதினுலும், மன்மதன்தான் வில்லில் பாணத்தைத் தொடுக்கின்ருனே என்ற ஸந்தே

ஹத்தையும் உண்டுபண்ணுகிறது. பாளீ என்ற ப்ர தேசமும், தேவியினுடைய குறுக்கான கடைக்கண் பார்வையும் மன்மதனை எரித்த பரமேச்வரனுக்கும் காமபாரவச்யத்தை உண்டுபண்ணுகிறபடியால், பாளீ என்ற ப்ரதேசம் மன்மதனுடைய வில்லாகவும்; கடைக்கண் பார்வை பாணமாகவும் உத்ப்ரேக்ஷை செய்யப்படுகின்றன. இவ்விதம் தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிற புண்ய ஜனங்கள் மோக்ஷத்திற்கு விரோதியான காமனையும் ஜயித்து முக்தி ஸ்ரீயை கைகொள்ளலாம்.

*ரோகநிவர்த்திக்கும், ஸர்வஜன வச்யத்திற்கும் ப்ரயோகம் சொல்லப்படுகிறது. சந்த்ரமுருகில் (சந்த்ரகாந்தக் கல்லில்) எழுதி தரித்துக் கொள்ளவும். தினம் ஐந்து பணம் வரும்படி வரும். ஸ்த்ரீகளானல் சிகப்புக்கல இழைத்த நத்தில் எழுதி மூக்கில் தரித்துக் கொள்ளவும். ஷட்கோண யந்த்ரம். நடுவில் ஸ்ரீம் (ஸ்ரீம்) என்ற பீஜாக்ஷரம். ஆறுமூலைகளிலும் க்லீம் (க்லீம்) என்ற பீஜாக்ஷரம்.*

---

## 59. தேவியின் முக ஸௌந்தர்ய வர்ணனை

स्फुरद्गण्डाभोगप्रतिफलितताटङ्कयुगलं
चतुश्चक्रं मन्ये तव मुखमिदं मन्मथरथम् ।
यमारुह्य द्रुह्यत्यवनिरथमर्केन्दुचरणं
महावीरो मारः प्रमथपतये सज्जितवते ॥ ५९ ॥

𑌸𑍍𑌫𑍁𑌰𑌦𑍍𑌗𑌣𑍍𑌡𑌾𑌭𑍋𑌗𑌪𑍍𑌰𑌤𑌿𑌫𑌲𑌿𑌤𑌤𑌾𑌟𑌙𑍍𑌕𑌯𑍁𑌗𑌲𑌂
𑌚𑌤𑍁𑌶𑍍𑌚𑌕𑍍𑌰𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌤𑌵 𑌮𑍁𑌖𑌮𑌿𑌦𑌂 𑌮𑌨𑍍𑌮𑌥𑌰𑌥𑌮𑍍 ।
𑌯𑌮𑌾𑌰𑍁𑌹𑍍𑌯 𑌦𑍍𑌰𑍁𑌹𑍍𑌯𑌤𑍍𑌯𑌵𑌨𑌿𑌰𑌥𑌮𑌰𑍍𑌕𑍇𑌨𑍍𑌦𑍁𑌚𑌰𑌣𑌂
𑌮𑌹𑌾𑌵𑍀𑌰𑍋 𑌮𑌾𑌰𑌃 𑌪𑍍𑌰𑌮𑌥𑌪𑌤𑌯𑍇 𑌸𑌜𑍍𑌜𑌿𑌤𑌵𑌤𑍇
॥ ௫௯ ॥

ஸ்புரத்கண்டாபோகப்ரதிபலிததாடங்கயுகலம்
சதுச்சக்ரம் மந்யே தவ முகமிதம் மன்மதரதம் ।
யமாருஹ்ய த்ருஹ்யத்யவநிரதமர்கேந்துசரணம்
மஹாவீரோ மார: ப்ரமதபதயே ஸஜ்ஜிதவதே ॥ 59 ॥

हे भगवति (ஹே ஹமவதி) (ஹே பகவதி) = ஹே பரதேவதையே !

तव (தவ) (தவ) = உன்னுடைய

स्फुरद्गण्डाभोगप्रतिफलिततटङ्कयुगलं (ஸ்ஃபுரத்கண்டாஹோம ப்ரதிஃபலிததாடங்க யுகமும்) (ஸ்புரத் கண்டாபோகப்ரதி பலிததாடங்கயுகலம்) = கண்ணாடிபோல் நிர்மலமாய் ப்ரகாசிக்கின்ற கன்ன ப்ரதேசத்தில் ப்ரதிபலித்த தாடங்கங்களோடு கூடினதான (ஸ்ரீசக்ரரூபமான வைரத் தோடோடு கூடினதான)

मुखं (முவம்) (முகம்) = முகத்தை

इदं (உதம்) (இதம்) = மனதில் நினைக்கப்படும்

चतुश्चक्रं (சதுஸ்சக்ரம்) (சதுச்சக்ரம்) = நான்கு சக்ரங்களுடன் கூடின

मन्मथरथं (மந்மதரதம்) (மன்மதரதம்) = காமனுடைய ரதமாக

मन्ये (மந்யே) (மங்யே) = எண்ணுகிறேன்.

यम् (யம்) (யம்) = எந்த நான்கு சக்ரத்தோடு கூடின ரதத்தில்

आरुह्य (ஆருஹ்ய)(ஆருஹ்ய) = ஏறிக்கொண்டு

मारः (மார:) (மார:) = மன்மதன்

महावीरःसन् (𑌮𑌹𑌾𑌵𑍀𑌰𑌃𑌸𑌨𑍍) (மஹாவீர:ஸந்) = மஹாபராக்ரமசாலியாக இருந்துகொண்டு

अर्केन्दुचरणं (𑌅𑌰𑍍𑌕𑍇𑌨𑍍𑌦𑍁𑌚𑌰𑌣𑌂) (அர்கேந்து சரணம்) = ஸூர்யனேயும் சந்த்ரனேயும் சக்ரமாக உடைத்தான

अवनिरथं (𑌅𑌵𑌨𑌿𑌰𑌥𑌂) (அவநிரதம்) = பூமியாகிய ரதத்தில்

आरुह्य (𑌆𑌰𑍁𑌹𑍍𑌯) (ஆருஹ்ய) = ஏறிக்கொண்டு

सजितवते (𑌸𑌜𑍍𑌜𑌿𑌤𑌵𑌤𑍇) (ஸஜ்ஜிதவதே) யுத்தஸந்நாஹம் செய்கிற

प्रमथपतये (𑌪𑍍𑌰𑌮𑌥𑌪𑌤𑌯𑍇) (ப்ரமதபதயே) = த்ரிபுரஸம்ஹாரம் செய்த பரமேச்வரனின் பொருட்டு

द्रुह्यति (𑌦𑍍𑌰𑍁𑌹𑍍𑌯𑌤𑌿) (த்ருஹ்யதி) = எதிர்த்து யுத்தம் செய்கிருனே!

தாத்பர்யம் :—தேவீயினுடைய முகமானது, மன்மதனுடைய ரதமோ என்று வர்ணிக்கப்படுகிறது. அதிலும் நான்கு சக்ரமுள்ள ரதமாக உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. தேவீயினுடைய இரு காதுகளிலும் சோபிக்கின்ற ஸ்ரீ சக்ரரூபமான ரத்ன தாடங்கங்கள் இரண்டு சக்ரங்களாகவும், இந்த இரண்டு தாடங்கங்களும் அதிநிர்மலமான தேவீயின் கன்ன ப்ரதேசங்களில் ப்ரதிபலிக்கின்றபடியால், ப்ரதிபலித்த தாடங்கங்கள் இரண்டு சக்ரங்களாகவும், இவ்விதம் பிம்பபூதமான இரண்டு தாடங்கங்கள், ப்ரதிபிம்பபூதமான இரண்டு தாடங்கங்கள் ஆக நான்கு தாடங்கங்களும் தேவீயினுடைய முகமாகிய மன்மத ரதத்திற்கு நான்கு சக்ரங்களாக் உத்ப்ரேக்ஷை செய்யப்படு

கின்றன. ஆனால் மன்மதன் மஹாபராக்ரமத்துடன் நான்கு சக்ரங்களுள்ள ரதத்தில் ஆரோஹணம் செய்துகொண்டு, த்ரிபுராஸுரனைக் கொன்ற பரமேச்வரனோடுகூட போர் செய்ய யத்னம் செய்கிறான். பரமேச்வரனுக்கோ, இரண்டு சக்கரமுள்ள ரதந்தான் ஏற்பட்டிருக்கிறது. த்ரிபுர ஸம்ஹார சரித்ரத்தில், பூமி ரதமாகவும், சந்த்ரன் ஸூர்யன் இவ்விருவர்களும் சக்ரங்களாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் இரண்டு சக்ரமுள்ள ரதத்தில் ஏறிக்கொண்டு த்ரிபுராஸுரனை ஜயித்த பரமேச்வரன்கூட நாலு சக்ரமுள்ள ரதத்தில் ஏறிக்கொண்டு மன்மதன் எதிர்த்துப் போர் செய்ய வரும்பொழுது, 'பரமேச்வரனுடைய ரதத்திலேயே இரண்டு சக்ரங்கள் தானே உள்ளன. மன்மதனுடைய ரதத்தில் நான்கு சக்ரங்களிருக்கின்றதே, ஆகையால் பரமேச்வரனைக் காட்டிலும் மன்மதன் மஹா வீரனோ' என்று நினைக்கக்கூடியதாகவும் இருக்கிறது. இவ்விதம் தேவியினுடைய கடாக்ஷ மஹிமையினால் பரமேச்வரனையும் ஜயிக்கக்கூடிய சக்தியுள்ளவனாக மன்மதன் ஆகிறான். இதனால் தேவியினுடைய ஸ்வரூபத்தை மேற்கண்டபடி த்யானம் செய்கிறவர்கள், ஸர்வலோகத்தையும் வசமாக்கிக்கொள்ளலாம் என்பது ஸித்தமாகிறது.

ஸ்த்ரீவச்யம். பீஜாக்ஷரம் ஐம், க்லீம், ஸௌ:(ஐம், க்லீம், ஸௌ:) மஞ்சளில் எழுதி, தினம் 25000 வீதம் 3 தினங்கள் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும். ஸ்வர்ண யந்த்ரத்தில் எழுதி தரித்துக்கொள்ள விசேஷம்.

---

## 60. தேவியின் வாங்மாதுர்ய வர்ணனை

सरस्वत्याः सूक्तीरमृतलहरीकौशलहरीः
पिबन्त्याः शर्वाणि श्रवणचुलुकाभ्यामविरलम् ।
चमत्कारश्लाघाचलितशिरसः कुण्डलगणो
झणत्कारैस्तारैः प्रतिवचनमाचष्ट इव ते ॥ ६० ॥

𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍍𑌯𑌾𑌃 𑌸𑍂𑌕𑍍𑌤𑍀𑌰𑌮𑍃𑌤𑌲𑌹𑌰𑍀𑌕𑍌𑌶𑌲𑌹𑌰𑍀𑌃
𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌃 𑌶𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌶𑍍𑌰𑌵𑌣𑌚𑍁𑌲𑍁𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑌵𑌿𑌰𑌲𑌮𑍍 ।
𑌚𑌮𑌤𑍍𑌕𑌾𑌰𑌶𑍍𑌲𑌾𑌘𑌾𑌚𑌲𑌿𑌤𑌶𑌿𑌰𑌸𑌃 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌗𑌣𑍋
𑌝𑌣𑌤𑍍𑌕𑌾𑌰𑍈𑌸𑍍𑌤𑌾𑌰𑍈𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌚𑌨𑌮𑌾𑌚𑌷𑍍𑌟 𑌇𑌵 𑌤𑍇 ॥ ௬௰ ॥

ஸரஸ்வத்யா: ஸூக்தீரம்ருதலஹரீகௌசலஹரீ:
பிபந்த்யா: சர்வாணி ச்ரவணசுலுகாப்யாமவிரலம் ।
சமத்காரச்லாகாசலிதசிரஸ: குண்டலகணோ
ஜணத்காரைஸ்தாரை: ப்ரதிவசநமாசஷ்ட இவ தே. ॥ 60 ॥

| | |
|---|---|
| हे शर्वाणि (𑌹𑍇 𑌶𑌰𑍍𑌵𑌾𑌣𑌿) (ஹே சர்வாணி) | = ஹே பரமேச்வரனுடைய பத்னியான தாயே ! |
| अमृतलहरीकौशलहरीः (𑌅𑌮𑍃𑌤𑌲𑌹𑌰𑍀𑌕𑍌𑌶𑌲𑌹𑌰𑍀𑌃) (அம்ருதலஹரீகௌசலஹரீ:) | = அம்ருத ப்ரவாஹத்தின் ஸாமர்த்தியத்தை அபஹரிக்கிறதான |
| ते (𑌤𑍇) (தே) | = உன்னுடைய |

सूक्ती: (ஸூக்தீ:) (ஸூக்தி:) = மதுரமான வார்த்தைகளை

श्रवणचुलुकाभ्यां (ஶ்ரவண சுலுகாப்யாம்) (ச்ரவணசுலுகாப்யாம்) = கர்ணபுடங்களால்

अविरलं (அவிரலம்) (அவிரலம்) = இடைவிடாமல்

पिबन्त्या: (பிபந்த்யா:) (பிபந்த்யா:) = பானம்செய்கிறவளாயும்

चमत्कारश्लाघाचलितशिरस: (சமத்காரஶ்லாகாசலித ஶிரஸ:) (சமத்கார ச்லாகாசலிதசிரஸ:) = பரம ஆச்சர்யத்தால் அனுமோதனம் செய்யும் காலத்தில் ஏற்படும் தலையின் ஆட்டத்தை உடைத்தான

सरस्वत्या: (ஸரஸ்வத்யா:) (ஸரஸ்வத்யா:) = ஸரஸ்வதீ தேவியினுடைய

कुण्डलगण: (குண்டலகண:) (குண்டலகண:) = கர்ணகுண்டலங்கள்

तारै: (தாரை:) (தாரை:) = த்ருடமான

झणत्कारै: (ஜணத்காரை:) (ஜணத்காரை:) = சப்தங்களால்

प्रतिवचनं (ப்ரதிவசநம்) (ப்ரதிவசநம்) = அனுமோதன வார்த்தையை

आचष्ट इव (ஆசஷ்ட இவ) (ஆசஷ்ட இவ) = சொல்லுவதுபோல்

भवति (பவதி) (பவதி) = ஆகின்றது.

தாத்பர்யம் :—தேவியினுடைய வாங்மாதுர்ய மானது அம்ருதப்ரவாஹம்போல் மிகவும் குளிர்ச்சி யாகவும் மதுரமாகவும் இருந்துவருகிறது. தேவியி னுடைய வாக்காகிய அம்ருதத்தைப் பானம் செய்வ தற்காக, ஸரஸ்வதீதேவி தான் வாசிக்கும் வீணையைக் கூட நிறுத்திவிட்டு, தொன்னையைப்போலுள்ள தன் இரண்டு காதுகளாலும் இடைவிடாமல், அந்த அம்ருதத்தைப் பானம் செய்துவருகிருள். இந்த ஸந்தர்ப்பத்தில் தேவியினுடைய வார்த்தைகள் வெகு அர்த்தங்களை ப்ரகாசப்படுத்துகின்றதாயும், நவரஸங் களால் கர்ப்பிதமாயும் இருந்துவருங் காரணத்தால், ஸரஸ்வதீ தேவியானவள் மிகவும் ஆச்சர்யமடைந்து தேவியினுடைய வாக் சமத்காரங்களை மகிழ்ந்து பேச வேண்டுமென்ற எண்ணத்துடன், மஹா ஸபையில் தனது வார்த்தையினுல் காலத்தை வீணுக்கக்கூடா தென்று எண்ணி, சிரக்கம்பனம் (தலையின் அசைவு) மாத்ரம் செய்தாள். ஸரஸ்வதீ தேவியானவள் தலையை ஆட்டும்பொழுது, ஸரஸ்வதீதேவியினுடைய காதுகளில் விளங்கிவரும் கர்ண குண்டலங்களில் அலங்கரிக்கப்பட்டுள்ள தங்கமயமாயும் ஸூக்ஷ்மமாயு முள்ள சலங்கைகள் ஜணத்கார சப்தங்களைச் செய் கின்றன. இதை கவனிக்கும்பொழுது, பரதேவதை யினுடைய வாக்கிற்கு பதில் சொல்கிறதோ என்று நினைக்கக்கூடியதாக இருக்கிறது. வீணு கானத்தால் ஸகல தேவர்களையும்கூட மோஹிக்கக்கூடிய சக்தி யுள்ள ஸரஸ்வதீதேவியானவள், தான் வீணை வாசிப் பதையும் நிறுத்திவிட்டு, பரதேவதையினுடைய வாக் கானது வீணையைக்காட்டிலும் அதிக மதுரமாக இருப்பதினுல் தேவியின் வார்த்தைகளில் வ்யாமோஹத்தை அடைந்துவிட்டாள். வாக்கு களுக்கு அதிதேவதையான ஸரஸ்வதீதேவியே பர தேவதையினுடைய வாக்கில் இவ்விதம் வ்யா மோஹத்தை அடைந்தாளேயானுல், அந்த பரதேவ தையினுடைய வாக்கின் மாதுர்யத்தை யாரால்தான்

வர்ணிக்கமுடியும்? க்ரந்தகர்த்தாவான பரமாசார்யாள் தேவியினுடைய ப்ரத்யக்ஷ தர்சனத்தை அடைந்த மஹா பாக்யவானானதினால், மஹா ஸபையில், தர்பாரில் தேவியானவள் திவ்ய ஸிம்ஹாஸனாரூடையாக இருந்துகொண்டு தத்வோபதேசம் செய்து வரும் காலத்தில் தான் அனுபவித்துவந்த விஷயத்தை இந்த ச்லோகத்தால் வெளிபடுத்துகிறார்கள். அத்துடன், அல்ப பாக்யவானான மனிதர்களுக்கு தேவியினுடைய தர்சனத்திற்கு அர்ஹமான மஹா பாக்யம் ஏற்படாமற்போனாலும், தேவி ஸஞ்சாரம் செய்யும் இடங்களில் அதிமதுரமான ஜணத்கார சப்தங்கள் கேட்குமானதினால், அந்த ஸ்தலத்தில் தேவி பரிபூர்ணமான ஸாந்நித்யத்துடன் இருந்துவருகிறாள் என்பதை அறிந்து உபாஸிக்கவேண்டும். இவ்விதம் தேவியினுடைய ஸ்வரூபத்தை உபாஸிக்கிறவர்கள், மதுரமாயும், பரமார்த்தமான தத்வங்களை ப்ரகாசப்படுத்துகின்றதாயும் உள்ள வாக்விலாஸங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களாக ஆவார்கள். ஊமைகளையும் வித்வான்களாகச் செய்யும் வல்லமை உள்ளது என்றதை இந்த ச்லோகத்தில் சொன்ன உபாஸனத்தால் அறியவும்.

ஸ்வர்ண யந்த்ரத்தில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு நடுவில் ஹ்ரீ (ஹ்ரீம்) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி பூஜிக்கவும். 45 தினங்கள், தினம் 25,000 வீதம் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும். பிறகு யந்த்ரத்தை தரித்துக்கொள்ளவும். ஸகல வித்யா பாரங்கதனாகுவான்—வாக் பலிக்கும்.

---

## 61. தேவியினுடைய நாஸிகையின் வர்ணனை.

असौ नासावंशस्तुहिनगिरिवंशध्वजपटि
त्वदीयो नेदीयः फलतु फलमस्माकमुचितम् ।
वहत्यन्तर्मुक्ताः शिशिरकरनिश्वासगलितं
समृद्ध्या यस्तासां बहिरपि स मुक्तामणिधरः ॥ ६१ ॥

അസൌ നാസാവംശസ്തുഹിനഗിരിവംശധ്വജപടി
ത്വദീയോ നേദീയഃ ഫലതു ഫലമസ്മാകമുചിതം ।
വഹത്യന്തർമുക്താഃ ശിശിരകരനിശ്വാസഗലിതം
സമൃദ്ധ്യാ യസ്താസാം ബഹിരപി സ മുക്താമണിധരഃ
॥ ൬൧ ॥

அஸௌ நாஸாவம்சஸ்துஹிநகிரிவம்சத்வஜபடி
த்வதீயோ நேதீய: பலது பலமஸ்மாகமுசிதம் ।
வஹத்யந்தர்முக்தா: சிசிரகரநிச்வாஸகலிதம்
ஸம்ருத்யா யஸ்தாஸாம் பஹிரபி ஸ முக்தாமணிதர:
॥ 61 ॥

हे तुहिनगिरिवंशध्वजपटि (ഹേ തുഹിനഗിരിവംശധ്വജപടി) (ஹே துஹிநகிரிவம்சத்வஜபடி) = பர்வதராஜனான ஹிமாசலத்தினுடைய வம்சத்திற்கு, த்வஜபடம்போல் விளங்கும் தாயே!

यः (യഃ) (ய:) = யாதொரு நாஸிகையாகிய மூங்கில் தண்டானது

अन्तः (അന്തഃ) (அந்த:) = உள்ளுக்குள்

मुक्ता: (ಶ¬க்தா:) (முக்தா:) = முத்துக்களை

वहति (வஹதி) (வஹதி) = வஹிக்கின்றதோ

तासां (தாஸாம்) (தாஸாம்) = அந்த முத்துக்களுடைய

समृद्धया (ஸம்ருத்த்யா) (ஸம்ருத்யா) = ஆதிக்யத்தால்

शिशिरकरनिश्वासगलितं (ஶிஶிர கரநிஶ்வாஸ கலிதம்) (சிசிர கரநிச்வாஸ கலிதம்) = சந்த்ரநாடி என்ற இடது பக்கத்திலுள்ள பிங்களா நாடியின் மார்க்கமாக வருகிற வாயுவினல் கொண்டுவரப்பட்ட முத்துக்களை

बहिरपि (பஹிரபி) (பஹிரபி) = வெளியிலேயும்

वहति (வஹதி) (வஹதி) = வஹிக்கின்றதோ

स: (ஸ:) (ஸ:) = அப்படிப்பட்டதாயும்

मुक्तामणिधर: (முக்தாமணிதர:) (முக்தாமணிதர:) = முத்துமணியை தரிக்கிற தாயுமுள்ள

असौ (அஸௌ) (அஸௌ) = இந்த

त्वदीय: (த்வதீய:) (த்வதிய:) = உன்னுடைய

नासावंश: (நாஸாவம்ஶ:) (நாஸாவம்ச:) = மூங்கிலைப்போலிருக்கிற மூக்கானது

अस्माकं (அஸ்மாகம்) (அஸ்மாகம்) = எங்களுக்கு

उचितं (உசிதம்) (உசிதம்) = அர்ஹமாயும்

नेदीय: (நெதீயঃ) (நேதீய:) = சீக்கிரம் கிடைக்கக்கூடிய தாயும் இருக்கிற.

फलं (ஃலம்) (பலம்) = ப்ரயோசனத்தை

फलतु (ஃலது) (பலது) = உண்டுபண்ணட்டும்.

தாத்பர்யம்:—தேவியினுடைய நாஸிகையோ (மூக்கோ), வம்சதண்டம் (மூங்கில்) போல் அடி பெருத்து நுனி சிறுத்ததாக இருந்து வருகிறது. மூங்கில்களில் நல்முத்துக்கள் விளைவதாக சாஸ்த்ரத்தின் மர்யாதையும், லோகானுபவமும். மூங்கில்களுடைய கணுவின் உள் பாகத்தில் படும் மழை ஜலத்தின் துளிகள் முத்துக்களாக ஆகின்றன. மூங்கிலைப்போல் அம்பாளுடைய நாஸிகையையும் வர்ணிப்பதினால், அம்பாளுடைய மூக்கின் உள் பாகத்திலும் நல்முத்துகள் அதிகமாக இருந்து வருகின்றதென்று தோன்றுகிறது. மூக்கினுடைய இடது பாகத்தில் விலைமதிக்க முடியாததான ஒரு நல்முத்து விளங்கி வருகிறது. இதைக் கவனிக்கும்பொழுது அம்பிகையினுடைய நாஸிகை என்ற வம்சதண்டத்திற்குள் முத்துக்கள் நிரம்பிவிட்டபடியால், மூக்கினுடைய இடதுபாகத்தில் சந்த்ரநாடி என்ற பிங்களா நாடி வழியாக வெளிவரும் காற்றானது ஒரு முத்தை வெளியில் தள்ளிக்கொண்டு வந்த காரணத்தால், மூக்கின் இடது பாகத்தில் அந்த முத்து ஒட்டிக் கொண்டிருக்கிறதோ என்று, மூக்கின் இடது பாகத்தில் அலங்கரிக்கப்பட்டுவரும் நல்முத்து மூக்குத்தியைப் பார்த்து உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. லோகத்திலுள்ள வமசதண்டங்களிலும், உள்பாகத்தில் முத்துக்கள் நிறைந்துவிட்டால், வாயுவினால் அவைகள் வெளியில் கொண்டுவரப்பட்டு, மூங்கிலின் வெளி பாகத்தில் ஒட்டிக்கொண்டிருக்கும் வழக்கமுண்டு

இதுபோலவே, அம்பாளுடைய மூக்கை கவனிக்கும்பொழுதும் தோன்றுகிறது. அவ்விதமான தேவியினுடைய நாஸாவம்சதண்டமானது பக்த ஜனமான தங்களுக்கு உசிதமான பலத்தை சீக்ரத்தில் கொடுக்கவேண்டும் என்றும் பரமாசார்யாள் ப்ரார்த்திக்கிறார்கள். மனிதனுடைய சரீரத்தில் இடை பிங்களை, ஸுஷும்னை என்று மூன்று விதமான ப்ரதான நாடிகளுண்டு. இடா நாடிக்கு ஸூர்யன் என்றும், பிங்களா நாடிக்கு சந்த்ரனென்றும், ஸுஷும்ணா நாடிக்கு அக்னி என்றும் பெயர்கள் விளங்கிவருகின்றன. நாஸிகையினுடைய வலது பக்கத்தில் இடா நாடி, இடது பக்கத்தில் பிங்களா நாடி, நடுபாகத்தில் ஸுஷும்ணா நாடி என்பதை அறியவும். ஸுஷும்ணா நாடியினுடைய நடுவில் ஹ்ருதயாகாசத்தில் தேவியானவள் திவ்ய முக்தாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கி வருகிறாள். இடா நாடி வழியாக வெளியிலுள்ள வாயுவை பூரகம் செய்து, ஸுஷும்ணா நாடியில் ப்ராண வாயுவைத் தகைந்து, ஹ்ருதயாகாசத்தில் கொஞ்ச காலம் இந்த ஸ்வரூபத்தை த்யானம் செய்துவிட்டு, பிங்களாநாடி வழியாக வாயுவை ரேசகம் செய்யும்பொழுது, யோகிகளுக்கு த்யான யோகம் ஸித்தியாகி விட்டதென்பதை ஸூசிப்பிக்க, தேவியினுடைய சரீரத்தில் அலங்கரிக்கப்பட்ட முத்துக்களில் ஒரு முத்து வாயுவினால் இழுக்கப்பட்டு வெளியில் வரும். இதுவே ஸித்திக்கு பெரிய அடையாளம் என்பதை ப்ரகாசப்படுத்தத்தான், தேவி தன் சரீரத்தில், நாஸிகையினுடைய இடதுபாகத்தில் நல் முத்தை தரித்துக்கொண்டிருக்கிறாளோ என்ற த்வனியும் ஏற்படுகிறது. இவ்விதம் தேவியினுடைய வம்சதண்டம்போன்ற நாஸிகையை த்யானம் செய்கிறவர்களுக்கு ப்ராண நிரோதம், மனோஜயம், லக்ஷ்மீ கடாக்ஷம் முதலானவைகள் அதிசீக்ரத்தில் ஏற்படுமென்பது ஸித்தமாகிறது.

ஸ்வர்ண தட்டில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு, ह्रीं (ஹ்ரீம்) என்ற பீஜாக்ஷரத்தை நடுவில் எழுதி, இந்த ச்லோகத்தை தினம் 25,1500 வீதம், 8 நாள் ஜபிக்கவும். பிறகு யந்த்ர தாரணம். ஆபரணங்களிலும் எழுதி தரித்துக்கொள்ளலாம்—ஸகலமும் ஜயிக்கும்.

---

## 62. அம்பாளுடைய உதடுகளின் வர்ணனை.

प्रकृत्या रक्तायास्तव सुदति दन्तच्छदरुचेः
प्रवक्ष्ये सादृश्यं जनयतु फलं विद्रुमलता ।
न बिंबं तद्बिंबप्रतिफलनरागादरुणितं
तुलामध्यारोढुं कथमिव विलज्जेत कलया ॥ ६२ ॥

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑌾 𑌰𑌕𑍍𑌤𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑌵 𑌸𑍁𑌦𑌤𑌿 𑌦𑌨𑍍𑌤𑌚𑍍𑌛𑌦𑌰𑍁𑌚𑍇𑌃
𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 𑌸𑌾𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌜𑌨𑌯𑌤𑍁 𑌫𑌲𑌂 𑌵𑌿𑌦𑍍𑌰𑍁𑌮𑌲𑌤𑌾 ।
𑌨 𑌬𑌿𑌂𑌬𑌂 𑌤𑌦𑍍𑌬𑌿𑌂𑌬𑌪𑍍𑌰𑌤𑌿𑌫𑌲𑌨𑌰𑌾𑌗𑌾𑌦𑌰𑍁𑌣𑌿𑌤𑌂
𑌤𑍁𑌲𑌾𑌮𑌧𑍍𑌯𑌾𑌰𑍋𑌢𑍁𑌂 𑌕𑌥𑌮𑌿𑌵 𑌵𑌿𑌲𑌜𑍍𑌜𑍇𑌤 𑌕𑌲𑌯𑌾 ॥ ௬௨ ॥

ப்ரக்ருத்யாரக்தாயாஸ்தவ ஸுததி தந்தச்சதருசே:
ப்ரவக்ஷ்யே ஸாத்ருச்யம் ஜனயது பலம் வித்ருமலதா ।
ந பிம்பம் தத்பிம்ப ப்ரதிபலநராகாதருணிதம்
துலாமத்யாரோடும் கதமிவ விலஜ்ஜேத கலயா ॥ 62 ॥

हे सुदति (𑌹𑍇 𑌸𑍁𑌦𑌤𑌿) (ஹே ஸுததி) = அழகான பல்வரிசைகளுடன்கூடிய ஹே பரதேவதையே!

प्रकृत्या (𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑌾) (ப்ரக்ருத்யா) = இயற்கையிலேயே

रक्तायाः (𑌰𑌕𑍍𑌤𑌾𑌯𑌾𑌃) (ரக்தாயா:) = சிவப்பு வர்ணத்தோடு கூடினவளான

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

दन्तच्छदरुचेः (𑌦𑌨𑍍𑌤𑌚𑍍𑌛𑌦𑌰𑍁𑌚𑍇𑌃) (தந்தச்சதருசே:) = பல் வரிசைகளுடைய காந்திக்கு

सादृश्यं (𑌸𑌾𑌦𑍃𑌶𑍍𑌯𑌂) (ஸாத்ருச்யம்) = ஸாம்யத்தை

प्रवक्ष्ये (𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑍇) (ப்ரவக்ஷ்யே) = சொல்லுகிறேன்.

विद्रुमलता (𑌵𑌿𑌦𑍍𑌰𑍁𑌮𑌲𑌤𑌾) (வித்ருமலதா) = பவழக்கொடியானது

फलं (𑌫𑌲𑌂) (பலம்) = பழத்தை

जनयतु (𑌜𑌨𑌯𑌤𑍁) (ஜநயது) = உண்டுபண்ணட்டும்

बिंबं पुनः (𑌬𑌿𑌂𑌬𑌂 𑌪𑍁𑌨𑌃) (பிம்பம் புந:) = கோவைப்பழமோ என்றால்

तद्बिंबप्रतिफलनरागात् अरुणितं (𑌤𑌦𑍍𑌬𑌿𑌂𑌬𑌪𑍍𑌰𑌤𑌿𑌫𑌲𑌨𑌰𑌾𑌗𑌾𑌤𑍍 𑌅𑌰𑍁𑌣𑌿𑌤𑌂) (தத்பிம்பப்ரதிபலநராகாத் அருணிதம்) = அதரபிம்பம் தன்னிடத்தில் ப்ரதிபிம்பித்த காரணத்தால் சிவப்பாக இருக்கிறதாகக் கொண்டு

कलयापि (𑌕𑌲𑌯𑌾𑌪𑌿) (கலயாபி) = பதினாறில் ஓர் அம்சங்கூட

तुलां (𑌤𑍁𑌲𑌾𑌂) (துலாம்) = ஸாத்ருச்யத்தை

अध्यारोढुं (ஃயூ்யாரோஶு்ம்) = அடைவதற்கு
(அத்யாரோடும்)

कथमिव (கமிவ) (கதமிவ) = எப்படித்தான்

न विलज्जेत (ந விலஜ்ஜேத) = லஜ்ஜையை அடையாது
(ந விலஜ்ஜேத)

தாத்பர்யம் :—தேவியினுடைய சரீரமோ, ரத்தம் போல் சிகப்பான வர்ணமுள்ளது. இவ்விதமிருக்கும் பொழுது தேவியினுடைய உதடு (அதரபிம்பம்) சிகப் பாக இருக்கிறதென்பதைச் சொல்லவும் வேண்டுமா! இந்த அதரபிம்பத்தை வர்ணிக்க வேண்டுமாளுல் அதற்கு ஸாத்ருச்யம் ஓரிடத்திலும் அகப்படவில்லை. பவழக்கொடி சிகப்பாக இருக்கும். அதை அம்பா ளுடைய சரீரத்திற்கு த்ருஷ்டாந்தமாகச் சொல்லலாம். பவழக்கொடிக்கு பழம் இருந்தால் அதுவும் சிகப் பாக இருக்கும். அதையாவது அம்பாளுடைய அதரபிம்பத்திற்கு த்ருஷ்டாந்தமாகச் சொல்லக்கூடும். பவழக்கொடிக்கோ பழமே கிடையாது. இந்தக் கொடி பழத்தை உண்டுபண்ணினுல், தேவியினுடைய அதரபிம்பத்திற்கு அதை ஸமானமாக வைத்து, அதர பிம்பத்தை வர்ணிக்கக்கூடிய காலம் வரும். இல்லாது போனுல் தேவியினுடைய அதரபிம்பம், தேவியினு டைய அதரபிம்பத்திற்குத்தான் ஸமானம் என்று வர் ணிக்க வேண்டும். கோவைப்பழத்தை த்ருஷ்டாந்த மாகச் சொல்லலாமோ என்ருலோ, இதுவும் ஸரியாக ஆகாது. கோவைப்பழம் இயற்கையில் வெளுப்புத் தான்; ரொம்பவும் மதுரமானது. அதை ஸ்த்ரீகள் புசிக்கும் வழக்கமுண்டு. அதுவும் தேவியினுடைய போஜன காலத்தில், இயற்கையில் சிவப்பான தேவியி னுடைய அதரபிம்பத்தின் ஸம்பந்தத்தால் நிர்மலமான கோவைப்பழத்தில் தேவியினுடைய அதரபிம்பம் ப்ரதிபலித்து அதனுல் கோவைப்பழமும் சிகப்புப் போல் தோன்றுகிறது. ஸ்படிகத்தில் ஜபாகுஸுமம்

ப்ரதிபலித்தால், ஸ்படிகமும் சிகப்புஸ்படிகமோ எனத் தோன்றும். அதுபோல் கோவைப்பழமும், தேவியி னுடைய அதரபிம்பத்தின் பிரதிபலனத்தால் சிவப் பாக ஆகிறது. அந்த சிவப்பும் அதரபிம்பத்தின் சிவப் பில் பதினாறில் ஓர் அம்சங்கூட இல்லை, இவ்விதமிருக் கும்பொழுது, அந்த கோவைப்பழத்தை தேவியினு டைய அதரபிம்பத்திற்கு நாம் த்ருஷ்டாந்தமாகச் சொன்னாலும், அந்தக் கோவைப்பழம் லஜ்ஜையினால், ஸம்மதிக்கவே ஸம்மதிக்காது. ஆகையால் தேவியி னுடைய அதரபிம்பம் நிகரற்றது என்று ஸ்தோத்ரம் செய்வதுதான் ஸ்துதியாக ஆகுமன்னியில் வேறுவித மாக த்ருஷ்டாந்தத்துடன் யாராலும் வர்ணிக்க முடி யாது. இவ்விதம் தேவினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறவர்கள் ஸர்வ ஸம்ருத்தியோடும் கூடினவர்களாக ஆவார்கள்.

ஸ்வர்ண யந்த்ரத்தில் सं, सं, सं (௩०, ௩०, ௩०) என்ற பீஜா க்ஷரத்தை எழுதி, இந்த ச்லோகத்தை தினம் 25000 வீதம் 8 நாள் ஜபித்து, இந்த யந்த்ரத்தை தலையணையின் உள்ளே வைத்துப் படுத்தால் எல்லோரும் தூங்குவார்கள்.

---

## 63. தேவியினுடைய முகத்தை சந்த்ரனாக வர்ணனை.

सितज्योत्स्नाजालं तव वदनचन्द्रस्य पिबतां
चकोराणामासीदतिरसतया चञ्चुजडिमा ।
अतस्ते शीतांशोरमृतलहरीमाम्लरुचयः
पिबन्ति स्वच्छन्दं निशिनिशि भृशं काञ्जिकधिया ॥ ६३ ॥

𑌸𑍍𑌮𑌿𑌤𑌜𑍍𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌜𑌾𑌲𑌂 𑌤𑌵 𑌵𑌦𑌨𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯𑌪𑌿𑌬𑌤𑌾𑌂
𑌚𑌕𑍋𑌰𑌾𑌣𑌾𑌮𑌾𑌸𑍀𑌦𑌤𑌿𑌰𑌸𑌤𑌯𑌾 𑌚𑌞𑍍𑌚𑍁𑌜𑌡𑌿𑌮𑌾 ।
𑌅𑌤𑌸𑍍𑌤𑍇𑌶𑍀𑌤𑌾𑌂𑌶𑍋𑌰𑌮𑍃𑌤𑌲𑌹𑌰𑍀𑌮𑌾𑌮𑍍𑌲𑌰𑍁𑌚𑌯𑌃
𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑌿𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑌂 𑌨𑌿𑌶𑌿𑌨𑌿𑌶𑌿 𑌭𑍃𑌶𑌂 𑌕𑌾𑌞𑍍𑌜𑌿𑌕𑌧𑌿𑌯𑌾
॥ ௬௩ ॥

ஸ்மிதஜ்யோத்ஸ்நாஜாலாம் தவ வதநசந்த்ரஸ்ய பிபதாம்
சகோராணுமாஸீததிரஸதயா சஞ்சுஜடிமா ।
அதஸ்தே சீதாம்சோரம்ருதலஹரீமாம்லருசய:
பிபந்தி ஸ்வச்சந்தம் நிசிநிசி ப்ருசம் காஞ்ஜிகதியா ॥ 63 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பராசக்தியே

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

वदनचन्द्रस्य (𑌵𑌦𑌨𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯) (வதநசந்த்ரஸ்ய) = முகமாகிய சந்த்ரனுடைய

स्मितज्योत्स्नाजालं (𑌸𑍍𑌮𑌿𑌤𑌜𑍍𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌜𑌾𑌲𑌂) (ஸ்மிதஜ்யோத்ஸ்நாஜாலம) = புன்சிரிப்பாகிற சந்த்ரிகையினுடைய ஸமூஹத்தை

पिबतां (𑌪𑌿𑌬𑌤𑌾𑌂) (பிபதாம்) = பானம் செய்கிற

चकोराणां (𑌚𑌕𑍋𑌰𑌾𑌣𑌾𑌂) (சகோராணும்) = சகோர பக்ஷிகளுக்கு

अतिरसतया (𑌅𑌤𑌿𑌰𑌸𑌤𑌯𑌾) (அதிரஸதயா) = (உன் முகமாகிய சந்த்ரனுடைய புன்சிரிப்பென்ற சந்த்ரிகை) அதிக தித்திப்பாக இருக்குங் காரணத்தால்

चंचुजडिमा (சஂசுஜடிமா) = திகட்டல்
(சஞ்சுஜடிமா)

आसीत् (ஆஸீத்) (ஆஸீத்) = ஏற்பட்டிருக்கிறது

अत: (அத:) (அத:) = அக்காரணத்தால்

ते (தே) (தே) = அந்த சகோரபக்ஷிகள்

आंलरुचय: (ஆம்லருசய:) = புளிப்பு ரஸத்தில் ருசி
(ஆம்லருசய:) யுள்ளதாகக்கொண்டு

शीतांशो: (ஶீதாஂஶோ:) = சந்த்ரனுடைய
(சீதாம்சோ:)

अमृतलहरीं (அம்ருதலஹரீஂ) = அம்ருதபெருக்கை
(அம்ருதலஹரீம்)

काञ्जिकधिया (காஞ்ஜிகதியா) = புளித்த கழிவுநீர் என்ற
(காஞ்சிகதியா) எண்ணத்துடன்

निशि निशि (நிஶி நிஶி) = (சந்த்ரிகை உள்ள) ஒவ்
(நிசி நிசி) வொரு இரவிலும்

स्वच्छन्दं (ஸ்வச்சந்தஂ) = இஷ்டப்படி
(ஸ்வச்சந்தம்)

भृशं (ப்ருஶஂ) (ப்ருசம்) = த்ருப்தியோடு

पिबन्ति (பிபந்தி) (பிபந்தி) = பானம் செய்கின்றன.

தாத்பர்யம்:—சகோர பக்ஷிகள், சந்த்ரிகையை பானம் செய்து ஜீவிக்கும் ஸ்வபாவ முள்ளவைகள். தேவியினுடைய முகமோ, சந்த்ரனுக்கும் மேலாக பாஸிக்கின்றபடியால், அந்த முகத்திலுள்ள புன்சிரிப் பென்ற சந்த்ரிகையை சகோரபக்ஷிகள் பானம் செய்ய ஆரம்பித்துவிட்டன. தேவியினுடைய முகமாகிய சந்த்ரனுடைய சந்த்ரிகையை பானம்

செய்ததிலிருந்து சகோர பக்ஷிகளுக்கு திகட்டல் ஏற்பட்டுவிட்டது. அதாவது மாந்த்யம் என்ற தோஷமும் ஏற்பட்டுவிட்டது. இதற்கு அம்பாளுடைய முகமாகிய சந்த்ரனுடைய புன்சிரிப்பென்ற சந்த்ரிகை மிகவும் தித்திப்பாக இருப்பதேதான் காரணமாகும். இதைப் பானம் செய்ததினால், சகோர பக்ஷிகளுக்கு ஏதாவது புளித்த பதார்த்தத்தை சாப்பிடவேண்டுமென்ற ஆசை ஏற்பட்டுவிட்டது. தித்திப்பான பதார்த்தத்தை அதிகமாக சாப்பிட்டு, திகட்டலும் வயிற்றில் மந்தமும் ஏற்பட்டால், அதைப் போக்கடிக்க, புளிப்பான பதார்த்தம் வல்லமை உள்ளது. அதற்காக, சகோர பக்ஷிகளும் புளித்த பழய கழிவுநீர் எங்காவது அகப்பட்டால் அதைச் சாப்பிட்டு தங்கள் திகட்டலேயும், மந்தத்தையும் நிவர்த்தி செய்து கொள்ள வேண்டுமென்று இச்சை உள்ளவைகளாக ஆங்காங்கு அலேந்தன. சுக்லபக்ஷ இரவில் ப்ரஸித்தமான சந்த்ரனுடைய சந்த்ரிகையைப் பார்த்து 'இது புளித்த பழய கழுநீர்' என்ற எண்ணத்துடன் மிகவும் த்ருப்தியோடு ஒவ்வொரு இரவிலும் அதைப் பானம் செய்கின்றன. அஷ்டாங்க ஹ்ருதயம் முதலான வைத்ய சாஸ்த்ரங்களிலும், சிசுக்கள் தாயின் ஸ்தன்யத்தை அதிகமாக பானம் செய்தால் மாந்த்ய தோஷம் ஏற்படுகிறதென்றும், அதற்கு மாற்றாக, அரிசிகளேந்த பழய புளித்த கழிவுநீர் ஔஷதம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை அனுஸரித்து சகோர பக்ஷிகளும், அம்பாளுடைய புன்சிரிப்பு அதிமதுரமானதினால் அதைப் பானம் செய்ததிலிருந்தும் பற்களுக்கு கூச்சமும், வயிற்றில் மந்தமும் ஏற்பட்ட காரணத்தைக் கொண்டு, அதைப் போக்கடித்துக் கொள்ள, லோகத்தில் உள்ள சந்த்ரனுடைய சந்த்ரிகையைப் பானம் செய்கின்றன. ஆகையால் சந்த்ரனேக் காட்டிலும், தேவியினுடைய முகம் மேலானதென்றும் சந்த்ரிகையைக்காட்டிலும் தேவியினுடைய புன்சிரிப்பு அதிமதுரம் என்றும் வர்ணிக்கப்படுகிறது.

ஸ்ரீமத் ராமாயணத்திலும், அயோத்யாகாண்டத்தில் चन्द्रकान्ताननम् (அந்த்ரகாந்தாநநம்) (சந்த்ரகாந்தாநநம்) என்று ஸ்ரீராமனுக்கு ஓர் விசேஷணம் ஏற்பட்டிருக்கிறதை ஸுமந்தரர், ராமனை தசரதருடைய மாளிகைக்கு அழைத்துவரும் ப்ரகரணத்தில் காணலாம். चन्द्रादपि कान्तं आननं यस्य (அந்த்ராதபி காந்தம் ஆநநம் யஸ்ய) (சந்த்ராதபி காந்த்தம் ஆநநம் யஸ்ய) என்று வ்யாக்யாதாக்கள் ஸமாஸம் செய்திருக்கிறார்கள். சந்த்ரனைக் காட்டிலும் அழகான முகம் என்று அதன் கருத்தாகும். ப்ரக்ருதத்திலோ, தேவியினுடைய முகத்தை சந்த்ரனைக் காட்டிலும் அழகுள்ளதென்று வர்ணிக்கிறார்கள். இதனால்,

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भूधर ।
अभ्युत्थानमधर्मस्य तदा वेषान् बिभर्म्यहम् ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பூதர ।
அப்யுத்தாநமதர்மஸ்ய ததா வேஷாந் பிபர்ம்யஹம் ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பூதர ।
அப்யுத்தாநமதர்மஸ்ய ததா வேஷான் பிபர்ம்யஹம் ॥

என்ற ச்லோகத்தால் ஸ்ரீ தேவிபாகவதத்தில் தேவிகீதையில் பர்வத்ராஜனான ஹிமவானுக்கு பரதேவதையானவள் "லோகத்தில் தர்மம் குறைந்து அதர்மம் மேலிடும் காலத்தில், நான் ராமன் என்ற பெயருடனும், க்ருஷ்ணன் என்ற பெயருடனும் புருஷவேஷம் போட்டுக்கொண்டு தர்மத்தை ரக்ஷிக்கிறேன்" என்று சொல்லியபடி, ராமனும் தேவியினுடைய ஸ்வரூபமும் ஒரே தத்வமென்று வெளியாகிறது. அதனால் ராமனுடைய முகமும், தேவியினுடைய முகம், சந்த்ரனுக்கும் மேலாக ப்ராணிகளுக்கு ஆஹ்லாதத்தைக் கொடுக்கக் கூடியது என்பது வெளியாகிறது. இவ்விதம் தேவியினுடைய முகசந்த்ரனை த்யானம் செய்கிற உபாஸ

கர்கள் ஜனன-மரணம் இவைகள் இல்லாதவர்களாக ஆகிருர்கள்.

இந்த ச்லோகத்தை பட்டையான அரைஞளில் எழுதி இடுப்பில் தரித்துக்கொள்ளவும். தினம் 25000 வீதம் 30 நாள் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும். ஸர்வஜன வச்யமுண்டாகும்.

---

## 64. தேவியினுடைய ஜிஹ்வையின் (நாக்கின்) வர்ணனை.

अविश्रान्तं पत्युर्गुणगणकथाम्रेडनजपा
जपापुष्पच्छाया तव जननि जिह्वा जयति सा ।
यदग्रासीनायाः स्फटिकदृषदच्छच्छविमयी
सरस्वत्या मूर्तिः परिणमति माणिक्यवपुषा ॥ ६४ ॥

𑌅𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌂 𑌪𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌗𑍁𑌣𑌗𑌣𑌕𑌥𑌾𑌮𑍍𑌰𑍇𑌡𑌨𑌜𑌪𑌾
𑌜𑌪𑌾𑌪𑍁𑌷𑍍𑌪𑌚𑍍𑌛𑌾𑌯𑌾 𑌤𑌵 𑌜𑌨𑌨𑌿 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾 𑌜𑌯𑌤𑌿 𑌸𑌾 ।
𑌯𑌦𑌗𑍍𑌰𑌾𑌸𑍀𑌨𑌾𑌯𑌾𑌃 𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌦𑍃𑌷𑌦𑌚𑍍𑌛𑌚𑍍𑌛𑌵𑌿𑌮𑌯𑍀
𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍍𑌯𑌾 𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌃 𑌪𑌰𑌿𑌣𑌮𑌤𑌿 𑌮𑌾𑌣𑌿𑌕𑍍𑌯𑌵𑌪𑍁𑌷𑌾
॥ ௬௪ ॥

அவிச்ராந்தம் பத்யுர்குணகணகதாம்ரேடநஜபா
ஜபாபுஷ்பச்சாயா தவ ஜநநி ஜிஹ்வா ஜயதி ஸா ।
யதக்ராஸீநாயா: ஸ்படிகத்ருஷதச்சச்சவிமயீ
ஸரஸ்வத்யா மூர்தி: பரிணமதி மாணிக்யவபுஷா ॥ 64 ॥

हे जननि (ஹே ஜநநி) (ஹே ஜநநி) = ஹே தாயே
तव (தவ) (தவ) = உன்னுடைய

सा (ஸா) (ஸா) = ப்ரஸித்தமான

जिह्वा (ஜிஹ்வா) (ஜிஹ்வா) = நாக்கானது

अविश्रान्तं (அவிஶ்ராந்தம்) (அவிச்ராந்தம்) = எப்பொழுதும்

पत्यु: (பத்யு:) (பத்யு:) = பர்த்தாவான பரமேச்வரனுடைய

गुणगणकथाम्रेडनजपा (குணகணகதாம்ரேடநஜபா) (குணகணகதாம்ரேடநஜபா) = த்ரிபுராஸுர விஜயம் முதலான கல்யாண குணங்களுடைய ஸமூஹத்தின் வ்ருத்தாந்தங்களைத் திரும்பத் திரும்பச் சொல்வதையே, மந்த்ர ஜபமாக உடைத்தானதாகக்கொண்டு

जपापुष्पच्छाया (ஜபாபுஷ்பச்சாயா) (ஜபாபுஷ்பச்சாயா) = செம்பருத்திப் புஷ்பத்தின் சிகப்பான காந்தியைப்போல் காந்தியோடு கூடினதாக

जयति (ஜயதி) (ஜயதி) = விளங்குகிறது

यदग्रासीनाया: (யதக்ராஸீநாயா:) (யதக்ராஸீநாயா:) = எந்த நாக்கினுடைய நுனியில் வஸிக்கின்ற

सरस्वत्या: (ஸரஸ்வத்யா:) (ஸரஸ்வத்யா:) = ஸரஸ்வதீ தேவியினுடைய

स्फटिकदृषदच्छच्छविमयी (ஸ்படிகத்ருஷதச்சச்சவிமயீ) = ஸ்படிகக் கல்போல் சுத்தமான வர்ணத்தோடு

(ஸ்படிகத்ருஷதச்சச்ச கூடின
விமயீ)

मूर्तिः (உஒதி-ஓ:) (மூர்த்தி:) =சரீரமானது

माणिक्यवपुषा (ஊணிக்ஷ வவுஷா) (மாணிக்ய வபுஷா) =மாணிக்க ரத்னம் போல் சிவந்த சரீரத்துடன் கூடியதாக

परिणमति (வரிணஉதி) (பரிணமதி) =மாறுகின்றதோ

தாத்பர்யம்:—லோகமாதாவான பரதேவதையினுடைய ஜிஹ்வையோ, செம்பருத்திப் புஷ்பம்போல் சிகப்பாக இயற்கையாகவே இருந்துவருகிறது. அத்துடன், காமேச்வரனுன தன் பர்த்தா, த்ரிபுராஸுரனை வதம் செய்த சரித்ரம், மார்க்கண்டேயனுக்காக யமனை இடது காலால் உதைத்துத் தள்ளிய சரித்ரம், காமனை எரித்த சரித்ரம் முதலான திவ்ய சரித்ரங்களை அடிக்கடி தன் ஸகிகளிடம் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதையே ஓர் மந்த்ர ஜபம்போல் ஆவர்த்தி செய்துகொண்டு ஜபம் செய்கிற காரணத்தால் ஸர்வோத்க்ருஷ்டமாக தேவியின் ஜிஹ்வை விளங்கிவருகிறது. அதனுலும், பகவானுடைய சரித்ரத்தை ஆவர்த்தி செய்துகொண்டிருப்பதால் ஜிஹ்வைக்குள்ள சிகப்பு வர்ணம் அதிக சோபையுடனும் விளங்கிவருகிறது. அந்த ஜிஹ்வையின் அக்ர (முன்) பாகத்தில்,ஸரஸ்வதிதேவியானவள் எப்பொழுதும் வஸித்து வருகிருள். ஸரஸ்வதியினுடைய சரீரமோ, ஸ்படிகம்போல் தவளமான காந்தியோடு கூடினது. தேவியினுடைய ஜிஹ்வை சிகப்பாக இருக்குங் காரணத்தால், ஜிஹ்வையினுடைய அக்ரபாகத்தில் வஸித்துவரும் ஸரஸ்வதியினுடைய சரீரமும சிகப்பு வர்ணமாக மாறிவிட்டது. வெளுப்

பான சரீரத்தையும் சிகப்பாக மாற்றிவைக்கக் கூடிய சக்தி தேவியினுடைய ஜிஹ்வைக்கு இயற்கையாகவே இருந்துவருகிறது. தேவியினுடைய ஜிஹ்வை இவ்விதமான வைபவமுள்ளது. ஜிஹ்வையினுடைய அக்ரபாகத்தில் ஸரஸ்வதீதேவி வஸித்து வருகிறாள் என்பதையும் அறிந்து தேவியை உபாஸிக்கிறவர்கள் மதுரமான வார்த்தைகளைச் சொல்லும் ஜிஹ்வா ஸித்தியையும், ஸரஸ்வதீ கடாக்ஷத்தால், ஸர்வ வித்யா பாரங்கதத்வத்தையும் அடைகிறார்கள் என்பது நிச்சயமாகிறது.

ஷட்கோணம் போட்டு, க்லீம் (க்லீம்) என்ற பீஜாக்ஷரத்தை நடுவில் எழுதி, மூலைகளில் ஸ்ரீம் (ஸ்ரீம்) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி, இந்த ச்லோகத்தை தினம் 25000 வீதம் 18 நாள் ஜபித்தால்,ஸகல ரோக நிவாரணமும்,ஸகல முகவச்யமும், ஸகல கார்ய ஸித்தியும் உண்டாகும்.

---

## 65. தேவியின் நிர்மால்ய மகிமை.

रणे जित्वा दैत्यानपहृतशिरस्त्रैः कवचिभि-
र्निवृत्तैश्चण्डांशत्रिपुरहरनिर्माल्यविमुखैः ।
विशाखेन्द्रोपेन्द्रैः शशिविशदकर्पूरशकला
विलीयन्ते मातस्तव वदनताम्बूलकबलाः ॥ ६५

ரணே ஜித்வா தைத்யாநபஹ்ருதஶிரஸ்த்ரை: கவசிபி-
ர்நிவ்ருத்தைஶ்சண்டாம்ஶத்ரிபுரஹரநிர்மால்ய
விமுகை: ।
விஶாகேந்த்ரோபேந்த்ரை: ஶஶிவிஶதகர்பூர
ஶகலா
விலீயந்தே மாதஸ்தவ வதநதாம்பூலகபலா: ॥ ௬௫ ॥

ரணே ஜித்வா தைத்யாநபஹ்ருதசிரஸ்த்ரை: கவசிபி:
நிவ்ருத்தைச்சண்டாம்சத்ரிபுரஹரநிர்மால்யவிமுகை: ।
விசாகேந்த்ரோபேந்த்ரை: சசிவிசதகர்பூரசகலா
விலீயந்தே மாதஸ்தவ வதநதாம்பூலகபலா; ॥ 65 ॥

हे मातः (ஹே மாத:) (ஹே மாத:) = ஹே தாயே !

रणे (ரணே) (ரணே) = யுத்தத்தில்

दैत्यान् (தைத்யாந்) (தைத்யாந்) = அஸுரர்களை

जित्वा (ஜித்வா) (ஜித்வா) = ஜயித்துவிட்டு

अपहृतशिरत्रैः (அபஹ்ருத ஶிரஸ்த்ரை:) (அபஹ்ருத சிரஸ்த்ரை:) = உன் ஸமீபம் வரும் பொழுது தலையில் இருக்கக் கூடாதென்ற எண்ணத்துடன் கையில் தலைப்பாகையைத் தரித்துக் கொண்டிருப்பவர்களாயும்

कवचिभिः (கவசிபி:) (கவசிபி:) = இரும்புக் கவசங்களோடு கூடினவர்களாயும்

निवृत्तैः (நிவ்ருத்தை:) (நிவ்ருத்தை:) = யுத்தத்திலிருந்து திரும்பினவர்களாயும்

चण्डांशलिपुरहरनिर्माल्यविमुखैः (சண்டாம்ஶத்ரிபுரஹர நிர்மால்யவிமுகை:) = சண்டிகேச்வரனுடைய பாகமாகிய த்ரிபுர ஸம்ஹார மூர்த்தியான பர

| | |
|---|---|
| (சண்டாம்சத்ரிபுரஹர நிர்மால்யவிமுகை:) | மேச்வரனுடையநிர்மால்யத்திலிருந்தும் விமுகர்களாயும் இருக்கிற |
| विशाखेन्द्रोपेन्द्रैः (விஶாவெந்ரோ வெந்ரைஃ) (விசாகேந்த்ரோபேந்த்ரை:) | = ஸுப்ரமண்ய ஸ்வாமி° தேவேந்த்ரன், மஹா விஷ்ணு இவர்களால் |
| शशिविशदकर्पूरशकलाः (ஶஶிவிஶத கர்பூரஶகலாஃ) (சசிவிசதகர்பூரசகலா:) | = சந்த்ரனைப்போல் வெளுப்பான பச்சைக் கற்பூரத்தின் கண்டங்களோடு கூடினதான |
| तव (தவ) (தவ) | = உன்னுடைய |
| वदनतांबूलकवलाः (வதந தாம்பூலகபலாஃ) (வதநதாம்பூலகபலா:) | = வாயால் நன்ருய்க் கடிக்கப்பட்டு கருணையினுல் உன்னுல் கொடுக்கப்பட்ட தாம்பூலத்தின் கபளங்கள் |
| विलीयन्ते (விலீயந்தே) (விலீயந்தே) | = நன்ருகமென்று பக்ஷிக்கப்படுகின்றன. |

தாத்பர்யம்:—சூரபத்மா, தாரகாஸுரன், ஸிம்மவக்த்ரன் முதலான அஸுரர்கள் மூலம் இந்த்ரன் முதலான தேவர்களுக்கு தீராத பீடைகள் ஏற்பட்டு அதை நிவர்த்தி செய்துகொள்வதற்காக ஷண்முகப்பெருமானை தேவர்கள் தேவஸேனைக்கு நாயகனுகப் பட்டாபிஷேகம் செய்து, அந்த வீரனுடைய உதவியைக்கொண்டு மேற்சொன்ன அஸுரர்களை ஜயித்து, இந்த்ரன் முதலான தேவர்கள் ஸௌக்யத்தை அடைந்தார்கள் என்ற கதையானது ஸ்காந்த மஹாபுராணத்தில்

ப்ரஸித்தமானது. ஷண்முகப் பெருமானும் தேவ ஸேனாதிபதி என்ற பதவியை ஏற்றுக்கொண்ட பிறகு, சூரபத்மா முதலான அஸுரர்களோடு யுத்தத்திற்குச் செல்லுவதற்கு முன், தன் மாதாவான பரதேவதை யைப்பூஜித்து, பராக்ரமசாலியான சூரபத்மாவைக் கொல்லக் கூடிய சக்தியைத் தனக்குக் கொடுக்க வேண்டுமென தாயை ப்ரார்த்தித்தார். தேவியும் தன் புத்ரனின் ப்ரார்த்தனைக் கிணங்கி, சக்தி என்ற ஆயுத விசேஷத்தை பரிபூர்ணமான அனுக்ரஹத்து டன் குமாரஸ்வாமியினிடம் கொடுத்து ஆசீர்வதித் தாள். உடனே குமாரஸ்வாமியும் ஜயந்திபுரம் (திருச் செந்தூர்) என்ற ஸ்தலத்தை ஸேனைகளுக்கு ப்ரதான ஸ்தாபனமாக வைத்துக்கொண்டு, இந்த்ரன், விஷ்ணு முதலான தன் ப்ரதான ஸேனைகளோடு ஸமுத்ரத்தி னுடைய நடுவிலுள்ள வீரமாஹேந்த்ர பட்டணத்திற் கதிபதியான சூரனுடன் மஹா யுத்தம் புரிந்து அவனை ஜயித்தார். சூரபத்மா, தாரகாஸுரன், ஸிம்ம வக்த்ரன் முதலான அஸுரர்கள், அந்தப் போரில் அடியோடு அழிந்துவிட்டார்கள். இவ்விதம் அஸு ரர்களை ஜயித்துவிட்டு தன் தாயான பரதேவதையி டம் இந்த வ்ருத்தாந்தத்தை விக்ஞாபனம் செய்வ தற்காக, இந்த்ரன், விஷ்ணு முதலான தேவர்களுடன் குமாரஸ்வாமியானவர் ஜீவன்முக்திபுரி என்று விளங் கும் ஹாலாஸ்ய க்ஷேத்ரத்தில், ஸ்ரீ மீனாக்ஷி என்ற திரு நாமத்தால் விளங்கிவருகிற தன தாயாரின் திருமாளி கைக்கு வந்தார். தாயினிடம் வரும்பொழுது, உத் யோக தோரணையிலுள்ளவர்கள தனக்கு பூஜ்யமான பெரியோர்களிடம் போகும்பொழுது இருக்கவேண் டிய விநயபாவத்தையும் தன் அனுஷ்டானமூலம் வெளிப்படுத்தினார். குமாரஸ்வாமியுத்தகளத்திலிருந்து நேரில் வருகிறதனால், சரீரத்தில் தரித்திருந்த கவசங் களை கழட்டவில்லை. தலையிலுள்ள உஷ்ணீஷம் சிரஸ்த்ரம் என்ற சப்தங்களால் சொல்லப்படும் தலைப்பாகையை மாத்ரம் கழட்டி, கையில் வைத்துக் கொண்டு தாயி

ளிடம் சென்றார். அவ்விதமே குமாரஸ்வாமியைப் பார்த்து இந்த்ரனும் விஷ்ணுவும் சென்றார்கள். பரமேச்வரனோ தன் புத்ரன் ஜய வ்ருத்தாந்தத்தைச் சொல்ல தன்னிடம் வருவான் என்று எதிர்பார்த் திருந்தார். ஆனால் குமாரஸ்வாமியோ, தன் தந்தை யான பரமேச்வரனிடம் செல்லாமல், தாயினிடம்தான் சென்றார். பரமேச்வரனிடம் சென்று ஜய வ்ருத்தாந் தத்தைத் தெரிவித்தால், தனக்கு பரமேச்வரன் ஏதாவது ஸன்மானம் செய்வார், அதை தான் தரித்துக் கொள்ளக்கூடாது. . சிவ நிர்மால்யம் கூடாதென்று சாஸ்த்ரத்தில் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது என்று எண்ணி, தானே சிவநிர்மால்யத்தை தரிக்காததினால் இதைப் பார்த்து மற்ற ஜனங்களும் அனுஷ்டிப்பார் கள் என்று, தர்மத்தை ஸதாபனம் செய்யும் உத்தே சத்துடன் தான் பரமேச்வரனிடம் செல்லாமல் குமார ஸ்வாமியானவர் தேவியினிடம சென்றார் என்ற தாத்பர்யத்தை பரமாசார்யாள் ஸ்பஷ்டமாக चण्डांश त्रिपुरहरनिर्माल्यविमुखैः (சண்டாம்ஶத்ரிபுரஹரநிர்மால்யவிமுகை:) (சண்டாம்சத்ரிபுரஹரநிர்மால்யவிமுகை:) என்ற பதத்தால் பரகாசப்படுத்துகிறார்கள்.

இந்த ஸந்தர்ப்பத்தில் சிவநிர்மால்யத்தை எக்கார ணத்தாலும் ஸ்வீகரிக்கலாமா? ஸ்வீகரிக்கக்கூடாதா, எனபதைப்பற்றி விசாரிக்கப்படுகிறது:

சிவனுடைய நிர்மால்யம் அசுத்தமானதினால் ஸ்வீகரிக்கத் தகுந்ததில்லையா? அல்லது, மஹா பரி சுத்தமான அந்த நிர்மால்யத்தை ஸ்வீகரித்துக்கொள் ளக்கூடிய ஆசாரம் ப்ராணிகளிடத்திலில்லை என்பதி னலா? அல்லது, சிவநிர்மால்யம் சண்டிகேச்வரருக்கு ஏற்பட்டதென்பதினலா?

முதல் பக்ஷம்ஸரியல்ல. यत्कृत्यं तन्न कृतं यदकृत्यं कृत्यवत् तत् आचरितं । तदुभयोः प्रायश्चित्तं शिव तव नामाक्षरद्वयं उच्चरितं (யத்க்ருத்யம் தந்ந க்ருதம் யதக்ருத்யம் க்ருத்யவத் தத் ஆசரிதம் । ததுபயோ: ப்ராயஶ்சித்தம் ஶிவ தவ நாமாக்ஷரத்வயம் உச்சரிதம்)

(யத்க்ருத்யம் தந்ந க்ருதம் யதக்ருத்யம் க்ருத்யவத் தத் ஆசரிதம் ததுபயோ: ப்ராயச்சித்தம் சிவ தவ நாம அக்ஷரத்வயம் உச்சரிதம்) என்ற ஸ்ம்ருதி வசனத்தால் விஹிதகர்மாவை அனுஷ்டானம் செய்யாததினால் ஏற்படும் மஹா பாபமோ, நிஷித்தகர்மாவைச் செய்ததினால் ஏற்படும் பாபமோ, ஸகலவிதமான பாபங்களும் "சிவ" என்ற இரண்டு அக்ஷரங்களை உச்சரித்தமாத்ரத்தால் நசித்துவிடும் என்று தெரியும்பொழுது பரமேச்வரனுடைய நிர்மால்யத்தில் தோஷ சங்கை எப்படி ஏற்படக்கூடும்? தவிரவும்,

शिवप्रसादेन विना न बुद्धिः शिवप्रसादेन विना न युक्तिः ।
शिवप्रसा न विना न सिद्धिः शिवप्रसादेन विना न मुक्तिः ॥

𑌶𑌿𑌵𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾 𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌶𑌿𑌵𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍇𑌨
𑌵𑌿𑌨𑌾 𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌿𑌃 ।
𑌶𑌿𑌵𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾 𑌨 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌶𑌿𑌵𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍇𑌨
𑌵𑌿𑌨𑌾 𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌃 ॥

சிவப்ரஸாதேந விநா ந புத்தி: சிவப்ரஸாதேந விநா ந யுக்தி: ।
சிவப்ரஸாதேந விநா ந ஸித்தி: சிவப்ரஸாதேந விநா ந முக்தி:॥

என்று ஸூதஸம்ஹிதையில் சொல்லியபடி ஸகலவிதமான ச்ரேயஸ்ஸுக்கும் சிவப்ரஸாதத்தை முக்ய ஹேதுவாக ஒப்புக்கொண்டே தீரவேண்டியிருக்க, சிவப்ரஸாதரூபமான நிர்மால்யத்தில் தோஷ சங்கை எப்படிச் செய்யமுடியும்?

भुक्त्वान्नं मुक्तिमाप्नोति भक्त्या शिवनिवेदितम् ।
शिवनिर्माल्यदोषस्तु प्राकृतानां कथेरितः ॥

𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌶𑌿𑌵𑌨𑌿𑌵𑍇𑌦𑌿𑌤𑌮𑍍 ।
𑌶𑌿𑌵𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌦𑍋𑌷𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌾𑌨𑌾𑌂 𑌕𑌥𑍇𑌰𑌿𑌤𑌃 ॥

புக்த்வாந்நம் முக்திமாப்நோதி பக்த்யாசிவநிவேதிதம் ।
சிவநிர்மால்ய தோஷஸ்து ப்ராக்ருதாநாம் கதேரித: ॥

என்ற வாக்யப்படி, சிவனுக்கு நிவேதனம் செய்யப் பட்ட நிர்மால்ய அன்னத்தை புஜித்துக்கொண்டு வருபவனுக்கு ஆயாஸமன்னியிலேயே மோக்ஷம் கிடைக்கிறது. சிவநிர்மால்யத்தை பரிஹரிக்கவேண்டு மென்ற தோஷம், அதை க்ரஹித்துக்கொள்ள போது மான ஆசாரமில்லாத ப்ராக்ருத ஜனங்களுடைய விஷயத்தில் சொல்லப்படுகிறது என்று தெரிகிறபடி யால் சிவநிர்மால்யத்திற்கு தோஷப்ரஸக்தியே இல்லை என்று வெளியாகிறது. ஆகையால் சிவ நிர்மால்யம் தோஷமுள்ளதென்ற காரணத்தால் குமாரஸ்வாமி முத லானவர்கள் அர்த நிர்மால்யத்தில் வைமுக்யத்தை அடைந்தார்கள் என்ற அபிப்ராயத்தை வைத்துக் கொள்ளக்கூடாது.

இரண்டாவது பக்ஷமோ, ச்ரேயஸ்ஸை விரும்பும் ஸகல ஆஸ்திகர்களாலும் ஒப்புக்கொள்ளத் தகுந்தது. பரம பரிசுத்தமான சிவ நிர்மால்யத்தை க்ரஹிக்கக் கூடிய ஸம்சுத்தி ஜனங்களுக்கு பெரும்பாலும் ஏற்படு வது துர்லபந்தான். லோகத்திலும் மஹான்களுடைய ஸந்நிதியில் சில ஜனங்கள் நிர்ப்பந்தத்தால் அழைக் கப்பட்டாலும் தன்னுடைய துராசாரத்தால் அங்கு செல்வதற்கு பயந்து, போகாமலே இருக்கிறார்கள், அதனால் மஹான்களுடைய ஸந்நிதிக்கு தோஷம் என்ற அர்த்தத்தை க்ரஹித்துக்கொள்வது தவறாகும். விஷ்ணுவிற்கு பாரம்யத்தைக் கொடுக்கும் ஸ்ரீமத் பாகவதத்திலும், நாலாவது ஸ்கந்தத்தில்,

यद्व्यक्षरं नाम गिरेरितं नृणां सकृत्प्रसङ्गादघमाशु हन्ति तत् ।
पवित्रकीर्तिं तमलङ्घ्यशासनं भवानहोद्वेष्टि शिवं शिवेतरः ॥

யத்த்வ்யக்ஷரம் நாம கிரேரிதம் ந்ருணாம் ஸக்ருத்
ப்ரஸங்காதகமாசு ஹந்தி தத் ।
பவித்ரகீர்த்திம் தமலங்க்யசாஸனம் பவானஹோத்வேஷ்டி
சிவம் சிவேதர: ॥

யத்த்வ்யக்ஷரம் நாம கிரேரிதம் ந்ருணும் ஸக்ருதப்ரஸங்காத
கமாசு ஹந்தி தத்
பவித்ரகீர்த்திம் தமலங்க்யசாஸநம் பவாநஹோத்வேஷ்டி
சிவம் சிவேதர: ||

என்ற ச்லோகத்தால், 'பரமசிவனுடைய திருநாமமாகிய சிவ என்ற அக்ஷரத்தை பக்தியில்லாமல் எத்ருச்சையாகச் சொன்னாலும் மனிதனுடைய ஸகல பாபங்களையும் அந்த இரண்டு அக்ஷரங்கள் போக்கடித்து விடும். மனிதன் மனதோடு சிவ என்ற அக்ஷரங்களைச் சொல்லவேண்டாம்; வாக்கினால் வேறு ஏதாவது வ்ருத்தாந்தத்தைப் பேசிக்கொண்டிருக்கும்போழுது சிவ என்ற அக்ஷரங்கள் அவ் விருத்தாந்தத்தின் நடுவில் வந்தாலே போதுமானது. அதற்கே மஹா மஹிமை உண்டு' என்று தெரியும்பொழுது ஸாக்ஷாத் பரமேச்வரனுடைய நிர்மால்யமானது மிகவும் பூஜ்யமான வஸ்துவானதினால் அதை க்ரஹிக்கின்ற விஷயத்தில் ப்ராக்ருதமான ஜனங்களுக்கு ஸம்சுத்தி போதாதென்பதை நினைத்துத்தான் சிவ நிர்மால்யத்தை நிஷேதம் செய்திருப்பது என்று அபிப்ராயத்தை அறியவேண்டும். சிசுக்களுக்கு தனக்கு ஜீர்ணமாகாததான தின்பண்டங்களிலும் ஆசை ஏற்படலாம். அந்த சமயம், தாய் குழந்தையைத் தடுக்காமல் அந்த தின்பண்டத்தை தூஷிப்பது போல் அபிநயம் செய்வதை லோகத்தில் பெரும்பாலும் காணலாம். அதற்காக தின்பண்டம் நிஷேதிக்கப்பட்டதாக நினைக்கலாமா? இதுபோலவே ப்ரக்ருதத்திலும் அறியவும். अन्नं देवातिथिभ्यो अर्पितं अमृतमिदं (𑌅𑌨𑍍𑌨𑌂 𑌦𑍇𑌵𑌾𑌤𑌿𑌥𑌿𑌭𑍍𑌯𑍋 𑌅𑌰𑍍𑌪𑌿𑌤𑌂 𑌅𑌮𑍃𑌤𑌮𑌿𑌦𑌂) (அந்நம் தேவாதிதிப்யோ அர்பிதம் அம்ருதமிதம்) என்ற பகவத்பாதாளுடைய வாக்யத்தால், தேவதைகளுக்கு நிவேதனம் செய்த நிர்மால்யம் அம்ருதமென்று தெரிகிறது. இந்த வாக்யத்தில் "தேவதை" என்ற

பதத்திற்கு சிவனைத் தவிர மற்ற தேவதைகளென்று அர்த்தம் செய்வது குருட்டு புத்தியாகத்தானாகும் தேவதையென்று பொதுவாகப் பதமிருக்கும்பொழுது சிவனை அப்பதத்தில் சேர்க்காமல் தள்ளுவதற்கு காரணம் ஒன்றும் அகப்படாது. சிவனையும் சேர்த்துத் தானாகவேண்டும். ஆகையால் சிவ நிர்மால்யமும் அம்ருதமென்றே கருதவேண்டும். ஆனால் ப்ராக்ருதத்தில் குமாரஸ்வாமி முதலானவர்கள், சிவநிர்மால்யத்தில் விமுகர்களாக ஆனார்களே என்பதற்குக் காரணமோ, சிவநிர்மால்யம் அசுத்தமென்பதினாலல்ல. தற்சமயம் அவர்கள் போர்செய்து திரும்பிவரும் ஸமயம் என்று முன்பு சொல்லப்பட்டது. कवचिभिः (கவசிபி:) (கவசிபி:) என்ற பதத்தால், கவசங்களைக்கூட கழட்டாமல் வருகிறார்களென்று தெரிகிறது. இதனால் சிவநிர்மால்யத்தை க்ரஹிக்கக்கூடிய ஸம்சுத்தி தங்களுக்கு போதாதென்று நினைத்துத்தான் சிவநிர்மால்யத்தில் வைமுக்யத்தை அடைந்தார்களே அன்னியில் வேறு காரணத்தை அங்கு கற்பிக்கமுடியாது. தாயினுடைய ஸந்நிதிக்குச் செல்வதிலோ, தாயாரால் கொடுக்கப்பட்ட உபஹாரங்களை வாங்கிக்கொள்வதிலோ, தாயாருக்கு தன்னிடமுள்ள ப்ரேமையை முன்னிட்டே, தன்னிடமுள்ள ஆசாரம், அனுசாரங்களை கவனிக்காமல் குழந்தைகள் தாயினிடம் செல்வதுண்டு. எவ்வளவு குற்றத்தைச் செய்திருந்தாலும் தாயாருக்கு குழந்தைகளிடம் வாத்ஸல்யம் உண்டெனபதில்,

पापानां वा शुभानां वा वधार्हाणां प्लवंगम ।
कार्यं करुणमार्येण न कश्चित् नापराध्यति ॥

பாபாநாம் வா ஶுபாநாம் வா வதா⁴ர்ஹாணாம் ப்லவங்க³ம ।
கார்யம் கருணமார்யேண ந கஶ்சித் நாபராத்⁴யதி ॥

பாபாநாம் வா சுபாநாம் வா வதார்ஹாநாம் ப்லவங்கம ।
கார்யம் கருணமார்யேண ந கச்சித் நாபராத்யதி ॥

என்ற பரதேவதையான ஸீதா தேவியினுடைய வார்த்தையே ப்ரமாணமாகும். ஆகையால், சிவநிர்மால்யத்தை நிஷேதித்திருக்கும் சாஸ்த்ரங்கள், அதை க்ரஹிக்கக்கூடிய ஸம்சுத்தி ப்ராணிகளுக்கு பெரும்பாலும் போதாது என்பதில்தான் தாத்பர்யமுள்ளதென்பதை அறியவும்.

மூன்ருவது கக்ஷியை விசாரித்தாலோ, அடியிற்கண்டபடி ஸமாதானத்தை அறியவும்:—

குமாரஸ்வாமி முதலானவர்கள், 'சண்டிகேச்வரருடைய பாகம்' என்று அறிந்து பரமேச்வரனுடைய நிர்மால்யத்தில் வைமுக்யத்தை அடைந்தார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. चण्डांशत्रिपुरहरनिर्माल्यविमुखैः (𑌚𑌣𑍍𑌡𑌾𑌂𑌶𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌰𑌹𑌰𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌵𑌿𑌮𑍁𑌖𑍈𑌃)(சண்டாம்சத்ரிபுரஹரநிர்மால்யவிமுகை:) என்ற பதமே அதில் ப்ரமாணமாகும் அதனுல்,

निवेदितस्य द्रव्यस्य भागोऽयं प्रथमः स्मृतः ।
चण्डीश्वरस्य देवस्य शिवभक्तस्य नान्यथा ॥

𑌨𑌿𑌵𑍇𑌦𑌿𑌤𑌸𑍍𑌯 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌭𑌾𑌗𑍋𑌽𑌯𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 ।
𑌚𑌣𑍍𑌡𑍀𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌶𑌿𑌵𑌭𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑌾 ॥

நிவேதிதஸ்ய த்ரவ்யஸ்ய பாகோயம் ப்ரதம: ஸ்ம்ருத: ।
சண்டீச்வரஸ்ய தேவஸ்ய சிவபக்தஸ்ய நாந்யதா ॥

என்ற சிவபுராண வசனத்தை அனுஸரித்து பரமசிவனுக்கு நிவேதனம் செய்த அன்னத்தில் முதன்முதலாக எடுக்கப்பட்ட பாகம் சண்டிகேச்வரரைச் சேர்ந்தது. சண்டிகேச்வரரோ சிவபக்தர்களில் முதன்மையானவரானதினுல், அவர்தான் அதைப் புஜிக்க யோக்யதை உள்ளவர். மற்றவர்களுக்கு அதிகாரமில்லையென்றும் தெரிகிறது. இதை அனுஸரித்தே பெரியோர்கள்

பூஜை செய்த பிற்பாடு, நிவேதனம் செய்த அன்னத்தின் மேல் பாகத்தை சண்டிகேச்வருருடைய பாகம் என்று க்ரஹித்து, அவருக்கு அர்ப்பணம் செய்வது அனுபவத்தில் இருந்துவருகிறது. ஆகையால் ப்ரக்ருதத்திலும் இவ்விதமென்றே அறியவும்.

குமாரஸ்வாமி முதலியவர்கள் போர் செய்து திரும்பிவருவதற்கு முன்பு சிவபூஜை முதலியவைகள் பார்ஷத கணங்களால் செய்யப்பட்டு, சண்டிகேச்வர பலியும் போடப்பட்டு, நிவேதனம் செய்யப்பட்ட மீதியுள்ள பதார்த்தங்கள் அம்பாளுடைய ஸந்நிதிக்கு போய்விட்டது. சண்டிகேச்வரருடைய பலி பாகத்தையோ, சண்டிகேச்வரர் மஹா பக்தசிரோமணியானதினால் 'சூரபத்மாவுடன் யுத்தம்முடிந்துவிட்டது குமாரஸ்வாமி தகப்பனுரை நமஸ்கரிக்க வரக்கூடும், வந்தால் வேறுபாகம் இல்லாததினால், நமது பாகத்தை பரமேச்வரன் அநுக்ரஹபூர்வமாக குமாரஸ்வாமிக்குக் கொடுக்கட்டும்' என்ற எண்ணத்தால்தான் அதை புஜிக்காமலே இருந்துவந்தார். இதைக் கவணித்தே குமாரஸ்வாமியும், 'பாக்கி நிவேதனபாகம் அம்பாளிடம் போய்ச் சேர்ந்துவிட்டது; சண்டிகேச்வரருடைய பாகம் மாத்ரம்தான் சிவஸந்நிதியிலிருக்கிறது; இந்த ஸமயம் நாம் தகப்பனுரிடம் சென்ருல், தகப்பனுர் நம்மிடமுள்ள வாச்ஸல்யத்தால் அந்த பாகத்தை நம்மிடம் கொடுத்துவிடுவார்; அது தர்மமாகாது; 'சிவபக்த த்ரோஹமாகும்' என்று நினைத்து, சிவனிடம் செல்லாமல் தாயினிடம் சென்ருர் என்ற அபிப்ராயத்தைத் தெரிந்துக்கொள்ளவும். இதைத்தான் பகவத்பாதாள் चण्डांश (𑌚𑌣𑍍𑌡𑌾𑌂𑌶) (சண்டாம்ச) என்ற பதத்தில் अंश (𑌅𑌂𑌶) (அம்ஸம்) என்ற பதத்தினுல் வெளிப்படுத்துகின்ருர்கள். अंश (𑌅𑌂𑌶) (அம்சம்) என்ருல் பாகம் என்று அர்த்தம். சிவனுக்கு நிவேதனம் செய்யப்பட்டது முழுவதையும் என்று அர்த்த

மில்லை. இதனால் சிவனுக்கு நிவேதனம் செய்யப் பட்ட பதார்த்தங்களில் முதலில் க்ரஹிக்கப்படும் பாகம் சண்டிகேச்வருடைய பாகமானதினால், அதை புசிக்க ப்ராணிகளுக்கு அதிகாரமில்லை என்றுதான் தெரிந்துகொள்ள வேண்டுமென்னியில், சிவனுக்கு நிவேதனம் செய்யப்பட்ட எல்லா பாகமும் தள்ளத் தகுந்தது எனறு நினைப்பது சிவபக்தி யில்லாதவர் களுடைய ஸாஹஸந்தான் என்பது நிச்சயம்.

குமாரஸ்வாமி முதலானவர்கள் தாயாருடைய ஸந்நிதிக்குச்சென்று தாயை நமஸ்கரித்தார்கள். நமஸ் கரித்துவிட்டு, "தாயே! உன் அருளால் சூரபத்மா முத லானவர்களை ஜயித்துவிட்டேன்" என்று ஜயவார்த் தைகளை உத்கோஷித்தார்கள். இந்த ஸந்தர்ப்பத்தில் அம் பாளும் காமேச்வரனுக்கு நிவேதனம் செய்யப்பட்டு சண்டிகேச்வருடைய பாகம் போகத் தன்னிடம் வந்த மீதி பாகங்களை, தானும் புசித்து, தாம்பூல சர்வணம் செய்துகொண்டிருக்கும் ஸமயமாகும். சந்த்ரனைப் போல் மிகவும் வெளுப்பான பச்சைகற்பூர துண்டு களோடு தன் பற்களால் கடிக்கப்பட்ட திவ்ய கற்பூர தாம்பூலத்தை குமாரஸ்வாமி முதலானவர் களுக்கு பரம அனுக்ரஹத்துடன் உமிழ்ந்து, அதை எடுத்து உட்கொள்ளும்படி ஆக்ஞாபித்தாள். குமார ஸ்வாமி முதலானவர்களும் அதை எடுத்து நன்றாக மென்று புசித்ததிலிருந்தும் பரமானந்த பரிதர்களாக வும், அககாரணத்தால் விசேஷமாக குமாரஸ்வாமி ஞானபண்டிதராகவும் ஆனார் என்று மேற்கண்ட ச்லோகத்தின் அபிப்ராயமானது வெளியாகிறது.

இவ்விதம் தேவியை உபாஸிக்கிறவர்கள், தேவியி னுடைய அனுக்ரஹத்தால் ஸகல வித்யாபாரங்கதர் களாக ஆவார்கள்.

ஸம்ஸ்ரணி ப்ரயோகம். ஜீவசக்ர பூஜை செய்து, ஸுவா ஸன த்ரவ்யலேபனம் செய்யவும். சாம்பிராணி தூபம் கொடுத்து ஜபிக்கவும். ஸகலமும் ஜயம்.

## 66. அம்பாளுடைய வாக்விலாஸ வர்ணனை.

विपञ्च्या गायन्ती विविधमपदानं पशुपते-
स्त्वयारब्धे वक्तुं चलितशिरसा साधुवचने ।
तदीयैर्माधुर्यैरपलपिततन्त्रीकलरवां
निजां वीणां वाणी निचुलयति चोलेन निभृतम् ॥ ६६ ॥

𑌵𑌿𑌪𑌞𑍍𑌚𑍍𑌯𑌾 𑌗𑌾𑌯𑌨𑍍𑌤𑍀 𑌵𑌿𑌵𑌿𑌧𑌮𑌪𑌦𑌾𑌨𑌂 𑌪𑌶𑍁𑌪𑌤𑍇-
𑌸𑍍𑌤𑍍𑌵𑌯𑌾𑌰𑌬𑍍𑌧𑍇 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌚𑌲𑌿𑌤𑌶𑌿𑌰𑌸𑌾 𑌸𑌾𑌧𑍁𑌵𑌚𑌨𑍇 ।
𑌤𑌦𑍀𑌯𑍈𑌰𑍍𑌮𑌾𑌧𑍁𑌰𑍍𑌯𑍈𑌰𑌪𑌲𑌪𑌿𑌤𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍀𑌕𑌲𑌰𑌵𑌾𑌂
𑌨𑌿𑌜𑌾𑌂 𑌵𑍀𑌣𑌾𑌂 𑌵𑌾𑌣𑍀 𑌨𑌿𑌚𑍁𑌲𑌯𑌤𑌿 𑌚𑍋𑌲𑍇𑌨
𑌨𑌿𑌭𑍃𑌤𑌮𑍍 ॥ ௬௬ ॥

விபஞ்ச்யா காயந்தீ விவிதமபதாநம் பசுபதே-
ஸ்த்வயாரப்தே வக்தும் சலிதசிரஸா ஸாதுவசநே ।
ததீயைர்மாதுர்யைரபலபிததந்த்ரீகலரவாம்
நிஜாம் வீணாம் வாணீ நிசுலயதி சோலேந நிப்ருதம்
॥ 66 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பரதேவதையே!

पशुपतेः (𑌪𑌶𑍁𑌪𑌤𑍇𑌃) (பசுபதே:) = பரமேச்வரனுடைய

विविधं (𑌵𑌿𑌵𑌿𑌧𑌂) (விவிதம்) = நானாவிதமான

अपदानं (𑌅𑌪𑌦𑌾𑌨𑌂) (அபதானம்) = சரித்ரத்தை

विपञ्च्या (𑌵𑌿𑌪𑌞𑍍𑌚𑍍𑌯𑌾) (விபஞ்ச்யா) = வீணையில்

गायन्ती (மாயஜீ) (காயந்தீ) = கானம் செய்கின்ற

वाणी (வாணீ) (வாணீ) = ஸரஸ்வதியானவள்

चलितशिरसा (அலிதஶிரஸா) (சலிதசிரஸா) = மிகவும் ஸந்தோஷத்தால் தலையை அசைக்கின்ற

त्वया (க்வயா) (த்வயா) = உன்னுல்

वक्तुं (வக்தும்) (வக்தும்) = சொல்லுவதற்கு

साधुवचने (ஸாயுவசநெ) (ஸாதுவசநே) = "ஸபாஷ்" என்ற சப்தமானது

आरब्धे सति (ஆர஬்ெ ஸதி) (ஆரப்தே ஸதி) = ஆரம்பிக்கப்பட்ட பொழுது

तदीयैः (தீயைஃ) (ததீயை:) = அந்த வார்த்தையின் ஸம்பந்தமான

माधुर्यैः (மாயுயைஃ) (மாதுர்யை:) = மதுரமான குணங்களால்

अपलपिततन्त्रीकलरवां (அவலவித தந்ரீகலரவாம்) (அபலபிததந்த்ரீகலரவாம்) = பரிஹஸிக்கப்பட்ட தந்தியின் சப்தத்தோடு கூடின

निजां वीणां (நிஜாம் வீணாம்) (நிஜாம் வீணும்) = தன்னுடைய வீணையை

चोलेन (சொலெந) (சோலேன) = உரைத்துணியால்

निभृतं (நிஹுதம்) (நிப்ருதம்) = சப்தமில்லாமலிருக்கும் படி

निचुलयति (நிசுலயதி) (நிசுலயதி) = மறைக்கின்றுள்.

தாத்பர்யம் :—தேவியினுடைய தர்பாரில், சரஸ்வதி தேவியானவள் ஒரு ஸந்தர்ப்பத்தில் வீணைக் கச்சேரி செய்தாள். ஸரஸ்வதீ தேவியானவள் மஹா புத்திமதியானதினால், "நமது யஜமானியான பரதேவதை தன் பர்த்தாவான பரமேச்வரனுடைய சரித்ரத்தைத் தவிர வேறு கதைகளைக் காதால் கேட்க மாட்டாள்" என்ற உண்மையை அறிந்து, பசுபதியினுடைய சரித்ரங்களையே கீர்த்தனங்களாகச் செய்து வீணையில் வாசித்தாள். த்ரிபுரஸம்ஹார சரித்ரம் காலகூட விஷத்தை பானம் செய்து லோகத்தை ரக்ஷித்த புண்ய கதை, மார்க்கண்டேயன் என்ற தன் பக்தனுக்காக காலனை இடதுகாலால் உதைத்துத் தள்ளிய கதை, பாண்டியராஜதனயையாக தேவி அவதாரம் செய்த ஸமயத்தில் பரமேச்வரன் தேவியை பரிணயம் செய்துகொண்ட கதை, பார்வதீ பரிணயம் முதலான சரித்ரங்களை ப்ரகாசப்படுத்தக்கூடிய திவ்ய கீர்த்தனைகளை வீணையினுடைய தந்திகளில் ஸ்பஷ்டமாகக் காட்டி, தர்பாரிலுள்ள ஸகல தேவர்களையும், விசேஷமாக ஸபாநாயகியான பரதேவதையையும் ஸந்தோஷிக்கச் செய்துவந்தாள். பரதேவதைக்கோ, மனதிற்குள் பரம ஸந்தோஷமேற்பட்டு விட்டது. பர்த்தாவான பசுபதியினுடைய சரித்ரத்தையே ஸரஸ்வதீதேவியானவள் வீணையில் கானம் செய்ததே தேவியின் ஸந்தோஷத்திற்கு காரணமாகும். அதிலும், ஸரஸ்வதிதேவியே வீணையை வாசிக்கும்பொழுது, அங்குள்ள தேவர்கள் ஸந்தோஷப்படவோ, ஸபாநாயகியான பரதேவதை ஆச்சர்யப்படவோ காரணங்கள் பரிபூர்ணமாக நிறைந்திருக்கின்றன. அதனால் ஸபாநாயகியான பரதேவதைக்கு ஸந்தோஷம் பூரித்துப்போய் "ஸபாஷ்" என்ற சப்தத்தைச் சொல்ல ஆரம்பித்தாள். இந்த "ஸபாஷ்" என்னும் சப்தத்தினின்றும் பெருகுகிற மதுர ரஸமோ அளவற்ற தித்திப்புள்ளதாக விளங்கிவந்தது. ஸரஸ்வதிதேவியினுடைய வீணையிலுள்ள தந்திகளின்

நாதத்தைக் காட்டிலும் பரதேவதையினுடைய வாக் விலாஸத்திலுள்ள மதுர ரஸமானது அதிக ஆனந்த முள்ளதாக இருக்கின்றது. இதனுல் ஸரஸ்வதீ தேவிக்கு மிகவும் லஜ்ஜை ஏற்பட்டுவிட்டது. ஸரஸ்வதீ தேவியின் வீஞை நாதமும் பரதேவதையி னுடைய வாக்விலாஸத்தால் பரிஹஸிக்கப்பட்டதா கவே ஆகிவிட்டது, “இனி நாம் வீணை வாசித்தால் ஸபையோர்களை ரஸிக்கச் செய்யமுடியாது” என்ற எண்ணத்துடன் ஸரஸ்வதீதேவி வீணையை உரையில் போட்டு மூடிவைத்துவிட்டு, தேவியினுடைய வாக் மாதுர்யத்தை பானம் செய்வதிலேயே ச்ரத்தையுள்ள வளாக ஆனுள். இதனுல் வீஞநாதத்தைக்காட்டிலும் தேவியினுடைய வாக்விலாஸம் மிகவும் மேலானதென் றும், மாதுர்யமுள்ளதென்றும், நவரஸ கர்ப்பிதமென் றும் வெளியாகிறது இவ்விதம் தேவியினுடைய வாக்விலாஸத்தை அனுஸந்தானம் செய்துகொண்டு, தேவியை உபாஸிப்பவர்கள் மதுரமான வாக்விலாஸத் தால் ஸகல ஜனங்களையும் தன் வசமாக்கிக்கொள்ப வர்களாக ஆவார்கள்.

ஸகல ஜனவச்யம்; ரோகம் தீரும். தினம் 25,000வீதம் 3 தினம் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யவும். பீஜாக்ஷரம்; ஶ்ரீம், ஶ்ரீம் (ஸ்ரீ:, ஸ்ரீம்).

---

## 67. தேவியினுடைய முகவாய்க்கட்டையின் வர்ணனை

करा्ग्रेण स्पृष्टं तुहिनगिरिणा वत्सलतया
गिरीशेनोदस्तं मुहुरधरपानाकुलतया ।
करग्राह्यं शंभोर्मुखमुकुरवृन्तं गिरिसुते
कथंकारं ब्रूमस्तव चुबुकमौपम्यरहितम् ॥ ६७ ॥

𑌕𑌰𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌂 𑌤𑍁𑌹𑌿𑌨𑌗𑌿𑌰𑌿𑌣𑌾 𑌵𑌤𑍍𑌸𑌲𑌤𑌯𑌾
𑌗𑌿𑌰𑍀𑌶𑍇𑌨𑍋𑌦𑌸𑍍𑌤𑌂 𑌮𑍁𑌹𑍁𑌰𑌧𑌰𑌪𑌾𑌨𑌾𑌕𑍁𑌲𑌤𑌯𑌾 ।
𑌕𑌰𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌂 𑌶𑌂𑌭𑍋𑌰𑍍𑌮𑍁𑌖𑌮𑍁𑌕𑍁𑌰𑌵𑍃𑌨𑍍𑌤𑌂 𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇
𑌕𑌥𑌂𑌕𑌾𑌰𑌂 𑌬𑍍𑌰𑍂𑌮𑌸𑍍𑌤𑌵 𑌚𑍁𑌬𑍁𑌕𑌮𑍌𑌪𑌮𑍍𑌯𑌰𑌹𑌿𑌤𑌮𑍍
॥ ௬௭ ॥

கராக்ரேண ஸ்ப்ருஷ்டம் துஹிநகிரிணா வத்ஸலதயா
கிரீசேநோதஸ்தம் முஹுரதரபாநாகுலதயா ॥
கரக்ராஹ்யம் சம்போர்முகமுகுரவ்ருந்தம் கிரிஸுதே
கதம்காரம் ப்ரூமஸ்தவ சுபுகமௌபம்யரஹிதம் ॥ 67 ॥

हे गिरिसुते (𑌹𑍇 𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇) (ஹே கிரிஸுதே) = ஹே பர்வதராஜனுடைய பெண்ணான பார்வதியே!

तुहिनगिरिणा (𑌤𑍁𑌹𑌿𑌨𑌗𑌿𑌰𑌿𑌣𑌾) (துஹிநகிரிணு) = தகப்பனரான ஹிமவானுல்

वत्सलतया (𑌵𑌤𑍍𑌸𑌲𑌤𑌯𑌾) (வத்ஸலதயா) = ப்ரீதியுடன்

कराग्रेण (𑌕𑌰𑌾𑌗𑍍𑌰𑍇𑌣) (கராக்ரேண) = நுனிக்கையினால்

स्पृष्टं (𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌂) (ஸ்ப்ருஷ்டம்) = தொடப்பட்டதாயும்

गिरिशेन (𑌗𑌿𑌰𑌿𑌶𑍇𑌨) (கிரீசேந) = பரமசிவனால்

मुहुः (𑌮𑍁𑌹𑍁𑌃) (முஹு:) = அடிக்கடி

अधरपानाकुलतया (𑌅𑌧𑌰𑌪𑌾𑌨𑌾𑌕𑍁𑌲𑌤𑌯𑌾) (அதரபாநாகுலதயா) அதரபானம் செய்வதில் ஆசையோடு கூடிக் கொண்டிருக்குங் காரணத்தால்

उदस्तं (𑌉𑌦𑌸𑍍𑌤𑌂) (உதஸ்தம்) = உயரத் தூக்கப்பட்டதாயும்

शम्भोः (𑌶𑌮𑍍𑌭𑍋𑌃) (சம்போ:) = பரமேச்வரனுடைய

करग्राह्यं (𑌕𑌰𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌂) (கரக்ராஹ்யம்) = கையால் தொடத்தகுந்தாயும்

औपम्यरहितं (𑌔𑌪𑌮𑍍𑌯𑌰𑌹𑌿𑌤𑌂) (ஔபம்யரஹிதம்) = உபமானமற்றதாயும்

मुखमुकुरवृन्तं (𑌮𑍁𑌖𑌮𑍁𑌕𑍁𑌰𑌵𑍃𑌨𑍍𑌤𑌂) (முகமுகுரவ்ருந்தம்) = உன் முகமாகிய கண்ணாடிக்கு பிடிபோல் இருக்கிற

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

चुबुकं (𑌚𑍁𑌬𑍁𑌕𑌂) (சுபுகம்) = முகவாய்க்கட்டையை

कथंकारं (𑌕𑌥𑌂𑌕𑌾𑌰𑌂) (கதம்காரம்) = எப்படித்தான்

ब्रूमः (𑌬𑍍𑌰𑍂𑌮𑌃) (ப்ரூம:) = வர்ணனை செய்வது.

தாத்பர்யம்:—தேவியினுடைய முகம் நிர்மலமான கண்ணுடிபோல் விளங்கிவருகிறது. இவ்விதமான கண்ணுடிக்கு தேவியின் முகவாய்க்கட்டை என்ற ப்ரதேசமானது கைப்பிடிபோல் பாஸித்துவருகிறது. இதனுடைய ஸௌந்தர்யாதிசயத்தை மற்ெருரு ப்ர தேசத்தில் பார்க்க முடியாததினுல், அதைத்தான் எப்படி வர்ணிப்பதென்று பரமாசார்யாள் கவலையை அடைகிருர்கள். பர்வதராஜனுன ஹிமாவானே, தன் புத்ரியானதினுல், வாத்ஸல்யத்துடன் அடிக்கடி தன் கைவிரல் நுனிகளினுல் அம்பாளின் முகவாய்க்கட்டை யைத் தொடுவதுண்டு.

ப்ரேமை என்ற விச்வாஸமானது, புத்ரன், புத்ரி இவர்களிடம் ஏற்படும்பொழுது அதை வாத்ஸல்ய மென்று சொல்லப்படும்; பார்யையினிடம் ஏற்படும் பொழுது ப்ரியம் என்று சொல்லப்படும்; சிஷ்யர் களிடம் ஏற்படும்பொழுது அனுக்ரஹம் என்று சொல்லப்படும்; தனக்கு மேலானவர்களிடம் ஏற் படும்பொழுது அதேதான் பக்தி என்று சொல்லப் படும். ப்ரேமை என்ற ஒரே பொருள், விஷயத்தின் பேதத்தால் வெவ்வேருக ஆகின்றது. அதிலும், புத்ரர்களில், கௌண புத்ரர்கள் என்றும்; பத்னி யிலும், கௌண பத்னி என்றும்; சிஷ்யர்களிலும் கௌண சிஷ்யர்கள் என்றும்; தனக்கு வயதில் பெரி யோர்களிலும், கௌணமான பெரியோர்களென் றும் சொல்லுகிற வழக்கமுண்டு. அந்யனுனுலும் தன்னுடைய புத்ரனைப்போல கல்பிக்கப்பட்டு அபிமா னத்திற்கு விஷயமாகின்றவன், கௌண புத்ரனு வான். இவ்விதமே, அக்னி முகமாக க்ரஹிக்கப் பட்ட பத்னி முக்ய பத்னியாகுவாள். அக்னி ஸம்பந்தமில்லாத தன் போகத்திற்காக க்ரஹிக் கப்பட்ட ஸ்த்ரீ கௌண பத்னியாகுவாள். மந்த் ரோபதேசங்களால் க்ரஹிக்கப்பட்ட சிஷ்யன் முக்ய சிஷ்யனுகுவான்; மந்த்ரோபதேசங்களில்லாது அபிமா

னத்தால் க்ரஹிக்கப்பட்ட சிஷ்யன், கௌண சிஷ்ய ணுவான். இது போலவே, தான் ஜனித்த தாயி னிடம் தனக்கு முன்பு உண்டானவன் முக்யமான அக்ரஜனுக ஆவான். தான் ஜனித்த இடத்தில் ஜனிக்காமல், மற்ற இடத்தில் தனக்கு முன் ஜனித்த வர்கள் கௌணமான தமயன்களாக ஆவார்கள். இந்த நான்கு பதார்த்தங்கள்தான் ப்ரேமைக்கு விஷய மான பதார்த்தங்களாகும். இவைகள் கௌணமா ணுலும், முக்யமாணுலும் ஸமம்தான். ப்ரேமை, புத்ரா களிடத்தில் ஏற்படும்பொழுது வாத்ஸல்யமென்றும்; பார்யாதிகளிடம் ஏற்படும்பொழுது ப்ரியமென்றும்; சிஷ்யர்களிடம் ஏற்படும்பொழுது அனுக்ரஹ மென்றும் சொல்லப்படும்.

ப்ரக்ருதத்தில், பர்வதராஜனுடைய புத்ரியான தேவியோ பர்வதராஜனுக்கு முக்யமான புத்ரியல்ல. ஹிமவானுடைய க்ஷேத்ரமாகிய மேனை என்றவளிடம் தேவி ஜனித்தவளல்ல. அயோநிஜையாக ஹிமவா னுடைய தபோபலத்தால் உண்டானவள். கௌணத் திலும், முக்யத்திலும் ப்ரேமை ஸமானமானதென் பதை மேலே சொன்னேம். ஆகையால், பார்வதி யானவள் கௌணமான புத்ரியாணுலும், முக்யமான புத்ரியைப் போல் ஹிமவானுக்கு பார்வதியினிடம் வாத்ஸல்யமென்ற ப்ரேமை ஏற்பட்டு, தன்னுடைய கைகளினுடைய நுனிகளினுல் தேவியி னுடைய முகவாய்க்கட்டையை ஹிமவான் அடிக் கடி தொடுகின்ற வழக்கமுண்டு. வாத்ஸல்யம் எந்தக் குழந்தையினிடம் இருக்கின்றதோ, அந்தக் குழந்தை யின் முகவாய்க்கட்டையை தாய், தந்தைகள் தங்கள் விரலினுடைய நுனியினுல் தொட்டு வேடிக்கை காட்டிச் சிரிக்கச் செய்கின்ற வழக்க முண்டு. அதுபோலவே ப்ரக்ருதத்திலும் அறியவும்,

பரமேச்வரனே தனக்கு முக்ய பத்னியானதினால் அகண்டமான ப்ரியத்தை தேவியினிடம் வைத்து, அதராம்ருதபானம் செய்யவேண்டு மென்ற ஆசையினால் தேவியினுடைய முகவாய்க்கட்டையைத் தூக்கித் தூக்கி நிமித்துகிற வழக்கமுண்டு. ப்ரியத்துடன் தேவியினுடைய முகவாய்க்கட்டையை கையினால் தொடுவதில் பரமேச்வரனைத்தவிர மற்றவர்களுக்கு அதிகாரமில்லை. வாத்ஸல்யத்தால் தகப்பனாரான ஹிமவானுடைய கைகளினுடைய நுனிகளினாலும் ப்ரியத்தால் பரமேச்வரனுடைய கைகளினாலும் தொடப்படுங்காரணத்தால், தேவியினுடைய முகவாய்க்கட்டை என்ற ப்ரதேசத்தின் ஸௌபாக்யமானது அபாரமாக விளங்குகிறது.

தேவியினுடைய முகத்தையோ கண்ணாடி என்றும், முகவாய்க்கட்டையைக் கண்ணாடியில் கைப்பிடி என்றும் வர்ணிக்கப்பட்டது. லோகத்திலுள்ள ஏதாவதொரு கண்ணாடியின் கைப்பிடி பரமேச்வரனுடைய கைகளால் நிமித்தப்பட்டதாயும், ஹிமவானுடைய கையால் தொடப்பட்டதாயு மிருந்தால், அதை த்ருஷ்டாந்தமாக வைத்துக்கொண்டு தேவியினுடைய முகவாய்க்கட்டையை, முகமாகிற கண்ணாடிக்குக் கைப்பிடி என்று வர்ணிக்கலாம். இவ்விதமான த்ருஷ்டாந்தமும் அகப்படாததினால்; தான் எப்படி இதை வர்ணிப்பதென்று ஆசார்யாள் சொல்லுகிறார்கள். இவ்விதம் தேவியின ஸ்வரூபத்தை த்யானம் செய்து உபாஸிப்பவர்களுக்கு ஸகல வித்யாதத்வங்களும், கண்ணாடியில் ப்ரதிபிம்பம் ப்ரகாசிப்பதுபோல், ஸ்வயமாகவே ப்ரகாசிக்குமென்பதையும் அறியவும்.

ஸ்வர்ணயந்த்ரம்: பீஜாக்ஷரம் க்லீம், க்லீம், க்லீம் (க்லீம், க்லீம், க்லீம்) தினம் 1000 வீதம், 45 தினங்கள் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யவும். தேவி ப்ரஸன்னமாவாள். ராஜவச்யம்; நினைத்தது கைகூடும்.

## 68. தேவியின் கண்ட (கழுத்து) பாக வர்ணனை.

भुजाश्लेषान्नित्यं पुरदमयितुः कण्टकवती
तव ग्रीवा धत्ते मुखकमलनालश्रियमियम् ।
स्वतः श्वेता कालागुरुबहुलजम्बालमलिना
मृणालीलालित्यं वहति यदधो हारलतिका ॥ ६८ ॥

புஜாஶ்லேஷாந்நித்யம் புரதமயிது: கண்டகவதீ
தவ க்ரீவா தத்தே முககமலநாலஶ்ரியமியம் ।
ஸ்வத: ஶ்வேதா காலாகுருபஹுலஜம்பாலமலிநா
ம்ருணாலீலாலித்யம் வஹதி யததோ ஹாரலதிகா
॥ ௬௮ ॥

புஜாச்லேஷாந்நித்யம் புரதமயிது: கண்டகவதீ
தவ க்ரீவா தத்தே முககமலநாலச்ரியமியம்।
ஸ்வத: ச்வேதா காலாகுருபஹுளஜம்பாலமலிநா
ம்ருணாலீலாலித்யம் வஹதி யததோ ஹாரலதிகா ॥ 68 ॥

हे भगवति (ஹே பகவதி) (ஹே பகவதி) = ஹே பராசக்தியான தாயே!

नित्यं (நித்யம்) (நித்யம்) = தினந்தோறும்

पुरदमयितुः (புரதமயிது:) (புரதமயிது:) = த்ரிபுராஸுரனை ஸம்ஹாரம் செய்த பரமேச்வரனுடைய

भुजाश्लेषात् (புஜாஶ்லேஷாத்) (புஜாச்லேஷாத்) = கைகளால் செய்யப்பட்ட ஆலிங்கனத்தால்

कण्टकवती (கணடகவதீ (கண்டகவதி) = ரோமாஞ்ஜத்தோடு கூடின

तव (தவ) (தவ) = உன்னுடைய

इयं (இயம்) (இயம்) = இந்த

ग्रीवा (க்ரீவா) (க்ரீவா) = கழுத்தானது

मुखकमलनालश्रियं (முககமல நாலஶ்ரியம்) (முககமல நாலச்ரியம்) = முகமாகிய தாமரஸப் புஷ்பத்திற்கு முள்ளோடு கூடிய தாமரைப் புஷ்பத்தின் காம்புபோல் உள்ள சோபையை

धत्ते (தத்தே) (தத்தே) = தரிக்கின்றது

यत् (யத்) (யத்) = யாதொரு காரணத்தால்

अधः (அத:) (அத:) = கீழ் ப்ரதேசத்திலுள்ளதாயும்

स्वतः (ஸ்வத:) (ஸ்வத:) = இயற்கையில்

श्वेता (ஶ்வேதா) (ச்வேதா) = வெளுப்பாயும் உள்ள

हारलतिका (ஹாரலதிகா) (ஹாரலதிகா) = முத்துமாலையானது

कालागुरुबहुलजम्बालमलिना सति (காலாகுருபஹுல ஜம்பாலமலிநா ஸதி) (காலாகுருபஹுல ஜம்பாலமலிநா ஸதி) = நல்ல வாஸனை உள்ள அகருக்கட்டைப் பொடிகள் அதிகமாகப்போட்டு குழைக்கப்பட்ட சந்தனத்தால் கருப்பான வர்ணத்தோடு கூடிக் கொண்டதாகக் கொண்டு

मृणालीलालित्यं (ம்ருணாலீலா   =தாமரைக் கொடியின்
விதயம்) (ம்ருணுலீலா   ஸௌபாக்யத்தை
லித்யம்)
वहति (வஹதி) (வஹதி)   =வஹிக்கின்றதோ.

தாத்பர்யம்:—த்ரிபுரஸம்ஹாரமூர்த்தியான காமேச்வரன் தன் கைகளால் அம்பாளுடைய கழுத்தை அடிக்கடி கட்டிக்கொண்டு ஆலிங்கனம் செய்வதின் காரணத்தால், தேவிக்கு மயிர்கூச்சல் ஏற்பட்டு, புளகாங்கிதமாக தேவீயின் கண்டபாகம் விளங்கிவருகிறது. இந்த ஸந்தர்ப்பத்தில் ஸூக்ஷ்மமான முள்ளுகள் கண்டபாகத்தில் இருப்பதுபோல் விளங்கிவருகிறது. தாமரைப் புஷ்பத்தின் தண்டும் சிறிய முள்ளுகளோடு கூடியதாக இருக்கும். தேவியினுடைய முகத்தை கவனித்தாலோ, மலர்ந்த தாமரைப் புஷ்பம்போல் பாஸிக்கின்றது. தேவியின் முகமாகிய தாமரைப் புஷ்பத்திற்கு, தேவியின் கண்டமானது நாளம் (தண்டு) போல் சோபையுடன் கூடி விளங்கி வருகிறது. தாமரைப் புஷ்பத்தினுடைய அடித்தண்டுக்குக் கீழ்பாகத்தில் கருப்பான தாமரைக் கொடிகள் வளர்ந்திருக்கும். இதுபோலவே, தேவியினுடைய கழுத்திற்குக் கீழ்பாகத்தில் அலங்கரிக்கப்பட்டிருக்கும் முத்து ஸரங்கள், நாளத்தினுடைய அடிப்பாகத்திலுள்ள கொடிகளோ என்றும் தோன்றுகிறது. தாமரைக் கொடிபோல், முத்து ஸரங்களும் கருப்பாகவே இருந்துவருகிறது. ஆனால், முத்துமாலைகள் இயற்கையில் வெளுப்பானவைகளே. ஆகிலும், அகருக்கட்டையின் பொடிகள் நல்ல திவ்ய வாஸனை உள்ளவைகளானதினுல், அதை ஸ்வயமாயும் குழைத்து மார்பில் பூசிக்கொள்ளும் வழக்கமுண்டு; சந்தனத்திலும் கலந்து பூசிக்கொள்ளும் வழக்கமுண்டு. அம்பாள் இவ்விதம் தன் மார்பில் காமேச்வரனுடைய கைகளால் பூசப்பட்டு விளங்கி

வருகிறபடியால், அகருச்சந்தனங்கள் முத்துமாலைகளில் பட்டு, முத்துமாலைகளும் கருப்பாக ஆகிவிட்டது. அதிஸூக்ஷ்மமாக அம்மாலைகளில் அநேக ஸரங்கள் தொங்குகின்றபடியால், மேற்சொன்ன அகருச்சந்தன ஸம்பந்தத்தால் கருப்பாயு மிருக்கின்றபடியால் தாமரைத் தண்டின் அடிபாகத்திலுள்ள தாமரைக் கொடி என்றே ஊஹிக்கவேண்டியதாக இருக்கிறது. இவ்விதமான ஸௌபாக்யத்துடன் கூடினதாக தேவியின் கண்டபாகம் விளங்குகிறது.

இவ்விதம், மேற்கண்டபடி தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறவர்களுக்கு ஸத்வாஸனை மேலிட்டு க்ருதார்த்ததையும் ஏற்படும்.

अन्तर्यागक्रमाराध्या (𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌗𑌕𑍍𑌰𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯𑌾) என்ற நாமாவளியில் சொல்லப்பட்ட अन्तर्याग (𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌗) ப்ரயோகம் இந்த ச்லோகத்தால் சொல்லப்படுகிறது. இது மிகவும் ரஹஸ்யமானதினால் குருமுகமாகத் தெரிந்துகொள்ளவும்.



## 69. தேவியினுடைய கண்டதேசத்தில் காணப்படும் த்ரிவளீ என்று சொல்லப்படும் ஸூக்ஷ்மமான மூன்று ரேகைகளின் வர்ணனை.

गले रेखास्तिस्रो गतिगमकगीतैकनिपुणे
विवाहव्यानद्धप्रगुणगुणसंख्याप्रतिभुवः ।
विराजन्ते नानाविधमधुररागाकरभुवां
त्रयाणां ग्रामाणां स्थितिनियमसीमान इव ते ॥ ६९ ॥

𑌗𑌲𑍇 𑌰𑍇𑌖𑌾𑌸𑍍𑌤𑌿𑌸𑍍𑌰𑍋 𑌗𑌤𑌿𑌗𑌮𑌕𑌗𑍀𑌤𑍈𑌕𑌨𑌿𑌪𑍁𑌣𑍇
𑌵𑌿𑌵𑌾𑌹𑌵𑍍𑌯𑌾𑌨𑌦𑍍𑌧𑌪𑍍𑌰𑌗𑍁𑌣𑌗𑍁𑌣𑌸𑌂𑌖𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑍁𑌵𑌃 ।
𑌵𑌿𑌰𑌾𑌜𑌨𑍍𑌤𑍇 𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌮𑌧𑍁𑌰𑌰𑌾𑌗𑌾𑌕𑌰𑌭𑍁𑌵𑌾𑌂
𑌤𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌂 𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌣𑌾𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌨𑌿𑌯𑌮𑌸𑍀𑌮𑌾𑌨 𑌇𑌵 𑌤𑍇
॥ ௬௯ ॥

கலே ரேகாஸ்திஸ்ரோ கதிகமககீதைகநிபுணே
விவாஹவ்யாநத்தப்ரகுணகுணஸம்க்யாப்ரதிபுவ: ।
விராஜந்தே நாநாவிதமதுரராகாகரபுவாம்
த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதிநியமஸீமாந இவ தே
॥ 69 ॥

गतिगमकगीतैकनिपुणे (𑌗𑌤𑌿𑌗𑌮𑌕𑌗𑍀𑌤𑍈𑌕𑌨𑌿𑌪𑍁𑌣𑍇) (கதிகமககீதைகநிபுணே) = गति-மார்க்கம், தேசி என்ற கதிகளுடனும், गमक – ஐந்துவிதமான ஸ்வரகமகங்களுடனும் गीत - பாடுவதில் एकनिपुणे - முக்யமான பாண்டித்யமுள்ள ஹே பரதேவதையே!

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

गले (𑌗𑌲𑍇) (கலே) = கண்டத்திலிருக்கிற

तिस्रः (𑌤𑌿𑌸𑍍𑌰𑌃) (திஸ்ர:) = மூன்று

रेखाः (𑌰𑍇𑌖𑌾𑌃) (ரேகா:) = (பாக்யத்தை ஸூசிப்பிக்கும்) ரேகைகள்

विवाहव्यानद्धप्रगुणगुणसंख्याप्रतिभुवः (𑌵𑌿𑌵𑌾𑌹𑌵𑍍𑌯𑌾𑌨𑌦𑍍𑌧𑌪𑍍𑌰𑌗𑍁𑌣𑌗𑍁𑌣𑌸𑌂𑌖𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑍁𑌵𑌃) (விவாஹவ்யாநத்தப்ரகுணகுணஸம்க்யாப்ரதிபுவ:) = விவாஹ காலத்தில் மாங்கல்ய ஸூத்ரத்தோடு சேர்த்து பரமேச்வரனால் கட்டப்பட்ட ஸூக்ஷ்மமான சரடுகளால் முறுக்கப்பட்ட மூன்றுவிதமான கயிறுகளை ஞாபகப்படுத்துவதாயும்

नानाविधमधुररागाकरभुवां (𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌮𑌧𑍁𑌰𑌰𑌾𑌗𑌾𑌕𑌰𑌭𑍁𑌵𑌾𑌂) (நாநாவிதமதுர ராகாகரபுவாம்) = नानाविध - அநேக ப்ரகாரங்களாயும், मधुर - அழகாயுமுள்ள राग - மத்யமாவதி மாளவி முதலிய திவ்ய ராகங்களுக்கு आकरभुवां - இருப்பிடமாயிருக்கிற

त्रयाणां (𑌤𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌂) (த்ரயாணாம்) = மூன்றான

ग्रामाणां (𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌣𑌾𑌂) (க்ராமாணாம்) = ஷட்ஜ, மத்யம, காந்தாரம் என்ற க்ராமங்களுடைய

स्थितिनियमसीमान इव (𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌨𑌿𑌯𑌮𑌸𑍀𑌮𑌾𑌨 𑌇𑌵) (ஸ்திதிநியமஸீமாந இவ) = स्थिति- இருப்பை नियम- ஒன்றோடொன்று சேராமலிருக்கும்படி நியமிக்கிற விஷயத்தில் सीमान इव எல்லைக் கோடுபோல்

विराजन्ते (𑌵𑌿𑌰𑌾𑌜𑌨𑍍𑌤𑍇) (விராஜந்தே) = விளங்குகின்றன.

தாத்பர்யம்:—

ललाटे च गले चैव मध्ये चापि वलित्रयम् ।
स्त्रीपुंसोरुभयोर्ज्ञेयं महासौभाग्यसूचकम् ॥

𑌲𑌲𑌾𑌟𑍇 𑌚 𑌗𑌲𑍇 𑌚𑍈𑌵 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌚𑌾𑌪𑌿 𑌵𑌲𑌿𑌤𑍍𑌰𑌯𑌮𑍍 ।
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌸𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌮𑌹𑌾𑌸𑍌𑌭𑌾𑌗𑍍𑌯𑌸𑍂𑌚𑌕𑌮𑍍 ॥

லலாடே ச கலே சைவ மத்யே சாபி வலித்ரயம்।
ஸ்த்ரீபும்ஸோருபயோர்ஜ்ஞேயம் மஹாஸௌபாக்யஸூசகம் ॥

என்று ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தில் சொல்லியபடி, நெற்றிப் பிரதேசத்திலும், கண்டதேசத்திலும், இடுப்புப் ப்ரதேசத்திலும் ஸ்த்ரீகளுக்கோ, புமான்களுக்கோ மூன்றுவிதமான ரேகைகள் காணப்பட்டால் அது பரம ஸௌபாக்யத்தை ஸூசிப்பிக்கின்றது' எனத் தெரிகின்றபடியால், இந்த லக்ஷணப்ரகாரம் தேவியினுடைய கண்டத்தில் இம்மூன்றுவிதமான ரேகைகள் காணப்படுகிறதென்பது ஓர் ஆச்சர்யமாக ஆகாது. ஸாமுத்ரிகா சாஸ்த்ரம் முதலான ஸகல தந்த்ரங்களும் தேவியை ஆச்ரயித்துத்தான் அவைகள் ப்ராமாண்யத்தை அடையவேண்டும். அத்துடன், தேசி, மார்கம் என்ற இரண்டுவிதமான ஸங்கீதசாஸ்த்ரத்தின் கதியிலும், 15 விதமான கமகத்திலும், இரண்டுவிதமான ரதத்திலும் தேவியானவள் மஹா ஸமர்த்தையாக இருந்துகொண்டு ஸங்கீத சாஸத்ரத்திற்கே பெரு

மையை தன் கண்டத்திலுள்ள ரேகைமூலம் வெளிப் படுத்துகிருள். தேவியினுடைய கண்டத்திலுள்ள ரேகைகளை கவனிக்கும்பொழுது மனோஹரமான திவ்ய ராகங்களுக்கு உத்பத்தி ஸ்தானமாகிய ஷட்ஜம், மத்யமம், காந்தாரம் என்ற மூன்றுவிதமான க்ராமங் களுக்கு இருப்பிடமோ என்றும் தோன்றுகிறது. மத்யமாவதி, மாளவி, பைரவி, பங்காலி, தன்யாசி, சுத்த வராளி, புன்னுகவராளி முதலான அநேக ப்ரபலமான ராகங்கள் ஷட்ஜக்ராமம், மத்யமக்ராமம், காந்தாரக்ராமம் என்று சொல்லப்படும் ஸ்தானங்களிலிருந்து உற்பத்தி யாகிறபடியால், அந்த மூன்று க்ராமங்களும் ஒன்ருே டொன்று ஸம்பந்த மில்லாமல், தேவியினுடைய கண்ட ரேகைகளினின்றும் உண்டாகிறதோ என்றும் தொனிக்கின்றது. நிற்க, தேவியினுடைய கண்டத் தில் காமேச்வரன் மாங்கல்ய ஸூத்ரத்தைக் கட்டுங் காலத்தில், மாங்கல்ய ஸூத்ரத்துடன் சேர்ந்து சிவ ஸூக்ஷ்மமான சரடுகளையும் கட்டியிருக்கிருர், இது தேசஸம்ப்ரதாயத்தை அனுஸரித்தது. இவ்வித ஸரங் கள் கட்டப்பட்ட காரணத்தால் அவைகளுடைய வரம்புதானே என்றும், தேவியின் கண்டத்திலுள்ள ரேகைகளைப் பார்க்கும்பொழுது தோன்றுகிறது.

இவ்விதம் ஸங்கீத சாஸ்த்ரத்திற்கு உற்பத்தி ஸ்தானமாயும், தீர்க்க ஸௌமாங்கல்ய ஸூசகமாயும் கண்டரேகைகள் விளங்கிவருகிறதென்று வர்ணிக்கப் படுகிறபடியால், இவ்விதமான த்யானத்தால் புருஷர் களோ, ஸ்த்ரீகளோ அவ்வித சாஸ்த்ரத்தில் பயிற்சி அடைந்து பரமோர்த்கர்ஷத்துடன் விளங்கிவரு வார்கள்.

*தினம் 1000 வீதம், 45 தினங்கள் இந்த ச்லோகத்தை ஜபிக் கவும். பீஜாக்ஷரம் क्ष्म्रू (க்ஷ்ம்ழ) ऊम्रू (ஊ்ம்ழ). ஸகல கார்ய ஜயமுண்டாகும்.*

---

## 70. தேவியினுடைய சதுர்புஜங்களின் வர்ணனை.

मृणालीमृद्वीनां तव भुजलतानां चतसृणां
चतुर्भिः सौन्दर्यं सरसिजभवः स्तौति वदनैः ।
नखेभ्यः संत्रस्यन्प्रथममथनादन्धकरिपो-
श्चतुर्णां शीर्षाणां सममभयहस्तार्पणधिया ॥ ७० ॥

𑌮𑍃𑌣𑌾𑌲𑍀𑌮𑍃𑌦𑍍𑌵𑍀𑌨𑌾𑌂 𑌤𑌵 𑌭𑍁𑌜𑌲𑌤𑌾𑌨𑌾𑌂 𑌚𑌤𑌸𑍃𑌣𑌾𑌂
𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑌿𑌃 𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌂 𑌸𑌰𑌸𑌿𑌜𑌭𑌵𑌃 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿 𑌵𑌦𑌨𑍈𑌃 ।
𑌨𑌖𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑌂𑌤𑍍𑌰𑌸𑍍𑌯𑌨𑍍𑌪𑍍𑌰𑌥𑌮𑌮𑌥𑌨𑌾𑌦𑌨𑍍𑌧𑌕𑌰𑌿𑌪𑍋
𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌣𑌾𑌂 𑌶𑍀𑌰𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌸𑌮𑌮𑌭𑌯𑌹𑌸𑍍𑌤𑌾𑌰𑍍𑌪𑌣𑌧𑌿𑌯𑌾 ॥ ௭௰ ॥

ம்ருணாலீம்ருத்வீநாம் தவ புஜலதாநாம் சதஸ்ருணாம்
சதுர்பி: ஸௌந்தர்யம் ஸரஸிஜபவ:ஸ்தௌதி வதனை:।
நகேப்ய: ஸந்த்ரஸ்யந் ப்ரதமமதனாதந்தகரிபோ:
சதுர்ணாம் சீர்ஷாணாம் ஸமமபயஹஸ்தார்ப்பணதியா ॥ 70 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி = ஹே பராசக்தியே !

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

मृणालीमृद्वीनां (𑌮𑍃𑌣𑌾𑌲𑍀𑌮𑍃𑌦𑍍𑌵𑍀𑌨𑌾𑌂) (ம்ருணாலீ ம்ருத்வீநாம்) = தாமரைக் கொடிகளைப் போல் ம்ருதுவான

चतसृणां (𑌚𑌤𑌸𑍃𑌣𑌾𑌂) (சதஸ்ருணாம்) = நான்கு

भुजलतानां (ஹுஜலதாநாம்) (புஜலதாநாம்) = ஸ்வர்ணலதைகளைப் போல் இருக்கும் கைகளுடைய

सौन्दर्यं (ஸௌந்தர்யம்) (ஸௌந்தர்யம்) அழகை

सरसिजभवः (ஸரஸிஜஹவঃ) (ஸரஸிஜபவ:) = ப்ருமாவானவர்

चतुर्भिः वदनैः (சதுர்ஹிঃ வதநைঃ) (சதுர்பி: வதநை:) = தன்னுடைய நான்கு முகங்களால்

प्रथमसथनात् (ப்ரயமஸயநாத்) (ப்ரதமமதநாத்) = ஐந்தாவதான சிரஸ்ஸை முதலில் கிள்ளிய காரணத்தால்

अन्धकरिपोः (அந்தகரிபோঃ) (அந்தகரிபோ:) = பரமேச்வரனுடைய

नखेभ्यः (நகெஹ்யঃ) (நகேப்ய:) = நகங்களிலிருந்தும்

सन्त्रस्यन् (ஸந்த்ரஸ்யந்) (ஸந்த்ரஸ்யந்) = நடுங்கியவராகக்கொண்டு

चतुर्णां (சதுர்ணாம்) (சதுர்ணும்) = நான்கு

शीर्षाणां (ஶீஷாணாம்) (சீர்ஷாணும்) = மீதமான தன் சிரஸ்ஸுகளுக்கு

समं (ஸமம்) (ஸமம்) = ஏககாலத்தில்

अभयहस्तार्पणधिया (அஹயஹஸ்தாவணயியா) = அபயஹஸ்தங்களை நீ அர்பணம் செய்து ரக்ஷிக்க

(அபயஹஸ்தார்பண வேண்டும் என்ற எண்
தியா) ணத்துடன்
स्तौति (ஹௌதி) (ஸ்தௌதி) = ஸ்தோத்ரம் செய்கின்றார்

தாத்பர்யம்:—தேவியினுடைய கைகள் ஸ்வர்ண லதைகளைப்போல், பரமஸௌந்தர்யத்துடனும், தாமரைக் கொடிகள்போல் மார்தவத்துடன் விளங்கி வருகின்றன. பராசக்தியானவள் நான்கு கைகளுடன் கூடினவளானதினால், அந்த நான்கு கைகளுடைய ஸௌந்தர்யத்தையும் ப்ரும்மாவானவர் தன்னுடைய நான்கு முகங்களால் ஒரே காலத்தில் வர்ணிக்கின்றார். இவ்விதம் ப்ரும்மா தேவியினுடைய நான்கு கைகளை வர்ணிப்பதற்குக் காரணத்தை அடியிற்கண்டபடி அறியவும்:—

ஒரு ஸமயம் விஷ்ணுவும், ப்ரும்மாவும் பரமசிவனுடைய பாதத்தையும் சிரஸ்ஸையும் பார்த்துவருவதில் பந்தயம் கூறினார்கள். விஷ்ணு "பரமேச்வரனுடைய பாதத்தைப் பார்த்துவருகிறேன்" என்றார் ப்ரும்மா "பரமேச்வரனுடைய சிரஸ்ஸைப் பார்த்து வருகிறேன்" என்றார். விஷ்ணுவும் தான் சொல்லியபடி பரமசிவன் பாதத்தைப் பார்க்க வரஹாவதாரம் எடுத்துக்கொண்டு மஹாபாதாளலோகம் வரைச் சென்றும், சிவனுடைய பாதத்தைக் காண முடியாமல் அபஜயத்துடன் திரும்பி வந்துவிட்டார். பரமசிவனிடத்திலும் "ஸ்வாமின்! தங்களுடைய பாதத்தை என்னால் காணமுடியவில்லை" என்று உண்மையைச் சொன்னார். ப்ரும்மாவோ, ஹம்ஸவாஹனத்தில் ஏறிக்கொண்டு இந்த அண்டத்திற்கும் வெளியில் போய் பரமசிவனுடைய சிரஸ்ஸைப் பார்க்க முடியாமல் அபஜயத்தை அடைந்தும் தன் அபஜயத்தை வெளியில் சொல்லக்கூடாதென்று எண்ணி, தன் லோகம் சென்று ஒரு தாழம்பூவை ஸாக்ஷியாக எடுத்துக்கொண்டு, பரமசிவனிடம் வந்து, பரமசிவ

னுடைய சிரஸ்ஸைப் பார்த்தவர்போல் அதற்கு பரமசிவனுடைய சிரஸ்ஸிலிருந்த தாழம்பூவே ஸாக்ஷி என்றும் பொய் சொன்னார். பரமசிவனும் மந்தஹாஸம் செய்துகொண்டு தன் நகத்தால் ப்ரும்மாவினுடைய பொய் சொன்ன தலையைக் கிள்ளி விட்டார். இதற்கு முன்பு ப்ரும்மாவிற்கு ஐந்து முகங்களிருந்தன. பொய்சொன்ன முகம் பரமசிவனுடைய நகங்களால் கிள்ளப்பட்ட பிறகுதான் ப்ரும்மா சதுர்முகனாக ஆனார். பொய்சொன்ன முகத்தோடு சேர்ந்த மற்ற நான்கு முகங்களையும் கிள்ளிவிட வேண்டுமென்று பரமசிவன் யத்னம் செய்த காலத்தில் தேவியானவள் ப்ரும்மாவினிடம் கருணைபுரிந்து, தன் நான்கு கைகளால் ப்ரும்மாவினுடைய நான்கு முகங்களுக்கும் அபயதானம் செய்து, பரமசிவனால் கிள்ளப்பட முடியாமல் ரக்ஷித்தாள். அதற்காக ப்ரும்மாவானவர் எப்பொழுதும் தேவியைப் பார்த்து 'தாயே! உன்னுடைய நான்கு கைகளால் என்னுடைய நான்கு முகங்களுக்கும் அபயதானம் செய்து பரமசிவனுடைய நகத்தால் கிள்ளப்படாமலிருக்கும்படி ரக்ஷிக்க வேண்டும்' என்ற ப்ரார்த்தனையுடன் தேவியினுடைய கைகளின் ஸௌந்தர்யத்தை ப்ரும்மா வர்ணிக்கிறார். தேவியினுடைய அநுக்ரகம் இல்லாதபோனால் மற்ற முகங்களும் பரமசிவனுடைய கை நகங்களால் கிள்ளப்பட்டுவிடும் என்ற பயத்தால் இடைவிடாமல் ப்ரும்மா தேவியை ஸ்துதித்து வருகிறார்.

இதனால் எந்த விதமான சிவாபராதத்திலிருந்தும் தேவியினுடைய க்ருபையால் மீண்டுகொள்ளலாம் என்பது வெளியாகிறது.

*ஸ்வர்ணயந்த்ரம். யந்த்ரத்தின் மத்தியில் ஹ்ரீ க்லீ (ஹ்ரீம் க்லீம்) என்றும் எழுதவும். தினம் 1000 வீதம் 45 தினங்கள் இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்யவும். ஐச்வர்யாவாப்தி—கார்யஜயம்.*

## 71. தேவியினுடை கை விரல்களுடைய நகங்களின் வர்ணனை.

नखानामुद्योतैर्नवनलिनरागं विहसतां
कराणां ते कान्तिं कथय कथयामः कथमुमे ।
कयाचिद्वा साम्यं भजतु कलया हन्त कमलं
यदि क्रीडल्लक्ष्मीचरणतललाक्षारसचणम् ॥ ७१ ॥

𑌨𑌖𑌾𑌨𑌾𑌮𑍁𑌦𑍍𑌯𑍋𑌤𑍈𑌰𑍍𑌨𑌵𑌨𑌲𑌿𑌨𑌰𑌾𑌗𑌂 𑌵𑌿𑌹𑌸𑌤𑌾𑌂
𑌕𑌰𑌾𑌣𑌾𑌂 𑌤𑍇 𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌕𑌥𑌯 𑌕𑌥𑌯𑌾𑌮𑌃 𑌕𑌥𑌮𑍁𑌮𑍇 ।
𑌕𑌯𑌾𑌚𑌿𑌦𑍍𑌵𑌾 𑌸𑌾𑌮𑍍𑌯𑌂 𑌭𑌜𑌤𑍁 𑌕𑌲𑌯𑌾 𑌹𑌨𑍍𑌤 𑌕𑌮𑌲𑌂
𑌯𑌦𑌿 𑌕𑍍𑌰𑍀𑌡𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌚𑌰𑌣𑌤𑌲𑌲𑌾𑌕𑍍𑌷𑌾𑌰𑌸𑌚𑌣𑌮𑍍 ॥ ௭௧ ॥

நகாநாமுத்யோதைர்நவநலிநராகம் விஹஸதாம்
கராணாம் தே காந்திம் கதய கதயாம: கதமுமே ।
கயாசித்வா ஸாம்யம் பஜது கலயா ஹந்த கமலம்
யதி க்ரீடல்லக்ஷ்மீசரணதலலாக்ஷாரஸசணம் ॥ 71 ॥

| | |
|---|---|
| हे उमे (𑌹𑍇 𑌉𑌮𑍇) (ஹே உமே) | = ஹே பார்வதியே ! |
| नखानां (𑌨𑌖𑌾𑌨𑌾𑌂) (நகாநாம்) | = நகங்களுடைய |
| उद्योतैः (𑌉𑌦𑍍𑌯𑍋𑌤𑍈𑌃) (உத்யோதை:) | = காந்திகளின் ஸமூஹங்களால் |
| नवनलिनरागं (𑌨𑌵𑌨𑌲𑌿𑌨𑌰𑌾𑌗𑌂) (நவநலிநராகம்) | = ப்ராதக்காலத்தில் மலர்ந்த தாமரைப் புஷ்பத்தின் காந்தியை |

| | |
|---|---|
| विहसतां (𑌵𑌿𑌹𑌸𑌤𑌾𑌂) (விஹஸதாம்) | = பரிஹஸிக்கின்ற |
| ते (𑌤𑍇) (தே) | = உன்னுடைய |
| कराणां (𑌕𑌰𑌾𑌣𑌾𑌂) (கராணாம்) | = கைகளுடைய |
| कान्तिं (𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌂) (காந்திம்) | = சோபையை |
| कथं (𑌕𑌥𑌂) (கதம்) | = எப்படி |
| कथयाम: (𑌕𑌥𑌯𑌾𑌮𑌃) (கதயாம:) | = வர்ணிப்போம்! |
| कथय (𑌕𑌥𑌯) (கதய) | = நீயே சொல் |
| हन्त (𑌹𑌨𑍍𑌤) (ஹந்த) | = கஷ்டம் |
| कमलं (𑌕𑌮𑌲𑌂) (கமலம்) | = செந்தாமரைப் புஷ்பமானது |
| क्रीडल्लक्ष्मीचरणतललाक्षारसचणं यदि (𑌕𑍍𑌰𑍀𑌡𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌚𑌰𑌣𑌤𑌲𑌲𑌾𑌕𑍍𑌷𑌾𑌰𑌸𑌚𑌣𑌂 𑌯𑌦𑌿) (க்ரீடல்லக்ஷ்மீ சரணதலலாக்ஷாரஸசணம் யதி) | = தன்னிடத்தில்க்ரீடிக்கிற மஹாலக்ஷ்மீயினுடைய உள்ளங்காலில் பாஸிக்கும் மருதாணியின் காந்தியோடு ப்ரகாசம் செய்யப்பட்டதாக இருக்குமேயானால் |
| कयाचिद्वा कलया (𑌕𑌯𑌾𑌚𑌿𑌦𑍍𑌵𑌾 𑌕𑌲𑌯𑌾) (கயாசித்வா கலயா) | = பதினாறில் ஒரு அம்சத்திலாவது |
| साम्यं (𑌸𑌾𑌮𑍍𑌯𑌂) (ஸாம்யம்) | = ஸாத்ருச்யத்தை |
| भजतु (𑌭𑌜𑌤𑍁) (பஜது) | = அடையட்டும். |

தாத்பர்யம் :—விரல்களுக்கு ஸமீபத்திலுள்ள பாகம் கரம் என்று சொல்லப்படும். தேவியின் விரல்களிலுள்ள நகங்கள் இயற்கையிலேயே சிவப்பாக இருக்கின்றன. இதன் காந்தியானது கைகளில் பட்டு கைகள் மிகவும் அழகாய் பாஸிக்கின்றன. நகங்களில் காந்தியானது காலையில் மலர்ந்த செந்தாமரைப் புஷ்பத்தின் சிகப்பைக் கூட பரிஹஸிக்கச் செய்கின்றது. அதாவது, மலர்ந்த செந்தாமரைப் புஷ்பத்தைக்காட்டிலும் தேவியினுடைய கைகளிலுள்ள நகங்கள் மேலான காந்தியோடு கூடியது என்பதை அறியவும். "இவ்விதமான தேவியினுடைய கரங்களின் காந்தியை நான் எப்படித்தான் வாணிக்க முடியும்; தேவிதான் அதற்குப் பதில் சொல்லவேண்டும்!" செந்தாமரைப் புஷ்பத்தையே உதாஹரணமாகச் சொல்லக்கூடாதோ என்றாலோ, அதுவும் ஸரியாகாது. கைகளின் காந்திக்கு தேவியின் ஸம்பந்தம் இருக்கிறது. செந்தாமரைப் புஷ்பத்திற்கு இது எவ்விதம் ஸம்பவிக்கும்? ஆனால், மஹாலக்ஷ்மீக்கு பத்மாலயா என்று பெயர் இருப்பதனால், அதாவது தாமரைப் புஷ்பங்களில் க்ரீடிக்கின்றவள் என்பதினால், மஹாலக்ஷ்மீயினுடைய உள்ளங்காலில் அலங்கரிக்கப்பட்ட மருதாணியின் காந்தியானது தாமரைப் புஷ்பங்களில் பட்டு, அதிகமான சிவப்பு வர்ணமுள்ள காந்தியோடு கூடியதாக இருந்தால் ஒரு ஸமயம் தேவியினுடைய கரங்களுக்கு அதை உதாஹரணமாகச் சொல்லக்கூடும் அப்பொழுதும் தேவியினுடைய கரங்களின் காந்திக்கு லக்ஷ்மீதேவியினுடைய பாத ஸ்பர்சத்தால் ஏற்பட்ட தாமரைப்புஷ்பத்தின் காந்தியும் பூர்ணமான உபமானமாக ஆகாது ; ஏகதேச உபமானமாகத்தான் சொல்லவேண்டும். ஆகையால் 'பரதேவதையினுடைய கரங்களின் காந்திகள் உபமானமற்றவை' என்றுதான் வர்ணிக்கவேண்டும். வேறு வழியில்லை. இவ்விதம் தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிற

வர்கள் லக்ஷ்மீ கடாக்ஷத்தால் பரிசுத்தர்களாக ஆகிறார்கள்.

யக்ஷிணீவச்யம். ஆலமரத்தடியிலிருந்து ஜபிக்க யக்ஷிணீ சொன்னபடி கேட்கும். தினம் 12000 வீதம் 45 நாள் ஜபிக்கவும்.

---

## 72. தேவியினுடைய ஸ்தனங்களின் வர்ணனை.

समं देवि स्कन्दद्विपवदनपीतं स्तनयुगं
तवेदं नः खेदं हरतु सततं प्रस्नुतमुखम् ।
यदालोक्याशङ्काकुलितहृदयो हासजनकः
स्वकुम्भौ हेरम्बः परिमृशति हस्तेन झडिति ॥ ७२ ॥

𑌸𑌮𑌂 𑌦𑍇𑌵𑌿 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌦𑍍𑌵𑌿𑌪𑌵𑌦𑌨𑌪𑍀𑌤𑌂 𑌸𑍍𑌤𑌨𑌯𑍁𑌗𑌂
𑌤𑌵𑍇𑌦𑌂 𑌨𑌃 𑌖𑍇𑌦𑌂 𑌹𑌰𑌤𑍁 𑌸𑌤𑌤𑌂 𑌪𑍍𑌰𑌸𑍍𑌨𑍁𑌤𑌮𑍁𑌖𑌮𑍍 ।
𑌯𑌦𑌾𑌲𑍋𑌕𑍍𑌯𑌾𑌶𑌙𑍍𑌕𑌾𑌕𑍁𑌲𑌿𑌤𑌹𑍃𑌦𑌯𑍋 𑌹𑌾𑌸𑌜𑌨𑌕𑌃
𑌸𑍍𑌵𑌕𑍁𑌮𑍍𑌭𑍌 𑌹𑍇𑌰𑌮𑍍𑌬𑌃 𑌪𑌰𑌿𑌮𑍃𑌶𑌤𑌿 𑌹𑌸𑍍𑌤𑍇𑌨 𑌝𑌡𑌿𑌤𑌿
॥ ௭௨ ॥

ஸமம் தேவி ஸ்கந்தத்விபவதநபீதம் ஸ்தநயுகம்
தவேதம் ந: கேதம் ஹரது ஸததம் ப்ரஸ்நுதமுகம் ।
யாதாலோக்யாசங்காகுலிதஹ்ருதயோ ஹாஸஜநக:
ஸ்வகும்பௌ ஹேரம்ப: பரிம்ருசதி ஹஸ்தேந ஜடிதி
॥ 72 ॥

हे देवि (𑌹𑍇 𑌦𑍇𑌵𑌿) = ஹே பரதேவதையே !
(ஹே தேவி)

प्रस्नुतमुखम् (പ്രസ്നുതമുഖം) (ப்ரஸ்நுதமுகம்) = புத்ரர்களைக் கண்டவுடன் பால் பெருகுகிற நுனிகளோடு கூடினதாயும்

समं (സമം) (ஸமம்) = ஒரேகாலத்தில்

स्कन्दद्विपवदनपीतं (സ്കന്ദദ്വിപവദനപീതം) (ஸ்கந்தத்விபவதநபீதம்) = மஹாகணபதி, குமாரஸ்வாமி இவ்விருவர்களாலும் பானம்செய்யப் படுகிறதாயும் உள்ள

तव (തവ) (தவ) = உன்னுடைய

इदं (ഇദം) (இதம்) = இந்த

स्तनयुगं (സ്തനയുഗം) (ஸ்தநயுகம்) = இரண்டு ஸ்தனங்களும்

नः (നഃ) (ந:) = எங்களுடைய

खेदं (ഖേദം) (கேதம்) = கஷ்டத்தை

सततं (സതതം) (ஸததம்) = எப்பொழுதும்

हरतु (ഹരതു) (ஹரது) = போக்கடிக்கட்டும்

यत् (യത്) (யத்) = யாதொரு இரண்டு ஸ்தனங்களையும்

हेरम्बः (ഹേരംബഃ) (ஹேரம்ப:) = விநாயகர்

आलोक्य (ആലോക്യ) (ஆலோக்ய) = பார்த்து

आशङ्काकुलितहृदयः सन् (ആശങ്കാകുലിതഹൃദയഃ സൻ) = நமது தலையிலுள்ள கும்பங்களைத்தான் அம்மா

(ஆசங்காகுலிதஹ்ருதய: ஸந்) பிடுங்கிக்கொண்டு விட்டாளோ என்ற பயத்தால் கலங்கின மனதோடு கூடியவராகக் கொண்டு

हासजनकः (𑌹𑌾𑌸𑌜𑌨𑌕𑌃) (ஹாஸஜனக:) = தாய் தந்தைகளுக்கு சிரிப்பை உண்டுபண்ணுகிறவராயும் கொண்டு

स्वकुम्भौ (𑌸𑍍𑌵𑌕𑍁𑌮𑍍𑌭𑍌) (ஸ்வகும்பௌ) = தன் தலையிலுள்ள கும்பங்களை

झडिति (𑌝𑌡𑌿𑌤𑌿) (ஜடிதி) = அவஸரத்துடன்

हस्तेन (𑌹𑌸𑍍𑌤𑍇𑌨) (ஹஸ்தேந) = கையினால்

परिमृशति (𑌪𑌰𑌿𑌮𑍃𑌶𑌤𑌿) (பரிம்ருசதி) = இருக்கின்றதா இல்லையா என்ற ஸந்தேஹத்துடன் தொட்டுப்பார்க்கின்றாரோ

தாத்பர்யம்:—பராசக்திக்கு, குமாரஸ்வாமி, மஹாகணபதி இவ்விருவர்களும் குழந்தைகள் என்பது சாஸ்த்ரங்களிலும், லோகங்களிலும் ப்ரஸித்தமானது. இவ்விரு குழந்தைகளும், தாயாரான தேவியினுடைய ஸமீபம் எப்பொழுது வருகிறார்களோ, அக்காலங்களில், குழந்தைகளிடம் தனக்குள்ள ப்ரேமையினால், தேவியினுடைய இரண்டு ஸ்தனங்களினின்றும் பால் பெருகி வழிகின்ற வழக்கமுண்டு. இந்தத் தருணத்தில் இருவர்களும் ஒரே காலத்தில் ஸ்தன்யம் என்ற பாலையும் பானம் செய்வார்கள். இதனால் குமாரஸ்வாமியும், மஹாகணபதியும், லோகமான்யாளான

தேவர்களாக விளங்கி வருகிறார்கள். இது லோக ப்ரஸித்தமானதே. மஹாகணபதிக்கு ஸமானமான மற்றொரு தேவதையும் இல்லை; அவ்விதமே குமாரஸ்வாமி என்ற ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமிக்கு ஸமானமான தேவதையும் இல்லை என்பதை இதிஹாஸ புராணங்களில் பயிற்சி உள்ள வித்வான்கள் தங்கள் அனுபவத்தில் அறிவார்கள். இதனால் தேவியினுடைய பரமோத்கர்ஷமானது வெளியாகிறது. தேவியினுடைய ஸ்தன்யத்தைப் பானம் செய்ததினாலேயே, மஹாகணபதி, ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி இவ்விருவர்களும் லோகோத்தரமான குணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஸர்வஜன பூஜ்யர்களாக விளங்கிவருகிறார்களேயானால், அம்பாளுடைய மஹிமை எப்பேர்ப்பட்டதென்பதை அறியலாம். அம்பாளுடைய ஸ்தனகும்பங்களை விக்நேச்வரர் பார்த்து, அவர் யானை முகத்துடன் கூடியவராகையால், தன் தலையிலுள்ள இரண்டு கும்பங்களைதான் தன் தாய் அபஹரித்துக்கொண்டுவிட்டாளோ என்ற சங்கையை அடிக்கடி அடைந்து, மிகவும் பரபரப்புடன் தன் கைகளால், தன் தலையில் கும்பங்கள் இருக்கின்றதா இல்லையா என்று தொட்டுப்பார்க்கின்ற வழக்கமும் உண்டு. மஹாகணபதியினுடைய இந்த செய்கையைப் பார்த்து பார்வதி பரமேச்வராள் பரமானந்தத்தையும் அடைவார்கள். புத்ரர்களின் வேடிக்கையைப் பார்த்து, தாய் தந்தைகளுக்கு ஆனந்தம் உண்டாகும் என்பதும் லோக ப்ரஸித்தமானது. இதனால் தேவியினுடைய ஸ்தன கும்பங்களுக்கு, கஜமுகனான மஹாகணபதியினுடைய சிரஸ்ஸிலுள்ள கும்பங்கள்தான் உதாஹரணமாக ஆகக்கூடுமன்னியில், வேறு த்ருஷ்டாந்தம் அகப்படாது என்றும் வெளியாகிறது. இவ்வித மஹிமை உள்ள தேவியினுடைய இரண்டு ஸ்தனங்களும், ஸகலவிதமான கஷ்டங்களையும் போக்கடித்துத் தங்களை ரக்ஷிக்கவேண்டும் என்று பகவத்பாதாள் ப்ரார்த்திக்கின்றார்கள். இவ்விதமான த்யானத்

தில் ஈடுபட்டவர்களுக்கு, தேவி ஸ்வப்னத்தில் ப்ரத்யக்ஷமாகி அவர்களை லோகமான்யர்களாக ஆகும்படி க்ருபை செய்வாள் என்பது ஸித்தமாகிறது,

ஸ்வர்ண யந்த்ரம் அல்லது கைத்தடியில் எழுதி ஜபிக்கவும் இந்த ச்லோகத்தின் முதல் அடியையும், क्लीं ह्रीं (𑌕𑍍𑌲𑍀𑌂 𑌹𑍍𑌰𑍀𑌂) யும் எழுதவும். தினம் 1000 வீதம் 45 நாள் ஜபிக்கவும். ஸகல பய நிவர்த்தி.

## 73. தேவியினுடைய ஸ்தனங்களின் வர்ணனை.

अमू ते वक्षोजावमृतरसमाणिक्यकुतुपौ
न संदेहस्पन्दो नगपतिपताके मनसि नः ।
पिबन्तौ तौ यस्मादविदितवधूसङ्गरसिकौ
कुमारावद्यापि द्विरदवदनक्रौञ्चदलनौ ॥ ७३ ॥

𑌅𑌮𑍂 𑌤𑍇 𑌵𑌕𑍍𑌷𑍋𑌜𑌾𑌵𑌮𑍃𑌤𑌰𑌸𑌮𑌾𑌣𑌿𑌕𑍍𑌯𑌕𑍁𑌤𑍁𑌪𑍌
𑌨 𑌸𑌂𑌦𑍇𑌹𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑍋 𑌨𑌗𑌪𑌤𑌿𑌪𑌤𑌾𑌕𑍇 𑌮𑌨𑌸𑌿 𑌨𑌃 ।
𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍌 𑌤𑍌 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌧𑍂𑌸𑌙𑍍𑌗𑌰𑌸𑌿𑌕𑍌
𑌕𑍁𑌮𑌾𑌰𑌾𑌵𑌦𑍍𑌯𑌾𑌪𑌿 𑌦𑍍𑌵𑌿𑌰𑌦𑌵𑌦𑌨𑌕𑍍𑌰𑍌𑌞𑍍𑌚𑌦𑌲𑌨𑍌 ॥ ௭௩ ॥

அமூ தே வக்ஷோஜாவம்ருதரஸமாணிக்யகுதுபௌ
ந ஸந்தேஹஸ்பந்தோ நகபதிபதாகே மநஸி ந: ।
பிபந்தௌ தௌ யஸ்மாதவிதிதவதூஸங்கரஸிகௌ
குமாராவத்யாபி த்விரதவதநக்ரௌஞ்சதலநௌ ॥ 73 ॥

हे नगपतिपताके (𑌹𑍇 𑌨𑌗𑌪𑌤𑌿𑌪𑌤𑌾𑌕𑍇) (ஹே நகபதி பதாகே) = பர்வதராஜனான ஹிமவானை ப்ரஸித்தப் படுத்துகிற விஷயத்தில்

த்வஜபடம்போல் உள்ள
ஹே பரதேவதையே

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

अमू (𑌅𑌮𑍂) (அமூ) = இந்த

वक्षोजौ (𑌵𑌕𑍍𑌷𑍋𑌜𑍌) (வக்ஷோஜௌ) = இரண்டு ஸ்தனங்களும்

अमृतरसमाणिक्यकुतुपौ (𑌅𑌮𑍃𑌤𑌰𑌸𑌮𑌾𑌣𑌿𑌕𑍍𑌯𑌕𑍁𑌤𑍁𑌪𑍌) (அம்ருதரஸமாணிக்ய குதுபௌ) = மிகவும் மதுரமான அம்ருதத்தால் நிறப்பப் பட்ட மாணிக்ய ரத்னத் தால் செய்யப்பட்ட குடுக்கைகளாக

भवत: (𑌭𑌵𑌤𑌃) (பவத:) = ஆகின்றன

न: (𑌨𑌃) (ந:) = எங்களுடைய

मनसि (𑌮𑌨𑌸𑌿) (மநஸி) = மனதில்

सन्देहस्पन्द: (𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌃) (ஸந்தேஹஸ்பந்த:) = இந்த விஷயத்தில் கொஞ்சமேனும் ஸந்தே ஹத்திற்கு இடமும்

न (𑌨) (ந) = இல்லை

यस्मात् (𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍) (யஸ்மாத்) = யாதொரு காரணத்தால்

तौ (𑌤𑍌) (தௌ) = அந்த உன்னுடைய இரண்டு ஸ்தனங்களை யும்

पिबन्तौ (𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍌) (பிபந்தௌ) = பானம் செய்கிற

द्विरदवदनक्रौञ्चदलनौ (𑌦𑍍𑌵𑌿𑌰𑌦𑌵𑌦𑌨𑌕𑍍𑌰𑍌𑌞𑍍𑌚𑌦𑌲𑌨𑍌) (த்விரதவதநக்ரௌஞ்ச தலநௌ) = யானை முகத்தைப் போன்ற முகத்தோடு கூடின மஹாகணபதி, பர்வதாகாரமான க்ரௌஞ்ச அஸுரனைக் கொன்ற ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி, இவ்விருவர்களும்

अविदितवधूसङ्गरसिकौ (सन्तौ) (𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌧𑍂𑌸𑌙𑍍𑌗𑌰𑌸𑌿𑌕𑍌) (𑌸𑌨𑍍𑌤𑍌) (அவிதிதவதூஸங்கரஸிகௌ) (ஸந்தௌ) = சிசுவாகவே இருக்குங் காரணத்தால் ஸ்த்ரீ ஸங்கத்தை அறியாதவர்களாகவே இருந்து கொண்டு

अद्यापि (𑌅𑌦𑍍𑌯𑌾𑌪𑌿) (அத்யாபி) = இப்பொழுதும்

कुमारौ (𑌕𑍁𑌮𑌾𑌰𑍌) (குமாரௌ) = குழந்தைகளாகவே

भवत: (𑌭𑌵𑌤𑌃) (பவத:) = இருக்கிறார்களோ !

தாத்பர்யம் :—தேவியினுடைய இரண்டு ஸ்தனங்களும் மோக்ஷஸாதனமான ஞானம்ருதத்தால் நிரப்பப்பட்ட மாணிக்யரத்னத்தால் நிர்மாணம் செய்யப்பட்ட இரண்டு குடுக்கைகளோ என்று ஊஹிக்கக் கூடியதாக இருக்கின்றன ஏனென்றால், தேவியினுடைய ஸ்தனங்களைப் பானம்செய்த மஹாகணபதி, ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி என்ற இரு குமாரர்களும், சைசவம் என்ற அவஸ்தையிலேயே எப்பொழுதும் இருந்து வருகிறார்கள். ஒரு அவஸ்தையிலிருந்து, மற்றொரு அவஸ்தைக்குப் போகாமல், ஒரே ரூபமாக

எப்பொழுதும் இருந்து வருகிறதென்பது அம்ருத பானம் செய்தவர்களுக்குத்தான் ஸித்திக்கும். விக்னேச்வரரும், குமாரஸ்வாமியும், எப்பொழுதும் குழந்தைகளாகவே இருக்கின்றார்கள்; யௌவனம் என்ற அவஸ்தையை அவர்கள் அடையவே யில்லை. விக்னேச்வரரும் என்றும் பால்யாவஸ்தையிலேயே இருந்து வருகிறார் என்பதற்கு

सदा बालरूपापि विघ्नाद्रिहन्त्री महादन्तिवक्त्रापि पञ्चास्यमान्या ।
विधीन्द्रादिमृग्या गणेशाभिधा मे विधत्तां श्रियं कापि कल्याणमूर्तिः ॥

𑌸𑌦𑌾 𑌬𑌾𑌲𑌰𑍂𑌪𑌾𑌪𑌿 𑌵𑌿𑌘𑍍𑌨𑌾𑌦𑍍𑌰𑌿𑌹𑌨𑍍𑌤𑍍𑌰𑍀
𑌮𑌹𑌾𑌦𑌨𑍍𑌤𑌿𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌪𑌞𑍍𑌚𑌾𑌸𑍍𑌯𑌮𑌾𑌨𑍍𑌯𑌾 ।
𑌵𑌿𑌧𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑌿𑌮𑍃𑌗𑍍𑌯𑌾 𑌗𑌣𑍇𑌶𑌾𑌭𑌿𑌧𑌾 𑌮𑍇
𑌵𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌶𑍍𑌰𑌿𑌯𑌂 𑌕𑌾𑌪𑌿 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌃 ॥

ஸதா பாலரூபாபி விக்நாத்ரிஹந்த்ரீ
மஹாதந்திவக்த்ராபி பஞ்சாஸ்யமாந்யா ।
விதீந்த்ராதிம்ருக்யா கணேசாபிதா மே
விதத்தாம் ச்ரியம் காபி கல்யாணமூர்த்தி: ॥

என்ற பகவத்பாதாளுடைய வசனமே ப்ரமாணமாகும். ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியோ எப்பொழுதும் குமாரன் என்றே ப்ரஸித்தி அடைந்திருக்கிறார். இவ்விருவர்களும் தேவியினுடைய ஸ்தன்யத்தைப் பானம் செய்த மஹிமையினாலேயே, ஒரு அவஸ்தையிலிருந்து மற்றொரு அவஸ்தைக்குச் செல்லாமல் ஒரே அவஸ்தையில் இருந்து வருகிறார்கள். ஸ்த்ரீ ஸங்கமம் என்ற க்ராம்ய ஸுகத்தை வெறுத்தவர்கள் என்றும் தெரிகிறது. இவ்விஷயமே இவ்விருவர்களுக்கும் தெரியாது என்பதை अविदितवधूसङ्गरसिकौ (𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌧𑍂𑌸𑌙𑍍𑌗𑌰𑌸𑌿𑌕𑍌) ( அவிதிதவதூஸங்கரஸிகௌ )

என்ற பதத்தால் பரமாசார்யாள் ப்ரகாசப்படுத்துகின்ருர்கள். இதனுலேயே, தேவியினுடைய ஸ்தனங்களிலுள்ள ஸ்தன்யம் ப்ராக்ருத ஸ்த்ரீகளிடமுள்ள ஸ்தன்யம் போலல்ல; ஸாரஸ்வதமான ஞானும்ருதம் என்று தெரிகிறது. இவ்விதமான மஹிமைதங்கிய ஸ்தன்யத்தைப் பானம் செய்த கௌரவத்தால்தான், விக்னேச்வரர், குமாரஸ்வாமி இவ்விருவர்களும் எப்பொழுதும் பாலர்களாகவும், ஸர்வக்ஞர்களாகவும், ஸர்வசக்திமான்களாகவும், ஸர்வலோக பூஜ்யர்களாகவும், விளங்கி வருகிருர்கள். இவ்விதம் தேவியினுடைய ஸ்தனத்திற்குள் இருக்கும் ஸ்தன்யத்தை மோக்ஷ ஸாதனமான ஞானும்ருதம் என்று த்யானம் செய்கிறவர்கள் ப்ரம்மஸாக்ஷாத்காரத்தை அடைந்து ஜீவன் முக்தர்களாக ஆவார்கள்.

ஸ்வர்ண யந்த்ரம்; மத்தியில் गं (மாං) என்று எழுதவும். தினம் 1000 வீதம் 8 நாட்கள் ஜபம். ஜலத்திலும் எழுதி, ஜபித்து உட்கொள்ளலாம்; ஸ்த்ரீகளுக்கோ பசுக்களுக்கோ, யந்த்ரதாரணமோ, ஜலத்தை ப்ரோக்ஷித்தோ, உட்கொள்ளும்படியோ செய்தால் பால் நிறையப் பெருகும்.



## 74. அம்பாளுடைய இரண்டு ஸ்தனங்களுடைய மத்யப்ரதேச வர்ணனே.

वहत्यम्ब स्तम्बेरमदनुजकुम्भप्रकृतिभिः
समारब्धां मुक्तामणिभिरमलां हारलतिकाम् ।
कुचाभोगो बिम्बाधररुचिभिरन्तः शबलितां
प्रतापव्यामिश्रां पुरदमयितुः कीर्तिमिव ते ॥ ७४ ॥

𑌵𑌹𑌤𑍍𑌯𑌮𑍍𑌬 𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑍇𑌰𑌮𑌦𑌨𑍁𑌜𑌕𑍁𑌮𑍍𑌭𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌭𑌿𑌃
𑌸𑌮𑌾𑌰𑌬𑍍𑌧𑌾𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌭𑌿𑌰𑌮𑌲𑌾𑌂 𑌹𑌾𑌰𑌲𑌤𑌿𑌕𑌾𑌮𑍍 ।
𑌕𑍁𑌚𑌾𑌭𑍋𑌗𑍋 𑌬𑌿𑌮𑍍𑌬𑌾𑌧𑌰𑌰𑍁𑌚𑌿𑌭𑌿𑌰𑌨𑍍𑌤𑌃 𑌶𑌬𑌲𑌿𑌤𑌾𑌂
𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑍍𑌯𑌾𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌂 𑌪𑍁𑌰𑌦𑌮𑌯𑌿𑌤𑍁𑌃 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌮𑌿𑌵 𑌤𑍇
॥ ௭௪ ॥

வஹத்யம்ப ஸ்தம்பேரமதநுஜகும்பப்ரக்ருதிபி;
ஸமாரப்தாம் முக்தாமணிபிரமலாம் ஹாரலதிகாம் ।
குசாபோகோ பிம்பாதரருசிபிரந்த: சபலிதாம்
ப்ரதாபவ்யாமிச்ராம் புரதமயிது: கீர்திமிவ தே ॥ 74 ॥

हे अम्ब (𑌹𑍇 𑌅𑌮𑍍𑌬) (ஹே அம்ப) = ஹே தாயே!

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

कुचाभोग: (𑌕𑍁𑌚𑌾𑌭𑍋𑌗𑌃) (குசாபோக:) = ஸ்தனங்களுடைய மத்ய ப்ரதேசமானது

स्तम्बेरमदनुजकुम्भप्रकृतिभि: (𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑍇𑌰𑌮𑌦𑌨𑍁𑌜 𑌕𑍁𑌮𑍍𑌭𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌭𑌿𑌃) (ஸ்தம்பேரமதநுஜ = யானேயினுடைய மதத்தைப் போன்ற மதத்தோடுகூடின யானே முகனை கஜாஸுரனுடைய

கும்பப்ரக்ருதிபி:) — கும்பங்களினின்றும் உத்பத்தியான

मुक्तामणिभिः (ஶ்ரு‌க்தாமணிஹிஃ) (முக்தாமணிபி:) = உயர்ந்த முத்துக்களால்

समारब्धां (ஸமாரஷூாம்) (ஸமாரப்தாம்) = கோர்க்கப்பட்டதாயும்

अमलां (அமலாம்) (அமலாம்) = நிர்மலமாயும்

बिम्बाधररुचिभिः (஬ிம்பாயர ரு‌சிஹிஃ) (பிம்பாதர ருசிபி:) = கோவைப்பழம் போல் இயற்கையில்சிவப்பான அதரபிம்பத்தினுடைய காந்திகளால்

अन्तः शबलितां (அந்தஃ ஶவலிதாம்) (அந்த: சபலிதாம்) = உள் பாகத்தில் விசித்ரமான வர்ணங்களுடன் கூடியதாகச் செய்யப்பட்டதாயும் இருக்கிற

हारलतिकां (ஹாரலதிகாம்) (ஹாரலதிகாம்) = முத்துமாலையை

प्रतापव्यामिश्रां (ப்ரதாபவ்யா மிஶ்ராம்) (ப்ரதாபவ்யா மிச்ராம்) = சௌர்ய வீர்யத்தோடு கலந்திருக்கின்ற

पुरदमयितुः (புரதமயிதுஃ) (புரதமயிது:) = த்ரிபுர ஸம்ஹார மூர்த்தியினுடைய

कीर्तिमिव (கீர்திமிவ) (கீர்திமிவ) = யசஸ்ஸைப் போல்

वहति (வஹதி) (வஹதி) = வஹிக்கின்றது.

தாத்பர்யம் :—

गजकुंभेषु वंशेषु फणासु जलधिष्वपि ।
शुक्तिकायामिक्षुदण्डे षोढा मौक्तिकसंभवः ॥
गजकुंभे कर्बुराभः वंशे रक्तसिताः स्मृताः ।
फणासु वासुकेरेव नीलवर्णाः प्रकीर्तिताः ॥
ज्योतिर्वर्णाश्च जलधौ शुक्तिकायां सिताः स्मृताः ।
इक्षुदण्डे पीतवर्णाः मणयो मौक्तिकाः स्मृताः ॥

ഗജകുംഭെഷു വംശെഷു ഫണാസു ജലധിഷ്വപി ।
ശുക്തികായാമിക്ഷുദണ്ഡെ ഷൊഢാ മൌക്തികസംഭവഃ ॥
ഗജകുംഭെ കൎബ്ബുരാഭഃ വംശെ രക്തസിതാഃ സ്മൃതാഃ ।
ഫണാസു വാസുകെരെവ നീലവൎണ്ണാഃ പ്രകീൎത്തിതാഃ ॥
ജ്യൊതിവൎണ്ണാശ്ച ജലധൌ ശുക്തികായാം സിതാഃ സ്മൃതാഃ ।
ഇക്ഷുദണ്ഡെ പീതവൎണ്ണാഃ മണയൊ മൌക്തികാഃ സ്മൃതാഃ ॥

கஜகும்பேஷு வம்சேஷு பணாஸு ஜலதிஷ்வபி ।
சுக்திகாயாம் இக்ஷுதண்டே ஷோடா மௌக்திகஸம்பவ: ॥
கஜகும்பே கர்புராப: வம்சே ரக்தஸிதா: ஸ்ம்ருதா: ।
பணாஸு வாஸுகேரேவ நீலவர்ணா: ப்ரகீர்திதா: ॥
ஜ்யோதிர்வர்ணாச்ச ஜலதௌ சுக்திகாயாம் ஸிதா: ஸ்ம்ருதா: ।
இக்ஷுதண்டே பீதவர்ணா: மணயோ மௌக்திகா: ஸ்ம்ருதா: ॥

என்று ஸர்வக்ஞனன ஸோமேச்வரனால் சொல்லப் பட்டபடி, யானையினுடைய கும்பங்களில் கற்பூர வர்ணமான முத்துக்களும், மூங்கில்களில் சிவப்பாயும் வெளுப்பாயும்உள்ள முத்துக்களும்ஸர்ப்பத்தினுடைய படங்களில் கருப்பான முத்துக்களும் ஸமுத்ரத்தில் ஜ்யோதிஸ்ஸைப்போல் ப்ரகாசிக்கின்ற முத்துக்களும் சுக்திகையில் வெளுப்பான முத்துக்களும் கரும்பி னுடைய நடுவில் மஞ்சளான முத்துக்களும் விளை கின்றன எனத் தெரிகின்றபடியால் கஜாஸுரனும்

யானையைப்போல் உருவமுள்ளவனானதினால், கஜாஸுரனுடைய கும்பங்களில் உத்பத்தியான கற்பூரத்தைப்போல் சுத்த வெளுப்பான வர்ணமுள்ள முத்துக்களை கஜாஸுரனை மஹாகணபதி கொன்ற பிற்பாடு, மஹாகணபதியினால் கொண்டுவரப்பட்டு, அநேக ஸரங்களாக தொடுக்கப்பட்டு தன் தாயாரான பரதேவதையினிடம் மஹாகணபதி நமஸ்காரபூர்வமாகக் கொடுத்து, தேவியும் பரமஸந்தோஷத்துடன், தன் புத்ரனால் கொடுக்கப்பட்ட முத்துமாலையை தன் மார்பில் தரித்துக்கொண்டிருக்கிறாள். இது மிகவும் நிர்மலமான வர்ணமுள்ளதாகையால் வெளுப்பாக ப்ரகாசிக்கின்றது. பரதேவதையினுடைய அதரபிம்பம் கோவைப்பழம்போல் இயற்கையிலேயே சிவந்திருப்பதினால், மார்பில் தரித்திருக்கும் வெளுப்பான முத்து மாலைகளில் தேவியின் அதரபிம்பத்தின் சிவப்பு வர்ணம் ப்ரதிபலித்து, சிவப்பும் வெளுப்பும் கலந்த சித்ர வர்ணமான முத்துக்களால் கட்டப்பட்ட மாலையோ என்று தோன்றுகிறது. இதைப் பார்க்கும்பொழுது, த்ரிபுராஸுரனை ஸம்ஹாரம் செய்த பரமேச்வரனுடைய யசஸ்ஸோ என்று தோன்றுகிறது. கீர்த்தியை சுத்த வெளுப்பாகவே வர்ணிக்கின்ற வழக்கம். த்ரிபுராஸுரனைக் கொல்வதற்காக பரமேச்வரன் எடுத்துக்கொண்ட பராக்ரமமோ, கோபத்தால் ஏற்பட்டதானதினால் சிவப்பாகவே சொல்லவேண்டும். சிவப்பான ப்ரதாபத்தோடு கூடின, வெளுப்பான தன் பர்த்தாவான த்ரிபுர ஸம்ஹார மூர்த்தியின் யசஸ்ஸைத்தான் மாலையாகக் கட்டி ஜகதீச்வரியான பரதேவதை தன் மார்பில் தரிக்கின்றாளோ என்று தோன்றுகிறது. ஜகதீச்வரி விராட்ரூபிணியானதினால் விராட் என்று சொல்லப்படுகின்ற லோகம் முழுமையும் த்ரிபுராஸுரனைக் கொன்ற பரமேச்வரனுடைய ப்ரதாபமும் கீர்த்தியும் வ்யாபரித்திருக்கிறது என்று தெரிகிறது. இவ்விதம் தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறவர்களுடைய யசஸ்ஸும்

லோகம் முழுமையும் வ்யாபரிக்கும் என்பதை அறியவும்.

ஸ்வர்ண யந்த்ரம். பீஜாக்ஷரம் ऐं क्लीं सौः (ஐம் க்லீம் ஸௌ:) தினம் 108 வீதம் 3 நாள் இந்த ச்லோகத்தை பாராயணம். மஹா ஸந்நிதியில் ஜபிக்கவும். ஸத்கீர்த்தி உண்டாகும்.

---

## 75. லோகமாதாவான பரதேவதையினுடைய ஸ்தனப் பாலின் வர்ணனே.

तव स्तन्यं मन्ये धरणिधरकन्ये हृदयतः
पयः पारावारः परिवहति सारस्वतमिव ।
दयावत्या दत्तं द्रविडशिशुरास्वाद्य तव यत्
कवीनां प्रौढानामजनि कमनीयः कवयिता ॥ ७५ ॥

𑌤𑌵 𑌸𑍍𑌤𑌨𑍍𑌯𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌧𑌰𑌣𑌿𑌧𑌰𑌕𑌨𑍍𑌯𑍇 𑌹𑍃𑌦𑌯𑌤𑌃
𑌪𑌯𑌃 𑌪𑌾𑌰𑌾𑌵𑌾𑌰𑌃 𑌪𑌰𑌿𑌵𑌹𑌤𑌿 𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑌮𑌿𑌵 ।
𑌦𑌯𑌾𑌵𑌤𑍍𑌯𑌾 𑌦𑌤𑍍𑌤𑌂 𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌶𑌿𑌶𑍁𑌰𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌯 𑌤𑌵 𑌯𑌤𑍍
𑌕𑌵𑍀𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑍌𑌢𑌾𑌨𑌾𑌮𑌜𑌨𑌿 𑌕𑌮𑌨𑍀𑌯𑌃 𑌕𑌵𑌯𑌿𑌤𑌾 ॥ ௭௫ ॥

தவ ஸ்தந்யம் மந்யே தரணிதரகன்யே ஹ்ருதயத:
பய: பாராவார: பரிவஹதி ஸாரஸ்வதமிவ ।
தயாவத்யா தத்தம் த்ரவிடசிசுராஸ்வாத்ய தவ யத்
கவீநாம் ப்ரௌடாநாமஜநி கமநீய: கவயிதா ॥ 75 ॥

हे धरणिधर कन्ये (𑌹𑍇 𑌧𑌰𑌣𑌿𑌧𑌰 𑌕𑌨𑍍𑌯𑍇) (ஹே தரணிதர கந்யே) = ஹே பார்வதியே!

तव (தவ) (தவ) = உன்னுடைய

स्तन्यं (ஸ்தந்யம்) (ஸ்தந்யம்) = ஸ்தனங்களிலிருந்து பெருகும் பாலானது

हृदयत: (ஹ்ருதயத:) (ஹ்ருதயத:) = ஹ்ருதயத்திலிருந்து

उत्थित: (உத்தித:) (உத்தித:) = உண்டான

पय: पारावार इव (பய: பாராவார: இவ) (பய: பாரா வார: இவ) = பாற்கடல் போலவும்

सारस्वतमिव (ஸாரஸ்வதமிவ) (ஸாரஸ்வதமிவ) = நிர்மலமாயும் அதிஸாரமுமான வாக் என்ற ஸாரஸ்வத ப்ரவாஹம் போலவும்

परिवहति (பரிவஹதி) (பரிவஹதி) = ப்ரவஹிக்கின்றது

इति (இதி) (இதி) = என்று

मन्ये (மந்யே) (மங்யே) = எண்ணுகிறேன்

यत् (யத்) (யத்) = யாதொரு காரணத்தால்

दयावत्या (தயாவத்யா) (தயாவத்யா) = க்ருபையோடுகூடின

त्वया (த்வயா) (த்வயா) = உன்னால்

दत्तं (தத்தம்) (தத்தம்) = கொடுக்கப்பட்ட

तव (தவ) (தவ) = உன்னுடைய

स्तन्यं (ஸ்தந்யம்) (ஸ்தங்யம்) = ஸ்தனங்களுடைய

आस्वाद्य (𑌆𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌯) (ஆஸ்வாத்ய) = பானம் செய்து

द्रविडशिशुः (𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌶𑌿𑌶𑍁𑌃) (த்ரவிடசிசு:) = தமிழ் நாட்டில் பிறந்த குழந்தையாகிய இந்த சங்கரபகவத்பாதாள்

प्रौढानां (𑌪𑍍𑌰𑍌𑌢𑌾𑌨𑌾𑌂) (ப்ரெளடாநாம்) = ப்ரஸித்தாளான

कवीनां (𑌕𑌵𑍀𑌨𑌾𑌂) (கவீநாம்) = வித்வான்களுக்குள்

कमनीयः (𑌕𑌮𑌨𑍀𑌯𑌃) (கமநீய:) = மனதை அபஹரிக்கக் கூடிய வைதுஷ்யமுள்ள

कवयिता (𑌕𑌵𑌯𑌿𑌤𑌾) (கவயிதா) = வித்வானக

अजनि (𑌅𑌜𑌨𑌿) (அஜநி) = ஆகிவிட்டாரோ!

தாத்பர்யம் :—தேவியினுடைய ஸ்தனங்களினின்றும் பெருகும் பாலானது, மிகவும் மதுரமாக இருக்கக் கூடியதினால் அம்ருதப்ரவாஹமோ என்று உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. தேவியினுடைய ஹ்ருதயத்திலிருந்தும் பெருஹிவருகிற அம்ருதந்தான் என்று அந்தப் பாலைச் சொல்லவேண்டும். ஸரஸ்வதீ தேவி ஸ்படிகம்போல் வெளுப்பான நிறமுள்ளவளானதினால், வாக்தேவதையான ஸரஸ்வதீ நிர்மலமான வாக்ரூபமாகவே விளங்கிவருகிருள். இந்தப் பாலும் வெளுப்பாக இருப்பதினால் ஸாரஸ்வத ப்ரவாஹமோ என்றும் தோன்றுகிறது. ஸரஸ்வதீ தேவியே அம்பாளுடைய ஆக்ஞையை அனுஸரித்து இப்பால் ரூபமாக உருவத்தை எடுத்துக்கொண்டு ப்ரவாஹித்து வருகிருள் என்றே உத்ப்ரேக்ஷிக்கவேண்டும். ஸாக்ஷாத் தேவியோ, பர்வதராஜனுடைய புத்ரியாக அவதாரம் செய்து, பர்வதராஜனன ஹிமவானுக்கு தத்வ

ஞானத்தை உபதேசித்தாள் என்று தேவீபாகவதம் முத லான க்ரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஞானந்தான் இந்தப்பால் என்று ஊஹிக்கவேண்டும் தன் குழந்தைகளை ஆயாஸமில்லாமல் மஹாவித்வான் களாகச் செய்வதற்குக் கருணையுடன் தேவியானவள் ஞானப்பாலை ஸ்தன்யம் என்ற வ்யாஜத்தால் வெளி யில் ப்ரவாஹிக்கச் செய்கிறாள் என்றுதான் நினைக்கக் கூடியதாக இருக்கிறது. இந்த ஸௌந்தர்யலஹரீ என்ற ஸ்தோத்ரத்தைச் செய்த, சங்கரபகவத்பாதாள் என்ற வித்வானும், தான் சிசுவாக ஆவிர்பவித்த காலத்தில், லோக மாதாவான தேவியினுடைய ஸ்தன் யத்தைத்தான் பானம் செய்தார்கள் என்று தெரிய வருகிறது. அக்காரணத்தைக்கொண்டு, லோகத்தில் பரஸித்தமான வித்வான்களுக்குள் ப்ரதானமான வித்வானாக விளங்கிவந்தார் என்பது லோகப்ரஸித்த மானது. பரமாசார்யாளுடைய அவதாரமும் द्रविडशिशुः (𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌶𑌿𑌶𑍁𑌃) (த்ரவிடசிசு:) என்ற பதத் தால், தமிழ்நாட்டில்தான் ஏற்பட்டது என்றும் வெளியாகிறது. பாண்டியதேசம் தமிழ் நாடு என்பது ப்ரஸித்தமானது. முன்காலத்தில் கேரள தேசமும் பாண்டிய நாடாகவே இருந்த காரணத்தைக் கொண்டு द्रविडशिशुः (𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌶𑌿𑌶𑍁𑌃) (த்ரவிடசிசு:) என்பதினால் தமிழ்நாட்டில் பிறந்தவர் என்ற அர்த் தம் வெளியாகிறது. கேரள தேசத்தில் ஆசார்யாளு டைய அவதாரத்தை போதிக்கின்ற சங்கரவிஜயம் முதலான க்ரந்தங்களுக்கும், தமிழ் நாட்டில் ஆசார் யாளுடைய அவதாரத்தை போதிக்கும் இந்த க்ரந்தத் துக்கும் மேற்சொன்ன காரணத்தைக் கொண்டு கொஞ்சமேனும் விரோதமில்லை என்பதை அறியவும்.

द्रविडशिशुः (𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌶𑌿𑌶𑍁𑌃)(த்ரவிடசிசு:) என்றபதத் தால் ஞானஸம்பந்தமூர்த்தி என்றும் அர்த்தத்தை க்ரஹித் துக்கொள்ளலாம். இவரும் தமிழ் நாட்டில் பிறந்த

வரே வேதம் ப்ரமாணமானல் 'வேதம் ப்ரமாணம்' என்று எழுதி இருக்கும் ஓலையை பூர்ண ப்ரவாஹம் உள்ள வைகையாற்றில் போட்டு, இந்த ஓலை மேற்கு முகமாகப் போகவேண்டும், என்று பந்தயம் கூறினர். அவர் கூறியபடியே, அந்த ஓலையானது அதிவேக முள்ள வைகையாற்றில் கிழக்கு திக்கை நோக்கிச் செல்லாமல், மேற்கு திக்கை நோக்கி வேகமாகச் சென்றது. கைலாஸவாஸியான பரமேச்வரன் ப்ரத்யக்ஷ மாக ஆவிர்பவித்து, அந்த ஓலையை நிறுத்தி 'வேதம் ப்ரமாணந்தான்' என்பதையும் நிரூபித்து, தன் பக்த னை ஞானஸம்பந்தமூர்த்தியை ஸமாதானம் செய்தார். அந்த ப்ரதேசத்தைத்தான் திருவேடகம் என்ற க்ஷேத்ர மாகச் சொல்லுவார்கள். இந்த இடத்தில் ஆவிர் பவித்த பரமேச்வரனுக்கு பத்ரிகாபுரேச்வரர் என்ற திரு நாமமும் விளங்கிவருகிறது. ஞானஸம்பந்தமூர்த்தி, குமாரஸ்வாமியினுடைய அவதாரம் என்றே சிவபுரா ணங்கள் மூலம் தெரிகிறது. இந்த மஹானுபாவனை யும் த்ரவிடசிசு: என்ற பதத்தால் ப்ரக்ருதத்தில் க்ரஹித்துக்கொள்ளலாம். சங்கரபகவத்பாதாளோ, ஞானஸம்பந்தமூர்த்தியோ, தேவியினுடைய ஸ்தன்யத் தை பானம் செய்த காரணத்தால்தான், மஹாவித் வான்களாக லோகத்தில் விளங்குகிருர்கள் என்பது நிச்சயம்.

இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்து கொண்டு தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்துவிட்டு, பசும்பாலில் ऐम् (வெழ) (ஐம்) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி தேவியினுடைய ஸ்தன்யமாக பூஜித்து, சிசுக்களுக்கு அக்ஷராப்யாஸ காலத்தில் பானம் செய்து வைத்தால் அக்குழந்தைகள் சிறு வயதிலேயே மஹாவித்வான்களாக ஆவார்கள் என் பதை அறியவும்.

ஸ்வர்ண யந்த்ரம். பீஜாக்ஷரம் सं (ஸம்) தினம் 12000 வீதம் 3 நாள் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும். கவன சக்தி உண்டாகும்.

## 76. தேவியினுடைய நாபியின் வர்ணனை.

हरक्रोधज्वालावलिभिरवलीढेन वपुषा
गभीरे ते नाभीसरसि कृतसङ्गो मनसिजः
समुत्तस्थौ तस्मादचलतनये धूमलतिका
जनस्तां जानीते तव जननि रोमावलिरिति ॥ ७६ ॥

𑌹𑌰𑌕𑍍𑌰𑍋𑌧𑌜𑍍𑌵𑌾𑌲𑌾𑌵𑌳𑌿𑌭𑌿𑌰𑌵𑌳𑍀𑌢𑍇𑌨 𑌵𑌪𑍁𑌷𑌾
𑌗𑌭𑍀𑌰𑍇 𑌤𑍇 𑌨𑌾𑌭𑍀𑌸𑌰𑌸𑌿 𑌕𑍃𑌤𑌸𑌙𑍍𑌗𑍋 𑌮𑌨𑌸𑌿𑌜𑌃 ।
𑌸𑌮𑍁𑌤𑍍𑌤𑌸𑍍𑌥𑍌 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌚𑌲𑌤𑌨𑌯𑍇 𑌧𑍂𑌮𑌲𑌤𑌿𑌕𑌾
𑌜𑌨𑌸𑍍𑌤𑌾𑌂 𑌜𑌾𑌨𑍀𑌤𑍇 𑌤𑌵 𑌜𑌨𑌨𑌿 𑌰𑍋𑌮𑌾𑌵𑌳𑌿𑌰𑌿𑌤𑌿 ॥ ௭௬ ॥

ஹரக்ரோதஜ்வாலாவலிபிரவலீடேந வபுஷா
கபீரே தே நாபீஸரஸி க்ருதஸங்கோ மநஸிஜ: ।
ஸமுத்தஸ்தெள தஸ்மாதசலதநயே தூமலதிகா
ஜநஸ்தாம் ஜாநீதே தவ ஜநநி ரோமாவலிரிதி ॥ 76 ॥

हे अचलतनये (𑌹𑍇 𑌅𑌚𑌲𑌤𑌨𑌯𑍇) (ஹே அசலதநயே) = பர்வதராஜனுடைய புத்ரியான ஹே தாயே!

मनसिजः (𑌮𑌨𑌸𑌿𑌜𑌃) (மநஸிஜ:) = மன்மதன்

हरक्रोधज्वालावलिभिः (𑌹𑌰𑌕𑍍𑌰𑍋𑌧𑌜𑍍𑌵𑌾𑌲𑌾𑌵𑌳𑌿𑌭𑌿𑌃) (ஹரக்ரோதஜ்வாலாவலிபி:) = பரமசிவனுடைய கோபாக்னி ஜ்வாலையின் பரம்பரையினால்

अवलीढेन (𑌅𑌵𑌳𑍀𑌢𑍇𑌨) (அவலீடேந) = சூழப்பட்ட

वपुषा (வவுஷா) (வபுஷா) = சரீரத்தோடு

ते (தெ) (தே) = உன்னுடைய

गभीरे (மஹீரெ) (கபீரே) = ஆழமான

नाभी सरसि (நாஹீ ஸரஸி) (நாபீ ஸரஸி) = தொப்புள் குழியான தடாகத்தில்

कृतसङ्गः (கூரதஸங்ஃ) (க்ருதஸங்க:) = செய்யப்பட்ட ஸம்பந்தத்துடன் கூடினவனாக ஆகிவிட்டார். (அதாவது முழுகிவிட்டான்)

तस्मात् (தஸ்மாக்) (தஸ்மாத்) = அந்த தொப்புள் குழியான ஸரஸிலிருந்தும்

धूमलतिका (யூமலதிகா) (தூமலதிகா) = கொடிபோல் இருக்கின்ற ஸூக்ஷ்மமான புகையானது

समुत्तस्थौ (ஸமுத்தஸ்தௌ) (ஸ்முத்தஸ்தௌ) = உயரக் கிளம்புகிறது

तां (தாஂ) (தாம்) = அந்தக் கொடிபோலிருக்கும் ஸூக்ஷ்மமான புகையின் ரேகையை

जनः (ஜநஃ) (ஜந:) = லோககானது

हे जननि (ஹெ ஜநநி) (ஹே ஜநநி) = ஹே தாயே!

तव (தவ) (தவ) = உன்னுடைய

रोमावलिः (ரொமாவலிஃ) (ரோமாவலி:) = தொப்புள் குழியில் ஸூக்ஷ்மமாயும் அழகா

யும் விளங்கும் ரோமங்களுடைய வரிசை

इति (உதி) (இதி) = என்று

जानीते (ஜாநீதெ) (ஜாநீதே) = எண்ணுகிறது.

தாத்பர்யம் :—தக்ஷப்ராஜாபதியினுடைய பெண்ணான ஸதீ தேவியானவள் தக்ஷப்ரஜாபதி என்ற தன் தகப்பனால் செய்யப்பட்ட யாகத்தில், தனக்கு ஏற்பட்ட அவமானத்தால் யோகாக்னியில் தன் சரீரத்தைவிட்ட பிற்பாடு, பரமேச்வரன் மஹாகைலாஸத்தில் உள்ள உத்யானவனத்தில் வடவ்ருக்ஷத்தின் மூலத்தில் தக்ஷிணாமூர்த்தி அவஸரத்துடன் ஸனகாதிகளுக்கு பசு, பதி, பாசம் என்ற மூன்று பதார்த்தங்களின் தத்வத்தை உபதேசித்து வருங்காலத்தில் யோகாக்னியில் சரீரத்தைவிட்ட ஸதீ தேவியும் மறுபடியும் பர்வதராஜனுடைய அயோநிஜ புத்ரியாக அவதாரம் செய்து, முன்பு தனக்கு பர்த்தாவான பரமேச்வரனையே பர்த்தாவாக அடைய தபஸ்செய்துவந்தாள். தேவியினிடம் பரமேச்வரனுடைய மனதைத் திருப்ப, தேவர்களே காமனை ஏவி முன்சொன்ன ப்ரகாரம் நடந்துவரும் வேதாந்த பாடத்தை கலைக்க யத்னம் செய்தார்கள். காமனும் ஸநகாதிகளுக்குப் பரமேச்வரன் தத்வோபதேசம் செய்து கொண்டிருக்கும் மத்தியில், தன்னுடைய விகாரத்தைப் பரமேச்வரனுக்கும் உண்டு பண்ணி, பரமேச்வரனை ஜயிக்க யத்னம் செய்தகாலத்தில் பரமேச்வரன் கோபத்தை அடைந்து, நெற்றிக் கண்ணைத் திறந்து மன்மதனை எரிக்க முயற்சித்தார் என்ற கதை ஸ்காந்தமஹாபுராணத்தில் ப்ரஸித்தமானது. இவ்விதம் பரமேச்வரனுடைய கோபாக்னியானது ஜ்வாலைகளால் மன்மதனை வளைத்துக்கொண்டு புகையால் சூழச்செய்தது. அவ்விதம் கோபாக்னி ஜ்வாலையினால் சூழப்பட்ட சரீரத்துடன் கூடின மன்மதன் தாபம் ஸஹிக்கமுடியாமல் தேவியினுடைய தொப்

புள் குழியான அம்ருத தடாகத்தில் மூழ்கிவிட்டானே என்று தேவியின் நாபிப்ரதேசம் பாஸித்து வருகிறது. அக்னி ஜ்வாலையினால் வ்யாபரிக்கப்பட்ட தேஹத்துடன் தேவியின் நாபி என்ற ஸரஸில் மன்மதன் முழுகிக்கொண்டிருக்குங் காரணத்தால்தான் நாபி என்ற ஸரஸிலிருந்தும் ஸூக்ஷ்மமான புகை வெளிக்கிளம்புகிறதோ என்று தேவியினுடைய நாபியின் நடுவில் அதிஸூக்ஷ்மமாகக் காணப்படும் ரோமங்களுடைய வரிசையைப் பார்த்து ஜனங்கள் ஊஹிக்கின்றார்கள், இதனால் தேவியினுடைய நாபியை மன்மதனுக்கு இருப்பிடமாக வர்ணிக்கப்படுகிறது. அழகான ரோமங்களால் அலங்கரிக்கப்பட்ட தேவியின் நாபிப்ரதேசமானது மன்மதனை எரித்த பரமேச்வரனுக்கு மன்மத விகாரத்தை உண்டுபண்ணக் கூடியதான ஸௌபாக்யத்துடன் கூடியது என்பதுதான் ப்ரக்ருதத்தில் தாத்பர்யமாகும். ப்ராக்ருதமான ஸ்த்ரீகளுடைய நாபி ப்ரதேசமே புருஷர்களுடைய மோஹத்திற்குக் காரணமாகும் என்பது லோகப்ரஸித்தமாகும்.

नारीस्तनभरनाभीदेशं दृष्ट्वा मा गा मोहावेशं। (നാരീസ്തനഭര നാഭീദേശം ദൃഷ്ട്വാ മാ ഗാ മോഹാവേശം) (நாரீஸ்தநபரநாபீதேசம் த்ருஷ்ட்வா மா கா மோஹாவேசம்) என்ற வசனத்தாலும், ஸ்த்ரீகளுடைய நாபி தேசம் மோஹகாரம் என்று தெரிகிறது. அதிலும் அதிஸுந்தரியான பரதேவியினுடைய நாபி தேசத்தின் ஸௌபாக்யத்தின் பெருமையை யாரால்தான் வர்ணிக்கமுடியும். நாபியை தடாகமாயும் நாபிப்ரதேசத்தில் ஸூக்ஷ்மமாகக் காணப்படும் ரோமராஜியை அக்னி ஜ்வாலையினால் வ்யாப்தமான தேஹத்துடன் அத்தடாகத்தில் முழுகிக்கொண்டிருக்கிற மன்மதனுடைய தேஹத்தினின்றும் வெளிக்கிளம்பும் புகையாகவும் உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது.

இவ்விதம் தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறவர்கள் பரம வைராக்யத்தை அடைந்து மோக்ஷ ஸாம்ராஜ்ய ராஜ்யத்தில் ஏகசக்ராதிபதிகளாக ஆவார்கள்.

ஆகாசயந்த்ரம் அஷ்டதளம், கோஷ்டம், மத்தியில் பீஜாக்ஷரம் க்லீ (க்லீம்) 10 தினங்கள் இந்த ச்லோகத்தை தினம் 1000 வீதம் ஜபம் செய்யவும். ஸகல கார்யமும் ஜயமுண்டாகும்.

---

## 77. தேவியினுடைய இடுப்புப் ப்ரதேசத்தில் ஸூக்ஷ்மதர்சிகளுக்குப் புலப்படும் அதிஸூக்ஷ்மமான ரேகையைப்போலொத்த ரோம வரிசைகளின் வர்ணனை.

यदेतत्कालिन्दीतनुतरतरङ्गाकृति शिवे
कृशे मध्ये किञ्चिज्जननि तव यद्भाति सुधियाम् ।
विमर्दादन्योन्यं कुचकलशयोरन्तरगतं
तनूभूतं व्योम प्रविशदिव नाभिं कुहरिणीम् ॥ ७७ ॥

𑌯𑌦𑍇𑌤𑌤𑍍𑌕𑌾𑌲𑌿𑌨𑍍𑌦𑍀𑌤𑌨𑍁𑌤𑌰𑌤𑌰𑌙𑍍𑌗𑌾𑌕𑍃𑌤𑌿 𑌶𑌿𑌵𑍇
𑌕𑍃𑌶𑍇 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌜𑍍𑌜𑌨𑌨𑌿 𑌤𑌵 𑌯𑌦𑍍𑌭𑌾𑌤𑌿 𑌸𑍁𑌧𑌿𑌯𑌾𑌮𑍍 ।
𑌵𑌿𑌮𑌰𑍍𑌦𑌾𑌦𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌂 𑌕𑍁𑌚𑌕𑌲𑌶𑌯𑍋𑌰𑌨𑍍𑌤𑌰𑌗𑌤𑌂
𑌤𑌨𑍂𑌭𑍂𑌤𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌦𑌿𑌵 𑌨𑌾𑌭𑌿𑌂 𑌕𑍁𑌹𑌰𑌿𑌣𑍀𑌮𑍍
॥ ௭௭ ॥

யதேதத்காலிந்தீதநுதரதரங்காக்ருதி ஸிவே
க்ருசே மத்யே கிஞ்ஸிஜ்ஜநநி தவ யத்பாதி ஸுதியாம் ।
விமர்தாதந்யோந்யம் குசகலசயோரந்தரகதம்
தநூபூதம் வ்யோம ப்ரவிசதிவ நாபிம் குஹரிணீம் ॥77॥

हे जननि (𑌹𑍇 𑌜𑌨𑌨𑌿) (ஹே ஜநநி) = லோகமாதாவான ஹே தாயே !

हे शिवे (𑌹𑍇 𑌶𑌿𑌵𑍇) (ஹே சிவே) = பரமேச்வரனுடைய பத்னியான பரதேவதையே

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

कृशे (𑌕𑍃𑌶𑍇) (க்ருசே) = மிகவும் க்ருசமான

मध्ये (𑌮𑌧𑍍𑌯𑍇) (மத்யே) = இடுப்பின் மேல்

कालिन्दीतनुतरतरङ्गाकृति (𑌕𑌾𑌲𑌿𑌨𑍍𑌦𑍀𑌤𑌨𑍁𑌤𑌰𑌤𑌰𑌙𑍍𑌗𑌾𑌕𑍃𑌤𑌿) (காலிந்தீதநுதரதரங்காக்ருதி) = कालिन्दी - யமுனா நதியின் तनुतर - மிகவும் ஸூக்ஷ்மமான तरङ्ग - அலையினுடைய आकृति - ஆகாரம் போல் ஆகாரமுள்ள

एतत् (𑌏𑌤𑌤𑍍) (ஏதத்) = இந்த

यत् किंचित् (𑌯𑌤𑍍 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍) (யத்கிஞ்சித்) = ரோமங்களின் வரிசையாகிற ஓர் வஸ்துவானது

सुधियां (𑌸𑍁𑌧𑌿𑌯𑌾𑌂) (ஸுதியாம்) = வித்வான்களுக்கு

भाति (𑌭𑌾𑌤𑌿) (பாதி) = எதிரில் ப்ரகாசிக்கின்றதோ

तत् (𑌤𑌤𑍍) (தத்) = அது

कुचकलशयो: (𑌕𑍁𑌚𑌕𑌲𑌶𑌯𑍋𑌃) (குசகலசயோ:) = கலசம்போலுள்ள இரண்டு ஸ்தனங்களுடைய

अन्तरगतं (𑌅𑌨𑍍𑌤𑌰𑌗𑌤𑌂) (அந்தரகதம்) = நடுவிலிருக்கும்

तनूभूतं (தநூஹூதம்) (தநூபூதம்) = மிகவும் ஸூக்ஷ்மமான

व्योम (வ்யோம) (வ்யோம) = ஆகாசமானது

अन्योन्यं (அந்யோந்யம்) (அங்யோங்யம்) = ஸ்தனங்கள் ஒன்றுக்கொன்று

विमर्दात् (விமர்தாத்) (விமர்தாத்) = உரைகின்றபடியால்

कुहरिणीम् (குஹரிணீம்) (குஹரிணீம்) = ரந்த்ரமுள்ள

नाभिं (நாபிம்) (நாபிம்) = தொப்புள் குழியில்

प्रविशदिव (ப்ரவிஶதிவ) (ப்ரவிசதிவ) = ப்ரவேசிக்கிறதுபோல்

भाति (பாதி) (பாதி) = விளங்குகிறது.

தாத்பர்யம்:—"ஹே தாயே, நீ பரமேச்வரனுடைய தர்மபத்தினியாக இருக்கும் காரணத்தால் லோகத்திற்கே தாயாராக ஆகிருய் நானும் லோகத்திற்குள் ஒருவன். ஆகையால் எனக்கும் நீ தாயாரானபடியால் குழந்தைகளுக்குத் தெரியாத ரஹஸ்யம் ஒன்றும தாயினிடம் இருக்க ந்யாயமில்லை. ஆகையால் நான் குழந்தையாக இருக்கும் காரணத்தைக்கொண்டு உன் இடுப்பின் மேல் பாகத்திலுள்ள ரோமாவளியைக் கொஞ்சம் வர்ணிக்கத் துணிந்தேன். இந்த அபராதத்தை நீ பொறுத்துக்கொண்டு என்னை ரக்ஷிக்கவேண்டுமாக ப்ரார்த்திக்கிறேன்" என்று ப்ரார்த்தித்துவிட்டு, ஆசார்யாள் வர்ணிக்கின்ருர்கள். இந்த ரோமாவளியோ யமுனு நதியினுடைய ஸூக்ஷ்மமான அலைகளின் உருவத்தைப்போலுள்ள உருவத்தோடு கூடியதாக பாஸிக்கின்றது. இரண்டு ஸ்தனங்களுடைய நடு

பாகத்திலிருந்து ஆரம்பித்து மிகவும் ஸூக்ஷ்மமான நீலவர்ணமுள்ள ரேகையைப்போல் நடுபாகத்தில் தொப்புள் குழிக்குள் ப்ரவேசிப்பதுபோல் அந்த ரோமாவளிகள் காணப்படுகின்றன. இது மிகவும் ஸூக்ஷ்மமான ரேகையைப்போல் காணப்படுகிறது. யமுனா நதியினுடைய ஜலம் கருப்பானதினால்,அந்த ஜலத்தின் அலையும் மிகவும் ஸூக்ஷ்மமாயும் கருப்பாயும் காணப்படும். இதுபோலவே, இந்த ரோமாவளியும் இருக்கின்றது. ஜிதேந்த்ரியர்களாயும், ப்ரம்ம நிஷ்டர்களாயுமுள்ள மஹாவித்வான்களுக்குத்தான் இந்த ரோமாவளியானது புலப்படுமன்னியில், ப்ராக்ருத ஜனங்களுக்கு இது புலப்படாது. இதனுடைய மஹிமையை வர்ணிக்கவும் யாராலும் இயலாது "ஹே தாயே, இந்த ரோமாவளியானது என்னுடைய புத்திக்கு உன்னுடைய இரண்டு ஸ்தனங்களுக்கும் நடுவிலுள்ள ஸூக்ஷ்மமான ஆகாசமோ, அதாவது இடை வெளிப்ரதேசமோ என்று தோன்றுகிறது. ஸ்தனங்கள் ஒன்றோடொன்று உரைந்துகொள்ளும் காரணத்தால், அந்த ஸூக்ஷ்மமான ஆகாசம் நாம் இங்கு வஸிக்கக்கூடாதென்று பயந்து, ஸூக்ஷ்மமான ரேகையைப்போல், அங்கிருந்து உடலின் நடுபாக வழியாக, இடுப்புவரை கீழ்பாகத்தில் இறங்கிவிட்டு நாபியின் சித்ரவழியாக உட்சென்று ஒளிந்துகொள்கிறதோ" என்றும் புலப்படுகிறது. உத்தம ஸ்த்ரீகளுக்கு கலசம் போன்ற இரண்டு ஸ்தனங்களுடைய நடுபாகத்திலிருந்து நாபிவரையிலும் நீண்ட ஓர் ரோமராஜியானது அதிஸூக்ஷ்மமாக கவனித்தால் காணப்படும். இது மிகவும் ஸூக்ஷ்மமாக இருக்கும் இது பரம ஸௌபாக்ய ஸூசகமாகும். ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தில் இதை ஓர் முக்ய லக்ஷணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. லோகமாதாவான பரதேவதையினிடம் ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தில் சொல்லியபடி இந்த முக்யமான லக்ஷணம் விளங்கிவருகிறதென்பதற்குக் காரணத்தைச் சொல்லவேண்டிய அவச்யமே

யில்லை. இந்த ஸூக்ஷ்மமான தத்வத்தைத்தான் பரமாசார்யாள் ப்ரக்ருதத்தில் போதிக்கின்றூர்கள். மேற்சொல்லப்பட்ட லக்ஷணத்துடன் தேவியை த்யானம்செய்கிறவர்கள் இந்த்ரியங்களுக்கும் கோசரமாகாததான பதார்த்தங்களை அறிய சக்தி உள்ளவர்களாக ஆவார்கள். அதாவது இந்த ச்லோகத்தில் சொல்லியபடி தேவியை த்யானம் செய்கிறவர்கள் ஸர்வக்ஞர்களாக ஆகுவார்கள்.

த்ரிகோணயந்த்ரம். பீஜாக்ஷரம் க்லீம் (க்லீம்) தினம் 2000 வீதம் 15 தினங்கள் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யவும். ரக்த தாமரைப்புஷ்பத்தைச் சுட்ட சாம்பலை பசு நெய்யில் குழப்பி இதில் யந்த்ரத்தையும் ச்லோகத்தையும் எழுதி ஜபிக்கவும். ஸகலமும் ஜயிக்கும்.

---

## 78. தேவியினுடைய நாபியின் வர்ணனை.

स्थिरो गङ्गावर्तः स्तनमुकुलरोमावलिलता
कलावालं कुण्डं कुसुमशरतेजोहुतभुज. ।
रतेर्लीलागारं किमपि तव नाभिर्गिरिसुते
बिलद्वारं सिद्धेर्गिरिशनयनानां विजयते ॥ ७८ ॥

𑌸𑍍𑌥𑌿𑌰𑍋 𑌗𑌙𑍍𑌗𑌾𑌵𑌰𑍍𑌤𑌃 𑌸𑍍𑌤𑌨𑌮𑍁𑌕𑍁𑌲𑌰𑍋𑌮𑌾𑌵𑌲𑌿𑌲𑌤𑌾
𑌕𑌲𑌾𑌵𑌾𑌲𑌂 𑌕𑍁𑌣𑍍𑌡𑌂 𑌕𑍁𑌸𑍁𑌮𑌶𑌰𑌤𑍇𑌜𑍋𑌹𑍁𑌤𑌭𑍁𑌜𑌃।
𑌰𑌤𑍇𑌰𑍍𑌲𑍀𑌲𑌾𑌗𑌾𑌰𑌂 𑌕𑌿𑌮𑌪𑌿 𑌤𑌵 𑌨𑌾𑌭𑌿𑌰𑍍𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇
𑌬𑌿𑌲𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌰𑍍𑌗𑌿𑌰𑌿𑌶𑌨𑌯𑌨𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌜𑌯𑌤𑍇
॥ ௭௮ ॥

ஸ்திரோ கங்காவர்த: ஸ்தநமுகுலரோமாவலிலதா
கலாவாலம் குண்டம் குஸுமசரதேஜோஹுதபுஜ: ।
ரதேர்லீலாகாரம் கிமபி தவ நாபிர்கிரிஸுதே
பிலத்வாரம் ஸித்தேர்கிரிசநயநாநாம் விஜயதே ॥78 ॥

हे गिरिसुते (ஹெ மிரிஸுதெ) (ஹே கிரிஸுதே) = பர்வதராஜனின் புத்திரியான பரதேவதையே !

तव (தவ) (தவ) = உன்னுடைய

नाभि: (நாஹிঃ) (நாபி:) = தொப்புளானது

स्थिर: (ஸ்ஹிரঃ) (ஸ்திர:) = சலனமில்லாததான

गङ्गावर्त: (மஜ்ஜாவத-ঃ) (கங்காவர்த:) = கங்கா நதியின் சுழலாகவும்

स्तनमुकुलरोमावलिलता कलावालं (ஸ்தநமுகுலரொமாவலிலதா கலாவாலம்) (ஸ்தநமுகுலரோமாவலிலதா கலாவாலம்) = स्तन - ஸ்தனங்களாகிய मुकुल - தாமரை மொட்டுக்களுடைய रोमावलिलता - ரோமாவளி என்ற கொடிகளின் कला-தண்டுகளுக்கு आवाल - பாத்தியாகவும்

कुसुमशरतेजोहुतभुज: (குஸுமஶரதெஜொஹுதஹுஜঃ) (குஸுமசரதேஜோ ஹுதபுஜ:) = कुसुमशर - மன்மதனுடைய तेज: - காந்தியாகிற हुतभुज: - அக்னிக்கு

कुण्डं (குண்஡ம்) (குண்டம்) = ஹோம குண்டமாயும்

रते: (ரதெঃ) (ரதே:) = மன்மதனுடைய பத்னியான ரதிதேவிக்கு

लीलागारं (லீலாமாரம்) (லீலாகாரம்) = விளையாட்டு வீடாகவும்

गिरिशनयनानां (மிரிஶநயநாநாம்) (கிரிசநய நாநாம்) = பரமேச்வரனுடைய நேத்ரங்களுடைய

सिद्धेः (ஸிஜே:) (ஸித்தே:) = தபஸ் ஸித்திக்கு

बिलद्वारं (ஸிஒுவாஈ॰) = குஹாதவாரமாகவும்
(பிலத்வாரம்)

किमपि (கிஃவி) (கிமபி) = இவ்விதம் வெகுப்ரகார மாக வர்ணித்தும் முடிவில்லாத ஸௌந்தர்யத்தோடு கூடினதாக

विजयते (ஷிஜயதெ)(விஜயதே) = விளங்குகின்றது.

தாத்பர்யம:—கங்கா நதியின் சுழிகள் ஸ்திரமாக இராது என்பது லோகப்ரஸித்தமானது. சுழி போன்ற தேவியினுடைய நாபியோ, சலனமில்லாததான கங்கா நதியின் சுழலோ என்றே தோன்றுகிறது. ஸ்திரமில்லாத சுழலோடு கூடின கங்காநதியின் தர்சனமே மஹா பாபங்களைப் போக்கடிக்கக் கூடியது என்ருல், ஸ்திரமான சுழியாகிய நாபியோடு கூடின தேவியின் மங்களவிக்ரஹமாகிய கங்கையின் தர்சனம், பார்த்தவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியது என்பது ஸித்தமாகிறது. தவிரவும், தேவியினுடைய இரண்டு ஸ்தனங்களோ, பலவித தாமரை மொட்டுகளைப்போல் பாஸிக்கின்றன. இந்த இரண்டு ஸ்தனங்களுடைய நடுப்ரதேசத்திலிருந்தும் கிளம்பி நாபிவரையிலும் ஸூக்ஷ்மமான ரேகைபோல் காணப்படும் ரோமாவளியோ, தாமரைமொட்டுக்களுக்கு ஆதாரமான கொடியோ என்றும் தோன்றுகிறது.இக்கொடிகளின் கிழங்குகள் இருக்கும் தாமரைத் தடாகந்தான் என்று நாபியை ஊஹிக்கக்கூடியதாக இருக்கிறது. இதனுல், மஹாலக்ஷ்மீதேவியானவள் தாமரைப் புஷ்பத்தில் வாஸம் செய்கிறபடியால், தேவியினுடைய நாபியை தாமரைத் தடாகமாக த்யானம் செய்கிறவர்களுக்கு லக்ஷ்மீ கடாக்ஷம் பொங்கிவரும் என்று வெளியாகிறது. அத்துடன்,

மன்மதனுடைய சரீர காந்தியாகிய அக்னி வஸிக்கும் ஹோமகுண்டமோஎன்றும் உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது இதனுல் நாபியை ஹோமாதாரமான அக்னி குண்டம் என்று த்யானம் செய்யுங் காரணத்தால் ஞானுக்னி யைக்கொண்டு ஸகல பாபங்களேயும், பாபத்திற்குக் காரணமான காமத்தையும், காமத்திற்குக் காரண மான மூலாக்ஞானத்தையும் எரிக்க சக்தி உள்ளவர் களாக ஆகிருர்கள். நாபியை மன்மதனுடைய வாஸஸ் தானம் என்று வர்ணித்ததினுல், மன்மதனுடைய பத்னியான ரதிதேவியும் உல்லாஸத்துடன் வஸிக்கின்ற லீலாக்ரஹம்போலும் தேவியினுடைய நாபி விளங்கி வருகிறது. இவ்வித வைபவத்துடன் நாபியை த்யானம் செய்கிறவர்கள், ஸ்த்ரீகளானுல் ரதிதேவி யைப்போலும், புருஷர்களானுல் மன்மதனேப்போலும் ஆகிவிடுகிருர்கள். பரமசிவனுடைய நேத்ரங்கள் எப்பொழுதும் தேவியின் நாபியில் ஸமர்ப்பணம் செய் யப்பட்டதாக விளங்குகின்றன. நாபிதேசத்தின் ஸௌந்தர்யத்தைப் பார்த்துப்பார்த்து பரமசிவனுக்கு அலம்புத்தி வராமல் எப்பொழுதுமே பரமசிவன் தேவி யின் நாபியைப் பார்த்துக்கொண்டே இருக்கிருர் என்றே ப்ரக்ருதத்தில் தாத்பர்யத்தை அறியவும். தேவியோ, மஹா பதிவ்ரதாசிரோமணியானதினுல் எப்பொழுதும் தன்னுடைய ஹ்ருதயத்தில் பரம சிவனே த்யானம் செய்துவருகிருள். இதைப்பார்க்கும் பொழுது பரமசிவன் தான் தபஸ்ஸைச் செய்வதற்கு ஏகாந்தமான ஸ்தலம் என்று நினேத்து, தேவியினு டைய ஹ்ருதயத்தில் வாஸம் செய்கிருரோ என்றும் தோன்றுகிறது. இம்மஹிமையினுல் தான் அடைந்த கண்களுக்கு அநேகவிதமான ஸித்திகள் ஏற்படக் கூடும் என்ற எண்ணத்தைக்கொண்டு தேவியினு டைய ஹ்ருதயத்திற்குள் தபஸ்ஸைச் செய்ததினுல் உள் பாகத்தில் ஸித்தித்த ஸித்திகள், நாபி ரந்த்ர வழியாக வெளியில் வருமோ என்ற எண்ணத்துடன் பரமேச்வரன் கண்களே இமைக்கொட்டாமலே தேவி

யினுடைய நாபி கமலத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிருர். அதாவது புருஷன் அதி ஸௌந்தரியான ஸ்த்ரீகளின் ரஹஸ்யமான நாபிப்ரதேசத்திலுள்ள ஸௌந்தர்யத்தைப் பார்த்து ஆனந்தத்தை அனுபவிப்பதே இல்லறவாழ்க்கையின் பயனுகும் என்பதை பரமேச்வரன் தன் அனுஷ்டானமூலம் வெளிப்படுத்துகிருர்.

இவ்விதம் தேவியினுடைய நாபி தேசத்தை வெகு ப்ரகாசமாக வர்ணித்தும், அதிலுள்ள ஸௌந்தர்யாதிசயம் அளவிற்கு அடங்காததினுல் வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதது என்று அதைச் சொல்வதுதான் உசிதமாகும் என்று பரமாசார்யாள் அபிப்ராயப்படுகிருர்கள். இந்த ச்லோகத்தில் சொல்லியபடி தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறவர்கள் மூன்று லோகங்களையும் தன் வசமாக்கிக் கொள்ளலாம்.

த்ரிகோணம். பீஜாக்ஷரம் ஹ்ரீம் (ஹ்ரீம்) சந்தனத்தில் எழுதி ஜபித்தால் ஸகலமும் வச்யம். தினம் 108 வீதம் 45 தினங்கள் இந்த ச்லோகத்தை ஜபம் செய்து தரித்துக்கொள்ளவும்.



## 79. தேவியினுடைய இடுப்பு ப்ரதேச வர்ணனை.

निसर्गक्षीणस्य स्तनतटभरेण क्लमजुषो
नमन्मूर्तेर्नारीतिलक शनकैस्त्रुट्यत इव ।
चिरं ते मध्यस्य त्रुटिततटिनीतीरतरुणा
समावस्थास्थेम्नो भवतु कुशलं शैलतनये ॥ ७९ ॥

𑌨𑌿𑌸𑌰𑍍𑌗𑌕𑍍𑌷𑍀𑌣𑌸𑍍𑌯 𑌸𑍍𑌤𑌨𑌤𑌟𑌭𑌰𑍇𑌣 𑌕𑍍𑌲𑌮𑌜𑍁𑌷𑍋
𑌨𑌮𑌨𑍍𑌮𑍂𑌰𑍍𑌤𑍇𑌰𑍍𑌨𑌾𑌰𑍀𑌤𑌿𑌲𑌕 𑌶𑌨𑌕𑍈𑌸𑍍𑌤𑍍𑌰𑍁𑌟𑍍𑌯𑌤 𑌇𑌵 ।
𑌚𑌿𑌰𑌂 𑌤𑍇 𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑍍𑌰𑍁𑌟𑌿𑌤𑌤𑌟𑌿𑌨𑍀𑌤𑍀𑌰𑌤𑌰𑍁𑌣𑌾
𑌸𑌮𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍍𑌥𑍇𑌮𑍍𑌨𑍋 𑌭𑌵𑌤𑍁 𑌕𑍁𑌶𑌲𑌂 𑌶𑍈𑌲𑌤𑌨𑌯𑍇
॥ ௭௯ ॥

நிஸர்கக்ஷீணஸ்ய ஸ்தநதடபரேண க்லமஜுஷோ
நமந்மூர்த்தேர்நாரீதிலக ஶநகைஸ்த்ருட்யத இவ ।
சிரம் தே மத்யஸ்ய த்ருடிததடிநீதீரதருணா
ஸமாவஸ்தாஸ்தேம்நோ பவது குஶலம் ஶைலதநயே
॥ 79 ॥

| | |
|---|---|
| हे नारितिलक शैलतनये (𑌹𑍇 𑌨𑌾𑌰𑍀𑌤𑌿𑌲𑌕 𑌶𑍈𑌲𑌤𑌨𑌯𑍇) (ஹே நாரீதிலக சைலதநயே) | = ஸ்த்ரீ ரத்னமான பர்வத ராஜனின் புத்ரியான ஹே பரதேவதையே! |
| निसर्गक्षीणस्य (𑌨𑌿𑌸𑌰𑍍𑌗𑌕𑍍𑌷𑍀𑌣𑌸𑍍𑌯) (நிஸர்கக்ஷீணஸ்ய) | = இயற்கையிலேயே க்ருசமாயும் |
| स्तनतटभरेण (𑌸𑍍𑌤𑌨𑌤𑌟𑌭𑌰𑍇𑌣) (ஸ்தநதடபரேண) | = ஸ்தன மண்டலங்களுடைய பாரத்தால் |

क्लमजुष: (க்லஜுஷः) (க்லம ஜுஷ:) = ச்ரமத்தை அடைந்ததாயும்

नमन्मूर्तेः (நமந்மூர்தேः) (நமந்மூர்த்தே:) = அக்காரணத்தால் வணங்கின உருவமுள்ளதாயும்

शनकैः (ஶநகைः) (ஶநகை:) = மெள்ள, மெள்ள

त्रुट्यत इव (த்ருட்யத இவ) (த்ருட்யத இவ) = ஓடிந்து போய்விடுமோ என்று சொல்லக்கூடியதாயும்

त्रुटिततटिनीतीरतरुणा (த்ருடிததடிநீதீரதருணா) (த்ருடிததடிநீதீர தருணா) = ப்ரவாஹத்தால் இடிந்து போன நதிக்கரையிலுள்ள விருக்ஷத்தோடு

समावस्थास्थेम्नः (ஸமாவஸ்தாஸ்தேம்நः) (ஸமாவஸ்தாஸ்தேம்ந:) = ஸமமான தசையை அடைகிறதாயும் உள்ள

ते (தே) (தே) = உன்னுடைய

मध्यस्य (மத்யஸ்ய) (மத்யஸ்ய) = இடுப்பிற்கு

चिरं (சிரம்) (சிரம்) = வெகுகாலம்

कुशलं (குஶலம்) (குசலம்) = க்ஷேமமானது

भवतु (பவது) (பவது) = உண்டாகட்டும்.

தாத்பர்யம்:—உத்தமஸ்த்ரீகளுடைய இடுப்பானது இயற்கையாகவே க்ருசமாக இருக்கும். தேவியினுடைய இடுப்புப்ரதேசம் மிகவும் க்ருசமாக இருக்கிறதென்பதில் ஸந்தேஹம் என்ன? அத்துடன், ஸ்தனங்களின் பாரத்தால் இடுப்புப்ரதேசம் மிகவும் வணங்கி

ச்ரமத்தை அடைந்திருப்பதுபோலும் தோன்றுகிறது. தேவியானவள் பர்வதராஜனுடைய புத்ரியாக அவதரித்து ஸ்த்ரீகளுக்குள் திலகம்போல் முதன்மையாகக் குறிப்பிடத்தகுந்த உத்தம ஸ்த்ரீயாக இருப்பதினுல் தான் ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தில் சொல்லியபடி மத்ய ப்ரதேசம் என்ற இடுப்பானது மிகவும் க்ருசமாக தேவியினிடம் பாஸித்துவருகிறது. இதைக் கவனிக்கும் பொழுது, நதிகளில் பூர்ணப்ரவாஹம் வந்து ப்ரவாஹத்தின் ஸம்பந்தத்தால் இடிந்துபோன கரையில் இருந்துவரும் வ்ருக்ஷங்கள் எவ்விதம் நதியில் வீழுந்துவிடுமோ என்று தோன்றக்கூடிய ஸ்திதியில் இருந்துவருமோ, அந்த நிலேயில் தேவியினுடைய மத்ய ப்ரதேசம் என்ற இடுப்பானது இருந்துவருகிறது. தேவியினுடைய சரீரத்தையே, ஓர் புண்ய நதியாக வைத்துக்கொண்டு, ஸௌந்தர்யாதிசயத்தைப் பூர்ண ப்ரவாஹமாயும் பாவித்து, இரண்டு பார்ச்வங்களேயும் கரைகளாகக் கற்பித்துக்கொண்டு, ஸௌந்தர்யம் என்ற ப்ரவாஹத்தின் ஸம்பந்தத்தால் பார்ச்வங்கள் என்ற கரைகள் இடிந்து, அந்த கரைகளில் ஸம்பந்தப்பட்ட மத்ய ப்ரதேசம் எனகிற இடுப்பாகிய வ்ருக்ஷமும், ஸௌந்தர்யம் என்ற ப்ரவாஹத்தில் ஒடிந்து விழுந்துவிடுமோ என்று தோற்றக்கூடியதாக விளங்கி வருகிறது. இந்த க்ரந்த கர்த்தாவான கவியோ, இவ்விதம் தேவியினுடைய மத்ய ப்ரதேசம் ஒடிந்து கீழே விழாமலிருக்க வேண்டுமென்று, நீடித்தகாலம் தேவியின் மத்ய ப்ரதேசத்திற்கு க்ஷேமத்தைக் கருதுகிருர். இதனுல் இடுப்பு ப்ரதேசத்திலுள்ள ஸௌந்தாயம் அளவிற்கு அடங்காதது என்று கவியினுடைய தாத்பர்யமாகும்.

இவ்விதம் தேவியினுடைய மத்ய ப்ரதேசத்தை அறிந்து தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்யும் ஸாதகர்கள், சதுர்தசபுவனத்திலுமுள்ள ப்ராணிகளுடைய மத்ய ஸ்தானத்தில் பூஜிக்கப்பட்ட

வர்களாகக் கொண்டு ஸகல ப்ராணிகளையும் தன் வசப்படுத்திக் கொள்கிறார்கள்.

தங்கத்தகட்டில் ப்ரணவயந்த்ரம். மத்தியில், क्लीं—सर्वजन मोहनम् (𑌕𑍍𑌲𑍀𑌂—𑌸𑌰𑍍𑌵𑌜𑌨 𑌮𑍋𑌹𑌨𑌮𑍍) என்று எழுதவும். தினம் 1000 வீதம் 45 தினம் இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்யவும். பிறகு யந்த்ரதாரணம். ஸர்வ ஜனங்களையும் மோஹிக்கச் செய்யும் சக்தியும், ஐந்த்ரஜாலவித்யாப்ராதமும் ஸித்திக்கும்.

---

## 80. தேவியினுடைய மத்யப்ரதேசமே வர்ணிக்கப்படுகிறது.

कुचौ सद्यः स्विद्यत्तटघटितकूर्पासभिदुरौ
कषन्तौ दोर्मूले कनककलशाभौ कलयता ।
तव त्रातुं भङ्गादलमिति वलग्नं तनुभुवा
त्रिधा नद्धं देवि त्रिवलि लवलीवल्लिभिरिव ॥ ८० ॥

𑌕𑍁𑌚𑍌 𑌸𑌦𑍍𑌯𑌃 𑌸𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍍𑌤𑌟𑌘𑌟𑌿𑌤𑌕𑍂𑌰𑍍𑌪𑌾𑌸𑌭𑌿𑌦𑍁𑌰𑍌
𑌕𑌷𑌨𑍍𑌤𑍌 𑌦𑍋𑌰𑍍𑌮𑍂𑌲𑍇 𑌕𑌨𑌕𑌕𑌲𑌶𑌾𑌭𑍌 𑌕𑌲𑌯𑌤𑌾 ।
𑌤𑌵 𑌤𑍍𑌰𑌾𑌤𑍁𑌂 𑌭𑌙𑍍𑌗𑌾𑌦𑌲𑌮𑌿𑌤𑌿 𑌵𑌲𑌗𑍍𑌨𑌂 𑌤𑌨𑍁𑌭𑍁𑌵𑌾
𑌤𑍍𑌰𑌿𑌧𑌾 𑌨𑌦𑍍𑌧𑌂 𑌦𑍇𑌵𑌿 𑌤𑍍𑌰𑌿𑌵𑌲𑌿 𑌲𑌵𑌲𑍀𑌵𑌲𑍍𑌲𑌿𑌭𑌿𑌰𑌿𑌵 ॥ ௮௦ ॥

குசௌ ஸத்ய: ஸ்வித்யத்தடகடிதகூர்ப்பாஸபிதுரௌ
கஷந்தௌ தோர்மூலே கநககலசாபௌ கலயதா ।
தவ த்ராதும் பங்காதலமிதி வலக்நம் தநுபுவா
த்ரிதா நத்தம் தேவி த்ரிவலி லவலீவல்லிபிரிவ ॥ 80 ॥

हे देवि (𑌹𑍇 𑌦𑍇𑌵𑌿) =ஹே பரதேவதையே!
(ஹே தேவி)




ஸ்ரீ ராஜராஜேஸ்வரி

सद्यः ([illegible]) (ஸத்ய:) = பரமேச்வரனுடைய பெருமையை நினைத்த க்ஷணத்தில்

स्विद्यत्तटघटितकूर्पासभिदुरौ ([illegible]) (ஸ்வித்யத்தடகடித கூர்பாஸபிதுரௌ) = स्विद्यत् - வேர்வையோடு கூடிய तट-பார்ச்வ பாகத்தில் घटित - ஸம்பந்தப் பட்ட कूर्पास - ரவிக்கையை भिदुरौ - கிழியச்செய்கிறதாயும்

दोर्मूले ([illegible]) (தோர்மூலே) = கக்ஷ ப்ரதேசங்களை

कषन्तौ ([illegible]) (கஷந்தௌ) = உரைகின்றதாயும்

कनककलशाभौ ([illegible]) (கநககல சாபௌ) = தங்கக்குடத்தின் காந்தியைப் போன்ற காந்தியோடு கூடினதாயும் இருக்கிற

कुचौ ([illegible]) (குசௌ) = ஸ்தனங்களை

कलयता ([illegible]) (கலயதா) = ஸ்ருஷ்டித்த

तनुभुवा ([illegible]) (தநுபுவா) = மன்மதனால்

भङ्गात् ([illegible]) (பங்காத்) = அப்படிப்பட்ட ஸ்தன பாரத்தால் இடுப்பிற்கு ஒருவித பங்கமும்

अलं ([illegible]) (அலம்) = வரவேண்டாம்

इति (உதி) (இதி) = என்று நினைத்து

त्रातुं (த்ராதும்) (த்ராதும்) = அந்த இடுப்பை ரக்ஷிப்ப தற்கு

त्रिवलि (த்ரிவலி) (த்ரிவலி) = மூன்றுவிதமான மடிப் புச் சதையாகிய

लवलीवल्लिभिः (லவலீவல்லிபி:) (லவலீவல்லிபி:) = வல்லிக்கொடிகளால்

तव (தவ) (தவ) = உன்னுடைய

वलग्नं (வலக்நம்) (வலக்நம்) = இடுப்பானது

त्रिधा (த்ரிதா) (த்ரிதா) = மூன்று சுற்றாக

नद्धं इव (நத்தம் இவ) (நத்தம் இவ) = கட்டப்பட்டதுபோல

भवति (பவதி) (பவதி) = ஆகின்றது.

தாத்பர்யம் :—உத்தம ஸ்த்ரீகளுக்கு இடுப்பு ப்ர தேசத்தில் ரேகையைப்போல் ஸூக்ஷ்மமான மூன்று மடிப்புகள் காணப்படும். நெற்றி, கண்டம், இடுப்பு இப்பிரதேசங்களில் மூன்று ரேகைகள் காணப்படும் என்று ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்திலுள்ளது கண்ட ப்ர தேசத்தை வர்ணிக்கப்பட்ட ச்லோகத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. தேவியினுடைய இரண்டு ஸ்தனங் களோ ஸ்வர்ண கலசங்கள்போல் பாஸித்துவருகின் றன. இவைகள் இரண்டு கக்ஷ ப்ரதேசங்களையும் உரைத்துக்கொண்டு காமேச்வரனுடைய த்ரிபுர விஜ யம் முதலான சரித்ரங்களை நினைக்குங்காலத்தில் ஸந்தோஷத்தால் பூரித்து, பார்ச்வத்தில் கஞ்சுகங்க ளும் கிழிந்துபோய், வேர்வை ஜலத்துடனும் கூடிக் கொண்டிருக்கும் ஸமயத்தில் பார்த்தால், இந்த ஸந்தர் பத்தில் ஸ்தனங்களுடைய பாரத்தால் மத்யப்ரதேசம்

என்ற இடுப்பு ஒடிந்தேபோய்விடுமோ என்று சொல்லக்கூடியதாக பாஸிக்கின்றது. ஸ்தனங்களை ஸ்ருஷ்டித்தவனே மன்மதன்: 'நம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஸ்தனபாரத்தால் தேவியினுடைய இடுப்பு ஒடிந்து விட்டால் நாம் அபராதியாக ஆகிவிடுவோம்' என்ற பயத்தால், தேவியினுடைய இடுப்பில் வள்ளிக்கொடிகளால் மூன்று சுற்ருக மன்மதன் சுற்றிவைத்திருக்கிருனே என்று தேவியின் இடுப்பிலுள்ள மூன்று மடிப்புகளையும் பார்த்து உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. இதனுலும் தேவியினுடைய ஸௌந்தர்யம் மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதது என்பதை அறியவும். இவ்விதம் தேவியினுடைய ஸ்வரூபத்தை த்யானம் செய்பவர்கள் மன்மதனுக்கும் மன்மதனுக ஆவார்கள்.

ஸ்வர்ணத்தகட்டில் அஷ்டகோண யந்த்ரம். பீஜாக்ஷரம் ஹ்ரீ (ஹ்ரீம்) ப்ரதமபுஷ்பிணீவஸ்த்ரத்தில் வைத்து பூஜிக்கவேண்டும். தினம் 1000 வீதம் 45 தினங்கள் இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்யவேண்டும். யந்த்ரத்தை கையில் தரிக்கவும். மஹேந்த்ரஜாலவித்யாப்ரதம்.



## 81. தேவியினுடைய கடிபச்சாத் பாக (பின் பாகம்) வர்ணனை.

गुरुत्वं विस्तारं क्षितिधरपतिः पार्वति निजा-
न्नितम्बादाच्छिद्य त्वयि हरणरूपेण निदधे ।
अतस्ते विस्तीर्णो गुरुरयमशेषां वसुमतीं
नितम्बप्राग्भारः स्थगयति लघुत्वं नयति च ॥ ८१ ॥

𑌗𑍁𑌰𑍁𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌂 𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌧𑌰𑌪𑌤𑌿𑌃 𑌪𑌾𑌰𑍍𑌵𑌤𑌿 𑌨𑌿𑌜𑌾-
𑌨𑍍𑌨𑌿𑌤𑌮𑍍𑌬𑌾𑌦𑌾𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌯 𑌤𑍍𑌵𑌯𑌿 𑌹𑌰𑌣𑌰𑍂𑌪𑍇𑌣 𑌨𑌿𑌦𑌧𑍇 ।
𑌅𑌤𑌸𑍍𑌤𑍇 𑌵𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑍋 𑌗𑍁𑌰𑍁𑌰𑌯𑌮𑌶𑍇𑌷𑌾𑌂 𑌵𑌸𑍁𑌮𑌤𑍀𑌂
𑌨𑌿𑌤𑌮𑍍𑌬𑌪𑍍𑌰𑌾𑌗𑍍𑌭𑌾𑌰𑌃 𑌸𑍍𑌥𑌗𑌯𑌤𑌿 𑌲𑌘𑍁𑌤𑍍𑌵𑌂 𑌨𑌯𑌤𑌿 𑌚 ॥ ௮௧ ॥

குருத்வம் விஸ்தாரம் க்ஷிதிதரபதி: பார்வதி நிஜாத்
நிதம்பாதாச்சித்ய த்வயி ஹரணரூபேண நிததே ।
அதஸ்தே விஸ்தீர்ணோ குருரயமசேஷாம் வஸுமதீம்
நிதம்பப்ராக்பார: ஸ்தகயதி லகுத்வம் நயதி ச ॥ 81 ॥

हे पार्वति (𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌵𑌤𑌿) (ஹே பார்வதி) = பர்வதராஜனின் புத்ரியான ஹே பரதேவதையே!

क्षितिधरपतिः (𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌧𑌰𑌪𑌤𑌿𑌃) (க்ஷிதிதரபதி:) = பர்வதராஜனை ஹிமவான்

गुरुत्वं (𑌗𑍁𑌰𑍁𑌤𑍍𑌵𑌂) (குருத்வம்) = கனமாக இருக்கும் தன்மையையும்

विस्तारं (𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌂) (விஸ்தாரம்) = விசாலமாக இருக்கும் தன்மையும்

निजात् (𑌨𑌿𑌜𑌾𑌤𑍍) (நிஜாத்) = தன்னுடைய

नितम्बात् (𑌨𑌿𑌤𑌮𑍍𑌬𑌾𑌤𑍍) (நிதம்பாத்) = பின்பாகத்திலிருந்தும் (தாழ்வரையிலிருந்தும்)

आच्छिद्य (𑌆𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌯) (ஆச்சித்ய) = எடுத்து

त्वयि (𑌤𑍍𑌵𑌯𑌿) (த்வயி) = உன்னிடத்தில்

हरणरूपेण (𑌹𑌰𑌣𑌰𑍂𑌪𑍇𑌣) (ஹரணரூபேண) = ஸ்த்ரீதனமாக

निदधे (𑌨𑌿𑌦𑌧𑍇) (நிததே) = கொடுத்தார்

अत: (𑌅𑌤𑌃) (அத:) = அக்காரணத்தால்

गुरु: (𑌗𑍁𑌰𑍁𑌃) (குரு:) = பெருத்ததாயும்

विस्तीर्ण: (𑌵𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌃) (விஸ்தீர்ண:) = விசாலமாயும் இருக்கிற

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

अयं (𑌅𑌯𑌂) (அயம்) = இந்த

नितम्बप्राग्भार: (𑌨𑌿𑌤𑌮𑍍𑌬𑌪𑍍𑌰𑌾𑌗𑍍𑌭𑌾𑌰𑌃) (நிதம்பப்ராக்பார:) = கடிபச்சாத் பாகமானது

अशेषां (𑌅𑌶𑍇𑌷𑌾𑌂) (அசேஷாம்) = ஸமஸ்தமான

वसुमतीं (𑌵𑌸𑍁𑌮𑌤𑍀𑌂) (வஸுமதீம்) = பூமியை

स्थगयति (𑌸𑍍𑌥𑌗𑌯𑌤𑌿) (ஸ்தகயதி) = மறைக்கின்றது

लघुत्वं च (𑌲𑌘𑍁𑌤𑍍𑌵𑌂 𑌚) (லகுத்வம் ச) = லேசாக இருக்கும் தன்மையையும்

नयति (𑌨𑌯𑌤𑌿) (நயதி) = அடையச் செய்கின்றது.

தாத்பர்யம்:—உத்தம ஸ்த்ரீகளுக்கு, கடிபச்சாத் பாகம் ரொம்பவும் விசாலமாயும், கனமுள்ளதாயும், கெட்டியாயும் இருக்கும் என்று ஸாமுத்ரிகாலக்ஷண சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஜகதீச்வரி யான பரதேவதையினிடம் இந்த லக்ஷணம் பொருந் தியதாக இருக்கின்றது என்பதில் ஸந்தேஹமேயில்லை பர்வதங்களுடைய தாழ்வரை என்ற கீழ்பாக மானது விசாலமாயும், பெரிதாயும் இருக்கும் வழக்க முண்டு. ஹிமவானே, பர்வதங்களுக்கெல்லாம் அரசனாக விளங்கிவருபவன். அதனால் பர்வதராஜனான ஹிமவானுடைய தாழ்வரை மிகவும் பெரிதாயும், விசாலமாயும் இருந்து வருகின்றது. பர்வதராஜன், தனது புத்ரியாக அவதரித்த, ப்ரக்ருதத்தில் ஸ்தோத் ரம் செய்யப்படுகின்ற தேவியை பரமேச்வரனுக்கு விவாஹம் செய்து கொடுக்கும் ஸமயத்தில், தன் தாழ்வரையிலுள்ள விஸ்தாரத்தையும், பெரிது, கடி னம் என்பதையும் ஸ்த்ரீதனமாக அக்னிக்குமுன்பாகக் கொடுத்தாரோ! அதனால்தான் தேவியினுடைய கடி பச்சாத்பாகம் இரண்டும் பெரிதாயும் விசாலமாயும் காணப்படுகிறதோ என்று வர்ணிப்படுகிறது.

अध्यग्नि अध्याहवनिकं (அத்யக்நம் அத்யாஹவநிகம்) (அத்யக்நம் அத்யாஹவநிகம்) என்று மனுவானவர் ஸ்த்ரீதனத்தை இரண்டுவிதமாக போதிக்கின்றார். விவாஹ காலத்தில் அக்னியை ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு கொடுக்கப்பட்ட ஸ்த்ரீதனம் अध्यग्नि (அத்யக்நம்) (அத்யக் நம்) என்று சொல்லப்படும். புருஷனுடைய வீட் டிற்கு ஸ்த்ரீபோன பிற்பாடு, மறுபடியும் தாய் தந்தைகளுடைய க்ருஹத்திற்கு வந்து, புருஷ னுடைய க்ருஹத்திற்குத் திரும்பிச் செல்லும் பொழுது கொடுக்கப்பட்ட ஸ்த்ரீதனமானது अध्याहवनिकं (அத்யாஹவநிகம்) (அத்யாஹவநிகம்) என்று சொல்லப்படும். ஹிமவானான பர்வதராஜனே தன் தாழ்வரையிலிருந்து கனமாக இருக்கும் தன்மையை

யும் விஸ்தாரத்தையும் எடுத்து பார்வதியினுடைய விவாஹ காலத்தில் அக்னிக்கு எதிரில் கொடுத்த வரானதினுல், அந்த விஸ்தீர்ணத்தையும், பெரிதாக இருக்கும் தன்மையையும் பார்வதியானவள் தனது கடிபச்சாத்பாகத்தில் தரிக்கிருள். அதாவது .லோக மாதாவாயும், ஸர்வக்ஞையாயும், ஸர்வசக்திமதியாயும் உள்ள ஜகதீச்வரிக்கு ஹிமவான் ஸ்த்ரீதனம் கொடுத்து ஆகவேண்டியதுண்டா! ஆகையால் பர்வதராஜனுல் கொடுக்கப்பட்டது, ப்ருஷ்டபாகத்திற்குத்தான் அர்ஹம் என்றதையும் தேவி ஸூசிப்பிக்கின்ருளோ, என்றும் தோன்றுகிறது. கடிபச்சாத்பாகத்திலுள்ள விஸ்தாரமும் பெருமனும் 50 கோடி யோஜனை விஸ்தாரமுள்ள பூமிக்குக்கூட இல்லாமல் ஆகிவிட்டது. அதனுல் தேவியானவள் தன் கடிபச்சாத் பாகத்திலுள்ள பருமனுலும், விஸ்தாரத்தாலும் பூமியினுடைய பருமனேயும் விஸ்தாரத்தையும் குறைந்ததாகச் செய்து பூமியினுடைய கௌரவத்தையே மறைத்துவிடுகிருள். பூமியை லகுவாகவும் செய்துவிடுகிருள். இவ்விதம் தேவியினுடைய கடிபச்சாத் பாகத்தின் பெருமையை அறிந்து தேவியை த்யானம் செய்கிறவர்கள், விசாலமான பூமிக்கு ஸ்திரமான பதியாக ஆவார்கள் என்பது ஸித்தமாகிறது.

ஸ்வர்ண யந்த்ரத்தில் ஔ (ஔம்) என்று எழுதி அதற்குள் ஹ்ரீம் (ஹ்ரீம்) என்ற பீஜாக்ஷரத்தை எழுதி பூஜித்து, தினம் 1000 வீதம் 16 தினங்கள் இந்த ச்லோகத்தை பாராயணம் செய்யவும். இவ்விதம் பூஜித்தால் அக்னிஸ்தம்பனம் ஸித்திக்கும்.

---

## 82. தேவியினுடைய துடை, முழங்கால்களின் வர்ணனை.

करीन्द्राणां शुण्डान्कनककदलीकाण्डपटली-
मुभाभ्यामूरुभ्यामुभयमपि निर्जित्य भवती ।
सुवृत्ताभ्यां पत्युः प्रणतिकठिनाभ्यां गिरिसुते
विधिज्ञे जानुभ्यां विबुधकरिकुम्भद्वयमसि ॥ ८२ ॥

𑌕𑌰𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌶𑍁𑌣𑍍𑌡𑌾𑌨𑍍𑌕𑌨𑌕𑌕𑌦𑌲𑍀𑌕𑌾𑌣𑍍𑌡𑌪𑌟𑌲𑍀-
𑌮𑍁𑌭𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍂𑌰𑍁𑌭𑍍𑌯𑌾𑌮𑍁𑌭𑌯𑌮𑌪𑌿 𑌨𑌿𑌰𑍍𑌜𑌿𑌤𑍍𑌯 𑌭𑌵𑌤𑍀 ।
𑌸𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑌤𑍍𑌯𑍁𑌃 𑌪𑍍𑌰𑌣𑌤𑌿𑌕𑌠𑌿𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇
𑌵𑌿𑌧𑌿𑌜𑍍𑌞𑍇 𑌜𑌾𑌨𑍁𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑌿𑌬𑍁𑌧𑌕𑌰𑌿𑌕𑍁𑌮𑍍𑌭𑌦𑍍𑌵𑌯𑌮𑌸𑌿 ॥ ௮௨ ॥

கரீந்ராணும் சுண்டாந்கநககதலீகாண்டபடலீ,
முபாப்யாமூருப்யாமுபயமபி நிர்ஜித்ய பவதீ।
ஸுவ்ருத்தாப்யாம் பத்யு: ப்ரணதிகடிநாப்யாம் கிரிஸுதே
விதிஜ்ஞே ஜாநுப்யாம் விபுதகரிகும்பத்வயமஸி ॥ 82 ॥

| | |
|---|---|
| हे विधिज्ञे (𑌹𑍇 𑌵𑌿𑌧𑌿𑌜𑍍𑌞𑍇) (ஹே விதிஜ்ஞே) | = பர்த்தாவிற்கு சுச்ரூஷை செய்யும் விதியை அறிந்தவளே! |
| हे गिरिसुते (𑌹𑍇 𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇) (ஹே கிரிஸுதே) | = ஹே பார்வதியே! |
| करीन्द्राणां (𑌕𑌰𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂) (கரீந்த்ராணும்) | = மதம்பிடித்த யானைகளுடைய |
| शुण्डान् (𑌶𑍁𑌣𑍍𑌡𑌾𑌨𑍍) (சுண்டாந்) | = துதிக்கைகள் |

| | |
|---|---|
| कनककदलीकाण्डपटलीं (கநககதலீகாண்டபடலீம்) (கநககதலீகாண்ட படலீம்) | = தங்கமயமான வாழை களின் கூட்டம் |
| उभयमपि (உபயமபி) (உபயமபி) | = இவ்விரண்டையும் |
| उभाभ्यां ऊरुभ्यां (உபாப்யாம் ஊருப்யாம்) (உப ப்யாம் ஊருப்யாம்) | = இரண்டு துடைகளால் |
| निर्जित्य (நிர்ஜித்ய) (நிர்ஜித்ய) | = ஜயித்துவிட்டு |
| सुवृत्ताभ्यां (ஸுவ்ருத்தாப்யாம்) (ஸுவ்ருத்தாப்யாம்) | = நல்ல அழகோடு வர்த் துளமாயும் |
| पत्युः (பத்யு:) (பத்யுக:) | = பர்த்தாவான பரமேச்வர வரனுக்கு |
| प्रणतिकठिनाभ्यां (ப்ரணதிகடினாப்யாம்) (ப்ரணதிகடி நாப் யாம்) | = அடிக்கடி நமஸ்கரிப்பதி னால் கொஞ்சம் கடினமா யும் இருக்கிற |
| जानुभ्यां (ஜாநுப்யாம்) (ஜானுப்யாம்) | = இரண்டு முழங்கால்க ளால் |
| विबुधकरिकुम्भद्वयमपि (விபுதகரிகும்பத்வயமபி) (விபுத கரிகும்பத்வயமபி) | = विबुध - இந்த்ரனுடைய, करि - யானையாகிய ஐராவ வதத்தின் कुम्भद्वयमपि - இர ண்டு கும்பங்களையும்(தலை யில் கும்பம்போல் பாளி க்கும் ப்ரதேசங்களையும்) |

निर्जित्य (நிஜி-ஏதீ)(ஙிர்ஜித்ய) = ஜயித்துவிட்டு

भवती (ஃவதீ) (பகவதீ) = தாங்கள்

असि (ஐஸி) (அஸி) = விளங்குகிறீர்கள்.

தாத்பர்யம் :—தேவியினுடைய ஊரு (துடை) களோ யானைகளின் துதிக்கைபோல் அடிபாகத்தில் பெருத்து வரவர சிறியதாக விளங்கிவருகிறது. தவிர தங்கரேக்காக்வும் ஜிலுஜிலுப்புடனும், ம்ருதுவா யும் விளங்கிவருகிறது. இவ்விதமுள்ள தன் இரண்டு துடைகளின் ஸௌந்தர்யத்தால் தங்க மயமான வாழைமரங்களையும் யானையினுடைய துதிக்கைகளை யும், தேவி கீழாகச் செய்துவிட்டாள். இது மாத்ர மல்ல. தேவியினுடைய முழங்கால் பாகமானது, வர்த் துளமாயும் அழகாயும் விளங்கிவருகிறது. தேவியோ ஸர்வக்ஞையான காரணத்தால் பர்த்தாவிற்கு நமஸ்கா ரம் செய்யவேண்டிய விதியையும் அறிந்தவள் என்ற காரணத்தைக்கொண்டு, அடிக்கடி பர்த்தாவிற்கு முழங்கால்களை பூமியில் ஊன்றிக்கொண்டு நமஸ்காரங் கள் செய்த காரணத்தால் முழங்கால்கள் கொஞ்சம் கடினமாயும் இருந்துவருகின்றன, சக்திக்குள் சிவன் அடங்கினதால், சக்தியைக்காட்டிலும் சிவன் மேலான வஸ்து என்பதற்காக தேவி, சிவனை நமஸ்கரிக்கின் ருள் என்றதை எண்ணக்கூடாது. தனக்கு பர்த்தா வாக ஏற்பட்டுவிட்டால் அவன் மேலானவன், கீழான வன் என்பதை விசாரிக்காமலே அவனை தெய்வ மாகவே கருதி, ஸ்த்ரீகள் தினந்தோறும் நமஸ்கரிக்க வேண்டும் என்ற ஸதாசாரத்தைத் தன் அனுஷ்டான மூலம் ப்ரகாசப்படுத்துகிருள் என்றே அறியவேண் டும். இவ்விதம் அழகாயும், கொஞ்சம் கடினமாயும் வர்த்துளமாயுமுள்ள முழங்கால்களால் ஐராவதத்தின் தலையிலுள்ள இரண்டு கும்பங்களைக்கூட ஜயித்து விட்டு பரமோத்கர்ஷத்துடன் தேவி விளங்கி வரு கிருள்.

இதனுல் தேவியினுடைய துடைகளிலும், முழங் கால்களிலும் உள்ள ஸௌந்தர்யம் அளவிற்கு அடங் காதது என்பதை அறிந்துகொள்ளவேண்டும். இவ் விதம் அறிந்து த்யானம் செய்கிறவர்கள் ஐராவதத் தின் மேல் ஏறிக்கொண்டு ஸவாரி செய்யும் இந்த்ர பதவியையும், தங்கம் விளையும் பூமிக்கு அதிபதியாகும் தன்மையையும் அடைவார்கள் என்பது ஸித்தம்.

ஷட்கோண யந்த்ரம். மத்தியில் ப்ரணவத்தையும் ஷட்கோ ணங்களில், மேலிருந்து ப்ரதக்ஷிணமாக ज्वालामुखि स्वाहा (ஜ்வாலா முகி ஸ்வாஹா) என்பதிலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தை ஒவ் வொரு கோணத்திலும் எழுதவேண்டும். குதிரைச்செவி மாத்தில் யந்த்ரத்தை எழுதவும். தினம் 1000 வீதம் 45 தினங்கள் இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்து பூஜிக்கவும். ஜலஸ்தம்பன ஸித்தி.



## 83. தேவியினுடைய ஜங்கா என்ற (முழங்காலுக்குக் கீழ், பாதத்திற்கு மேல் பாகம்) சப்தத்தால் சொல்லப்படுகிற ப்ரதேசத்தின் வர்ணனை.

पराजेतुं रुद्रं द्विगुणशरगर्भौ गिरिसुते
निषङ्गौ जङ्घे ते विषमविशिखो बाढमकृत ।
यदग्रे दृश्यन्ते दशशरफलाः पादयुगली-
नखाग्रच्छद्मानः सुरमकुटशाणैकनिशिताः ॥ ८३ ॥

𑌪𑌰𑌾𑌜𑍇𑌤𑍁𑌂 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂 𑌦𑍍𑌵𑌿𑌗𑍁𑌣𑌶𑌰𑌗𑌰𑍍𑌭𑍌 𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇
𑌨𑌿𑌷𑌙𑍍𑌗𑍌 𑌜𑌙𑍍𑌘𑍇 𑌤𑍇 𑌵𑌿𑌷𑌮𑌵𑌿𑌶𑌿𑌖𑍋 𑌬𑌾𑌢𑌮𑌕𑍃𑌤।
𑌯𑌦𑌗𑍍𑌰𑍇 𑌦𑍃𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌦𑌶𑌶𑌰𑌫𑌲𑌾𑌃 𑌪𑌾𑌦𑌯𑍁𑌗𑌲𑍀-
𑌨𑌖𑌾𑌗𑍍𑌰𑌚𑍍𑌛𑌦𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑍁𑌰𑌮𑌕𑍁𑌟𑌶𑌾𑌣𑍈𑌕𑌨𑌿𑌶𑌿𑌤𑌾𑌃
॥ ௮௩ ॥

பராஜேதும் ருத்ரம் த்விகுணசரகர்பௌ கிரிஸுதே
நிஷங்கௌ ஜங்கே தே விஷமவிசிகோ பாடமக்ருத ।
யதக்ரே த்ருச்யந்தே தசசரபலா: பாதயுகலீ
நகாக்ரச்சத்மாந: ஸுரமகுடசாணைகநிசிதா: ॥ 83 ॥

हे गिरिसुते (𑌹𑍇 𑌗𑌿𑌰𑌿𑌸𑍁𑌤𑍇) = ஹே பார்வதியே!
(ஹே கிரிஸுதே)

विषमविशिखः (𑌵𑌿𑌷𑌮𑌵𑌿𑌶𑌿𑌖𑌃) = மன்மதனுவன்
(விஷமவிசிக:)

रुद्रं (𑌰𑍁𑌦𑍍𑌰𑌂) (ருத்ரம்) = பரமேச்வரனை

पराजेतुं (𑌪𑌰𑌾𑌜𑍇𑌤𑍁𑌂) = ஜயிப்பதற்கு
(பராஜேதும்)

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

जङ्घे (𑌜𑌙𑍍𑌘𑍇) (ஜங்கே) = முழங்காலுக்குக் கீழ்பாகத்திலுள்ள ப்ரதேசங்களை

द्विगुणशरगर्भौ (𑌦𑍍𑌵𑌿𑌗𑍁𑌣𑌶𑌰𑌗𑌰𑍍𑌭𑍌) (த்விகுணசரகர்பௌ) = தனது ஐந்து பாணங்கள் போராமல், பத்து பாணங்களாகச் செய்து அதை உள் பாகத்தில் நிறப்பப்பட்ட

निषङ्गौ (𑌨𑌿𑌷𑌙𑍍𑌗𑍌) (நிஷங்கௌ) = இரண்டு அம்பராத் தூணிகளாக

अकृत (𑌅𑌕𑍃𑌤) (அக்ருத்) = செய்திருக்கிறான்

बाढं (𑌬𑌾𑌢𑌂) (பாடம்) = இது நிச்சயமே

यदग्रे (𑌯𑌦𑌗𑍍𑌰𑍇) (யதக்ரே) = எந்த அம்பராத் தூணிகளுடைய நுனியில்

पादयुगलीनखाग्रच्छद्मानः (𑌪𑌾𑌦𑌯𑍁𑌗𑌲𑍀𑌨𑌖𑌾𑌗𑍍𑌰𑌚𑍍𑌛𑌦𑍍𑌮𑌾𑌨𑌃) (பாதயுகலீநகாக்ரச்சத்மாந:) = இரண்டு பாதங்களிலும் பாஸிக்கின்ற நகங்களின் அக்ரபாகம் என்ற வ்யாஜத்தை உடைத்தானதாயும்

सुरमकुटशाणैकनिशिताः) (𑌸𑍁𑌰𑌮𑌕𑍁𑌟𑌶𑌾𑌣𑍈𑌕𑌨𑌿𑌶𑌿𑌤𑌾𑌃) (ஸுரமகுடசாணைகநிசிதா:) = सुर - தேவர்களுடைய मकुट - க்ரீடங்களாகிய शाण - சாணைக்கல்லில் एक - முக்யமாக निशिताः - தீட்டப்பட்டதாயுமுள்ள

दशशरफलाः (ஃஶஶரஃலா:) (தசசரபலா:) பத்து பாணங்களுடைய இரும்பு மயமான நுனிகள்

दृश्यन्ते (த்ருஶ்யந்தே) (த்ருச்யந்தே) = காணப்படுகின்றனவோ.

தாத்பர்யம் :—தேவியினுடைய இரண்டு கால்களிலுள்ள பாகங்களையும் மன்மதனுடைய அம்பராத் தூணிகளாக வர்ணிக்கப்படுகிறது. யுத்தவீரர்கள் பாணங்களை அம்பராத்தூணிகளின் மேல்பாகத்தில் கூர்கள் தெரியும்படி வைத்திருக்கும் வழக்கமுண்டு. அதிலும் மன்மதன யுத்தவீரர்களுக்குள் முதன்மையானவன். தேவியினுடைய இரண்டு பாதங்களுடைய பத்துவிதமான நகங்களும், ஜங்கை என்று சொல்லப்படும் முழங்காலுக்குக் கீழ் ப்ரதேசத்திலுள்ள அம்பராத்தூணியில் வைத்திருக்கிற பத்து விதமான பாணங்களின் மேல் பாகத்திலுள்ள இரும்பினுல் செய்யப்பட்ட கூர்களோ என்றும் தோன்றுகிறது. பாணத்திலுள்ள கூர்களை அடிக்கடி சாணைக்கல்லில் உறைத்து மிகவும் கூர்மையாகவும், பாளபல்யமுள்ளவைகளாகவும் யுத்தவீரர்கள் வைத்திருப்பாகள். இதுபோலவே, தேவியினுடைய இருபாதங்களிலுமுள்ள நகங்களின் அக்ரபாகமும் அடிக்கடி இந்த்ரன் முதலான தேவர்கள் தேவியினுடைய பாதங்களைத் தொட்டு, தங்களுடைய நவரத்ன மயமான கிரீடங்களுடன் நமஸ்கரிக்கின்ற காரணத்தால் அந்த கிரீடத்தில் தேவியினுடைய பாதங்களிலுள்ள நகங்களின் அக்ரபாகங்கள் பட்டு, சாணையில் உறைத்ததுபோல் கூர்மையாகவும் பாளபல்யம் உள்ளவைகள்போலும் விளங்கி வருகிறது. ஆனுல் மன்மதன் ஐந்துவிதமான பாணங்களைத்தான் உடைத்தானவன். தன்னிடமுள்ள ஐந்துவிதமான பாணங்களைக்கொண்டு பரமே

ச்வரனை ஜயிக்கமுடியாமல், மற்றொரு ஐந்து பாணங்களையும் தபோ மஹிமையினால் தேவியினுடைய கடாக்ஷத்தால் மன்மதன் ஸம்பாதித்துக்கொண்டானோ என்று வர்ணிக்கப்படுகிறது. தேவியினுடைய இரு பாதங்களிலுமுள்ள பத்துவிதமான நகங்களின் அக்ர பாகத்தை மன்மதனுடைய பாணங்களின் கூர்மையான நுனிபாகம் என்று வர்ணிப்பதிலிருந்து, ப்ரக்ருதத்தில் மன்மதன் பரமேச்வரனை ஜயிக்கிற விஷயத்தில் ஐந்து பாணங்கள் போதாதென்று நினைத்து, மற்றொரு ஐந்து பாணங்களையும் ஸ்வீகரித்துக்கொண்டானோ என்று உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. இதனால் கோபாக்னியில் காமனை எரித்த பரமேச்வரனும் தேவியினுடைய முழங்காலிற்கு கீழ்பாகத்திலுள்ள ப்ரதேசங்களின் அழகையும், தேவியினுடைய இரண்டு பாதங்களிலும் விளங்கிவரும் நகங்களின் ஸௌந்தர்யத்தையும் பார்த்து காமவிகாரத்தை அடையாமலிருக்கமுடியாது என்பதே இதன் தாத்பர்யமாகும். ஆகையால் இந்த இரண்டு ப்ரதேசங்களிலும் உள்ள ஸௌந்தர்யம் அளவிற்கு அடங்காததே என்று அறியவும்.

இவ்விதம் தேவியினுடைய பெருமையை அறிந்து உபாஸிக்கிறவர்கள், இந்த்ரன் முதலான தேவர்களைப்போல் ப்ரபலமான அதிகார பதவியை வஹித்துக்கொண்டு மிகவும் உத்கர்ஷத்துடன் விளங்கிவருவார்கள்.

ஸ்வர்ணத்தில் சதுஷ்கோண யந்த்ரம் மத்தியில் द्ं, सौः, द्ं (த்ம், ஸௌ:, த்ம்) என்று எழுதுக. தினம் 1000 வீதம் 45 தினம் இந்த ச்லோக பாராயணம். கஜதுரங்க ஸைன்ய ஸ்தம்பநம்.

---

## 84. தேவியினுடைய பாதாரவிந்த வர்ணனை

श्रुतीनां मूर्धानो दधति तव यौ शेखरतया
ममाप्येतौ मातः शिरसि दयया धेहि चरणौ ।
ययोः पाद्यं पाथः पशुपतिजटाजूटतटिनी
ययोर्लाक्षालक्ष्मीररुणहरिचूडामणिरुचिः ॥ ८४ ॥

𑌶𑍍𑌰𑍁𑌤𑍀𑌨𑌾𑌂 𑌮𑍂𑌰𑍍𑌧𑌾𑌨𑍋 𑌦𑌧𑌤𑌿 𑌤𑌵 𑌯𑍌 𑌶𑍇𑌖𑌰𑌤𑌯𑌾
𑌮𑌮𑌾𑌪𑍍𑌯𑍇𑌤𑍌 𑌮𑌾𑌤𑌃 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌦𑌯𑌯𑌾 𑌧𑍇𑌹𑌿 𑌚𑌰𑌣𑍌 ।
𑌯𑌯𑍋𑌃 𑌪𑌾𑌦𑍍𑌯𑌂 𑌪𑌾𑌥𑌃 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌜𑌟𑌾𑌜𑍂𑌟𑌤𑌟𑌿𑌨𑍀
𑌯𑌯𑍋𑌰𑍍𑌲𑌾𑌕𑍍𑌷𑌾𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌰𑌰𑍁𑌣𑌹𑌰𑌿𑌚𑍂𑌡𑌾𑌮𑌣𑌿𑌰𑍁𑌚𑌿𑌃
॥ ௮௪ ॥

ச்ருதீநாம் மூர்த்நாநோ தததி தவ யௌ சேகரதயா
மமாப்யேதௌ மாத: சிரஸி தயயா தேஹி சரணௌ ।
யயோ: பாத்யம் பாத: பசுபதிஜடாஜூடதடிநீ
யயோர்லாக்ஷாலக்ஷ்மீரருணஹரிசூடாமணிருசி: ॥ 84 ॥

हे जननि (𑌹𑍇 𑌜𑌨𑌨𑌿) (ஹே ஜநநி) = ஹே தாயே !

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

यौ (𑌯𑍌) (யௌ) = எந்த

चरणौ (𑌚𑌰𑌣𑍌) (சரணௌ) = பாதங்களை

श्रुतीनां (𑌶𑍍𑌰𑍁𑌤𑍀𑌨𑌾𑌂) (ச்ருதீநாம்) = வேதங்களுக்கு

मूर्धानः (𑌮𑍂𑌰𑍍𑌧𑌾𑌨𑌃) (மூர்த்தாந:) = சிரஸ்ஸுகளாக விளங்கி வரும் உபநிஷத்துக்கள்

शेखरतया (𑌶𑍇𑌖𑌰𑌤𑌯𑌾) = தலையில் அலங்கரித்துக் கொள்ளும் புஷ்பங்களாக

दधति (𑌦𑌧𑌤𑌿) (தததி) = தரிக்கின்றனவோ

हे मातः (𑌹𑍇 𑌮𑌾𑌤𑌃) (ஹே மாத:) = ஹே தாயே

एतौ (𑌏𑌤𑍌) (ஏதௌ) = இந்த உன்னுடைய சரணங்களை

ममापि (𑌮𑌮𑌾𑌪𑌿) (மமாபி) = உன் குழந்தையான என்னுடைய

शिरसि (𑌶𑌿𑌰𑌸𑌿) (சிரஸி) = தலையிலும்

दयया (𑌦𑌯𑌯𑌾) (தயயா) = க்ருபையினால்

धेहि (𑌧𑍇𑌹𑌿) (தேஹி) = வைத்து அனுக்ரஹிக்க வேண்டும்.

ययोः (𑌯𑌯𑍋𑌃) (யயோ:) = எந்த உன்னுடைய இரண்டு சரணங்களுக்கும்

पाद्यं हि पाथः (𑌪𑌾𑌦𑍍𑌯𑌂 𑌹𑌿 𑌪𑌾𑌥𑌃) (பாத்யம் ஹி பாத:) = பாதப்ரக்ஷாளனம் செய்துவைக்கும்ஜலமோ

पशुपतिजटाजूटतटिनी (𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌜𑌟𑌾𑌜𑍂𑌟𑌤𑌟𑌿𑌨𑍀)(பசுபதி ஜடாஜூட-தடினீ) = पशुपति - பரமேச்வரனுடைய जटाजूट - ஜடாமண்டலத்தில் வஸிக்கும் तटिनी - கங்காநதியோ,

ययो: (யயொ:) (யயோ:) = யாதொரு பாதங்களுடைய

लाक्षालक्ष्मी: (லாக்ஷாலக்ஷ்மீ:) (லாக்ஷாலக்ஷ்மீ:) = மருதாணியின் சோபையானது

अरुणहरिचूडामणिरुचि: (அருணஹரிசூடாமணிருசி:) (அருணஹரிசூடாமணி ருசி:) = அருண - சிவந்ததான ஹரி - விஷ்ணுவினுடையசூடாமணி - சிரஸ்ஸில் அலங்கரிக்கப்பட்ட கௌஸ்துப மணியினுடைய रुचि: - காந்தியோ !

தாத்பர்யம் :—உபநிஷத்துக்கள் தேவியினுடைய பாதாரவிந்தங்களை சிரோபூஷணமாக வஹிக்கின்றதுகள். அதாவது, உபநிஷத்துக்கள் தேவியினுடைய பாதாரவிந்தங்களைத்தான் பரம தாத்பர்யத்துடன் ப்ரதிபாதனம் செய்கின்றதுகள். இவ்விஷயத்தில் नमो देव्यै महालक्ष्म्यै श्रियै सिध्यै नमो: नम:। ब्रह्मविष्णुमहेशान वेदकै: पूजिताङ्घ्रये। नमस्त्रिपुरसुन्दर्यै शिवायै विश्वमूर्तये। (நமொ தெவ்யை மஹாலக்ஷ்ம்யை ஸ்ரியை ஸித்யை நமொ: நம:। ப்ரஹ்ம விஷ்ணு மஹெஶாந வெதகை: பூஜிதாங்க்ரயெ। நமஸ்த்ரிபுரஸுந்தர்யை ஶிவாயை விஶ்வமூர்தயெ) (நமோ தேவ்யை மஹாலக்ஷ்ம்யை ச்ரியை ஸித்யை நமோ: நம: । ப்ரஹ்ம விஷ்ணு மஹேசாந வேதகை: பூஜிதாங்க்ரயே । நமஸ்த்ரிபுரஸுந்தர்யை சிவாயை விச்வமூர்தயே) என்றது முதலான வஸிஷ்ட பகவானுடைய வாக்யமே ப்ரமாணமாகும். இந்த வாக்யத்தில் वेदकै: (வெதகை:) (வேதகை:) என்ற பதத்திற்கு वेदानां कै: वेदकै: (வெதாநாம் கை: வெதகை:) (வேதநாம் கை: வேதகை:)

என்று அர்த்தத்தை க்ரஹித்துக்கொள்ளவேண்டிய படியினாலும் ꣳ க (க) என்ற அக்ஷரத்திற்கு சிரஸ்ஸு என்று அர்த்தமானதினாலும், "வேதங்களுக்கு சிரஸ்ஸான உபநிஷத்துக்களுக்கு ஆராதிக்கப்பட்ட சரணாரவிந்தத்தோடு கூடின ஹே பரதேவதையே!" என்ற அர்த்தம் த்வனிக்கின்றபடியால், ஸகல உப நிஷத்துக்களும் தேவியினுடைய பாதாரவிந்தம் சிரோபூஷணமாக விளங்கிவருகிறது என்று வெளியா கிறபடியால், மேற்கண்ட வஸிஷ்ட வாக்யத்தை ப்ரமாணமாக வைத்துக்கொண்டு, ப்ரக்ருதத்தில் பர மாசார்யாளும், தேவியினுடைய பாதாரவிந்தங்களை உபநிஷத்துக்களுக்கு சிரோபூஷணமாக வர்ணிக்கிறார் கள். இதனால், தேவியினுடைய பாதாரவிந்தங் களுக்கு ச்ருதிகளுடைய சிரஸ்ஸுக்களில் ஸஞ்சாரம் அதிகமாக ஏற்படுகிறது என்று தெரிகிறது. सर्वोपनिषदुद्घुष्टा (ஸர்வோபநிஷதுத்குஷ்டா) (ஸர்வோப நிஷதுத்குஷ்டா) என்ற லலிதா ஸஹஸ்ரநாமத்தி லுள்ள நாமாவளியினாலும் ப்ரக்ருதமான அர்த்தம் தான் போதிக்கப்படுகிறது.

அத்துடன் பரமேச்வரன் தேவிக்கு ப்ரணய கோபம் வரும் ஸந்தர்ப்பத்தில் நமஸ்கரிக்கும் வழக்க முண்டு. ஸ்த்ரீயும் புமானும் க்ரீடிக்கும் காலத்தில், ஸ்த்ரீகளுக்கு ஏற்படும் கோபமானது ப்ரணயகோபம் என்று சொல்லப்படும். இந்த ஸமயம் புருஷன் ஸ்த்ரீயை நமஸ்கரிப்பதும் உண்டு. அதுபோல் பரமேச்வரன் தேவியினுடைய பாதாரவிந்தங்களை சிரஸ்ஸால் தொட்டு நமஸ்கரிக்கும்பொழுது பரமேச் வரனுடைய ஜடாமண்டலத்தில் வஸிக்கும் கங்கா தேவியானவள் தேவியினுடைய பாதங்களில் விழும் படி நேரிடுகிறது. அதனால் தேவியினுடைய பாதார விந்தத்தை ப்ரக்ஷாளனம் செய்யும் ஜலம் கங்கா தீர்த் தம் என்றே சொல்லப்படுகிறது. அதுபோலவே, தினந்தோறும் மஹாவிஷ்ணுவானவர் தனது அதிகார

பதவி ஸ்திரமாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் காலேயில் தேவியை நமஸ்கரிக்கின்ற வழக்கமுண்டு. மஹாவிஷ்ணு க்ரீடத்துடன் தேவியினுடைய பாதாரவிந்தங்களே நமஸ்கரிக்கின்றபடியால் விஷ்ணுவினுடைய க்ரீடத்தில் இழைக்கப்பட்ட சிவப்பான கௌஸ்துபமணியினுடைய சிவப்பான காந்தி தேவியினுடைய பாதாரவிந்தங்களில் சம்பந்தப்பட்டு தேவியினுடைய பாதங்களும் சிவப்பாக ஆகிவிடுகிறது. அதனால் தேவி தன் பாதங்களே மருதாணியினால் அலங்கரித்துக்கொண்டிருக்கின்ருளோ என்றும் தோன்றுகிறது. தேவியின் பாதங்களில் காணப்படுகின்ற சிகப்பு வர்ணம் தினந்தோறும் காலேயில் க்ரீடத்துடன் மாஹாவிஷ்ணுவானவர் தேவியினுடைய பாதங்களில் நமஸ்கரிககின்ருர் என்ற தத்வத்தை ஸூசிப்பிக்கின்றது. ஸர்வஜகத்திற்கும் தாயாரான सादा (ஸாதா) (ஸாதா) என்ற கலேயாகிய பரதேவதையினுடைய பாதாரவிந்தங்களில், ஜகத்திற்குள் அகப்பட்ட விஷ்ணுவோ, ப்ரும்மாவோ, பசுபதியோ, உபநிஷத்துக்களோ நமஸ்கரிக்கின்ருர்கள்; தேவியினுடைய பாதாரவிந்தங்களே சிரஸ்ஸுக்களில் தரித்துக் கொள்கிருர்கள்; தேவியினுடைய பாதாரவிந்தத்தில் ஸம்பந்தபபட்ட நிர்மால்ய ஜலத்தாலும் பரிசுத்தர்களாக ஆகி தேவியினுடைய அனுக்ரஹ மஹிமையினுல் அந்தந்த அதிகாரங்களே நீடிததகாலம் வஹிக்கின்ருர்கள் என்பது உசிதம்தான். தாய்க்குக் குழந்தைகள் அடங்கி இருப்பது என்பது ந்யாயமல்லவா? இவ்விதம் ச்ருதிகளுடைய தலேகளிலும், விஷ்ணுவினுடைய சிரஸ்ஸிலும், ப்ரும்மா, பசுபதி முதலியவர்களுடைய சிரஸ்ஸிலும், தேவியினுடைய பாதாரவிந்தங்கள் ஸஞ்சரிக்கும் ஸ்வபாவத்தை இந்த க்ரந்த கர்த்தாவான பரமாசார்யாள் அறிந்து, ஹே தாயே! உன்னுல் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஜகத்தில், நானும் ஒருவன் அடங்கியவனே. ஆகையால் உன் குழந்தையான என்னுடைய சிரஸ்ஸிலும் உன் திருபாதங்களே

வைத்து என்னுடைய ஜன்மா ஸபலமாகும்படி பரி பூர்ணமாக அனுக்ரஹிக்கவேண்டும்" என்று ப்ரார்த் திக்கிறார்கள். இதனால் ஸ்ரீசக்ரரூபமாகவோ, அல்லது உபாஸகர்களான ப்ராமணர்கள் மூலமாகவோ, தேவியை ஆராதித்து தேவியின் பாதாரவிந்தத்தில் ஸம்பந்தப்பட்ட பரிசுத்தமான தீர்த்தத்தை ப்ரோக்ஷணம் செய்துகொண்டு உட்கொள்கிறவர்களும், ஒவ்வொரு தினமும் மூன்று ஸந்தியிலும் தேவியினுடைய பாதாரவிந்தங்களில் நமஸ்காரத்தைச் செய்கிறவர்களும் ஸ்வப்னுவஸ்தையில் தன் தாயைப்போல் தேவியினுடைய ஸ்வரூபத்தைக்கண்டு, தனது சிரஸ்ஸை பாதத்தால் தொடுவதுபோலவும் கண்டு, ஸகல வ்யாதிகளிலிருந்தும் விமுக்தர்களாக ஆகி, ஜீவன்முக்தர்களாக ஆவார்கள் என்பது ஸித்தமாகிறது.

ஸ்வர்ணத்தில் ஷட் கோணம்; மத்தியில் अं, ह्रीं, क्रौं (க்ரூம், ஹ்ரீம், க்ரௌம்) ஸந்திகளில் संजीविनीहुंफट् (ஸம்ஜீவிநீ ஹும் பட்) தினம் 1000 வீதம் 1 வருஷம் இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்யவும். பரகாய ப்ரவேசம் செய்யலாம்.



## 85. தேவியின் பாதாரவிந்தங்களின் வர்ணனை.

नमोवाकं ब्रूमो नयनरमणीयाय पदयो-
स्तवास्मै द्वन्द्वाय स्फुटरुचिरसालक्तकवते ।
असूयत्यत्यन्तं यदभिहननाय स्पृहयते
पशूनामीशानः प्रमदवनकङ्केलितरवे ॥ ८५ ॥

𑌨𑌮𑍋𑌵𑌾𑌕𑌂 𑌬𑍍𑌰𑍂𑌮𑍋 𑌨𑌯𑌨𑌰𑌮𑌣𑍀𑌯𑌾𑌯 𑌪𑌦𑌯𑍋-
𑌸𑍍𑌤𑌵𑌾𑌸𑍍𑌮𑍈 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌯 𑌸𑍍𑌫𑍁𑌟𑌰𑍁𑌚𑌿𑌰𑌸𑌾𑌲𑌕𑍍𑌤𑌕𑌵𑌤𑍇 ।
𑌅𑌸𑍂𑌯𑌤𑍍𑌯𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌯𑌦𑌭𑌿𑌹𑌨𑌨𑌾𑌯 𑌸𑍍𑌪𑍃𑌹𑌯𑌤𑍇
𑌪𑌶𑍂𑌨𑌾𑌮𑍀𑌶𑌾𑌨𑌃 𑌪𑍍𑌰𑌮𑌦𑌵𑌨𑌕𑌙𑍍𑌕𑍇𑌲𑌿𑌤𑌰𑌵𑍇 ॥ அரு ॥

நமோவாகம் ப்ரூமோ நயநரமணீயாய பதயோ
ஸ்தவாஸ்மை த்வந்த்வாய ஸ்புடருசிரஸாலக்தகவதே ।
அஸூயத்யத்யந்தம் யதபிஹநநாய ஸ்ப்ருஹயதே
பசூநாமீசாந: ப்ரமதவநகங்கேலிதரவே ॥ 85 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பரதேவதையே !

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

नयनरमणीयाय (𑌨𑌯𑌨𑌰𑌮𑌣𑍀𑌯𑌾𑌯) (நயநரமணீயாய) = கண்களுக்கு ஆநந்தத்தைக் கொடுக்கிறதாயும்

स्फुटरुचिरसालक्तकवते (𑌸𑍍𑌫𑍁𑌟𑌰𑍁𑌚𑌿𑌰𑌸𑌾𑌲𑌕𑍍𑌤𑌕𑌵𑌤𑍇) (ஸ்புடருசிரஸாலக்த கவதே) = स्फुटरुचि - மிகவும் ப்ரகாச =முள்ளதாயும், रसालक्तकवते- ஈரமான மருதாணியோடும் கூடியதாயிருக்கிற

पदयोः (வஃயொஃ)(பதயோ:) = கால்களுடைய

अस्मै द्वन्द्वाय (அஸ்மை த்வந்த்வாய) = இந்த இரண்டின்
(அஸ்மை த்வந்த்வாய) பொருட்டு

नमोवाकं (நமொவாகஂ) = நமஸ்கார வார்த்தை
(நமோவாகம்) அதாவது நமோ நம: என்று

ब्रूमः (ப்ரூமஃ) (ப்ரூம:) = சொல்லுகிறோம்

पशूनां (பஶூநாஂ) = பசுக்களுக்கு
(பசூநாம்)

ईशानः (ஈஶாநஃ) (ஈசாந:) = பதியான பரமேச்வரன்

यदभिहननाय (யஃஹிஹநநாய) = யத் – யாதொரு தேவியி
(யதபிஹநநாய) னுடைய பாதாரவிந்தங்களால் अभिहननाय - உதைத்து தன்னிடம் ஏற்படக்கூடிய ஸம்பந்தத்தின் பொருட்டு

स्पृहयते (ஸ்ஹ்ருஹயதெ) = ஆசைப்படுகிற
(ஸப்ருஹயதே)

प्रमदवनकङ्केलितरवे (ப்ரமஃவநகங்கெலிதரவெ) = प्रमदवन - உத்யானவனத்தி
(ப்ரமதவநகங்கேலி லுள்ள कङ्केलितरवे- அசோக
தரவே) வ்ருக்ஷத்தின் பொருட்டு

अत्यन्तं (அத்யந்தஂ) = மிகவும்
(அத்யந்தம்)

असूयति (ஜஸூயதி) = பொறுமைப்படுகிறாரோ.
(அஸூயதி)

தாத்பர்யம் :—தேவியினுடைய பாதாரவிந்தங்களோ, தர்சனம்செய்கிற பக்தஜனங்களுடைய நேத்ரங்களுக்கு பரமாநந்தத்தையும் ஜன்மஸாபல்யத்தையும் கொடுக்கக்கூடியதாக இருக்கின்றன. அத்துடன், மிகவும் ப்ரகாசமுள்ளதாயும் மருதாணி ரஸத்தால் அலங்கரிக்கப்பட்டு ஆர்த்ரபாவத்துடனும் கூடியதாக இருந்துவருகிறது. இவ்விதமான பராசக்தியினுடைய பாதாரவிந்தங்களை காமேச்வரனைத் தவிர மற்ற எவர்களும் வெகு தூரத்திற்கு அப்பால் நின்றுகொண்டு, "தேவியினுடைய இரண்டு பாதங்களுக்கும் நமஸ்காரம்" என்று உயர்ந்த ஸ்வரத்துடன் சொல்லி பூஜிக்கவேண்டுமன்னியில், பாதங்களுக்கு ஸமீபத்தில் சென்று நமஸ்கரிக்க அதிகாரமில்லை. தேவியை மாதாவாகவும், மற்ற ஜனங்களைக் குழந்தைகளாகவும், மாத்ரு புத்ரபாவத்தை அனுஸரித்து, முன் ச்லோகத்தில் நமஸ்கார க்ரியை சொல்லப்பட்டது. இந்த ச்லோகத்திலோ, ச்ருங்கார ரஸத்தை ப்ரதானமாக வைத்து காமேச்வரனைத் தவிர மற்ற எவர்களுக்கும் தேவியினுடைய அருகில் அண்டாமல் வெகு தூரத்தில் நின்றுகொண்டு நமஸ்கார வசனத்தால் தேவியைப் பூஜிக்கவேண்டும் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் பூர்வாபர விரோதத்திற்கு அவகாசமேயில்லை.

भूयिष्ठां ते नम उक्तिं विधेम (ஹூயிஷாং தெ நமஉக்திং வியெம) (பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம) என்ற ச்ருதியினால், நமஸ்கார வசனத்தினாலேயே ஸகல புருஷார்த்தத்தையும் அடையலாம் என்று தெரிகிறது. ப்ரணய கோப காலத்தில் பசுபதியானவர், ச்ருங்கார ரஸத்தில் ஈடுபட்டு, தேவியினுடைய பாதாரவிந்தத்தைத் தன் சிரஸ்

ஸில் தொட்டு நமஸ்கரிக்கும் காலத்தில், பசுபதியி னுடைய சிரஸ்ஸில் பரதேவதையினுடைய ரமணீய மான பாதங்கள் ஸம்பந்தப்படுமன்னியில், ச்ருங்கார ரஸத்திற்கு ப்ராதான்யம் கொடுக்கும் ஸமயத்தில், மற்ற எவர்களுக்கும் தேவியினுடைய பாதாரவிந்த ஸ்பர்சம் ஏற்பட ந்யாயமில்லை. ஸத்ரீகள் விளையா டும் உத்யாவனத்தில் அசோகவ்ருக்ஷங்கள் அதிக மாக இருக்கும். மஹாகைலாஸத்திலும், உத்யான வனத்தில் அசோகவ்ருக்ஷங்கள் இருக்கக் கேட்க வேண்டுமா! அசோகவ்ருக்ஷங்கள் ஸத்ரீகளுடைய பாதம் பட்டால்தான் புஷ்பிக்கும். யுவதியான ஸ்த்ரீ களுடைய கால்களால் உதைக்கப்படாதபோனல், அசோகவ்ருக்ஷங்கள் பூக்கள் இல்லாதவைகளாகவே தான் இருக்கும் தினந்தோறும் ஸாயங்காலங்களில் உத்யானவனத்தில் ஸகிகளுடன் தேவி விளையாடப் போகும்பொழுது, தேவியுடன் பரமேச்வரனும் சென்று, தேவியினுடைய அழகான இரு பாதங்கள் அசோக வ்ருக்ஷத்தை தொடாமலிருக்கும்படி ஜாக ரூகனுக ரக்ஷித்து வருவார். அசோகவ்ருக்ஷங்களோ தேவியினுடைய பாதஸ்பர்சம் ஏற்பட்டு புஷ்பிக்க வேண்டுமென்ற ஆசையுடன், தேவி தன் காலால் தங்களை உதைக்கவேண்டும் என்று எதிர்பார்க் கின்றன. பரமேச்வரனுக்கு இவ்விஷயத்தில் ஸஹிக்க முடியாத அஸூயை ஏற்படுகிறது. வ்ருக்ஷங்களோ பேச சக்தியற்ற ஜந்துக்கள். தேவியானவள் அவை களைக் காலால் உதைத்தால் என்ன? இதனுல் தேவி யின் பாதிவ்ரத்யம் கெட்டுவிடுமா? இந்த விஷயத்தில் கூட பரமேச்வரனுக்கு பொறுக்கமுடியாத அஸூயை ஏற்படுகிறது. மற்ற தேவர்கள் தேவியின் பாதத்தை தொட்டு நமஸ்காரம் செய்யச் சொன்னல், பரமேச் வரன் பேசாமலா இருந்துவிடுவார்! ஆகையால் மற்ற வர்கள் வெகுதூரத்திலிருந்துகொண்டு நமஸ்கார வசனத்தால்தான் தேவியைப் பூஜிக்கவேண்டும். இதனுல் தேவி மஹாபதிவ்ரதா சிரோமணி என்றும்

தேவியைப்போல் மற்ற ஸரஸ்வதீ, லக்ஷ்மீ முதலிய வர்கள், பாதிவ்ரத்யமுள்ளவர்கள் என்று சொல்ல முடியாது என்றும் வெளியாகிறது. இவ்விதமான தேவியின் பாதிவ்ரத்யத்தை அறிந்து தேவியை த்யானம் செய்கிறவர்கள் தேவியின் ஸாயுஜ்யத்தை அடைய முக்யமான அதிகாரிகளாக ஆவார்கள்.

ஸ்வர்ணத்தில் சதுஷ்கோணம். மத்தியில் रं, रं, रं, रं, रं, रं (𑌰𑌂, 𑌰𑌂, 𑌰𑌂 𑌰𑌂, 𑌰𑌂, 𑌰𑌂) என்று எழுதவும். தினம் 1000 வீதம் 12 தினம் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும். பூதமாரண பிசாசநிவ்ருத்தி.

---

## 86. தேவியினுடைய பாதாரவிந்தங்களின் மஹிமையின் வர்ணனை.

मृपा कृत्वा गोत्रस्खलनमथ वैलक्ष्यनमितं
　ललाटे भर्तारं चरणकमले ताडयति ते ।
चिरादन्तःशल्यं दहनकृतमुन्मूलितवता
　तुलाकोटिक्वाणैः किलिकिलितमीशानरिपुणा ॥ ८६ ॥

𑌮𑍃𑌷𑌾 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌗𑍋𑌤𑍍𑌰𑌸𑍍𑌖𑌲𑌨𑌮𑌥 𑌵𑍈𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑌮𑌿𑌤𑌂
　𑌲𑌲𑌾𑌟𑍇 𑌭𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌚𑌰𑌣𑌕𑌮𑌲𑍇 𑌤𑌾𑌡𑌯𑌤𑌿 𑌤𑍇 ।
𑌚𑌿𑌰𑌾𑌦𑌨𑍍𑌤𑌃𑌶𑌲𑍍𑌯𑌂 𑌦𑌹𑌨𑌕𑍃𑌤𑌮𑍁𑌨𑍍𑌮𑍂𑌲𑌿𑌤𑌵𑌤𑌾
　𑌤𑍁𑌲𑌾𑌕𑍋𑌟𑌿𑌕𑍍𑌵𑌾𑌣𑍈𑌃 𑌕𑌿𑌲𑌿𑌕𑌿𑌲𑌿𑌤𑌮𑍀𑌶𑌾𑌨𑌰𑌿𑌪𑍁𑌣𑌾
॥ ௮௬ ॥

ம்ருஷா க்ருத்வா கோத்ரஸ்கலநமத வைலக்ஷ்யநமிதம்
　லலாடே பர்தாரம் சரணகமலே தாடயதி தே ।
சிராதந்த:சல்யம் தஹநக்ருதமுந்மூலிதவதா
　துலாகோடிக்வாணை: கிலிகிலிதமீசாநரிபுணா ॥ 86 ॥

हे भगवति (ஹெ ஹமவதி) (ஹே பகவதி) = ஹே பராசக்தியான தாயே!

मृषा (ஈரஷா) (ம்ருஷா) = பொய்யாக

गोत्रस्खलनं (மொத்ரஸ்஖லநம்) (கோத்ரஸ்கலநம்) = தனது ப்ரியையான பத்னிக்கு எதிரில்வேறு ஸ்த்ரீயினிடம் தான் ரொம்பவும் ப்ரியத்தை அடைந்தவன் போல் அபிநயம் செய்துகொண்டு அந்த ஸ்த்ரீயினுடைய பெயரால் தன் ஸ்த்ரீயை அழைப்பது என்பதை

कृत्वा (கரஜா) (க்ருத்வா) = செய்துவிட்டு

अथ (அய) (அத) = பிறகு

वैलक्ष्यनमितं (வெலக்ஷ்யந மிதம்) (வைலக்ஷ்யந மிதம்) = எதுவும் செய்யத் தோன்ருமல், வெட்கத்தால் தலை வணங்கின

भर्तारं (ஹதாரம்) (பர்தாரம்) = பரமசிவனை

ते (தெ) (தே) = உன்னுடைய

चरणकमले (அரணகமலெ) (சரணகமலே) = தாமரைப் புஷ்பம்போல் ம்ருதுவான காலானது

ललाटे (லலாடெ) (லலாடே) = நெற்றிக்கண்ணில்

ताडयति सति (தாடயதி ஸதி) (தாடயதிஸதி) = உதைக்கும்பொழுது

चिरात् (𑌚𑌿𑌰𑌾𑌤𑍍) (சிராத்) = பஹுகாலமாக

दहनकृतं (𑌦𑌹𑌨𑌕𑍃𑌤𑌂) (தஹநக்ருதம்) = நெற்றிக்கண்ணுல் தன்னைச் சாம்பலாகச் செய்ததால் ஏற்பட்ட

अन्तःशल्यं (𑌅𑌨𑍍𑌤𑌃𑌶𑌲𑍍𑌯𑌂) (அந்த:சல்யம்) = மனதிற்குள் இருக்கும் த்வேஷத்தை

उन्मूलितवता (𑌉𑌨𑍍𑌮𑍂𑌲𑌿𑌤𑌵𑌤𑌾) (உந்மூலிதவதா) = அடியோடு விட்ட

ईशानरिपुणा (𑌈𑌶𑌾𑌨𑌰𑌿𑌪𑍁𑌣𑌾) (ஈசாநரிபுணு) = மன்மதனுல்

तुलाकोटिक्वाणैः (𑌤𑍁𑌲𑌾𑌕𑍋𑌟𑌿𑌕𑍍𑌵𑌾𑌣𑍈𑌃) (துலாகோடிக்வாணை:) = கால்தண்டையினுடைய சப்தங்களால்

किलिकिलितं (𑌕𑌿𑌲𑌿𑌕𑌿𑌲𑌿𑌤𑌂) (கிலிகிலிதம்) = 'கிலி' 'கிலி' என்று மன்மதனுடைய ஜயத்தை ஸூசிப்பிக்கும் சப்தமானது செய்யப்படுகிறது.

தாத்பர்யம் :— இந்த ச்லோகத்தாலும் தேவியினுடைய பாதாரவிந்தங்கள் வர்ணிக்கப்படுகின்றன. மஹாகவியான பரமாசார்யாள் அவர்கள் அதிபால்யத்திலேயே ஸந்யாஸத்தை ஸ்வீகரித்துக்கொண்ட மஹானுபாவனுனதால் வைஷயிக சாஸ்த்ர மர்யாதையை எவ்விதம் அறிந்தவராக ஆவார் என்று நினைக்கக்கூடாது. மஹான்களுக்கு வைஷயிகமான சாஸ்த்ர மர்யாதையை சாஸ்த்ரம்மூலம் அறிந்து

கொள்ள சக்தியுண்டு. அநுபவத்தை மாத்ரம் வெறுத்தவர்கள் என்பதை ப்ரக்ருதத்தில் அறியவும். அந்த சாஸ்த்ர மர்யாதையை அறிந்தவர்களானதால் சாஸ்த்ரத்தில் சொல்லியபடி பரமாசார்யாள் ப்ரக்ருதத்தில் வர்ணிக்கிறார்கள். அதாவது, சயன க்ருஹத்தில், பர்யங்கத்தில் அமர்ந்திருக்கும் ஸ்த்ரீபுமான்கள் சில ஸௌரத காஷ்டையில் பரஸ்பரம் மாறி, ஸ்த்ரீயினுடைய பாதங்களின் ஸமீபத்தில் தன் சிரஸ்ஸையும், ஸ்த்ரீயினுடைய சிரஸ் ஸமீபத்தில் தன் பாதங்களையும் வைத்துக்கொண்டு சயனம் செய்யும் வழக்கமுண்டு. ஸௌரதாவஸ்தையில் இது ஒரு கலையாகும். அந்த ஸந்தர்ப்பத்தில் ஸ்த்ரீகளுடைய பாதம், புருஷனுடைய நெற்றியில் ஸம்பந்தப்பட அவஸரமும் உண்டு. அந்த ஸந்தர்ப்பத்தை ஞானத்ருஷ்டியால் அறிந்து, தேவியினுடைய பாதங்கள் பரமசிவனுடைய நெற்றிக்கண்ணில் பட்டு, காலில் போட்டுக்கொண்டிருக்கும் தண்டையினுடைய சலங்கை சப்தங்களை மன்மதனுடைய ஜயகோஷமாக வர்ணிக்கிறார்கள். இந்த ஸந்தர்ப்பத்தில் தன்னுடைய நாயகியினிடம் தனக்கு மிகவும் அளவற்ற ப்ரேமை இருக்கிறதென்பதை ஸூசிப்பிக்க, மற்றொரு ஸ்த்ரீயை, தன்னுடைய நாயகிக்கு எதிரில் ரொம்பவும் அழகுள்ளவள்போல் வர்ணித்துவிட்டு, அவளுக்கும் தனக்கும் ரொம்பவும் மனோபாவம் பொருத்தமுள்ளதுபோல் நடனம்செய்து, அவளுடைய பெயரால் தன் நாயகியையும் அழைப்பதுபோல் பாவனையும் செய்து, இவ்விதம் தன்னுடைய நாயகியை அளவற்ற ஆசையினால் பரிஹாஸம் செய்வது கோத்ரஸ்கலனம் என்று சொல்லப்படும். இவ்விதம் பேசிக்கொண்டு, தேவிக்குக் கோபம் வந்தவுடன், பரமசிவன் மேல் பேசுவதற்கு ஒன்றும் தோன்றாமல், வணங்கின தலையுடன் தேவியினுடைய பாத ஸ்பர்சம் படும்படி தலையை வைத்துக்கொண்டு, பர்யங்கத்தில் படுத்துக்கொண்டிருக்கும் ஸந்தர்ப்பத்தில் தேவியினுடைய பாதங்-

களும் பரமேச்வரனுடைய நெற்றியில் ஸம்பந்தப் பட்டதைப் பார்த்துவிட்டு, மன்மதன் "இந்த சிவன் நம்மை நெற்றிக்கண்ணால் எரித்தாரல்லவா! அந்த துக்கமானது எவ்வளவோ காலமாக நமது மனதைப் புண்படுத்திக்கொண்டிருந்தது. எப்பொழுது, எந்த உபாயத்தால் இவரை ஜயித்து நாம் ஸந்தோஷப்படப் போகிறோம் என்று மனதில் நினைத்தோம். ப்ரக்ருதத் தில் ஸந்தர்ப்பம் ஏற்பட்டுவிட்டது. நெற்றிக் கண் ணால் நம்மை எரித்த பரமேச்வரனுக்கு, அதே நெற் றிக் கண்ணில் ஸ்த்ரீயினுடைய காலால் உதை ஏற்பட் டது; இதைவிட நாம் ஜயித்தோம் என்பதற்கு வேறு என்ன அடையாளம் வேண்டும்?" என்று பரமேச் வரன் தன்னைத் தோற்கடித்தார் என்ற துக்கத்தை விட்டுவிட்டு, அவரை ஜயித்தோம் என்ற ஸந்தோ ஷத்தை, தேவியினுடைய கால் தண்டையினுடைய சலங்கைகளின் சப்தத்தால் மன்மதன் ப்ரகாசப்படுத் தினான். இவ்விதமான நிலையில் தேவியின் ஸ்வரூபத்தை த்யானம் செய்கிறவர்கள் பரமேச்வரனையும் மன் மதன் ஜயித்ததுபோல், சத்ருவினால் அபஜயத்தை அடைந்தவர்களாக இருந்தாலும், மீண்டும் அதே சத்ருவைத் தாங்கள் ஜயித்தவர்களாக ஆவார்கள்.

ஸ்வர்ண யந்த்ரத்தில் சதுஷ்கோணம் போட்டு, மத்தியில் ய்ं, ய்ं, ய்ं (யம், யம், யம்) என்று எழுதவும். கும்பத்தில் ஜலம் வைத்து தினம் 5000 வீதம் 25 நாள் இந்த ச்லோக பாராயணம். கும்பஜலத்தை ரோகிக்கு அபிஷேகம் செய்துவைக்கவும். பிசாசு முதலிய ஸகல துர்தேவதைகளின் பய நிவ்ருத்தி.

---

## 87. தேவியினுடைய பாதாரவிந்தங்களுடைய வர்ணனை.

हिमानीहन्तव्यं हिमगिरिनिवासैकचतुरौ
निशायां निद्राणं निशि चरमभागे च विशदौ ।
वरं लक्ष्मीपात्रं श्रियमति सृजन्तौ समयिनां
सरोजं त्वत्पादौ जननि जयतश्चित्रमिह किम् ॥ ८७ ॥

𑌹𑌿𑌮𑌾𑌨𑍀𑌹𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌹𑌿𑌮𑌗𑌿𑌰𑌿𑌨𑌿𑌵𑌾𑌸𑍈𑌕𑌚𑌤𑍁𑌰𑍌
𑌨𑌿𑌶𑌾𑌯𑌾𑌂 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌣𑌂 𑌨𑌿𑌶𑌿 𑌚𑌰𑌮𑌭𑌾𑌗𑍇 𑌚 𑌵𑌿𑌶𑌦𑍌 ।
𑌵𑌰𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑌤𑌿 𑌸𑍃𑌜𑌨𑍍𑌤𑍌 𑌸𑌮𑌯𑌿𑌨𑌾𑌂
𑌸𑌰𑍋𑌜𑌂 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑍌 𑌜𑌨𑌨𑌿 𑌜𑌯𑌤𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌹 𑌕𑌿𑌮𑍍 ॥ ௮௭ ॥

ஹிமாநீஹந்த்வ்யம் ஹிமகிரிநிவாஸைகசதுரௌ
நிசாயாம் நித்ராணம் நிசி சரமபாகே ச விசதௌ ।
வரம் லக்ஷ்மீபாத்ரம் ச்ரியமதிஸ்ருஜந்தௌ ஸமயிநாம்
ஸரோஜம் த்வத்பாதௌ ஜநநி ஜயதச்சித்ரமிஹ கிம்
॥ 87 ॥

| | |
|---|---|
| हे जननि (𑌹𑍇 𑌜𑌨𑌨𑌿) (ஹே ஜநநி) | = லோகமாதவான ஹே பரதேவதையே! |
| हिमगिरिनिवासैकचतुरौ (𑌹𑌿𑌮𑌗𑌿𑌰𑌿𑌨𑌿𑌵𑌾𑌸𑍈𑌕𑌚𑌤𑍁𑌰𑍌) (ஹிமகிரிநிவாஸைக சதுரௌ) | = ஹிமாலயத்தில் எப்பொழுதும் வாஸம் செய்வதில் முக்யமான ஸாமர்த்யம் உள்ளதாயும் |
| निशि (𑌨𑌿𑌶𑌿) (நிசி) | = ராத்ரியிலும் |
| चरमभागे च (𑌚𑌰𑌮𑌭𑌾𑌗𑍇 𑌚) (சரமபாகேச) | = ப்ராதக்காலத்திலும் |

विशदौ (𑌵𑌿𑌶𑌦𑍌) (விசதௌ) = மலர்ந்தவைகளாகவும்

समयिनां (𑌸𑌮𑌯𑌿𑌨𑌾𑌂) (ஸமயிநாம்) = ஸமய மதத்தை அநுஸரித்துத் தன்னை பக்தி செய்கிறவர்களுக்கு

श्रियं (𑌶𑍍𑌰𑌿𑌯𑌂) (ச்ரியம்) = லக்ஷ்மியை

अतिसृन्तौ (𑌅𑌤𑌿𑌸𑍃𑌜𑌨𑍍𑌤𑍌) (அதிஸ்ருஜந்தௌ) = கொடுக்கிறவைகளாகவும் (இருக்கிற)

त्वत्पादौ (𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑍌) (த்வத்பாதௌ) = உன்னுடைய பாதங்கள்

हिमानीहन्तव्यं (𑌹𑌿𑌮𑌾𑌨𑍀 𑌹𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂) (ஹிமாநீ ஹந்தவ்யம்) = பனியால் உதிர்ந்துபோகும் தளங்களோடு கூடினதாயும்

निशायां (𑌨𑌿𑌶𑌾𑌯𑌾𑌂) (நிசாயாம்) = ராத்ரியில்

निद्राणं (𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌣𑌂) (நித்ராணம்) = தூங்குகிறதாயும் (அதாவது மூடின தளங்களோடு கூடினதாயும்)

वरं (𑌵𑌰𑌂) (வரம்) = ச்ரேஷ்டமான

लक्ष्मीपात्रं (𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌪𑌾𑌤𑍍𑌰𑌂) (லக்ஷ்மீபாத்ரம்) = மஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தலமாயுமிருக்கிற

सरोजं (𑌸𑌰𑍋𑌜𑌂) (ஸரோஜம்) = தாமரைப் புஷ்பத்தை

जयतः (𑌜𑌯𑌤𑌃) (ஜயத:) = ஜயிக்கின்றது

इह (𑌇𑌹) (இஹ) = இந்த விஷயத்தில்

किं चित्रं (கிம் சித்ரம்) = ஆச்சர்யமேயில்லை!
(கிம் சித்ரம்)

தாத்பர்யம்:—இந்த ச்லோகத்தாலும் தேவியி னுடைய பாதாரவிந்தங்களே வர்ணிக்கப்படுகின் றன. லோக ப்ரஸித்தமான தாமரைப் புஷ்பங்கள், பனிகாலங்களில் அவைகளில் பனி ஸம்பந்தப்பட்ட வுடன் உதிர்ந்துபோன தளங்களோடு கூடினவை களாகக் காணப்படும். தேவியினுடைய பாத கமலங்களோ ஒரே பனிமயமான ஹிமயமலையில் எப்பொழுதும் ஸஞ்சாரம் செய்யும் ஸ்வபாவ முள்ளவைகளாக இருக்கின்றன. ஆகிலும் பாதாரவிந் தங்களுக்குக் கொஞ்சமும் விகாஸம் குறையவில்லை. இந்தக் காரணத்தால், லோகப்ரஸித்தமான தாமரைப் புஷ்பத்தைக் காட்டிலும் தேவியினுடைய சரணார விந்தம் மேலான தாமரைப்புஷ்பம் என்பது வெளி யாகிறது. அத்துடன், லோகத்தில் ப்ரஸித்தமான தாமரைப்புஷ்பங்களோ, இரவுகளில் மூடின தளங்க ளோடு கூடினவைகளாக இருந்துகொண்டு, விடியற் காலைகளில் ஸூர்யன் உதித்தவுடன் மலர்ந்த தளங்க ளோடு விகஸிக்கின்றன. தேவியினுடைய சரணாரவிந்தமோ இரவோ, பகலோ, விடியற் காலையோ எப்பொழுதும் விகாஸத்துடன் விளங்கு கின்றது. தவிரவும், லோகத்தில் ப்ரஸித்தமான தாமரைப் புஷ்பம் மஹாலக்ஷ்மிக்கு வாசஸ்தானம் என்று சொல்லப்படும். ஆகிலும் அன்யர்களுக்கு அந்த தாமரைப் புஷ்பம் லக்ஷ்மீ கடாக்ஷத்தை உண்டுபண்ணாது. தேவியினுடைய சரணங்களாகிய அரவிந்தமோ, தன்னை அந்தர்முகர்களாக இருந்து உபாஸிக்கும் பக்தர்களுடைய க்ரஹங்களில் அஷ்ட லக்ஷ்மீக்களையும் ஸ்திரவாஸம் செய்யும்படிச் செய் யும். இக்காரணத்தாலும் லோக ப்ரஸித்தமான தாமரைப் புஷ்பத்தைக் காட்டிலும் தேவியினு டைய சரணாரவிந்தம் மேலானது என்பது ஏற்படு

கிறது. பரதேவதையினுடைய சரணகமலங்களை மேலானவை என்று சொல்வது ஓர் ஆச்சர்யத்தில் சேர்ந்ததல்ல. கீழான வஸ்துவை மேலானது என்று சொல்வதல்லவா ஆச்சர்யமாகும்! மேலான வஸ்துவை மேலானது என்று சொல்வது ஆச்சர்யமாகுமா? இதனுல்தான் உபநிஷத்துக்களாகிற ஸ்த்ரீகளும் தேவியினுடைய பாதங்களாகிற புஷ்பங்களைத் தங்களுடைய சிரஸ்ஸில் அலங்கரித்துக்கொள்கிருர்கள் என்று முன்பு சொல்லப்பட்டது. இதனுல் தேவியினுடைய பாதங்கள் செந்தாமரைப் புஷ்பத்தையும் ஜயித்த மேலான புஷ்பவிசேஷமானதால், பரமசிவனுடைய நெற்றிக் கண்ணில் தேவியினுடைய பாதஸ்பர்சம் ஏற்படுகிறது என்ற கதையினுல் உத்க்ருஷ்டமான புஷ்பங்களால் பரமசிவனுடைய சிரஸ்ஸு பூஜிக்கப்படுகிறது என்ற ரஹஸ்யத்தை க்ரஹித்துக் கொள்வதே சாஸ்த்ரத்தை அறிந்தவர்களுடைய புத்தி சாதுர்யமாகும். அன்னியில், 'பரமசிவனே தன்னுடைய பத்னியான தேவியினுடைய பாதங்கள் தன்னுடைய நெற்றியில் பட ஸம்மதித்தாரே அதுபோல் நமக்கும் நம் ஸ்த்ரீயின் பாதங்கள் நம் நெற்றியில் பட்டால் என்ன' என்று ப்ராக்ருத ஜனங்கள் விபரீத க்ரஹணம் செய்து கொள்ளக்கூடாது. முன் ச்லோகத்தில் ஏற்பட்ட ப்ரமத்தை நிவ்ருத்தி செய்வதற்காகவே இந்த ச்லோகம் ஏற்பட்டது என்பதையும் அறியவும். தேவியினுடைய பாதங்களை வர்ணிக்க மற்ற புஷ்பங்களை க்ரஹித்துக் கொள்ளாமல் தாமரைப புஷ்பத்தை க்ரஹித்துக்கொண்டு, அதைவிட தேவியினுடைய பாதங்களாகிற புஷ்பங்கள் மேலானது என்று வர்ணித்ததால் முழுத்தாமரைப் புஷ்பத்தால் சிவாராதனம் செய்யும் புண்யவான் தாம்பத்ய ஸுகத்தை நீடித்து அனுபவிக்கும்படியான பாக்யவானுகை ஆவான். காம விகாரத்தை அடைந்த மனிதன் தன் நாயகியினுடைய பாதஸ்பர்சம் ஏற்பட்டால் எவ்வளவு ஸங்

தோஷத்தை அடைவானே, அதுபோல் தாமரைப்புஷ்பத்தால் சிவாராதனம் செய்பவனிடத்தில் பரமசிவனுக்கு ஆனந்தம் ஏற்படுகிறது என்பதில் பாதஸ்பர்சம் என்பதை த்ருஷ்டாந்தமாக எடுத்துக்கொள்ள வேண்டும். க்ரஹித்துக்கொள்ளவேண்டிய தத்வமோ, தேவியினுடைய சரணாரவிந்த பஜனம் ஸகல புருஷார்த்தத்தையும் கொடுக்கக்கூடியது என்றும் சிவபூஜைக்குத் தாமரைப் புஷ்பம் முக்யம் என்றும், அவ்விதம் பூஜிக்கின்றவர்கள் லோகத்தையே ஜயித்த மன்மதனையும் ஜயித்தவர்களாக ஆகக்கூடுமானதால் மற்ற ப்ராக்ருத சத்ருக்களை ஜயிக்க அவர்களுக்கு யாதொருவிதமான ச்ரமமும் இராது என்பது மாத்ரமே. இவ்விதம் தேவியினுடைய பெருமையை அறிந்து உபாஸிக்கிறவர்கள் குபேரனுக்கு ஸமானமாக ஆகிறார்கள்.

*ஸ்வர்ண யந்த்ரத்தில் அதோமுகமாக த்ரிகோணம். கோணத்திற்குள் ह्रीं सपं सपं सं (ஹ்ரீம் ஸபம் ஸபம் ஸம்) என்று எழுதவும். ருத்ரபூமியிலுள்ள பஸ்மத்திலும் மேற்கண்டபடி எழுதவும். தினம் 1000 வீதம் 16 தினங்கள் இந்த ச்லோக பாராயணம். பிறகு யந்த்ரதாரணம். ஸர்வப்ரேரணம் ஸித்திக்கும்.*



## 88 தேவியினுடைய பாதங்களுடைய அக்ரபாக வர்ணனை

पदं ते कीर्तीनां प्रपदमपदं देवि विपदां
कथं नीतं सद्भिः कठिनकमठीकर्परतुलाम् ।
कथं वा बाहुभ्यामुपयमनकाले पुरभिदा
यदादाय न्यस्तं दृषदि दयमानेन मनसा ॥ ८८ ॥

𑌪𑌦𑌂 𑌤𑍇 𑌕𑍀𑌰𑍍𑌤𑍀𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑌮𑌪𑌦𑌂 𑌦𑍇𑌵𑌿 𑌵𑌿𑌪𑌦𑌾𑌂
𑌕𑌥𑌂 𑌨𑍀𑌤𑌂 𑌸𑌦𑍍𑌭𑌿𑌃 𑌕𑌠𑌿𑌨𑌕𑌮𑌠𑍀𑌕𑌰𑍍𑌪𑌰𑌤𑍁𑌲𑌾𑌮𑍍 ।
𑌕𑌥𑌂 𑌵𑌾 𑌬𑌾𑌹𑍁𑌭𑍍𑌯𑌾𑌮𑍁𑌪𑌯𑌮𑌨𑌕𑌾𑌲𑍇 𑌪𑍁𑌰𑌭𑌿𑌦𑌾
𑌯𑌦𑌾𑌦𑌾𑌯 𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌂 𑌦𑍃𑌷𑌦𑌿 𑌦𑌯𑌮𑌾𑌨𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 ॥ ௮௮ ॥

பதம் தே கீர்த்திநாம் ப்ரபத மபதம் தேவி விபதாம்
கதம் நீதம் ஸத்பி: கடிநகமடீகர்பரதுலாம் ।
கதம் வா பாஹுப்யாமுபயமநகாலே புரபிதா
யதாதாய ந்யஸ்தம் த்ருஷதி தயமாநேந மநஸா ॥ 88 ॥

हे देवि (𑌹𑍇 𑌦𑍇𑌵𑌿) (ஹே தேவி) = பரதேவதையே

कीर्तीनां (𑌕𑍀𑌰𑍍𑌤𑍀𑌨𑌾𑌂) (கீர்த்திநாம்) = பக்த ஸம்ரக்ஷணத்தால் உண்டாகும் கீர்த்திக்கு

पदं (𑌪𑌦𑌂) (பதம்) = ஸ்தானமாயும்

विपदां (𑌵𑌿𑌪𑌦𑌾𑌂) (விபதாம்) = ஆபத்துகளுக்கு

अपदं (𑌅𑌪𑌦𑌂) (அபதம்) = ஸ்தானமாகாததாயும் இருக்கிற

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

प्रपदं (𑌪𑍍𑌰𑌪𑌦𑌂) (ப்ரபதம்) = பாதங்களின் அக்ரபாகமானது

सद्भिः (𑌸𑌦𑍍𑌭𑌿𑌃) (ஸத்பி:) = கவிகள்ால்

कठिनकमठीकर्परतुलां (𑌕𑌠𑌿𑌨𑌕𑌮𑌠𑍀𑌕𑌰𑍍𑌪𑌰𑌤𑍁𑌲𑌾𑌂) (கடிநகமடீகர்பரதுலாம்) = कठिन-கடினமான कमठीकर्पर - ஆமையின் முதுகு ஓட்டினுடைய तुलां - ஸாம்யத்தை

कथं (𑌕𑌥𑌂) (கதம்) = எப்படித்தான்

नीतं (𑌨𑍀𑌤𑌂) (நீதம்) = நயிப்பிவிக்கப்பட்டது

दयमानेन (𑌦𑌯𑌮𑌾𑌨𑍇𑌨) (தயமாநேந) = கருணையோடு கூடின

मनसा (𑌮𑌨𑌸𑌾) (மநஸா) = மனதினால்

पुरभिता (𑌪𑍁𑌰𑌭𑌿𑌤𑌾) (புரபிதா) = பரமேச்வரனால்

उपयमनकाले (𑌉𑌪𑌯𑌮𑌨𑌕𑌾𑌲𑍇) (உபயமநகாலே) = விவாஹ காலத்தில்

बाहुभ्यां (𑌬𑌾𑌹𑍁𑌭𑍍𑌯𑌾𑌂) (பாஹுப்யாம்) = கைகளால்

यत् (𑌯𑌤𑍍) (யத்) = யாதொரு பாதாக்ரமானது

आदाय (𑌆𑌦𑌾𑌯) (ஆதாய) = எடுத்து

दृषदि (𑌦𑍃𑌷𑌦𑌿) (த்ருஷதி) = அம்மிக்கல்லில்

कथंवा (𑌕𑌥𑌂𑌵𑌾) (கதம்வா) = எப்படித்தான்

न्यस्तं (𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌂) (ந்யஸ்தம்) = வைக்கப்பட்டதோ!

தாத்பர்யம்:—தேவியினுடைய பாதத்தின் அக்ர பாகமானது வர்ணிக்கப்படுகிறது. தேவியினுடைய பாதாரவிந்தத்தை உபாஸிப்பவர்களுக்கு, தேவியின் பாதக்ரமானது அளவற்ற ஸம்பத்தையும், கர்மவசத் தால் ஏற்படும் விபத்துக்களையும் நீக்கிவிடுகிறது. இத ஞல், தேவியினுடைய பாதாக்ரத்திற்குள்ள மஹி மையை லோகத்தில் யாராலும் நிர்ணயமாகச் சொல்ல முடியாது என்று தெரிகிறது. லோகத்தில் ஆங் காங்கு தேவியின் பாதாக்ரத்தின் கீர்த்தியோ, அதிக மாகப் பரவிக்கொண்டிருக்கிறது. எந்த ஜனமாகு லும் ஒரு தடவை தேவியினுடைய பாதக்ரத்தில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்தால் போதும். அவ னுடைய குடும்பத்தில் அதிலிருந்தும் ஸம்பத்து அபி வ்ருத்தி அடையுமன்னியில், விபத்திற்குக் கொஞ்ச மேனும் அவகாசமே ஏற்படாது. இவ்விதம் பக்தனை ஸம்ரக்ஷிக்கின்ற சக்தி தேவியினுடைய பாதாக்ரத் திற்கு இருந்துவருகிறது, என்ற கீர்த்திக்கு தேவியின் பாதாக்ரமானது இருப்பிடமாகவும் இருந்துவருகிறது. இவ்வித மஹிமையுள்ள தேவியினுடைய பாதாக்ரத் தைக் கவிகள் வர்ணிக்கும்பொழுது, மிகவும் கடின மான ஆமையினுடைய முதுகு ஓட்டிற்கு ஸமானம் என்று வர்ணிக்கின்றூர்கள். அந்த கவிகள், மிகவும் ம்ருதுவான பாதத்தை, முன்சொன்னபடி எப்படித் தான் வர்ணித்தார்களோ! அவர்களைத்தான் கேட்க வேண்டும்! கவிகள் வர்ணித்தது ஆச்சர்யமல்ல. பசு பதியான பரமேச்வரனே 'க்ருபைக்குக்கடல்' என்று ஆங்காங்கு ப்ரஸித்தி அடைந்தவர். அவரும் இந்த தேவியை பரிணயம் செய்துகொள்ளும் காலத்தில், மிகவும் ம்ருதுவான தேவியினுடைய பாதத்தை தனது இரண்டு கைகளாலும் பிடித்துத்தூக்கிக் கடின மான அம்மிக்கல்லில் வைத்தார்; அவர்தான் எவ்விதம் வைத்தாரோ! அல்லது தேவியை பரமேச்வரன் பரிணயம் செய்துகொள்ளும் காலத்தில், தயை என்ற ஸ்த்ரீதான் பரமேச்வரனிடம், "இனி உன்னிடம்

நான் இருக்கமாட்டேன்" என்று சொல்லிச் சென்று விட்டாளோ! இதையும் பரமேச்வரனைத்தான் கேட்க வேண்டும். கவிகள் வர்ணித்ததையும், பரமேச்வரன் தேவியினுடைய பாதத்தைத் தூக்கி அம்மிக்கல்லில் வைத்ததையும், 'எப்படியோ' என்று ப்ரக்ருதத்தில் வர்ணிப்பதிலிருந்து தேவியினுடைய பாதாக்ரம் மிகவும் ம்ருதுவானது என்பது வெளிப்படுத்தப் படுகிறது.

அத்துடன், தேவியானவள் மஹாபதிவ்ரதா சிரோமணி என்று முன்பு சொல்லப்பட்டதினுல் பரமேச்வரன் வஸிக்கும் இடத்திலேயே தேவியும் வஸிக்கக்கூடுமானதினுல், பரமேச்வரன் பக்த ஜனங்களுடைய கடினமான மனதில் வஸிக்கின்றவருனதினுல் அக்கடினமான மனதில் மருதுவான தேவியினுடைய பாதாரவிந்தம் ஸம்பந்தப்படவேண்டுமே என்று நினைத்துக் கவிகள், 'ஆமையின் முதுகு ஓட்டிற்கு ஸமானமாக தேவியினுடைய பாதாக்ரத்தை வர்ணித் தார்களோ அல்லது பரமேச்வரன்தான் கடினமான அம்மிக்கல்லில் தேவியின் பர்தத்தைவைத்துப் பழக் கினுரோ' என்று ஊஹிக்கக் கூடியதாக இருக்கிறது. இதனுல் தேவியினுடைய பாதாக்ரத்தை மேற்கண்ட படி அறிந்து உபாஸிக்கிறவர்கள் ஸகலவிதமான துக் கத்திலிருந்தும் விடுபட்டவர்களாகி ஆகி, ஸகலவித மான ஸம்பத்தோடு கூடினவர்களாகி மேன்மேலும் அபிவ்ருத்தி அடைவார்கள் என்பது ஸித்தமாகிறது.

ஸ்வர்ணயந்த்ரத்தில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு, மத்தியில் ஹ்ரீம் ம்ருக ஹ்ரீம் (ஹ்ரீம் ம்ருக ஹ்ரீம்) என்று எழுதவும். தினம் 1000 வீதம் 6 மாதம் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும். ம்ருகா கர் ஷணப்ராதம்.

---

## 89. தேவியினுடைய பாதாக்ரபாக வர்ணனே.

नखैर्नाकस्त्रीणां करकमलसंकोचशशिभि-
स्तरूणां दिव्यानां हसत इव ते चण्डि चरणौ ।
फलानि स्वःस्थेभ्यः किसलयकराग्रेण ददतां
दरिद्रेभ्यो भद्रां श्रियमनिशमह्नाय ददतौ ॥ ८९ ॥

𑌨𑌖𑍈𑌰𑍍𑌨𑌾𑌕𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌣𑌾𑌂 𑌕𑌰𑌕𑌮𑌲𑌸𑌂𑌕𑍋𑌚𑌶𑌶𑌿𑌭𑌿-
𑌸𑍍𑌤𑌰𑍂𑌣𑌾𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌹𑌸𑌤 𑌇𑌵 𑌤𑍇 𑌚𑌣𑍍𑌡𑌿
𑌚𑌰𑌣𑍌 ।
𑌫𑌲𑌾𑌨𑌿 𑌸𑍍𑌵𑌃𑌸𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌿𑌸𑌲𑌯𑌕𑌰𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌦𑌦𑌤𑌾𑌂
𑌦𑌰𑌿𑌦𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑍋 𑌭𑌦𑍍𑌰𑌾𑌂 𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑌿𑌶𑌮𑌹𑍍𑌨𑌾𑌯 𑌦𑌦𑌤𑍌
॥ ௮௯ ॥

நகைர்நாகஸ்த்ரீணும் கரகமலஸம்கோசசசிபி:
ஸ்தருணும் திவ்யாநாம் ஹஸத இவ தே சண்டி சரணௌ ।
பலாநி ஸ்வ: ஸ்தேப்ய: கிஸலயகராக்ரேண தததாம்
தரித்ரேப்யோ பத்ராம் ச்ரியமநிசமஹ்நாய தததௌ ॥ 89 ॥

हे चण्डि (𑌹𑍇 𑌚𑌣𑍍𑌡𑌿) (ஹே சண்டி) = சும்பநிசும்பனே ஸம்ஹரித்த ஹே பரதேவதையே!

किसलयकराग्रेण (𑌕𑌿𑌸𑌲𑌯𑌕𑌰𑌾𑌗𑍍𑌰𑍇𑌣) (கிஸலயகராக்ரேண) = किसलय - துளிர்களாகிய कराग्रेण - கைகளின் நுணியால்

स्वःस्थेभ्यः (एव) (𑌸𑍍𑌵𑌃𑌸𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌃) (ஏவ) (ஸ்வ:ஸ்தேப்ய:) (ஏவ) = ஸ்வர்கலோகத்தில் இருக்கும் தேவர்களுக்கு மாத்ரம்

फलानि (𑌫𑌲𑌾𑌨𑌿) (பலானி) = (அவர்கள் கோரும்) பலன்களை

ददतां (𑌦𑌦𑌤𑌾𑌂) (தததாம்) = கொடுக்கின்ற

दिव्यानां (𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂) (திவ்யாநாம்) = ஸ்வர்கலோகத்திலுள்ள

तरूणां (𑌤𑌰𑍂𑌣𑌾𑌂) (தரூணாம்) = கல்பகவ்ருக்ஷங்களையும்

दरिद्रेभ्यश्च (𑌦𑌰𑌿𑌦𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚) (தரித்ரேப்யச்ச) = (தேவர்களுக்கும்) தரித்ரர்களுக்கும், (எல்லா ஜனங்களுக்கும்)

भद्रां (𑌭𑌦𑍍𑌰𑌾𑌂) (பத்ராம்) = ஸம்பூர்ணமான

श्रियं (𑌶𑍍𑌰𑌿𑌯𑌂) (ச்ரியம்) = ஸம்பத்தை

अनिशं (𑌅𑌨𑌿𑌶𑌂) (அநிசம்) = எப்பொழுதும்

अह्नाय (𑌅𑌹𑍍𑌨𑌾𑌯) (அஹ்நாய) = கோரியவுடனேயே

ददतौ (𑌦𑌦𑌤𑍌) (தததௌ) = கொடுக்கின்ற

ते (𑌤𑍇) (தே) = உன்னுடைய

चरणौ (𑌚𑌰𑌣𑍌) (சரணௌ) = பாதங்கள்

नाकस्त्रीणां (𑌨𑌾𑌕𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌣𑌾𑌂) (நாகஸ்த்ரீணாம்) = இந்த்ராணி முதலிய தேவ ஸ்த்ரீகளுடைய

करकमलसंकोचशशिभिः (𑌕𑌰𑌕𑌮𑌲𑌸𑌂𑌕𑍋𑌚𑌶𑌶𑌿𑌭𑌿𑌃) (கரகமலஸங்கோசசசிபி:) = कर - கைகளாகிய कमल - (தாமரைப் புஷ்பங்களை) संकोच - மூடச்செய்வதில் शशिभिः - அநேக சந்த்ரன்கள் போல் விளங்குகிற

नखः (𑌨𑌖𑍈𑌃) (நகை:) = நகங்களால்

हसत इव (𑌹𑌸𑌤 𑌇𑌵) = பரிஹஸிக்கின்றது போல்
(ஹஸத இவ) இருக்கின்றன.

தாத்பர்யம்:—இந்த ச்லோகமும் தேவியினுடைய பாதாக்ரத்தையே போதிக்கின்றது. தேவியினுடைய பாதாக்ரத்தில் விளங்கிவரும் நகங்களின் காந்தியோ அநேக சந்த்ர கிரணங்கள்போல் விளங்கிவருகின்றன. சந்த்ரனைக் கண்டால் தாமாரைப் புஷ்பங்கள் மூடிக் கொண்டுவிடும். இந்த்ராணீ முதலான தேவஸ்த்ரிகள் தேவியினுடைய பாதாக்ரங்களைக் கண்டவுடன் தங்களுடைய கைகளாகிய தாமரைப் புஷ்பங்களைச் சேர்த்து மூடிக்கொள்கிறார்கள். அதாவது தேவியினுடைய பாதாக்ரத்தைக்கண்டவுடன் தேவஸ்த்ரீகள் அஞ்ஜலி பந்தம் செய்கிறார்கள். இதைப் பார்க்கும்பொழுது தேவஸ்த்ரீகளுடைய கரங்கள் பத்மங்கள்போலவும், தேவியினுடைய பாதாக்ரத்திலுள்ள நகங்களின் காந்தி சந்த்ரன்போலவும், நககாந்தியாகிய சந்த்ரனைக் கண்டவுடன், தேவ ஸ்த்ரீகளுடைய கைகளாகிய பத்மங்கள் மூடிக்கொண்டுவிட்டதோ என்றும் உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. இதனால் ஸகல வேத ஸ்த்ரீகளும் தேவியினுடைய பாதாரவிந்த பரிசர்யையில் ஈடுபட்டவர்கள் என்பதை அறியவும். அத்துடன், தேவியினுடைய பாதாக்ரங்களில் விளங்கிவரும் நகங்களின் காந்திகள் தேவலோகத்திலுள்ள கல்பக வ்ருக்ஷங்களைக் காட்டிலும் மேலானதாக விளங்கிவருகிறது. கல்பகவ்ருக்ஷமோ தன்னுடைய துளிர்களாகிய கைகளால் தேவலோகத்திலுள்ள தேவர்களுக்கு மாத்ரம் அவர்கள் விரும்பும் பலன்களைக் கொடுக்கின்றது. தேவியினுடைய பாதங்களோ தேவலோகத்திலுள்ள தேவர்களுக்கும், பூலோகத்திலுள்ள தரித்ர ஜனங்களுக்கும், அவரவர்கள் கோரும் பலத்தை உடன் கொடுத்து ரக்ஷிக்கின்றபடியால், கல்பக

வ்ருக்ஷங்களையும் தேவியினுடைய இரு சரணங்கள் பரிஹஸிப்பதுகளாக விளங்குகின்றன. இதனால், தேவியினுடைய பாதாரவிந்தம் கல்பகவ்ருக்ஷத்திற்கும் மேலான மஹிமையோடு விளங்கிவரும் காரணத்தால் ஆச்ரயித்த பக்த ஜனங்களுக்கு ஸகலவிதமான புருஷார்த்தங்களையும் கொடுக்க சக்தி உள்ளது என்பது வெளியாகிறது.

இவ்விதம் தேவியை உபாஸிப்பவர்கள் அகண்டமான ஸ்ரீயோடு விளங்கிவருவார்கள்.

ஸ்வர்ணத் தகட்டின் நடுவில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு . மத்தியில் ஹ்ரீம் (ஹ்ரீம்) என்று எழுதவும். தினம் 1000 வீதம் 30 நாள் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும். ஸர்வ உபத்ரவ நிவாரணம்; ஸகல ரோக நிவ்ருத்தி.

---

### 90. தேவியினுடைய பாதாரவிந்தங்களின் வர்ணனை.

ददाने दीनेभ्यः श्रियमनिशमाशानुसदृशी-
ममन्दं सौन्दर्यप्रकरमकरन्दं विकिरति ।
तवास्मिन्मन्दारस्तबकसुभगे यातु चरणे
निमज्जन्मज्जीवः करणचरणः षट्चरणताम् ॥ ९० ॥

ததாநே தீநேப்ய: ச்ரியமநிசமாசாநுஸத்ருசீ-
மமந்தம் ஸௌந்தர்யப்ரகரமகரந்தம் விகிரதி ।
தவாஸ்மிந்மந்தாரஸ்தபகஸுபகே யாது சரணே
நிமஜ்ஜந்மஜ்ஜீவ: கரணசரண: ஷட்சரணதாம் ॥ ௯௦ ॥

ததானே தீநேப்ய: ச்ரியமநிசமாசாநுஸத்ருசீ
மமந்தம் ஸௌந்தர்யப்ரகரமகரந்தம் விகிரதி।
தவாஸ்மிந்மந்தாரஸ்தபகஸுபகே யாது சரணே
நிமஜ்ஜந்மஜ்ஜீவ: கரணசரண: ஷட்சரணதாம் ॥ 90 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே தேவியே

दीनेभ्यः (𑌦𑍀𑌨𑍇𑌭𑍍𑌯𑌃) (தீநேப்ய:) = தரித்ரர்களின் பொருட்டு

आशानुसदृशीं (𑌆𑌶𑌾𑌨𑍁𑌸𑌦𑍃𑌶𑍀𑌂)(ஆசாநுஸத்ருசீம்) = இச்சையை அனுஸரித்து

श्रियं (𑌶𑍍𑌰𑌿𑌯𑌂) (ச்ரியம்) = ஸம்பத்தை

अनिशं (𑌅𑌨𑌿𑌶𑌂) (அநிசம்) = எப்பொழுதும்

ददाने (𑌦𑌦𑌾𑌨𑍇) (ததானே) = கொடுக்கிறதாயும்

अमन्दं (𑌅𑌮𑌨𑍍𑌦𑌂) (அமந்தம்) = அதிகமான

सौन्दर्यप्रकरमकरन्दं (𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌕𑌰𑌮𑌕𑌰𑌨𑍍𑌦𑌂) (ஸௌந்தர்யப்ரகர மகரந்தம்) = सौन्दर्यकर - அழகின் ஸமூஹமாகிய - मकरन्दं - புஷ்ப ரஸத்தை

विकिरति (𑌵𑌿𑌕𑌿𑌰𑌤𑌿) (விகிரதி) = ப்ரவாஹிக்கச் செய்கிறதாயும்

मन्दारस्तबकसुभगे (𑌮𑌨𑍍𑌦𑌾𑌰𑌸𑍍𑌤𑌬𑌕𑌸𑍁𑌭𑌗𑍇) (மந்தார ஸ்தபகஸுபகே) = मन्दार - கல்பவ்ருக்ஷத்தினுடைய स्तबक - பூங்கொத்துபோல் सुभगे - அழகாயும் இருக்கிற

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

अस्मिन् (𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍) (அஸ்மிந்) = இந்த

चरणे (𑌚𑌰𑌣𑍇) (சரணே) = பாதாரவிந்தத்தில்

करणचरण: (𑌕𑌰𑌣 𑌚𑌰𑌣𑌃) (கரணசரண:) = மனதுள்பட சக்ஷுரிந்த்ரியம், கீராணேந்த்ரியம் ரஸனேந்த்ரியம், ச்ரோத்ரேந்த்ரியம், த்வகிந்த்ரியம் என்ற ஆறு இந்த்ரியங்களைப் பாதங்களாக உடைத்தான

मज्जीव: (𑌮𑌜𑍍𑌜𑍀𑌵𑌃) (மஜ்ஜீவ:) = நான் ஆகிய ஜீவன்

निमज्जन् सन् (𑌨𑌿𑌮𑌜𑍍𑌜𑌨𑍍 𑌸𑌨𑍍) (நிமஜ்ஜங் ஸங்) = உள்ளே நுழைந்ததாய்க் கொண்டு

षट्चरणताम् (𑌷𑌟𑍍 𑌚𑌰𑌣𑌤𑌾𑌮𑍍) (ஷட் சரணதாம்) = ஆறு கால்களோடு கூடியிருக்கும் வண்டாக ஆகும் தன்மையை

यातु (𑌯𑌾𑌤𑍁) (யாது) = அடையட்டும்.

தாத்பர்யம் :—இந்த ச்லோகத்தாலும் தேவியினுடைய பாதாரவிந்த வர்ணனையே சொல்லப்படுகிறது. தாரித்ரியத்தால் கஷ்டப்படும் ஜனங்கள் தேவியினுடைய பாதாரவிந்தத்தில் நமஸ்காரம் செய்த மாத்ரத்தில், அந்த தரித்ரர்களுடைய இச்சையை அனுஸரித்தும், அதற்கு மேலாகவும் ஸம்பத்தைக் கொடுக்கும் சக்தியுள்ளதே தேவியினுடைய பாதாரவிந்தமாகும். அந்த பாதாரவிந்தங்கள், ஸௌந்தர்யமாகிய அம்ருதப் பெருக்கையும் ப்ரவாஹிக்கச் செய்கின்றது. தேவ லோகத்திலுள்ள கல்பவ்ருக்ஷங்களின் புஷ்பக் கொத்துக்களைப்போல் மிகவும் அழகாகவும் தேவியினுடைய சரணங்கள் விளங்கிவருகின்றது. புஷ்பங்களில் ஆறு கால் வண்டுகள், உள்பாகத்தில் நுழைந்து ரஸத்தை

அபஹரிப்பதுபோல், தேவியினுடைய சரணங்களும் ஸௌந்தர்யம் என்ற ரஸத்தால் நிரப்பப்பட்ட புஷ்ப விசேஷமாக பாஸிக்கின்றபடியால், அந்த சரணங் களில் ஆசார்யாள் தான் ஆறு கால் வண்டுபோல் ப்ரவேசித்து மோக்ஷத்திற்கு அந்தரங்க ஸாதனமான ரஸத்தை அனுபவிக்க தேவியினிடம் ப்ரார்த்திக்கின் றார்கள். இதனால் ஜீவகோடிகள் தன் சக்ஷுரிந்த்ரியத் தால் தேவியினுடைய பாதாரவிந்த தர்சனத்தையும்; க்ராணேந்த்திரியத்தால் தேவியினுடைய பாதாரவிந் தங்களில் பூஜிக்கப்பட்ட நிர்மால்ய புஷ்பங்களின் வாஸனையையும்; ரஸனேந்த்ரியத்தால் தேவியினு டைய பாதங்களுக்கு நிவேதனம் செய்யப்பட்ட அன்னாதிகளின் ரஸத்தையும்; த்வகிந்த்ரியத்தால் தேவியினுடைய திருபாதங்களில் ஸம்பந்தப்பட்ட புழுதிகளின் ஸ்பர்சத்தையும்; ச்ரோத்ரேந்த்ரியத்தால் தேவியினுடைய பாத மஹிமையை வர்ணிக்கும் கதை யையும்; மனதினால் தேவியினுடைய பாதாரவிந்த த்யானத்தையும் அனுபவித்துக்கொண்டு, ஜன்ம ஸாபல்யத்தை அடையவேண்டுமென்று சொல்லப்படு கிறது. வெளியிலுள்ள ஐந்து ஞானேந்த்ரியங்களுக் கும், மனது என்ற அந்தக்கரணத்திற்கும், தேவியினு டைய பாதாரவிந்தங்களில் ஏற்படும் ஸஞ்சாரமே முக்திக்கு அந்தரங்க ஸாதனமாகும் என்று இந்த ச்லோகததால் தாத்பர்யம் வெளியாகிறது. இந்த ச்லோகத்தில் சொல்லியபடி தேவியினுடைய சரணங் களில் தனது இந்த்ரியங்களை லயப்படுத்தி மனதினால் தேவியை த்யானம்செய்கிறவர்கள் தாரித்ரியாவஸ்தை யிலிருந்தும் விமுக்தர்களாக ஆகி குபேரனுக்கு ஸம மாக ஆவார்கள்.

ஸ்வர்ணத்தகட்டில் சதுஷ்கோணம்போட்டு, கோணத்திற்குள் क्षां, क्षां, क्षिय, क्षिय, ह्रीं (க்ஷாம், க்ஷாம், க்ஷிய, க்ஷிய, ஹ்ரீம்) என்று எழுதவும். விபூதியிலும் எழுதி தரித்துக்கொள்ளலாம். தினம் 1000 வீதம் 45 தினங்கள் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும் ஸர்வக்ஷுத்ர ப்ரயோக நிவ்ருத்தி.

## 91. தேவியினுடைய நடையின் வர்ணனை

पदन्यासक्रीडापरिचयमिवारब्धुमनसः

स्खलन्तस्ते खेलं भवनकलहंसा न जहति ।

अतस्तेषां शिक्षां सुभगमणिमञ्जीररणित-

च्छलादाचक्षाणं चरणकमलं चारुचरिते ॥ ९१ ॥

𑌪𑌦𑌨𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌰𑍀𑌡𑌾𑌪𑌰𑌿𑌚𑌯𑌮𑌿𑌵𑌾𑌰𑌬𑍍𑌧𑍁𑌮𑌨𑌸𑌃

𑌸𑍍𑌖𑌲𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑍇 𑌖𑍇𑌲𑌂 𑌭𑌵𑌨𑌕𑌲𑌹𑌂𑌸𑌾 𑌨 𑌜𑌹𑌤𑌿 ।

𑌅𑌤𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌶𑌿𑌕𑍍𑌷𑌾𑌂 𑌸𑍁𑌭𑌗𑌮𑌣𑌿𑌮𑌞𑍍𑌜𑍀𑌰𑌰𑌣𑌿𑌤-

𑌚𑍍𑌛𑌲𑌾𑌦𑌾𑌚𑌕𑍍𑌷𑌾𑌣𑌂 𑌚𑌰𑌣𑌕𑌮𑌲𑌂 𑌚𑌾𑌰𑍁𑌚𑌰𑌿𑌤𑍇

॥ ௯௧ ॥

பதந்யாஸக்ரீடாபரிசயமிவராப்துமநஸ:

ஸ்கலந்தஸ்தே கேலம் பவநகலஹம்ஸா ந ஜஹதி ।

அதஸ்தேஷாம் சிக்ஷாம் ஸுபகமணிமஞ்ஜீரரணித-

ச்சலாதாசக்ஷாணம் சரணகமலம் சாருசரிதே ॥ 91 ॥

| | |
|---|---|
| हे चारुचरिते (𑌹𑍇 𑌚𑌾𑌰𑍁𑌚𑌰𑌿𑌤𑍇) (ஹே சாரு சரிதே) | = புண்ய சரீரத்துடன் கூடிய ஹே பரதேவதையே! |
| पदन्यासक्रीडापरिचयं (𑌪𑌦𑌨𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌰𑍀𑌡𑌾𑌪𑌰𑌿𑌚𑌯𑌂) (பதந்யாஸக்ரீடாபரிசயம்) | = உன்னுடைய இரண்டு கால்களின் அடி வைப்பதினுடைய அழகை |
| आरब्धुमनसः इव (𑌆𑌰𑌬𑍍𑌧𑍁𑌮𑌨𑌸𑌃 𑌇𑌵) | = அப்யஸித்துக் கொள்ள வேண்டும் என்ற ஸங் |

| | |
|---|---|
| (ஆரப்துமநஸ: இவ) | கல்பம் உள்ள மன தோடு கூடியதுபோல் |
| भवनकलहंसाः (ஹவநகலஹம் ஸாঃ) (பவநகலஹம்ஸா:) | = பரமேச்வரனுடைய க்ருஹத்தில் வளர்க்கப்பட்ட அன்னபக்ஷிகள் |
| स्खलन्तः सन्तः (ஸ்கலந்தঃ ஸந்தঃ) (ஸ்கலந்த: ஸந்த:) | = துள்ளித்துள்ளிக் குதிக்கின்றவைகளாய்க் கொண்டு |
| ते (தே) (தே) | = உன்னுடைய |
| खेलं (கேலம்) (கேலம்) | = அழகான நடையை |
| न जहति (ந ஜஹதி) (ந ஜஹதி) | = விடாமல் அனுஸரித்து நடக்கின்றன |
| अतः (அத:) (அத:) | = அக்காரணத்தால் |
| चरणकमलं (சரணகமலம்) (சரணகமலம்) | = உன்னுடைய சரணாரவிந்தமானது |
| सुभगमणिमञ्जीररणितच्छलात् (ஸுபகமணிமஞ்ஜீர ரணிதச்சலாத்) (ஸுபகமணிமஞ்ஜீரரணிதச்சலாத்) | = सुभगमणि - பத்மராகக் கல்கள் இழைத்த मञ्जीर - காலில் போடப்பட்ட பாதஸரத்தின் रणित - சப்தம் என்ற छलात् - வ்யாஜத்தால் |
| तेषां (தேஷாம்) (தேஷாம்) | = அந்த அன்னபக்ஷிகளுக்கு |
| शिक्षां (ஶிக்ஷாம்) (சிக்ஷாம்) | = அப்யாஸத்தை |

आचक्षाणमिव (ஆசக்ஷாணமிவ) = உபதேசிப்பதுபோல்
(ஆசக்ஷாணமிவ)
भवति (ஹவதி) (பவதி) = ஆகின்றது.

தாத்பர்யம் :—உத்தம ஸ்த்ரீகளுடைய கால்நடையை ஹம்ஸம் என்ற அன்னபக்ஷியினுடைய நடைபோல் இருப்பதாகக் கவிகள் வர்ணிப்பதுண்டு. அன்ன பக்ஷிகளோ தேவியினுடைய கால்நடையைப் பார்த்துத் தாங்களும் அதுபோல் நடக்கவேண்டுமென்று அப்யஸித்துக்கொண்டன. பரமேச்வரனுடைய க்ரஹமாகிய மஹாகைலாஸத்திலோ, குமாரஸ்வாமி கணபதி என்ற குழந்தைகளுக்கு விளையாடுவதற்காக அன்னபக்ஷிகள் வளர்க்கப்படுகின்றது. தேவி நடக்கும் பொழுதெல்லாம், தேவியினுடைய நடையின் அழகைப் பார்த்து, தேவியைப்போல் தாங்களும் நடக்கவேண்டுமென்ற ஆசையையும் அடைந்து அன்னபக்ஷிகள் தேவியைப் பின்தொடர்ந்து, தேவி அடிவைப்பது போலவே தாங்களும் அடி வைத்துப் பழகிக்கொள்கின்றன. தேவியினுடைய கால்களிலோ பத்மராகங்கள் இழைத்த தங்கச் சலங்கைகளாலும் அலங்கரிக்கப்பட்டு தங்கமயமான பாதஸரமானது விளங்கிவருகின்றது. தேவி தன் கால்களைத் தூக்கி வைக்கும்பொழுது அந்த பாதஸரத்தில் தொங்குகிற சலங்கைகள் சப்திக்கின்றன. இந்த சப்தத்தைக் கவனித்தால், தன் நடையைப்போல் நடக்க எண்ணங்கொண்டு, தன்னை அனுஸரித்துவருகிற அன்னபக்ஷிகளுக்குத்தான் தேவி கருணையுடன் பாதஸர சப்தம் என்ற வ்யாஜத்தால் கால் அடியை வைக்கவேண்டிய ப்ரகாரத்தை உபதேசம் செய்கிறாளோ என்றும் தோன்றுகிறது. ஆகையால் உத்தம ஸ்த்ரீகளுடைய கால் நடைக்கு உதாஹரணமாகச் சொல்லக்கூடிய ஹம்ஸபக்ஷிகளுடைய நடைகளுக்கும் தேவியினுடைய கால் நடைகள் ஆசார்ய ஸ்தானத்தில் இருந்து வருகிற படியால், தேவியினுடைய கால்நடையின்

பெருமையை யாராலும் வர்ணிக்கமுடியாது என்பது ஸித்தமாகிறது. இவ்விதம் தேவியினுடைய பாதார விந்யாஸத்தின் மஹிமையை அறிந்து தேவியை உபாஸிப்பவர்கள் ஆகாசத்திலும் ஸஞ்சரிக்கும் சக்தி உள்ளவர்களாக ஆவார்கள்.

ஸ்வர்ணத் தகட்டில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு, நடுவில் ऒं श्रीं ह्रीं श्रीं (ஒம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம்) என்று எழுதவும். தினம் 1000 வீதம், 25 தினங்கள் இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்யவும். பூமிலாபம், தனலாபம் உண்டாகும்.

---

## 92. அகண்டமான தேவியினுடைய ஸ்வரூப வர்ணனை.

गतास्ते मञ्चत्वं द्रुहिणहरिरुद्रेश्वरभृतः
शिवः स्वच्छच्छायाघटितकपटप्रच्छदपटः ।
त्वदीयानां भासां प्रतिफलनरागारुणतया
शरीरी शृङ्गारो रस इव दृशां दोग्धि कुतुकम् ॥ ९२ ॥

𑌗𑌤𑌾𑌸𑍍𑌤𑍇 𑌮𑌞𑍍𑌚𑌤𑍍𑌵𑌂 𑌦𑍍𑌰𑍁𑌹𑌿𑌣𑌹𑌰𑌿𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌶𑍍𑌵𑌰𑌭𑍃𑌤𑌃
𑌶𑌿𑌵𑌃 𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌚𑍍𑌛𑌾𑌯𑌾𑌘𑌟𑌿𑌤𑌕𑌪𑌟𑌪𑍍𑌰𑌚𑍍𑌛𑌦𑌪𑌟𑌃 ।
𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑌾𑌨𑌾𑌂 𑌭𑌾𑌸𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌫𑌲𑌨𑌰𑌾𑌗𑌾𑌰𑍁𑌣𑌤𑌯𑌾
𑌶𑌰𑍀𑌰𑍀 𑌶𑍃𑌙𑍍𑌗𑌾𑌰𑍋 𑌰𑌸 𑌇𑌵 𑌦𑍃𑌶𑌾𑌂 𑌦𑍋𑌗𑍍𑌧𑌿
𑌕𑍁𑌤𑍁𑌕𑌮𑍍 ॥ ௯௨ ॥

கதாஸ்தே மஞ்சத்வம் த்ருஹிண ஹரிருத்ரேச்வரப்ருத:
சிவ: ஸ்வச்சச்சாயாகடிதகபடப்ரச்சதபட: ॥
த்வதீயாநாம் பாஸாம் ப்ரதிபலநராகாருணதயா
சரீரீ ச்ருங்காரோ ரஸ இவ த்ருசாம் தோக்தி குதுகம் ॥ 92 ॥

| | |
|---|---|
| हे भगवति (ஹெ ஹமவதி) (ஹே பகவதி) | = ஹே தேவியே! |
| द्रुहिणहरिरुद्रेश्वरभृत: (த்ருஹிண ஹரிருத்ரெஶ்வரஹ்ருத:) த்ருஹிண ஹரிருத்ரேச் வரப்ருத:) | = द्रुहिण - ப்ரும்மா என்ன हरि - விஷ்ணு என்ன रुद्र ருத்ரன் ईश्वर - ஈச்வரன் भृत: - இந்த நான்கு பேர் களாகிய உன்னுடைய ப்ருத்யர்கள் |
| ते (தெ) (தே) | = உன்னுடைய |
| मञ्चत्वं (மஞ்சத்வம்) (மஞ்சத்வம்) | = ஐச்வரமான தங்கள் சக்தியினால் கட்டில் கால் களாகும் தன்மையை |
| गता: (ஹதாஃ) (கதா:) | = அடைந்தவர்களாய்க் கொண்டு எப்பொழுதும் உன் ஸமீபத்திலேயே இருந்துகொண்டுஉன்னை ஸேவிக்கிறார்கள் |
| शिव: (ஶிவஃ) (சிவ:) | = ஸதாசிவன் என்ற புரு ஷன் |
| स्वच्छच्छायाघटितकपटप्रच्छदपट: सन् (ஸ்வச்சச்சாயாவடிதகவட ப்ரச்சவடஃ ஸந்) | = स्वच्छ - வெளுப்பான च्छाया காந்தியினால் घटित - செய் யப்பட்ட कपटप्रच्छदपट: सन् - |

(ஸ்வச்சச்சாயாகடித கபடப்ரச்சதபட: ஸங்) படுக்கையில் விரித்து போற்றிக் கொள்ளும் வஸ்த்ரத்துடன் கூடியவராய்க் கொண்டு

त्वदीयानां (க்ஷதீயா நாம்) (த்வதீயாநாம்) = உன்னுடைய

भासां (ஹாஸாம்) (பாஸாம்) = சிவப்பு காந்திகளுடைய

प्रतिफलनरागारुणतया (ப்ரதிஃபல நராகாருணதயா) (ப்ரதிபலநராகாருண தயா) = प्रतिफलन - ப்ரதிபலித்ததின் காரணமாக ஏற்பட்ட राग - சிவப்பினால் अरुणतया- சிவப்பான வர்ணத்துடன் கூடிக்கொண்டிருக்கும் காரணத்தால்

शरीरी (ஶரீரீ) (சரீரீ) = உருவமெடுத்துக் கொண்ட

शृङ्गार: रसइव (ஶ்ருங்஗ார: ரஸ உவ) (ச்ருங்கார: ரஸஇவ) = ச்ருங்கார ரஸம்போல்

दृशां (த்ருஶாம்) (த்ருசாம்) = கண்களுக்கு

कुतुकं (குதுகம்) (குதுகம்) = ஆனந்தத்தை

दोग्धि (தோக்தி) (தோக்தி) = உண்டுபண்ணுகிறார்.

தாத்பர்யம் :—இதற்குமுன், தேவியினுடைய கேசம் முதல் பாதாரவிந்தம் வரையிலும் க்ரமமாக வர்ணித்துவிட்டு இந்த ச்லோகத்தால் அகண்டமான தேவியின் ஸ்வரூபத்தை பரமாசார்யாள் ஸ்துதிக்கின்றார்கள்.

அம்ருதக் கடலினுடைய நடுவில் கல்பவ்ருக்ஷங்களால் சூழப்பட்ட மணித்வீபம் என்ற தீவில் சிந்தாமணி ரத்னத்தால் அமைக்கப்பட்ட க்ருஹமே தேவியினுடைய க்ருஹமாகும். இதைத்தான் ஸ்ரீசக்ரத்திலுள்ள பிந்து ஸ்தானமாகவும் சொல்லுவார்கள். இந்த ஸதானத்தில் ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரும்மாவும், பரிபாலன கர்த்தாவான விஷ்ணுவும், ஸம்ஹார கர்த்தாவான ருத்ரனும், துரீயமான நிலையில் உள்ள மாயையை உபாதியாக உடைய ஈச்வரனும், எப்பொழுதும் தேவியினுடைய அருகில் நின்றுகொண்டு ஸேவிக்கவேண்டும் என்ற ஆவல் உள்ளவர்களானதினுலும், தேவியினுடைய அருகில் செல்லத் தங்களுக்கு சக்தி இல்லை என்பதை அறிந்துகொண்டு தங்களுடைய தபஸ் சக்தியினுல் வேத ஸ்வரூபமாகிய தேவியினுடைய கட்டிலுக்கு (மஞ்சத்திற்கு) நான்கு கால்களாக ஆகும் தன்மையை எடுத்துக்கொண்டு, மேற்சொன்ன நான்கு தேவர்களும் கட்டில் கால்களாக இருந்துகொண்டு தேவியினுடைய ஸ்வரூபத்தை எப்பொழுதும் உபாஸித்துவருகிருர்கள். அந்த மஞ்சத்தில் ஸதாசிவன் என்ற துரீயாதீதமான மூர்த்தி பாஸித்து வருகின்றது. அந்த மூர்த்தியினுடைய சரீர காந்தியோ, ஸ்படிகம்போல் மிகவும் நிர்மலமானது. அதைப் பார்க்கும்பொழுது, ஸதாசிவ புருஷன் வெளுப்பான காந்தி என்ற வ்யாஜத்தால், போர்வையை போர்த்திக்கொண்டிருக்கிருரோ என்று தோன்றுகிறது. தேவி, ஸதாசிவனுகிய தன் பர்த்தாவினுடைய ஸமீபத்தில் அமர்ந்திருக்கும் காலத்தில், தேவியினுடைய சரீரம் சிவப்பு வர்ணமானதினுல் ஸதாசிவனுடைய வெளுப்பான காந்தியில் தேவியினுடைய சரீரத்தின் சிவப்பு வர்ணம் ப்ரதிபலித்து ஒரே சிவப்பு வர்ணமாக ஆகிவிட்டது. ஸதாசிவ மூர்த்தியினுடைய சரீரகாந்தி தேவியினுடைய ஸம்பந்தத்தால் சிவப்பாக மாறியிருப்பதைப் பார்த்தால் சிவப்பான ச்ருங்கார ரஸம்தான் உருவம் எடுத்

துக் கொண்டு தேவியினுடைய கண்களுக்கு ஆனந்தத்தைக்கொடுக்க சிவமயமான பர்யங்கத்தில் அமர்ந்திருக்கின்றதோ என்று பாஸிக்கின்றது. இவ்விதமான நிலையில் தேவியினுடைய ஸ்வரூபத்தை அறிய ஜிதேந்த்ரியர்களான அந்தர்முகர்களே அதிகாரிகளாக ஆவார்கள்.

மனிதனுடைய சரீரத்திற்குள், மூலாதாரம் ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநுஹதம், விசுத்தி, ஆக்ஞை, என்ற ஆறு சக்ரங்கள் தேவியினுடைய வாஸஸ்தானமாக மந்த்ர சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறன. மூலாதாரத்தில் ப்ருதிவீ தத்வமும், ஸ்வாதிஷ்டானத்தில் அக்னிதத்வமும், மணிபூரகத்தில் ஜலதத்வமும், அநுஹதத்தில் வாயுதத்வமும், விசுத்தியில் ஆகாசதத்வமும், ஆக்ஞையில் மனஸ்தத்வமும் பாஸித்து வருகின்றன. சக்ஷுரிந்த்ரியம், க்ராணேந்த்ரியம், ரஸநேந்த்ரியம், த்வகிந்த்ரியம், ச்ரோத்ரேந்த்ரியம் என்ற ஐந்து ஞானேந்த்ரியங்கள் என்ன; வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம், என்ற ஐந்து கர்மேந்த்ரியங்கள் என்ன; அந்தக்கரணம் என்ற உள் இந்த்ரியம் என்ன; இவ்விதம் சேர்ந்த இந்தரியங்கள் எல்லாம் ஆக்ஞாசக்ரத்தில் விளங்கிவருகின்றன. அதற்கு மேல்பாகத்தில் மாயாதத்வம், சுத்த வித்யாதத்வம், மஹேச்வரதத்வம், ஸதாசிவதத்வம் என்ற நான்கு தத்வங்கள் விளங்கிவருகின்றன. ப்ரும்மரந்திக்குள் விளங்கிவருகிறதாயும், நான்குவிதமான த்வாரங்களுடன் கூடியதாயும், மூன்று விதமான த்விபுரங்களோடு கூடியதாயும் உள்ள ஸ்ரீசக்ரத்தின் நான்குவிதமான த்வாரத்தில் மாயாதத்வம் முதலான நான்கு தத்வங்களும் தேவியினுடைய மஞ்சத்தின் பாதபாகங்களாக ஆகின்றன. சுத்தவித்யைக்கு ஸதாசிவதத்வத்தில் அபிநிவேசம் ஜாஸ்தியாக இருப்பதினால், ஸஹஸ்ரகமலம் என்ற ப்ரும்மரந்த்ரத்தில் ஸதாசிவ தத்வமாகிய சிவன், சுத்திவித்யையோடு சேர்ந்து ஒரே தத்வமாக

விளங்கிவருகிறது. ஸஹஸ்ர கமலம் என்ற ப்ரும்மரந்த்ரத்தின் நடுவில் உள்ள நான்கு த்வாரங்களுடன் கூடிக்கொண்டு தாமரைப்புஷ்பத்தின் கர்ணிகையைப்போல் விளங்கிவருகிற ஸ்ரீசக்ரத்தினுடைய நடுவில் மஹாபிந்து என்ற சப்தத்தாலும், ஸரஹ்வா என்ற சப்தத்தாலும் சொல்லத்தகுந்த ஸுதாஸிந்து என்ற ஸ்தானத்தில், சிவனுக்கும் சக்திக்கும் தாதாத்ம்யம் ஏற்படுகிறது என்ற தத்வத்தை இந்த ச்லோகத்தில் சொல்லியபடி அறிந்து த்யானம் செய்கிற புண்ய ஜனங்கள் தேவியினுடைய ஸாக்ஷாத்காரத்தை அடைந்து ஸர்வக்ஞர்களாக ஆகிறார்கள்.

ஸ்வர்ணத் தகட்டில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு, மத்தியில் ओं ह्रीं ह्रीं ह्रीं (ஓம் ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம்) என்று எழுதவும். தினம் 4000 வீதம் ஒரு மாதம் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும். ராஜ்ய லாபமுண்டாகும்.

---

## 93. ஸாக்ஷாத் பரதேவதையை காமேச்வரனுடைய கருணைசக்தி என்று வர்ணனை.

अराला केशेषु प्रकृतिसरला मन्दहसिते
शिरीषाभा चित्ते दृषदुपलशोभा कुचतटे ।
भृशं तन्वी मध्ये पृथुरुरसिजारोहविषये
जगत्त्रातुं शंभोर्जयति करुणा काचिदरुणा ॥ ९३ ॥

அராளா கேஶேஷு ப்ரக்ருதிஸரளா மந்தஹஸிதே
ஶிரீஷாபா சித்தே த்ருஷதுபலஶோபா குசதடே ।
ப்ருஶம் தந்வீ மத்யே ப்ருதுருரஸிஜாரோஹவிஷயே
ஜகத்த்ராதும் ஶம்போர்ஜயதி கருணா காசிதருணா
॥ ௯௩ ॥

அராலா கேசேஷு ப்ரக்ருதிஸரலா மந்தஹஸிதே
 சிரீஷாபா சித்தே த்ருஷதுபலசோபா குசதடே ।
ப்ருசம் தந்வீ மத்யே ப்ருதுருரஸிஜாரோஹவிஷயே
 ஜகத்த்ராதும் சம்போர்ஜயதி கருணா காசிதருணா ॥ 93 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே தாயே!

शंभोः (𑌶𑌂𑌭𑍋𑌃) (சம்போ:) = பரமசிவனுடைய

काचित् (𑌕𑌾𑌚𑌿𑌤𑍍) (காசித்) = மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாததாயும்

अरुणा (𑌅𑌰𑍁𑌣𑌾) (அருணா) = சிவந்த வர்ணமுள்ளதாயும் (விளங்கும்)

करुणा (𑌕𑌰𑍁𑌣𑌾) (கருணா) = க்ருபை என்ற சக்தியானது

केशेषु (𑌕𑍇𑌶𑍇𑌷𑍁) (கேசேஷு) = தலைமயிர்களில்

अराला (𑌅𑌰𑌾𑌲𑌾) (அராலா) = வக்ரமாயும்

मन्दहसिते (𑌮𑌨𑍍𑌦𑌹𑌸𑌿𑌤𑍇) (மந்தஹஸிதே) = புன்சிரிப்பில்

प्रकृतिसरला (𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌰𑌲𑌾) (ப்ரக்ருதிஸரலா) = இயற்கையிலேயே அழகாயும்

चित्ते (𑌚𑌿𑌤𑍍𑌤𑍇) (சித்தே) = மனதில்

शिरीषाभा (𑌶𑌿𑌰𑍀𑌷𑌾𑌭𑌾) (சிரீஷாபா) = காட்டிலுள்ள வாகைப் பூவைப்போல் ம்ருதுவாயும்

| | |
|---|---|
| कुचतटे (கு^சதடெ) (குசதடே) | = ஸ்தனப்ரதேசத்தில் |
| दृषदुपलशोभा (த்ருஷது^பல ஶோபா) (த்ருஷதுபல சோபா) | = கல்லிற்குள் இருக்கும் மணிக்கல்லின் காந்தியைப்போன்ற காந்தியோடு கூடியதாயும் |
| मध्ये (மத்யே) (மத்யே) | = இடுப்புப்ரதேசத்தில் |
| भृशं (ப்ருஶம்) (ப்ருசம்) | = மிகவும் |
| तन्वी (தந்வீ) (தங்வீ) | = க்ருசமாயும் |
| उरसिजारोहविषये (உரஸிஜாரோஹவிஷயே) (உரஸிஜாரோஹ விஷயே) | = ஸ்தனப்ரதேச மென்ன, கடிபச்சாத்பாக மென்ன இவைகளின் ப்ரதேசத்தில் |
| पृथुः सती (ப்ருது: ஸதீ) (ப்ருது: ஸதீ) | = ஸ்தூலமாயும் இருந்துகொண்டு |
| जगत् (ஜமத்) ஜகத்) | = லோகத்தை |
| त्रातुं (த்ராதும்) (த்ராதும்) | = ரக்ஷிப்பதற்கு |
| जयति (ஜயதி) (ஜயதி) | = விளங்குகிறது. |

தாத்பர்யம்:—தேவியினுடைய சரீரம் சிவப்பு வர்ணமுள்ளது. க்ருபையும் சிவப்பு வர்ணமுள்ளதேதான். அதனால் பரமசிவனுடைய க்ருபைதான் தேவியோ என்று தோன்றுகிறது. தேவியினுடைய தலையிலுள்ள மயிர்கள் சுருண்டு விளங்குகின்றன. சுருட்டை மயிரோடு கூடின கேசபாசத்தால் அலங்கரிக்கப்பட்ட பரதேவதைதான் என்பதில் ஸந்தேஹமேயில்லை. அத்துடன் தேவியின் புன்சிரிப்போ இயற்கையிலேயே மிகவும் ஸரளமாயும் அழகாகவும் இருந்து

கொண்டு பக்தகோடிகளுக்கு ஸகல புருஷார்த்தத்தை யும் அளிக்க வல்லமை உள்ளதாக இருக்கின்றது' இதுவே தேவி ஸகல வேதாந்தங்களிலும் முறையிடப் படுகிற பரம்பொருள் என்பதற்கு அடையாளமாகும். தேவியினுடைய மனதோ, மிகவும் ம்ருதுவானது. காட்டிலுள்ள வாகைப்பூவை ம்ருதுவானது என்று கவிகள் வர்ணிப்பதுண்டு. இதைக்காட்டிலும் ம்ருது வாக தேவியினுடைய சித்தம் விளங்கிவருகிறது. ஸ்தனங்களோ கல்லுக்குள் இருக்கும் கல்லைப்போல் மிகவும் கடினமாக இருந்துவருகிறது. இடைபாக மோ, ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தில் சொல்லியபடி மிக வும் க்ருசமாக இருந்துவருகிறது. கடிபச்சாத்பாக மோ, மார்பிலுள்ள குசகும்பமோ வர்துளமாயும் பெரிதாகவும் இருந்துவருகிறது. இவ்விதமான லக்ஷ ணங்கள் ஸாமன்யமான ஸ்த்ரீகளுக்கு ஏற்படாது. இதனால் கருணாமூர்த்தியான பரமசிவனுடைய க்ரு பைதான் மேற்சொன்ன லக்ஷணமுள்ளஉருவத்துடன் தேவி என்ற பெயரால் ஜகத்தைரக்ஷிப்பதற்கு விளங்கி வருகிறது என்று ஊஹிக்கக்கூடியதாக இருக்கிறது. ஆகையால் 'சிவக்ருபைதான் தேவி' என்று உபாஸிக் கின்றவர்கள், மஹாபாக்யத்தோடு கூடியவர்களாக ஆகிறார்கள்.

*ஸ்வர்ணத் தட்டில் அதோமுகமாக த்ரிகோணம் பேர்ட்டு மத்தியில் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ (ஓம் ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம்) என்று எழுதவும். தினம் 2000 வீதம் 45 நாள் இதத ச்லோகத்தை ஜபிக்கவும் ஸர்வ மனோபீஷ்டமும் ஸித்தியாகும்.*

---

## 94. தேவியின் ஸ்தன மஹிமையின் வர்ணனை.

कलङ्कः कस्तूरी रजनिकरबिम्बं जलमयं
कलाभिः कर्पूरैर्मरकतकरण्डं निबिडितम् ।
अतस्त्वद्भोगेन प्रतिदिनमिदं रिक्तकुहरं
विधिर्भूयो भूयो निबिडयति नूनं तव कृते ॥ ९४ ॥

𑌕𑌲𑌙𑍍𑌕𑌃 𑌕𑌸𑍍𑌤𑍂𑌰𑍀 𑌰𑌜𑌨𑌿𑌕𑌰𑌬𑌿𑌮𑍍𑌬𑌂 𑌜𑌲𑌮𑌯𑌂
𑌕𑌲𑌾𑌭𑌿𑌃 𑌕𑌰𑍍𑌪𑍂𑌰𑍈𑌰𑍍𑌮𑌰𑌕𑌤𑌕𑌰𑌣𑍍𑌡𑌂 𑌨𑌿𑌬𑌿𑌡𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌦𑍍𑌭𑍋𑌗𑍇𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌦𑌿𑌨𑌮𑌿𑌦𑌂 𑌰𑌿𑌕𑍍𑌤𑌕𑍁𑌹𑌰𑌂
𑌵𑌿𑌧𑌿𑌰𑍍𑌭𑍂𑌯𑍋 𑌭𑍂𑌯𑍋 𑌨𑌿𑌬𑌿𑌡𑌯𑌤𑌿 𑌨𑍂𑌨𑌂 𑌤𑌵 𑌕𑍃𑌤𑍇 ॥ ௯௪ ॥

கலங்க: கஸ்தூரீ ரஜநிகரபிம்பம் ஜலமயம்
கலாபி: கர்பூரைர்மரகதகரண்டம் நிபிடிதம் ।
அதஸ்த்வத்போகேந ப்ரதிதிநமிதம் ரிக்தகுஹரம்
விதிர்பூயோ பூயோ நிபிடயதி நூநம் தவ க்ருதே ॥ 94 ॥

हे देवि (𑌹𑍇 𑌦𑍇𑌵𑌿) (ஹே தேவி) = ஹே பராசக்தியே!

कलङ्कः (𑌕𑌲𑌙𑍍𑌕𑌃) (கலங்க:) = சந்த்ரமண்டலத்தின் மத்தியில் காணப்படும் கருப்பான களங்கமோ

कस्तूरी (𑌕𑌸𑍍𑌤𑍂𑌰𑍀) (கஸ்தூரீ) = கருப்பு வர்ணமான கஸ்தூரி என்னும் வாஸனை த்ரவ்யம்தான்

रजनिकरबिम्बं (𑌰𑌜𑌨𑌿𑌕𑌰𑌬𑌿𑌮𑍍𑌬𑌂) (ரஜநிகரபிம்பம்) = சந்த்ர பிம்பமோ

जलमयं (𑌜𑌲𑌮𑌯𑌂)(ஜலமயம்) = நிர்மலமான ஜலமே

कलाभिः (𑌕𑌲𑌾𑌭𑌿𑌃) (கலாபி:) = கிரணங்களாகிய

कर्पूरैः (𑌕𑌰𑍍𑌪𑍂𑌰𑍈𑌃) (கர்பூரை:) = பச்சக்கற்பூர பொடிகளால்

निबिडितं (𑌨𑌿𑌬𑌿𑌡𑌿𑌤𑌂) (நிபிடிதம்) = நிறப்பப் பட்ட சந்த்ர மண்டலமானது

मरकतकरण्डं (𑌮𑌰𑌕𑌤𑌕𑌰𑌣𑍍𑌡𑌂) (மரகதகரண்டம்) = மரகத ரத்னத்தால் செய்யப்பட்ட பாண்டமாகும்

अतः (𑌅𑌤𑌃) (அத:) = ஆகையினால்

इदं (𑌇𑌦𑌂) (இதம்) = இந்த ஜலபாண்டத்தை

प्रतिदिनं (𑌪𑍍𑌰𑌤𑌿𑌦𑌿𑌨𑌂) (ப்ரதிதினம்) = தினந்தோறும்

त्वद्भोगेन (𑌤𑍍𑌵𑌦𑍍𑌭𑍋𑌗𑍇𑌨) (த்வத்போகேந) = நீ ஸ்னானம் செய்வதினால்

रिक्तकुहरं (𑌰𑌿𑌕𑍍𑌤𑌕𑍁𑌹𑌰𑌂) (ரிக்தகுஹரம்) = ஜலமில்லாமல் சூன்யமாக இருப்பதை

दृष्ट्वा (𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾)(தருஷ்ட்வா) = பார்த்து

विधिः (𑌵𑌿𑌧𑌿𑌃) (விதி:) = ப்ரும்மாவானவர்

भूयो भूयः (𑌭𑍂𑌯𑍋 𑌭𑍂𑌯𑌃) (பூயோ பூய:) = அடிக்கடி

तवकृते (𑌤𑌵𑌕𑍃𑌤𑍇) (தவக்ருதே) = உன்னுடைய ஸ்னானத்திற்காக

निबिडयति (நிபிடயதி) (நிபிடயதி) — கொஞ்சம் கொஞ்சமாக பூர்த்தி செய்கிறார்.
नूनं (நூநம்) (நூநம்) = நிச்சயம்.

தாத்பர்யம்:—தேவியினுடைய பூஜாவிதியில், பௌர்ணமி கழிந்த ப்ரதமையிலிருந்து ஆரம்பித்து அமாவாஸ்யை முடிய தேவி திருமஞ்சன விளையாட்டைச் செய்கிறாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அமாவாஸ்யைக்குப் பிறகு ப்ரதமை முதல் பௌர்ணமை முடிய பஹிரங்கமாக பக்தகோடிகளை அனுக்ரஹம் செய்வதற்கு தர்பாரில் திவ்யாலங்கார பூஷிதையாக விளங்கிவருகிறாள். இதனால், க்ருஷ்ணபக்ஷத்தில் தேவியினுடைய ஸ்னான காலமான தினால் யாரும் தேவியினுடைய அருகில் போகக்கூடாது; சுக்லபக்ஷத்தில் தேவி தர்பாரில் விளங்கிவருகின்றபடியால், பக்த ஜனங்கள் அருகில் சென்று பூஜிக்கலாம் என்றது வெளியாகிறது. இதைத்தான் प्रतिपन्मुखराकान्त तिथिमण्डल पूजिता। (ப்ரதிபன்முகராகாந்த திதிமண்டல பூஜிதா) (ப்ரதிபன்முகராகாந்த திதிமண்டல பூஜிதா) என்ற லலிதா ஸஹஸ்ர நாமாவளியினால், ப்ரதிபத் என்ற ப்ரதமை முதல் ராகா என்ற பௌர்ணமை முடிய பூஜிக்கப்படுகிற தேவதையே பரதேவதை என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது தேவியை உபாஸிப்பவர்கள். சுக்லபக்ஷத்தில் பூஜையை விஸ்த்ரிக்க வேண்டும்; க்ருஷ்ணபக்ஷத்தில் ஸங்கோசம் செய்ய வேண்டும் என்றுதெரிகிறது. க்ருஷ்ணபக்ஷம் முழுமையும் தேவியினுடைய ஸ்னான தினங்கள்.

நிர்மலமான ஆகாசத்தில் தெரியும் சந்த்ரமண்டலமோ சந்த்ரமண்டலமல்ல. தேவியினுடைய ஸ்னானத்திற்காக மரகத ரத்னத்தால் செய்யப்பட்ட பெரிய அண்டாவாக ஆகும். அந்த மண்டலத்தில் தெரியும் சந்த்ரபிம்பமோ சந்த்ரபிம்பமல்ல. அம்ருதக் கடலி

விருந்தும் ப்ரும்மாவினுல் கொண்டுவந்து நிறப்பப் பட்ட திருமஞ்சன தீர்த்தமாகும். சந்த்ரபிம்பத்தின் நடுவில் தெரியும் கருப்பான களங்கமோ, களங்கமல்ல; ம்ருகநாபி என்றும், கஸ்தூரி என்று சொல்லப்படும் வாஸனுத்ரவ்யமாகும். சந்த்ரனுடைய கிரணங் களோ, பச்சக்கற்பூர பொடிகளே. இவ்விதம் ப்ரும் மாவானவர் பரதேவதையினுடைய ஸ்னனத்திற்கு திவ்ய தீர்த்தத்தை நிறப்பி வாஸனுத்ரவ்யங்களையும் கலந்து ஸித்தமாக வைத்திருக்கிருர். தேவியும், பௌர்ணமி கழிந்த மறுதினம் முதல், தர்பாரைவிட்டு அந்தப்புரம் சென்று ஸ்னன ஸ்தலத்தில் ஒவ்வொரு திதியிலும் வாஸனு த்ரவ்யத்தால் நல்ல வாஸனை உள்ளதான ஜலத்தை கொஞ்சம் கொஞ்சமாக எடுத் துக்கொண்டு ஸ்னனம் செய்கிருள். அதனுலேயே க்ருஷ்ணபக்ஷத்தில் ஒவ்வொரு தினத்திலும்ஒவ்வொரு கலையாகக் குறைவதை ஸர்வஜனங்களும் பார்க்கலாம் அமாவாஸ்யை தினம், மரகத பாண்டத்தில் ஜலம் கொஞ்சம்கூட இல்லாமலாகிவிடுகிறது. மறுதினம் தேவியோ தர்பாருக்கு வந்து விடுகிருள். மறுபடியும் க்ருஷ்ணபக்ஷம் வருவதற்குள், ப்ரும்மாவானவர் ஒவ் வொரு திதியிலும், அம்ருதக் கடலிலிருந்து ஒவ்வொரு குடமாக ஜலம் கொண்டுவந்து மரகத பாண்டத்தில் கொட்டி பௌர்ணமி தினத்தில் பூர்த்தி செய்கிருர் ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரும்மாவே, தேவியினுடைய திருமஞ்சன தீர்த்தத்தை நிரப்பி வைக்கிறவர் என்ருல் தேவியினுடைய உத்கர்ஷம் எவ்வளவுதான் என்பதை விவேகிகள் அறியக்கூடும். இந்த ச்லோகத்தால் சுக்லபக்ஷத்தில் தேவியினுடைய பூஜையோ, மந்த்ர

ஜபமோ, ஸஹஸ்ரநாமம் முதலிய பாராயணங்களோ செய்யவேண்டியது அவச்யம் என்பதை அறிந்து அவ்விதம் அனுஷ்டிக்கிறவர்கள் தேவியினுடைய அனுக்ரஹத்தால் அமரர்களாக ஆகிறுர்கள் என்பது ஸித்தமாகிறது.

ஸ்வர்ணத் தகட்டில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு, மத்தியில் ॐ श्रीं ह्रीं श्रीं (ஓம் ஶ்ரீம் ஹ்ரீம் ஶ்ரீம்) என்று எழுதவும். தினம் 1000 வீதம் 45 நாள் இந்த ச்லோகத்தை ஜபிக்கவும் இஷ்டப்ராப்தி.

---

## 95. தேவியை ஆராதிப்பதில் அதிகாரியின் லக்ஷணம்.

पुरारातेरन्तःपुरमसि ततस्त्वच्चरणयोः
सपर्यामर्यादा तरलकरणानामसुलभा ।
तथा ह्येते नीताः शतमखमुखाः सिद्धिमतुलां
तव द्वारोपान्तस्थितिभिरणिमाद्याभिरमराः ॥ ९५ ॥

𑌪𑍁𑌰𑌾𑌰𑌾𑌤𑍇𑌰𑌨𑍍𑌤𑌃𑌪𑍁𑌰𑌮𑌸𑌿 𑌤𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌚𑍍𑌚𑌰𑌣𑌯𑍋𑌃
𑌸𑌪𑌰𑍍𑌯𑌾𑌮𑌰𑍍𑌯𑌾𑌦𑌾 𑌤𑌰𑌲𑌕𑌰𑌣𑌾𑌨𑌾𑌮𑌸𑍁𑌲𑌭𑌾 ।
𑌤𑌥𑌾 𑌹𑍍𑌯𑍇𑌤𑍇 𑌨𑍀𑌤𑌾𑌃 𑌶𑌤𑌮𑌖𑌮𑍁𑌖𑌾𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌤𑍁𑌲𑌾𑌂
𑌤𑌵 𑌦𑍍𑌵𑌾𑌰𑍋𑌪𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌭𑌿𑌰𑌣𑌿𑌮𑌾𑌦𑍍𑌯𑌾𑌭𑌿𑌰𑌮𑌰𑌾𑌃
॥ ௯௫ ॥

புராராதேரந்த:புரமஸி ததஸ்த்வச்சரணயோ:
ஸபர்யாமர்யாதா தரலகரணுநாமஸுலபா ।
ததா ஹ்யேதே நீதா: சதமகமுகா ஸித்திமதுலாம்
தவ த்வாரோபாந்தஸ்திதிபிரணிமாத்யாபிரமரா: ॥ 95 ॥

हे भगवति (𑌹𑍇 𑌭𑌗𑌵𑌤𑌿) (ஹே பகவதி) = ஹே பரதேவதையே !

त्वं (𑌤𑍍𑌵𑌂) (த்வம்) = நீ

पुरारातेः (𑌪𑍁𑌰𑌾𑌰𑌾𑌤𑍇𑌃) (புராராதே:) = த்ரிபுரஸம்ஹாரம் செய்த பரமேச்வரனுடைய

अन्तःपुरं (𑌅𑌨𑍍𑌤𑌃𑌪𑍁𑌰𑌂) (அந்த:புரம்) = அந்தப்புரத்திலுள்ள பட்டமஹிஷியாக

असि (𑌅𑌸𑌿) (அஸி) = இருக்கிறாய்

ततः (𑌤𑌤𑌃) (தத:) = அந்தக் காரணத்தால்

त्वच्चरणयोः (𑌤𑍍𑌵𑌚𑍍𑌚𑌰𑌣𑌯𑍋𑌃) (த்வச்சரணயோ:) = உன்னுடைய சரணாரவிந்தங்களில்

सपर्यामर्यादा (𑌸𑌪𑌰𑍍𑌯𑌾𑌮𑌰𑍍𑌯𑌾𑌦𑌾) (ஸபர்யாமர்யாதா) = ஸமீபத்தில் வந்து பூஜை செய்வதென்ற ப்ரகாரமானது

तरलकरणानां (𑌤𑌰𑌲𑌕𑌰𑌣𑌾𑌨𑌾𑌂) (தரலகரணாநாம்) = இந்த்ரிய நிக்ரஹம் செய்யாதவர்களுக்கு

असुलभा (𑌅𑌸𑍁𑌲𑌭𑌾) (அஸுலபா) = கிடைக்கக்கூடியதல்ல

तथाहि (𑌤𑌥𑌾𑌹𑌿) (ததாஹி) = அது உசிதமே

एते (𑌏𑌤𑍇) (ஏதே) = இந்த

शतमखमुखाः (𑌶𑌤𑌮𑌖𑌮𑍁𑌖𑌾𑌃) (சதமகமுகா:) = இந்த்ரன் முதலான

अमराः (𑌅𑌮𑌰𑌾𑌃) (அமரா:) = தேவர்கள்

तव (𑌤𑌵) (தவ) = உன்னுடைய

| | |
|---|---|
| द्वारोपान्तस्थितिभिः (வாரொ வாந்ஸ்தி திஹி:) (த்வாரோபாந்த ஸ்திதிபி:) | = த்வாரபாலகிகளாக இருக்கிற |
| अणिमाद्याभिः (அணிமாத்யாஹி:) (அணிமாத்யாபி:) | = அணிமா முதலான எட்டு ஸித்திகளோடும் |
| अतुलां सिद्धिं (அதுலாம் ஸிஃம்) (அதுலாம் ஸித்திம்) | = ஈடில்லாத மனோரதத்தை |
| नीताः (நீதா:) (நீதா:) | = அடையும்படி நயிப்பி விக்கப்பட்டார்கள். |

தாத்பர்யம்:—தேவியினுடைய பூஜையில் இந்த்ரிய நிக்ரஹம் செய்து காமனை ஜயித்த அந்தர்முகாளுக்குத் தான் அதிகாரம் என்று இந்த ச்லோகத்தால் சொல்லப்படுகிறது. தேவியினுடைய ஸ்ரீசக்ர ரூபமான திருமாளிகையின் வாசலிலோ, அணிமா, கரிமா, லகிமா, மஹிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், வசித்வம், ஈசித்வம் என்ற எட்டு விதமான ஸ்த்ரீ ரூபமான ஸித்திகளும் ஆயுதபாணிகளாக த்வார பாலகிகள் என்ற நிலையில் ஜாகரூகர்களாக நின்றுவருகிறார்கள். தேவியோ பரம சிவனுடைய அந்தப்புர மஹிஷியாகச் சொல்லப்படுகிறாள். இயற்கையிலேயே தேவீ இருக்குமிடத்தில் பசுபதியைத் தவிர மற்ற வேறு ஒரு புருஷனும் செல்ல முடியாது. அதிலும் அணிமை முதலான ஸித்திகளோ வாசலில் நின்றுகொண்டு பாதுகாத்து வருகிறார்கள். இந்த்ரன் முதலான தேவர்களுக்குக்கூட தேவியினுடைய ஸமீபம் சென்று தேவியினுடைய பாதாரவிந்தங்களில் நேரில் பூஜை செய்யவேண்டும் என்று மனோரதம் இருந்தும் அது பூர்த்தி அடையவில்லை அணிமை முதலான ஸித்திகள் இருக்கும் ஸ்தலத்திலேயே இந்த்ரன் முதலான தேவர்களும் த்வாரபாலகர்

களாக இருக்கக்கூடிய பதவியை, அணிமை முதலான ஸித்திகளுக்கு ஸமானமாக அடைந்து, வாசலிலேயே ஆயுதபாணிகளாக நின்றுகொண்டு தேவியைப் பாது காத்துவருகிறார்களே தவிர, அவர்களுக்கும் இன்னும் தேவியினுடைய அருகில் செல்ல அதிகாரம் ஏற்பட வில்லை. தேவர்களுடைய விஷயத்திலேயே இவ்விதம் இருக்கும்பொழுது, சஞ்சலமான சித்தத்துடன கூடின மனிதர்களுக்கு த்ரிபுரஸம்ஹாரமூர்த்தியினுடைய அந்தப்புரமஹிஷியான தேவியினுடைய அருகில் போக அதிகாரமே இல்லை என்பதைச் சொல்லவும் வேண்டுமா! ஆகையால் மனது ஒரு நிலையில் ஏற் பட்டு அந்தர் முகாளாக ஆகும் வரையிலும் வெகு தூரத்திலிருந்துகொண்டே மந்த்ரஜப மூலமாகவோ இந்த ஸௌந்தர்யலஹரீ முதலான ஸ்துதிகள் மூல மாகவோ, தேவியை ஆராதித்தால் தேவியினுடைய ப்ர ஸாதத்தால் ஸகல புருஷார்த்தத்தையும் ப்ராணிகள் அடையலாம் என்பது ஸித்தமாகிறது, இந்த்ரன் முதலான தேவர்களே தேவியினுடைய அருகில் செல்ல அதிகாரம் இல்லாமல் வெளிப்ரதேசத்திலேயே நின்றுகொண்டு உபாஸிக்கிறார்கள் என்றால், குலத்தா லும் பிறப்பாலும் நடத்தையினாலும், ஆசாரம் என் பதே தெரியாத ப்ராக்ருதஜனக்களுக்கு அம்பா ளுடைய ஸமீபம் செல்ல அதிகாரமே கிடையாது. அப்படி ஸாஹஸத்தால் செய்யக்கூடாததான கார்யத் தைச் செய்தால் அவர்கள் பரிஹரிக்க முடியாததான ஆபத்தை அடைவார்கள் எண்பதையும் அறியவும்.

ஸ்வர்ணத் தகட்டில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு, மத்தியில் ஓம் ஹ்ரீம் (ஒம் ஹ்ரீம்) என்று எழுதவும். எண்ணெயில் யந்த் ரத்தை வைத்து இந்த ச்லோகத்தை 108 தடவை பாராயணம் செய்யவும். பிறகு எண்ணெயை ரணத்தில் தடவ ரண நிவாரணம்.

---

## 96. தேவியினுடைய பாதிவ்ரத்ய மஹிமையின் வர்ணனே.

कलत्रं वैधात्रं कतिकति भजन्ते न कवयः
श्रियो देव्याः को वा न भवति पतिः कैरपि धनैः ।
महादेवं हित्वा तव सति सतीनामचरमे
कुचाभ்याமாसङ्गः कुरवकतरोरप्यसुलभः ॥ ९६ ॥

கலத்ரம் வைதாத்ரம் கதிகதி ஹஜந்தே ந கவயஃ
ஶ்ரியோ தேவ்யாஃ கோ வா ந ஹவதி வதிஃ கைரவி
யநைஃ ।
மஹாதேவம் ஹித்வா தவ ஸதி ஸதீநாமசரமே
குசாஹ்யாமாஸங்கஃ குரவகதரோரவ்யஸுலஹஃ
॥ ௯௬ ॥

கலத்ரம் வைதாத்ரம் கதிகதி பஜந்தே ந கவய:
ச்ரியோ தேவ்யா: கோ வா ந பவதி பதி: கைரபி தனை: ।
மஹா தேவம் ஹித்வா தவ ஸதி ஸதீநாமசரமே
குசாப்யாமாஸங்க: குரவகதரோரப்யஸுலப: ॥ 96 ॥

हे सति (ஹே ஸதி) (ஹே ஸதி) = பதிவ்ரதா சிரோமணியான ஹே பரதேவதையே !
वैधात्रं (வைதாத்ரம்) (வைதாத்ரம்) = ப்ருஹ்மாவினுடைய
कलत्रं (கலத்ரம்) (கலத்ரம்) = பத்னியான ஸரஸ்வதீ தேவியை
कतिकति कवयः (கதிகதி கவயஃ) (கதிகதி கவய:) = எந்தெந்த வித்வான்கள்

न भजन्ते (ந ஹஜஞெ) (ந பஜங்தே) = அடையாமல் இருக்கின்றூர்கள் !

श्रिय: देव्या: (ஸ்ரீய: தெவ்யா:) (ச்ரிய: தேவ்யா:) = லக்ஷ்மீ தேவிக்கு

कैरपिधनै: (கைரவியநை:) (கைரபிதனை:) = பூமியினுலோ பணத்தாலோ, யானே, குதிரை முதலானவைகளாலோ

कोवा (கொவா) (கோவா) = எவன்தான்

पति: (வதி:) (பதி:) = பர்த்தாவாக

न भवति (ந ஹவதி) (ந பவதி) = ஆகவில்லே !

हे सतीनामचरमे (ஹெ ஸதீநாமசரமெ) (ஹே ஸதீநாம சரமே) = பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்குள் முதன்மையானவளான ஹே தாயே !

महादेवं (மஹாதெவம்) (மஹாதேவம்) = பரமேச்வரனே

हित्वा (ஹித்வா) (ஹித்வா) = விட்டு

तव (தவ) (தவ) = உன்னுடைய

कुचाभ्यां (குசாஹ்யாம்) (குசாப்யாம்) = ஸ்தனங்களோடு

आसङ्ग: (ஆஸங்க:) (ஆஸங்க:) = ஸம்பந்தமானது

कुरवकतरोरपि (குரவகதரொரவி) (குரவகதரோரபி) = மருதாணி மரத்துக்குக் கூட

असुलभ: (அஸுலஹ:) (அஸுலப:) = கிடைப்பது துர்லபம் !

தாத்பர்யம்:—ப்ரக்ருதத்தில் ஸ்தோத்ரம் செய்யப் படுகிற ஜகன்மாதாவான பராசக்தி ஒருவளைத் தவிர தேவ ஜாதியில்கூட ஒரு ஸ்த்ரீயும் பதிவ்ரதை அல்ல என்று பரமாசார்யாள் வெளிப்படுத்துகிறுர்கள். ப்ரும்மாவினுடைய பத்னியான ஸரஸ்வதியோ, மந்த்ர ஜபங்களால் ஸரஸ்வதீகடாக்ஷம் பெற்ற வித்வான்களிடம் உல்லாஸத்துடன் விளங்கி வருகிறுள் என்பது லோகப்ரஸித்தமானது. எவ்வளவோ வித்வான்கள் ஸரஸ்வதியோடு க்ரீடிப்பதை லோகம் முழுமையும் அறியக்கூடும். அவ்விதமே அள வற்ற பூமியாகவோ, பணமாகவோ, யானை உற்பத்தி யாகும் காடு மலைகளாகவோ, குதிரை உற்பத்தியாகக் கூடிய தேசமாகவோ, தங்கம் வெள்ளி முதலான வைகள் விளையும் ப்ரதேசங்களாகவோ, இந்த ஐச்வர்ய மானது எந்த புருஷர்களிடம் இருந்துவருகிறதோ அவர்கள் மஹாலக்ஷ்மியுடன் க்ரீடிக்கிறுர்கள் என்பதும் லோக ப்ரஸித்தமானது. இதுபோல் ப்ரக்ருத ஸ்தோத்ரத்தில் ஸ்துதிக்கப்படுகிறவளாக பாஸிக்கும் பரதேவதையோ, பரமேச்வரன் ஒருவனைத் தவிர மற்ற யாரிடமும் வஸிப்பதாகத் தெரியவில்லை. பக்த கோடிகளுக்குத் தாயாருடைய ஸ்தானத்திலிருந்து தர்சனம் கொடுக்கிறுள். அன்னியில் ஸரஸ்வதி, லக்ஷ்மி இவர்களைப்போல் உல்லாஸத்துடன் இருக்கிறதில்லை. ஆகையால் தேவியினுடைய பாதிவ்ரத்யமே வாக்கிற் கும் மனதிற்கும் எட்டாத மஹிமை உள்ளது என்பது ஸித்தமாகிறது. இதனுல் ஸரஸ்வதீ தேவியையும், லக்ஷ்மீதேவியையும்குறைவாக வர்ணித்ததாக நினைக்கக்கூடாது. தேவியை உபாஸிப்பவர்களிடம்

ஸரஸ்வதிகடாக்ஷமும், லக்ஷ்மீகடாக்ஷமும் பொருந்தி அவர்கள் மஹாவித்வான்களாகவும், அஷ்டைச்வர்ய ஸம்பந்நர்களாகவும் இருப்பார்கள் என்பதைமட்டும் அறியவும்.

வெள்ளெருக்குக் கட்டையில் அதோமுகமாக த்ரிகோணம் போட்டு மத்தியில், க்லீம் ஹ்ரீம் (க்லீம் ஹ்ரீம்) என்று எழுதவும். தினம் 1000 வீதம் 45 தினங்கள் இந்த சலோகத்தைப் பாராயணம் செய்யவும். சித்ரப்ரதம்.

---

## 97. தேவியினுடைய ஸ்வரூப வர்ணனை.

गिरामाहुर्देवीं द्रुहिणगृहिणीमागमविदो
हरेः पत्नीं पद्मां हरसहचरीमद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगमनिस्सीममहिमा
महामाया विश्वं भ्रमयसि परब्रह्ममहिषि ॥ ९७ ॥

𑌗𑌿𑌰𑌾𑌮𑌾𑌹𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑍀𑌂 𑌦𑍍𑌰𑍁𑌹𑌿𑌣𑌗𑍃𑌹𑌿𑌣𑍀𑌮𑌾𑌗𑌮𑌵𑌿𑌦𑍋
𑌹𑌰𑍇𑌃 𑌪𑌤𑍍𑌨𑍀𑌂 𑌪𑌦𑍍𑌮𑌾𑌂 𑌹𑌰𑌸𑌹𑌚𑌰𑍀𑌮𑌦𑍍𑌰𑌿𑌤𑌨𑌯𑌾𑌮𑍍 ।
𑌤𑍁𑌰𑍀𑌯𑌾 𑌕𑌾𑌪𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌦𑍁𑌰𑌧𑌿𑌗𑌮𑌨𑌿𑌸𑍍𑌸𑍀𑌮𑌮𑌹𑌿𑌮𑌾
𑌮𑌹𑌾𑌮𑌾𑌯𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌭𑍍𑌰𑌮𑌯𑌸𑌿 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌮𑌹𑌿𑌷𑌿 ॥ ௯௭ ॥

கிராமாஹுர்தேவீம் த்ருஹிணக்ருஹிணீமாகமவிதோ
ஹரே: பத்நீம் பத்மாம் ஹரஸஹசரீமத்ரிதநயாம் ।
துரீயா காபி த்வம் துரதிகமநிஸ்ஸீமமஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரஹ்மமஹிஷி ॥97॥

हे परब्रह्ममहिषि (𑌹𑍇 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 = ஸதா சிவனுடைய பட்ட 𑌮𑌹𑌿𑌷𑌿) (ஹே மஹிஷியான ஹே பரப்ரஹ்மமஹிஷி) தாயே

आगमविदः (𑌆𑌗𑌮𑌵𑌿𑌦𑌃) (ஆகமவித:) = வேத ரஹஸ்யத்தை அறிந்தவர்கள்

त्वामेव (𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵) (த்வாமேவ) = உன்னையே

द्रुहिणगृहिणीं (𑌦𑍍𑌰𑍁𑌹𑌿𑌣𑌗𑍃𑌹𑌿𑌣𑍀𑌂) (த்ருஹிண க்ருஹிணீம்) = ப்ரும்மாவினுடைய பத்னியான

गिरांदेवीं (𑌗𑌿𑌰𑌾𑌂𑌦𑍇𑌵𑍀𑌂) (கிராம்தேவீம்) = ஸரஸ்வதி தேவியாகவும்

आहुः (𑌆𑌹𑍁𑌃) (ஆஹு:) = சொல்கிறார்கள்

त्वामेव (𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵) (த்வாமேவ) = உன்னையே

हरेः (𑌹𑌰𑍇𑌃) (ஹரே:) = விஷ்ணுவினுடைய

पत्नीं (𑌪𑌤𑍍𑌨𑍀𑌂) (பத்னீம்) = மனைவியான

पद्मां (𑌪𑌦𑍍𑌮𑌾𑌂) (பத்மாம்) = லக்ஷ்மீதேவியாகவும்

आहुः (𑌆𑌹𑍁𑌃) (ஆஹு:) = சொல்கிறார்கள்

त्वामेव (𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵) (த்வாமேவ) = உன்னையே

हरसहचरीं (𑌹𑌰𑌸𑌹𑌚𑌰𑍀𑌂) (ஹரஸஹசரீம்) = சிவனுடைய பத்னியான

अद्रितनयां (𑌅𑌦𑍍𑌰𑌿𑌤𑌨𑌯𑌾𑌂) (அத்ரிதநயாம்) = பார்வதி தேவியாகவும்

आहुः (𑌆𑌹𑍁𑌃) (ஆஹு:) = சொல்கிறார்கள்

त्वं (𑌤𑍍𑌵𑌂) (த்வம்) = நீயோ

तुरीया (𑌤𑍁𑌰𑍀𑌯𑌾) (துரீயா) = நான்காவது தத்வமாகவும்

काफि (காவி) (காபி) = மனதிற்கும், வாக்கிற்கும் எட்டாத மஹிமையுள்ள வளாயும்

दुरधिगमनिस्सीममहिमा (துரதி கமநிஸ்ஸீமமஹிமா) (துரதி கமநிஸ்ஸீமமஹிமா) = दुरधिगम - கஷ்டப்பட்டும் அடைய முடியாததாயும், निस्सीम - எல்லை இல்லாத தாயும் இருக்கும் महिमा - மஹாத்ம்யத்தோடு கூடி யவளாயும் இருக்கிற

महामायासती (மஹாமாயாஸதீ) (மஹாமாயாஸதீ) = மஹாமாயை என்ற ஸ்வ ரூபத்தோடு கூடியவ ளாய்க்கொண்டு (யோக மாயையையும் ஆட்டி வைக்கும் வித்யா தத்வ ரூபிணியாக இருந்து கொண்டு)

विश्वं (விஶ்வம்) (விச்வம்) = ப்ரபஞ்சத்தை

भ्रमयसि (ப்ரமயஸி) (ப்ரமயஸி) = ப்ரமிக்கச் செய்கிறாய்.

தாத்பர்யம்:—வேதாந்த ரஹஸ்யத்தை அறிந்தவர் கள்கூடதேவியினுடைய ஸ்வரூபத்தை அறியமுடியா மல், ஒருவர் சொல்லியபடி மற்றொருவர் சொல்லாமல் வெவ்வேறாகவே தேவியை வர்ணிக்கிறார்கள். சிலர் ஸரஸ்வதிதான் பராசக்தி என்று சொல்லுகிறார்கள். சிலர் மஹாலக்ஷ்மீதான் பராசக்தி என்று சொல்லு கிறார்கள். சிலர் பார்வதிதான் பராசக்தி என்று சொல்லுகிறார்கள் இந்த க்ரந்தகர்த்தாவான பரமாசார்யாளுக்கோ ப்ரும்மாவினுடைய பத்னி யான ஸரஸ்வதீயாகவோ, விஷ்ணுவினுடைய

பத்னியான லக்ஷ்மீயாகவோ, சிவனுடையபத்னியான பார்வதீயாகவோ, ப்ரக்ருத ஸ்தோத்ரத்தில் ஸ்துதிக் கப்படும் பரதேவதையைச் சொல்ல இஷ்டமில்லை.

ஸத்வகுணம், ரஜோகுணம் தமோகுணம் என்ற மூன்று குணங்களும் வைஷம்யத்தை அடையாமல், அதாவது ஒருகுணம் மேல், ஒரு குணம் கீழ் என்பது இல்லாமல் மூன்று குணங்களும் ஸமமாக இருக்கும் பொழுது, குண ஸாம்யத்தை அடைந்த மாயையை உபாதியாக உடைத்தான ஸத் சித் ஆனந்தமான ப்ரும்மமே தேவியானதினால், நான்காவது தத்வமாக தேவியை ஒப்புக்கொள்வதில்தான் ப்ரக்ருதமான க்ரந்த கர்த்தாவின் அபிப்ராயமாகும். அந்த துரீய தத்வமோ வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத மஹிமை யோடுகூடியது. மற்ற தேவர்களால் எவ்வளவு கஷ் டப்பட்டாலும் அடையமுடியாததான மஹிமையே துரீய தத்வத்தின் மஹிமையாகும். இந்த துரீய நிலை யிலுள்ள ஸ்வரூபத்தைத்தான் सर्वचैतन्यरूपां (ஸவ-உ செதநூரூவாம்) (ஸர்வசைதந்யரூபாம்) என்ற ச்லோகத்தாலும் अस्तु वः श्रेयसे नित्यं (அஸூ வஃ ஶ்ரேயஸே நிதூம்) (அஸ்து வ: ச்ரேயஸே நித்யம்) என்ற ச்லோ கத்தாலும் வித்வான்கள் வர்ணித்திருக்கிறார்கள் அந்தக்கரணத்தை பரிமாணமாகிய வ்ருத்தியானது ஸச்சிதானந்த ரூபமான ப்ரும்மத்தை விஷயீகரித்து அந்த ப்ரும்மத்தை ஆத்மாவிற்கு வேறுபடுத்தாமல் ஆத்ம ஸ்வரூபமாகவே அவகாஹித்துக்கொண்டு, அந்தர்முகமாயும், பிம்பப்ரதிபிம்பத்தோடு கூடின தாயும் விளங்கும் பக்ஷத்தில், இதைத்தான் அகண்டா காரவ்ருத்தி என்றும்; வித்யாதத்வம் என்றும் ப்ரும்ம வித்யைக்கு அதிதேவதை என்றும் ராஜவித்யை என்றும் வேதாந்திகளும் சொல்லுவார்கள். மாயா ஸம்பந்தமில்லாமல், சுத்தமான ப்ரும்மத்தைச் சொல் லும் சாஸ்த்ரத்தை வேதாந்த சாஸ்த்ரம் என்றும்

மாயையையும் ப்ரும்மத்தையும் ஸம்பந்தப்படுத்திச் சொல்லும்பக்ஷத்தில் அந்தசாஸ்த்ரத்தை சக்திதந்த்ரம் என்றும் வ்யவஹாரத்திற்குச் சொல்லப்படுமன்னியில் உண்மையில் ப்ரும்மத்தைக்காட்டிலும் தேவி வேறு தத்வமல்ல; தேவியைக்காட்டிலும் ப்ரும்மம் வேறு தத்வமல்ல; இரண்டும் ஒரே அகண்ட தத்வம்தான். மாயையும் ப்ரும்மத்தினிடத்தில் கல்பிதமானதினால் மாயைக்கு ப்ரும்மத்தைத் தவிர வேறு ஸ்வரூபமில்லை ஆகையால் அத்வைதத்திலேயே ஸகல சாஸ்த்ரங்களுக்கும் பர்யவஸானம் ஏற்படுகிறது. இந்த ரஹஸ்யத்தை தேவீபாகவதத்தில் பர்வதராஜனுக்குபரதேவதையானவள் தத்வோபதேசம் செய்யும் பாகமாகிய தேவீகீதையில் अहं देवि नचान्योस्मि ब्रह्मैवाहं नशोकभाक् (ஸஹம் ஷெவி நசாநெ்யாஸ்மி ஬்ர஫்஺ைஹவாஹம் நஶொகஹாக்) (அஹம் தேவி நசாந்யோஸ்மி ப்ரஹ்மைவாஹம் நசோகபாக்) என்ற வாக்யத்தால் தேவியே உபதேசிக்கிருள். இதை இந்த க்ரந்தகர்த்தாவும் இந்த ச்லோகத்திலுள்ள परब्रह्म महिषि (பர஬ஹ்ம மஹிஷி) (பரப்ரஹ்மமஹிஷி) என்ற பதத்தால் ஸூசிப்பிக்கின்றுர்கள். ஆனுல் இந்த பதத்தால் ப்ரும்மம் வேறு போலவும். தேவி ப்ரும்மத்தினுடைய பத்னி போலும் இரண்டு தத்வம்போல் தோன்றுகிறதே என்ற சங்கையை அடையவேண்டாம். अर्धोवात्मनः एषः यत्पत्नी (அயெ஧ாவாத்மநః ஏஷः யதீ்நீ) (அர்தோவாத்மந: ஏஷ:யத்பத்நீ) என்ற சாஸ்த்ரத்தால், சரீரத்தால் ஸ்த்ரீக்கும் புமானுக்கும் பேதம் தோன்றினுலும் ஸ்வரூபம் ஒன்றுதான் என்று தெரிகிறபடியால் வ்யவஹாரத்தில் வேறுபோல் இருப்பதை அனுஸரித்து ஸம்போதனம் செய்யப்பட்டிருக்கிற தன்னியில் தத்வம் ஒன்றுதான் என்பதை ஆராய்ந்து அறியவேண்டும்.

